160
161
195

# நடிகர் திலகம் சிவாஜிகணேசன் வாழ்க்கை வரலாறும், கலைப்பணிகளும்- ஓர் ஆய்வு

முனைவர் (பி.எச்டி.,) பட்டப் பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பெறும்

## ஆய்வேடு

ஆய்வாளர்
**கா.வெ.சே. மருதுமோகன், M.A., M.Phil.,**

மேற்பார்வையாளர்
**பேராசிரியர் முனைவர் ப.இரவிசங்கர்**
**M.A., M.B.A., M.Phil., Ph.D.,**
பேராசிரியர் மற்றும் துறைத் தலைவர்
அண்ணா பொதுவாழ்வியல் மையம்



**அண்ணா பொது வாழ்வியல் மையம்**
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை-600 005

**ஜனவரி – 2016**

**முனைவர் ப.இரவிசங்கர்**
பேராசிரியர் மற்றும் துறைத் தலைவர்
அண்ணா பொதுவாழ்வியல் மையம்
சென்னை பல்கலைக் கழகம்,
சென்னை-600 005.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

**“நடிகர் திலகம் சிவாஜிகணேசன் வாழ்க்கை வரலாறும் கலைப்பணிகளும் - ஓர் ஆய்வு”** என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழக அண்ணா பொதுவாழ்வியல் மையத்தில் முனைவர் (பி.எச்டி.,) பட்டத்திற்காக கா.வெ.சே.மருதுமோகன் வழங்கியுள்ள ஆய்வேடு எனது மேற்பார்வையில் நிகழ்த்தப்பெற்றது என்றும் இவ்வாய்வேடு வேறு ஆய்வுப் பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அளிக்கப்படவில்லை என்றும் இது அவரது சொந்த முயற்சியின் விளைவால் உருவானது என்றும் சான்றளிக்கிறேன்.

இடம்: சென்னை
நாள்: 13.01.2016

**(ப.இரவிசங்கர்)**
**மேற்பார்வையாளர்**

**கா.வெ.சே.மருதுமோகன்,**
முனைவர் பட்ட ஆய்வாளர்
அண்ணா பொதுவாழ்வியல் மையம்
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை-600 005.

## ஆய்வாளர் உறுதிமொழி

**“நடிகர் திலகம் சிவாஜிகணேசன் வாழ்க்கை வரலாறும் கலைப்பணிகளும் - ஓர் ஆய்வு”** என்னும் தலைப்பில் முனைவர் (பி.எச்டி.,) பட்டத்திற்காகச் சென்னைப் பல்கலைக்கழக அண்ணா பொதுவாழ்வியல் மையத்தில் பேராசிரியர் முனைவர் ப.இரவி சங்கர் அவர்களின் மேற்பார்வையில் ஆய்வு நிகழ்த்தி எழுதப்பட்டுள்ள இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்கு முன் இவ்வாய்வேடு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம்: சென்னை
நாள்: 13.01.2016

(கா.வெ.சே.மருதுமோகன்)
முனைவர் பட்ட ஆய்வாளர்

# நன்றியுரை

**'நடிகர் திலகம் சிவாஜி கணேசனின் வாழ்க்கை வரலாறும் கலைப்பணிகளும் - ஓர் ஆய்வு'** என்னும் தலைப்பில் அண்ணா பொது வாழ்வியல் மையத்தில் ஆய்வு செய்ய அனுமதி வழங்கிய சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் **பேராசிரியர் முனைவர் இரா. தாண்டவன்** அவர்களுக்கும்,

அண்ணா பொதுவாழ்வியல் மையத்தில் என்னை ஆய்வாளராக ஏற்றுக்கொண்டு அன்புகாட்டி, ஊக்கப்படுத்தி ஆய்வை நெறிப்படுத்தி, ஆய்வேட்டின் செம்மையான நிறைவிற்குத் துணைநின்ற எனது ஆய்வு மேற்பார்வையாளர் **பேராசிரியர் முனைவர் ப. இரவிசங்கர்** அவர்களுக்கும்,

சிவாஜி கணேசன் மகன் **திரு.ராம்குமார்** அவர்களுக்கும், நடிகர் **திரு.பிரபு** அவர்களுக்கும், **திரு. வேணுகோபால்** அவர்களுக்கும், **திரு. முரளிதரன்** அவர்களுக்கும், **திரு. குமார்** அவர்களுக்கும், **திரு.கிரி சண்முகம்** அவர்களுக்கும், **திரு.துஷ்யந்த்** அவர்களுக்கும், நடிகர் **விக்ரம் பிரபு** அவர்களுக்கும், **திருமதி சகுந்தலா சண்முகம்** அவர்களுக்கும், **திருமதி. சாந்தி நாராயணஸ்வாமி** அவர்களுக்கும், **திருமதி. தேன்மொழி கோவிந்தராஜன்** அவர்களுக்கும், **திருமதி. கண்ணம்மா ராம்குமார்** அவர்களுக்கும், **திருமதி புனிதா பிரபு** அவர்களுக்கும், **திருமதி. லிண்டா முரளிதரன்** அவர்களுக்கும், **திருமதி. அனுராதா கிரி** அவர்களுக்கும், **திருமதி. அபிராமி துஷ்யந்த்** அவர்களுக்கும், **திருமதி. உஜ்ஜயினி விக்ரம் பிரபு** அவர்களுக்கும்,

ஆய்வுக்காலத்தில் ஆய்வுக்குத் தேவையான ஆலோசனைகளை வழங்கி உதவிய அண்ணா பொதுவாழ்வியல் மையத்தின் **பேராசிரியர் முனைவர் கோ. கிருட்டிணமூர்த்தி** (ஓய்வு) அவர்களுக்கும், இணைப் பேராசிரியர் **முனைவர் பி. மதுரைவீரன், துணைப்பேராசிரியர் முனைவர் கலைச்செல்வி சிவராமன்** அவர்களுக்கும், **துணைப் பேராசிரியர் முனைவர் இரா. வெங்கடேஷ்** அவர்களுக்கும்,

ஆய்வுக்குத் தேவையான ஆதரவு நல்கிய சென்னைப் பல்கலைக் கழகத்தின் பதிவாளர் **முனைவர் பா. டேவிட் ஜவகர்** அவர்களுக்கும், தேர்வுக் கண்காணிப்பு அலுவலர் **முனைவர் எஸ். திருமகன்** அவர்களுக்கும்,

அண்ணா பொதுவாழ்வியல் மையத்தின் பணிபுரியும் **முனைவர் ஜி.பி. சுதா** அவர்களுக்கும், பிற அலுவலகப் பணியாளர்கள் அனைவருக்கும்,

மானிடவியல் சம்பந்தப்பட்ட சந்தேகங்களை தீர்த்து ஆய்வுக்கு உதவிபுரிந்த **முனைவர் சீ. சுமதி** அவர்களுக்கும்,

ஆய்வேட்டின் கருத்துப் பதிவுகளை சரிபார்த்து உதவிபுரிந்த சென்னை மாநில கல்லூரியின் இணைப் பேராசிரியர் **முனைவர் இல. முத்துக்குமாரசாமி**க்கும்,

ஆய்வுக்கு வேண்டிய உதவிகளைப் புரிந்த நந்தனம் கலைக்கல்லூரி இணைப் பேராசிரியர் **இரா. குமரன்** அவர்களுக்கும், துணைப் பேராசிரியர் **முனைவர் இ. உதயசங்கர்** அவர்களுக்கும்,

ஆரம்ப காலத்திலிருந்தே ஆய்வுக்கு உறுதுணையாக விளங்கிய **சு.சங்கரவடிவேலு,** இணை ஆணையாளர், இந்திய வருவாய்ப் பணி (ஓய்வு) அவர்களுக்கும்,

ஆய்வேட்டினை உரிய முறையில் தட்டச்சு செய்து, சிறந்த முறையில் வடிவமைத்துத் தந்த அடையார் மாணவர் நகலகத்தின் உரிமையாளர் **திரு. அ.சௌரிராஜன்** அவர்களுக்கும்,

ஆய்வுக்கு வேண்டிய நூல்களை அமெரிக்க நாட்டிலிருந்து வரவழைத்து அன்பளிப்பாக வழங்கி உதவிபுரிந்து ஜான்சன்ஸ் குழுமத்தின் நிர்வாக இயக்குநர் **கலைமணி நடராஜன்** அவர்களுக்கும்,

ஆய்வுக்காக சென்னைப் பல்கலைக்கழகத்தில் பதிவு செய்வதற்கு உதவி செய்த **சுபாஷிணி இளவரசு, திருமாவளவன் சுந்தரமூர்த்தி** மற்றும் **முத்துச்சாமி** அவர்களுக்கும்,

ஆய்வுக்காக உதவிய தமிழ்நாடு ஆவணக்காப்பக அலுவலர்களுக்கும், ரோஜா முத்தையா நூலக பொறுப்பாளர்களுக்கும், கன்னிமாரா நூலக அலுவலர்களுக்கும்,

ஆய்வுக்காலத்தில் உறுதுணையாக விளங்கிய எனது மனைவி **பரிமளா தேவி,** மகன்கள் **சிபி மருது** மற்றும் **அபி மருது** அவர்களுக்கும்

நன்றி......

## உள்ளடக்கம்

# முகவுரை

வரலாறு அல்லது சரித்திரம் என்பதற்கு பல விளக்கங்கள் உருவாகின. ஆங்கிலச் சொல்லான ஹிஸ்டரி (History) என்பது (Istoria) என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து பிறந்தது. கிரேக்கத்தில் இஸ்டோரியா (Istoria) என்ற சொல்லுக்கு, ஆய்வு செய்தல், உண்மையை தேடுதல், புதுப்பொருள் தேடல், தகவல் திரட்டல், கற்றல் என பல பொருள்கள் சொல்லப்பட்டன. இஸ்டோரியா (Istoria) என்ற கிரேக்க சொல்லுக்கு இணையாக ஜெர்மன் மொழியில் 'கெஸ்சிசெட்' (Geschichete) என வழங்கப்பட்டது. இதற்குக் கடந்த கால நிகழ்ச்சிகளை அறிவார்த்தமாகப் புரிந்து கொள்ளத்தக்க வகையில் கூறுவது என்பது பொருளாகும். 'வரலாறு' என்பது அரேபிய மொழியில் தாரிக் (Tariq) என்று கூறப்பட்டது. இதற்குக் கால வரன்முறை என்று பொருள். புராணங்களின் வரலாறு சமஸ்கிருதத்தில் 'இதிகாசம்' (Epic) என்று அறியப்பட்டது. எந்தத் துறையில் அல்லது எந்த வகையில் கடந்த கால நிகழ்வுகள் கூறப்படுகின்றதோ அதைக் குறிப்பிட்டு அதனுடைய வரலாறு என்று கூறலாம்.

வரலாறு என்பது, பிரபஞ்ச வரலாறு, சமூக வரலாறு, பண்பாட்டு வரலாறு, அரசியல் வரலாறு, அரசியலமைப்பு வரலாறு, வாழ்க்கை வரலாறு, சட்ட வரலாறு, ராணுவ வரலாறு, ராஜதந்திர வரலாறு, மொழி வரலாறு, இலக்கிய வரலாறு என்று வகைப்படுத்தப்பட்டு இருக்கின்றன. மேற்குறிப்பிட்ட வரலாறு வகைகளில் 'வாழ்க்கை வரலாறு' மக்களால் அதிகம் விரும்பி பயிலப்படுகிறது.

## வாழ்க்கை வரலாறு – பொருள்

வாழ்க்கை வரலாறு என்பது ஆங்கிலத்தில் 'Biography' என்று கூறப்படுகிறது. 'Bio' என்றால் life என்று ஆங்கிலத்திலும், 'வாழ்க்கை' என்று தமிழிலும் பொருள்படும். 'Graphy' என்பது வரைவியல் அல்லது எழுத்தாக்கம் என பொருள்படுகிறது.

வாழ்க்கை வரலாறு - இலக்கணம்

"ஒரு மனிதனின் வாழ்க்கை வரலாறு அந்த மனிதரின் உறுதியான எதிரியால் எழுதப்பட வேண்டும்", என்று இங்கிலாந்து நாட்டு முன்னாள் பிரதமரும், தத்துவஞானியுமான ஆர்தர் பால்போஃர். (Arthur Balfour) கூறுகிறார். (www. brainyquote.com/quotes/authors/a/Arthur_balfour.html).

அங்ஙனம் எழுதப்படுகின்ற "வரலாற்று இலக்கியத்தில் பொது வரலாறுக்குத் தேவையான ஒன்றுபட்ட விஷயங்கள் கிடைப்பதால், வாழ்க்கை வரலாறு மட்டுமே இலக்கிய படைப்புகளில் மிக்க மகிழ்வையளிக்கிறது" என்பது ரூபர்ட் ஹாலின் கருத்து (Rubert Hall) ஆகும். (www. brainyquote.com/quotes/authors/r/ruberthall/186817.html).

"பூகோளம் என்பது வரைபடங்களைப்பற்றியது ஆனால் வாழ்க்கை வரலாறு என்பது மனிதர்களைப் பற்றியதாகும்", என்று எரிக் பென்ட்லி (Eric Bentley) குறிப்பிடுகிறார். (www. brainyquote.com/quotes/authors/e/eric_bentley.html).

ஸ்பானிஷ் நாட்டு விடுதலைத் தத்துவஞானியும், கட்டுரையாளருமான ஜோஸ் ஓர்டேகா ஒய் கெஸ்ஸட் (Jose Ortega Y Gasset) "மனித வாழ்வின் முரண் சுவைகளின் தொகுப்பே வாழ்க்கை வரலாறு ஆகும்" என்று கூறினார். (www. brainyquote.com/quotes/authors/j/jose_ortega_y_gasset.html).

"வாழ்க்கை வரலாற்றின் விஷயங்கள் புதினத்தோடு கலந்துவிடக் கூடாது. அவ்வாறு கலந்தால் அச்சேற்றும்போது புதினங்களுக்கான விஷயங்கள் சிவப்பு மையிலும், விஷயங்கள் கறுப்பு மையிலும் அச்சாக வேண்டும்." என்றார் காதரின் ட்ரிங்கர் பவன் (Catherine Drinker Bowen) (www. brainyquote.com/quotes/authors/c/Catherine_drinker_bowen.html).

"விதிகளுக்கு உட்படாத வரலாறு மனிதனின் வாழ்க்கை வரலாறு ஆகிறது" என்று பெஞ்சமின் டிஸ்ரலி (Benjamin Disraeli) குறிப்பிட்டார் (www. brainyquote.com/quotes/authors/b/Benjamin_disraeli.html).

"உலக வரலாறு என்பது மாமனிதர்களின் வரலாறு ஆகும்." என்பது ஸ்காட்டுலாந்து நாட்டு தத்துவஞானியும், வரலாற்றாளருமான தாமஸ் கார்லைல் (Thomas Carlyle) என்பவரின் கருத்து ஆகும். (www. brainyquote.com/quotes/authors/t/thomas_carlyle.html).

## வாழ்க்கை வரலாறு – இயல்புகள்

'வாழ்க்கை வரலாறு' என்பது ஒரு மனிதனின் பிறப்பு, குடும்பம், கல்வி, பணி, உறவுகள் மற்றும் மரணம் இவை அடங்கிய தொகுப்பாகும். வாழ்க்கை வரலாறு என்பது மேற்கூறப்பட்டவைகளின் தொகுப்பாக மட்டுமல்லாமல், அவற்றோடு அந்த மனிதன் பெற்ற அனுபவங்கள் ஆகும். சுருக்கமாக வாழ்க்கை வரலாறு என்பது ஒருவரின் பிறப்பிலிருந்து மரணம் வரை அவரது வாழ்வில் நடைபெற்ற நிகழ்வுகளின் பதிவாகும்.

பொதுவாக புகழ்மிக்கவர்களின் வாழ்வின் தொகுப்பே 'வாழ்க்கை வரலாறு' ஆகும். புகழ்மிக்கவர்களாக கடவுள்கள், கடவுள் அவதாரங்கள், மாவீரர்கள், நல்லாட்சி புரிந்தவர்கள், கொடுங்கோலேர்கள், சுதந்திரப் போராட்ட வீரர்கள், மாபெரும் கவிஞர்கள், தத்துவ மேதைகள், மாமனிதர்கள் முதலானவர்கள் கருதப்படுகின்றனர்.

## பெருமைமிகு வாழ்க்கை வரலாறு

பெருமைமிகு வாழ்க்கை வரலாறு என்பது ஒரு கடவுளைப் பற்றியதாகவோ, கடவுளின் அவதாரங்களைப் பற்றியதாகவோ, கடவுளின் தூதுவர்களைப் பற்றியதாகவோ, மதங்களை உருவாக்கிய தலைவர்களைப் பற்றியதாகவோ, பேரரசர்களைப் பற்றியதாகவோ, மாவீரர்களைப் பற்றியதாகவோ, அடிமைத்தளைகளை அறுக்க ஆர்த்தெழுந்த சுதந்திரப் போராட்ட வீரர்களைப் பற்றியதாகவோ, மாபெரும் கலைஞர்களைப் பற்றியதாகவோ, இலக்கிய, தத்துவ மேதைகளைப் பற்றியதாகவோ, புரட்சி வீரர்களைப் பற்றியதாகவோ, மகா கவிஞர்களைப் பற்றியதாகவோ, மாமனிதர்களைப் பற்றியதாகவோ இதுவரை இருந்திருக்கின்றன. இந்த வரிசையில் பல கலைகளில் விற்பன்னர்களாக விளங்கிய பல மாபெரும் கலைஞர்களின் வாழ்க்கை வரலாறும் மக்களால் விரும்பப்படுகின்றன.

கலை என்பது நாகரீக மாந்தர் தாம் உணர்ந்து மற்றவர்க்கு உணர்த்தும் ஓர் அழகியியல் ஆகும். தமிழில் கற்பதற்கு உரியவை எல்லாம் கலையாகும் என்பது பொதுக் கூற்று ஆகும்.

*'அபிதான சிந்தாமணி'* கற்பதற்கு உரிய ஆயக் கலைகள் அறுபத்து நான்கு என்று கூறுகிறது. அறுபத்து நான்கு கலைகளுள் உணர்ச்சிக்கும், கற்பனைக்கும் முக்கிய இடம் தரும் கலைகளான கவின் கலைகளை அரங்காடல், எழுத்து, கட்டிடம் எனப் பிரிக்கலாம்.

அரங்காடல் கலைகளை இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழாக கூறலாம். இதில் மூன்றாவதாக வரும் நாடகம் மற்றும் திரைப்பட உலகில் தனிப் பெரும் முத்திரையை பதித்தவர் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் ஆவார். வாழ்வில் பெருமைக்குரியவர்களின் வாழ்க்கைதான் வரலாறாக உருவாகும் தகுதி பெறுகிறது. அவ்வாறு தகுதி பெற்ற பல பெருமைக்குரியவர்களின் வாழ்க்கை வரலாற்றை திரைப்படங்களில் தாம் ஏற்றுக் கொண்ட பாத்திரங்கள் மூலம் தம் சிறப்பான நடிப்பாற்றலால் நம் கண்முன்னே கொண்டு வந்தவர் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் ஆவார். அவர் கடவுள்களாகவும், கடவுளின் அவதாரங்களாகவும், பேரரசர்களாகவும், தத்துவ மேதைகளாகவும், சுகந்திரப் பேராட்டவீரர்களாகவும், மகா கவிஞர்களாகவும், செல்வந்தர்களாகவும், ஏழைகளாகவும் வேடங்கள் ஏற்று நடித்தார். தன் நடிப்புத் திறமையால் திறம்பட தமிழ் பேசும் திறனால் நடித்து தமிழ்த் திரையுலகில் தனிப்பெரும் இடம் பெற்றார். அவரின் வாழ்க்கை வரலாற்றையும், அவர் ஆற்றிய கலைப் பணிகளையும் ஆய்வு செய்தல் என்பது எதிர்கால கலைஞர்களுக்கும், ரசிகர்களுக்கும், பொதுமக்களுக்கும் உற்சாகமும், ஊக்கமும், ஊட்டக்கூடியது என்ற நோக்கில் இவ்வாய்வின் இன்றியமையாமை உணரப்பட்டது.

ஆய்வு நோக்கம்

கீழ்க்கண்ட நோக்கங்களின் அடிப்படையில் இவ்வாய்வேடு ஆராயப்பட்டுள்ளது.

1. சிவாஜி கணேசனின் நடிப்புக்கலை மற்றும் கட்டபொம்மன் கதாபாத்திரத்தின் மீது அவர் கொண்ட தாகம், கட்டபொம்மன் கதாபாத்திரம் அவர் மீது ஏற்படுத்திய தாக்கம் போன்றவற்றை ஆராய்வது.

2. நடிகர் திலகம் சிவாஜி கணேசன் நாடக உலகிலும், திரைப்பட உலகிலும் வெளிப்படுத்திய நடிப்பாற்றல் பற்றி ஆராய்வது.

3. வசன உச்சரிப்பில் தந்த தெளிவு பற்றி ஆராய்வது.

4. புராண இதிகாச நாயகர்கள், கடவுள்கள் மற்றும் கடவுளின் அவதாரங்கள் சரித்திர கால பேரரசர்கள் மற்றும் சுதந்திரப் போராட்ட வீரர்கள் போன்றவர்களை நம் கண்முன்னே கொண்டு வந்த அவரின் தனித்திறமையை ஆராய்வது.

5. பிற நாட்டு கதாப்பாத்திரங்களை ஏற்று நடித்துக் காட்டிய விதத்தை ஆராய்வது.

6. தொல்காப்பிய மெய்ப்பாட்டியலின் சுவைகளையும், ருஷ்ய நாட்டு இயக்குநர் மற்றும் நடிகரான கான்ஸ்தான்தீன் ஸ்தானிஸ்லாவ்ஸ்கி உருவாக்கிய நடிப்பு விதி முறைகளை ஆரம்பக் கல்வி மட்டுமே பயின்ற சிவாஜி கணேசன் கடைபிடித்து, நடிப்பில் சாதித்து பல்கலைகழகமாக அவர் விளங்கியது குறித்து ஆராய்வது.

7. அரசியலில் அவர் ஏற்றுக் கொண்ட நிலைப்பாட்டுக்குரிய பின்புலங்கள் போன்றவற்றை ஆராய்தல்.

8. நடிப்புலகில் அவர் செய்த சாதனைகள் மூலம் அவர் பெற்ற புகழ், செல்வம், சமுதாய ஏற்றம் குறித்தத் தன்மைகளை ஆராய்வது.

**அனுமானம்:**

மேலும், பின்வரும் அனுமானங்கள் இவ்வாய்வேட்டை செம்மைப்படுத்த உதவின.

1. ***சிவாஜி கணேசனின் குரல்:*** 1931ஆம் ஆண்டிலிருந்து தமிழ் சினிமா பேசத் துவங்கியது. அன்றிலிருந்து இன்றைய காலம் வரை தமிழ் சினிமாவில் நடித்த நடிகர்களின் குரல்களில் சிவாஜி கணேசனின் குரல் தான் மிக சிறந்த குரலாகும்.

2. ***சிவாஜி கணேசனின் தமிழ் உச்சரிப்பு:*** 1931ஆம் ஆண்டிலிருந்து இன்றைய காலம் வரை சிவாஜி கணேசனைப் போல் தமிழை உச்சரித்த நடிகர் இதுவரை தமிழ் திரைப்படத் துறையில் அறிமுகமாகவில்லை. இவரது தமிழ் உச்சரிப்பு தான் மிகச் சிறந்ததாகும்.

3. *சிவாஜிகணேசனின் நினைவாற்றல்:* 1931ஆம் ஆண்டிலிருந்து 1952ம் ஆண்டு வரை சிவாஜி கணேசனைப் போல் நினைவாற்றல் மிக்க நடிகர் தமிழ் திரைப்படத் துறைக்கு அறிமுகமாகவில்லை.

4. *வசனம் பேசும் ஆற்றல்:* தமிழ் வசனங்களை ஏற்ற இறக்கத்துடன் அற்புதமாகப் பேசி நடிப்பதில் சிவாஜி கணேசனுக்கு இணையாக எந்த நடிகரும் பேசியதில்லை.

5. *சிவாஜி கணேசனின் உடல் மொழித்திறன்:* ஒவ்வொரு படத்திற்கும் வேறுவேறு உடல் மொழிக்காட்டி நடிக்கும் திறன் சிவாஜி கணேசன் மட்டுமே பெற்றிருந்தார். செல்வந்தருக்கு, ஏழைக்கு, அறிஞருக்கு, முட்டாளுக்கு, காவல்துறை அதிகாரிக்கு, மருத்துவருக்கு, நோயாளிக்கு, விவசாயிக்கு, மகாகவிஞருக்கு என்று ஏற்றிருக்கும் வேடங்களுக்கு ஏற்ப உடல் மொழி மாற்றி நடித்த நடிகர் இவர் மட்டுமே.

6. *சிவாஜி கணேசனின் பாடலுக்கு வாய் அசைக்கும் திறன்:* ஆரம்ப கால தமிழ் சினிமாக்களில் பாடல்கள் பாடும் திறன் பெற்ற நடிகர்களின் படங்கள் மட்டுமே பெரும் வெற்றியடைந்து வந்தன. அதை மாற்றி பிறர் பாடும் பாடலுக்குத் தானே பாடுவதுபோல் வாய் அசைக்கும் திறன் சிவாஜி மட்டுமே சிறப்பாக பெற்றிருந்தார்.

7. *வாத்தியக் கருவிகளை வாசிப்பது போல் நடிக்கும் திறன்:* சிவாஜி கணேசன் மட்டுமே வாத்தியக் கருவிகளை தானே வாசிப்பது போல் பாவனை காட்டி நடிக்கும் திறனில் முதன்மையாக விளங்கினார்.

8. *சிவாஜி கணேசன் சுய ஒப்பனைத் திறன்*: சிவாஜி கணேசன் மட்டுமே எண்பது சதவிகித ஒப்பனையை தனக்குத் தானே போட்டுக் கொள்ளும் திறன் பெற்றவர். அதுபோல் கதாபாத்திரத்திற்கு ஏற்ற ஆடைகளை தேர்வு செய்யும் திறன் பெற்றவர்.

ஆய்வுக் காலம்

இந்த ஆய்வின் காலம் 1928 முதல் 2001 வரை ஆகும். 1928 இல் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் பிறந்தார். 2001ல் அவர் இயற்கை எய்தினார். மொத்தம் 73 வருடங்கள் அவர் வாழ்ந்த வாழ்க்கை ஆய்வுக் காலமாக ஆராயப்பட்டுள்ளது.

ஆய்வு எல்லை

நடிகர் திலகம் சிவாஜி கணேசன் தன்னைப்பற்றி அவர் வெளியிட்ட அனுபவ செய்திகள், அவர் எழுதிய கட்டுரைகள், அவருடைய நூல்கள் மூலமாக அவரின் வாழ்க்கை வரலாறு, அவருடைய கலைப்பணிகள் ஆகியவற்றை ஆராய்வதே இவ்வாய்வின் எல்லையாகும்.

ஆய்வு அணுகுமுறை

நடிகர் திலகம் சிவாஜி கணேசனின் வாழ்க்கை வரலாற்றையும், அவரது கலைப்பணிகளையும் தொகுத்துக் காண்பது என்ற நிலையில், இவ்வாய்வியலில் வரலாற்று முறை மற்றும் விளக்கவியல் ஆய்வு அணுகுமுறைகள் பின்பற்றப்படுகின்றன. அவரது பணிகளை, திறமைகளை, மதிப்பீடு செய்தல் என்ற நிலையில், இவ்வாய்வியலில் ஒப்பீட்டு ஆய்வு அணுகுமுறை பின்பற்றப்படுகிறது.

ஆய்வுத் திட்டம்

'நடிகர் திலகம் சிவாஜி கணேசன் வாழ்க்கை வரலாறும், கலைப்பணிகளும்-ஓர் ஆய்வு' என்ற தலைப்பிலான இந்த ஆய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பின்வரும் ஆறு இயல்களை உடையதாக பகுக்கப்பட்டுள்ளது.

1. சிவாஜி கணேசனின் இளமைப் பருவம்.
2. நாடக உலகில் சிவாஜி கணேசன்
3. திரையுலகில் சிவாஜி கணேசன்
4. சிவாஜி கணேசனின் நடிப்பாற்றல்
5. அரசியலில் சிவாஜி கணேசனின் நிலைப்பாடு
6. சமூகத்தில் சிவாஜி கணேசன்

முகவுரை

'நடிகர் திலகம் சிவாஜி கணேசனின் வாழ்க்கை வரலாறும், கலைப்பணிகளும்- ஓர் ஆய்வு' குறித்து இதுவரை மேற்கொண்ட முன்னோடி ஆய்வுகள் பற்றிய விளக்கம், ஆய்வுப் பொருள், ஆய்வு நோக்கம், ஆய்வு அனுமானம், ஆய்வுக்காலம், ஆய்வு எல்லை, ஆய்வுச் சான்றுகள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப் பகுப்பு முதலியன முகவுரையில் இடம் பெறுகின்றன.

இயல் ஒன்று: சிவாஜி கணேசனின் இளமைப் பருவம்

தமிழ்நாட்டில், தஞ்சை மாவட்டத்தில், வேட்டைத்திடல் எனும் ஊரில் தமிழகத்தின் பூர்வ குடியான போர்புரிவதை தொழிலாகக் கொண்டிருந்த முக்குலத்தோர் இனத்தில் கள்ளர் பிரிவில் பிறந்தவர் கணேசமூர்த்தி. விழுப்புரத்தில் இரயில்வேயில் வேலை பார்த்து வந்த சுதந்திரப் போராட்ட வீரர் சின்னையா மன்றாயர்-இராஜாமணி அம்மாள் அவர்களது நான்காவது மகனாக 1928, அக்டோபர் திங்கள் 1ம் நாள் பிறந்தார் கணேசமூர்த்தி என்ற விழுப்புரம் சின்னையா கணேசன். பள்ளி மாணவராக இருந்த காலத்தில் மிகவும் துடுக்குடனும், சுறுசுறுப்புடனும், யாருக்கும் அடங்காத முரட்டு சுபாவத்துடன் இருந்தார். இயற்கையிலேயே நல்ல குரல் வளமும், சங்கீத ஞானமும் வாய்க்கப் பெற்றார். இளம் வயதில் 'கம்பளத்தார் கூத்து' கண்டு ரசித்தார். வீரமரபிலே தோன்றியதாலும், ஒரு தேசீயவாதியின் மகனாக பிறந்ததினாலும், கம்பளத்தார் கூத்தின் நாயகன் வீரபாண்டியக் கட்டபொம்மனின் கதை அவரைக் கவர்ந்தது. அவரது தாய்மொழியான தமிழ், பிறப்பின் பெருமை, நல்ல குரல்வளம், பிற்காலத்தில் திரைஉலகில் சிம்மக்குரலில் தமிழ் பேசி, மன்னர்களின் கம்பீரத்தையும் விடுதலை வீரர்களின் பாத்திரங்களையும், திறம்பட தன் நடப்பில் வெளிக் கொண்டு வந்தமைக்கு பின்புலமாக இருந்தன. திருச்சியில் ஏழு வயதில் ஆரம்ப கல்வியைக் கற்று வந்த காலத்தில் கட்டபொம்மன் தெருக்கூத்தை கண்டு தானும் கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்ற ஆர்வத்தோடும், உந்துதலோடும், கல்வியை நிறுத்திவிட்டு தன்னை அநாதை என்று கூறி நாடகக் கம்பெனியில் சேர்ந்தார் கணேசமூர்த்தி. அவரது தணியாத கலை

ஆர்வம் அவரை தான் ஒரு பெரும் நடிகனாக வேண்டும் என்ற இலட்சிய பாதையை துவக்க வைத்தது. கணேசமூர்த்தியின் இலட்சிய கலைப் பயணத்திற்கு அடிப்படையாக அமைந்த அவருடைய இளமைக்கால வாழ்வியல் வரலாற்றைக் கண்டு விளக்கும் வகையில் இந்த முதல் இயல் அமைகிறது.

இரண்டாவது இயல்: நாடக உலகில் சிவாஜி கணேசன்

தனது ஏழாவது வயதின் 1935ல் நடிப்பின் மீது கொண்ட தனியாத தாகத்தால், மதுரை ஸ்ரீ பாலகான சபாவில் நடிகராக சேர்ந்தார் கணேசமூர்த்தி. நாடக கம்பெனியில் சேர்ந்த ஒரு வார கால அவகாசத்தில் ஒழுக்கத்துடனும், கட்டுப்பாடுடனும், இசை, வசனம் பேசும்முறை, குரல் வளப்பயிற்சி, மற்றும் நாடகப் பாடங்கள் இவற்றை முறையாக கற்று தேர்ச்சிப் பெற்று பெண் வேடத்தில் தோன்றி முதல் மேடை அனுபவத்தில் வெற்றி பெற்றார். அவரது பெயர் வி.சி. கணேசன் என மாற்றப்பட்டது. தொடர்ந்து ஒரே நாடகத்தில் பல்வேறு வேடங்கள் எற்று தன் திறமையை வெளிப்படுத்தினார். பசி, பட்டினி போன்ற பல இன்னல்களை அனுபவித்து படிப்படியாக முன்னேறினார். தன் வீட்டில் நடந்த துயர சம்பவங்களில் பங்கேற்க முடியாத கண்டிப்பான சூழ்நிலையில் நாடக வாழ்வில் தன்னை முழுமையாக ஈடுபடுத்ததிக் கொண்டார். நடிப்பில் முன்னேற்றம் கண்டு 'ராஜபார்ட்' வேடம் ஏற்கும் ஏற்றம் பெற்றார். நடிகர் எம்.ஆர். ராதா மூலமாக திராவிட இயக்க தலைவர்களுடன் எற்பட்ட நட்பால் தனது பதினெட்டாவது வயதில் 1945ல் மதராஸில் நடந்த ஏழாவது சுயமரியாதை மாநாட்டில் அண்ணாதுரை எழுதிய *"சிவாஜி கண்ட இந்து ராஜ்ஜியம்"* எனும் நாடகத்தில் சிறப்பாக நடித்து ஈ.வெ. ராமசாமி அவர்களால் *'சிவாஜி'* என்ற சிறப்பு பட்டத்தைப் பெற்று கணேச மூர்த்தி, சிவாஜி கணேசன் என அழைக்கப்பட்டார். அதில் குறிப்பிடத்தக்கது யாதெனில், ஈ.வெ.ராமசாமிக்கு கூத்து, பாட்டு, நாடகம் போன்ற கலைகள் பிடிக்காது. அந்த மனநிலை கொண்டவரை சிவாஜிகணேசனின் நடிப்பும், வசனம் பேசிய ஆற்றலும் கவர்ந்தது என்பது சிறப்புக்குரிய அம்சமாகும். தமது இருபத்திநான்காவது வயதில் 1952ல் ஏ.வி.எம். நிறுவனத்தோடு நேஷனல் பிச்சர்ஸ் அதிபர் பி.ஏ. பெருமாள் முதலியார் தயாரித்து, மு.கருணாநிதி திரைக்கதை வசனம் எழுதிய

*'பராசக்தி'* எனும் திரைபடத்தின் மூலம் தமிழ்த் திரைப்பட உலகில் கதாநாயகனாக அறிமுகமாகி வெற்றிக் கொடி நாட்டினார். அவரது இலக்கு நோக்கிய கலைப்பயணத்தில் அடித்தளமாக விளங்கிய நாடக வாழ்வை விளக்குவதாக இந்த இயல் அமைந்துள்ளது.

இயல் மூன்று: திரைப்பட நடிகர் சிவாஜி கணேசன்

சிவாஜி கணேசனின் திரைப்பட வாழ்வு 1952-ல் வெளிவந்த '*பராசக்தி*' படத்தில் கதாநாயகனாக அறிமுகம் ஆனதிலிருந்து துவங்குகிறது. 'பராசக்தி' மாபெரும் வெற்றி பெற்றது. அந்த வெற்றி கருணாநிதியின் சிறப்பான வசனங்களை திறம்பட பேசித் தமிழைச் சிறப்பாக உச்சரித்து நடித்த சிவாஜிகணேசனால் தான் என்பது உறுதியானது. காரணம், கருணாநிதியின் சிறப்பான வசனங்களை சிவாஜிகணேசனுக்கு முன்பு பேசிய நடிகர்களால் மக்களை கவரத்தக்க அளவிற்கு பேசமுடியவில்லை என்பதே. அதனைத் தொடர்ந்து, வில்லனாக நடித்து புகழ் பெற்றார். 1954இல் கருணாநிதி திரைக்கதை வசனத்தில் வெளிவந்த '*மனோகரா*' படம் அவரது திரை உலக வாழ்வில் வெற்றியை உறுதி செய்தது. மனோகராவின் வெற்றி திராவிட முன்னேற்ற கழகம் தமிழக அரசியல் அரங்கில் முக்கிய இயக்கமாக விளங்க அடித்தளமிட்டது. அதற்கு சிறப்பான காரணங்களாக விளங்குவது கருணாநிதியின் தமிழ் வசனங்கள். அதைக் கம்பீரமாக உச்சரித்து ஆற்றலுடன் பேசி, அற்புதமாக நடிக்க, சிவாஜி கணேசனால்தான் முடிந்தது என்பது நிதர்சனமான உண்மை. 'மனோகரா' படத்தில் ஒரே நேரத்தில் தமிழ், தெலுங்கு, இந்தி வசனங்களை பேசி நடித்து அபாரமாக தன் திறமையை வெளிக்காட்டினார் சிவாஜி கணேசன். 'மனோகரா'வின் வெற்றி சிவாஜி கணேசனின் புகழை தமிழ் திரையுலத்தின் சிகரத்திற்கு கொண்டு சென்றது. திரைப்பட உலகில் நடித்துவந்த போதும் தன்னைச் சார்ந்தவர்களுக்காக நாடக குழு ஒன்றினை ஆரம்பித்து திரைப்படம், நாடகம் இரண்டிலும் ஓய்வின்றி நடித்துவந்தார். இளவயதில் தன் இலட்சிய பாத்திரமான 'வீரப்பாண்டிய கட்டபொம்மன்' கதையை நாடகமாக்கி தன் நாடகக்குழுவில் நடித்தார். பின்பு அது பி.ஆர்.பந்துலுவினால் திரைப்படமாக தயாாரிக்கப்பட்ட போது சிறப்பான முறையில் நடித்து ஆசிய-ஆப்பிரிக்கா கண்டத்தின் *சிறந்த நடிகர்*

விருதினைப் பெற்றார். 1962-ல் அமெரிக்க ஐக்கிய நாட்டின் கலாச்சார தூதுவராக அழைக்கப்பட்டு நயகரா நகரத்தில் ஒரு நாள் மேயராக கௌரவிக்கப்பட்டார். மேலும் மொரீசியஸ், குவைத், இலங்கை மற்றும் சிங்கப்பூர் போன்ற நாடுகளில் அழைக்கப்பட்டு பெருமைப்படுத்தப்பட்டார். நடிப்பு என்பதில் மட்டும் கவனம் செலுத்திய சிவாஜி கணேசன் தன் குடும்பம், பிள்ளைகள், பற்றிய சிந்தனையின்றி நடித்து வந்தார். 1957 முதல் 1967 வரை நாள் ஒன்றுக்கு 20 மணி நேரம் வேலை செய்தார்.

ஒரே படத்தில் இரண்டு, மூன்று மற்றும் ஒன்பது வேடங்களில் நடித்து சிறந்த நடிகர் என்பதை நிருபித்தார். புராண இதிகாசப் படங்களில் நடித்து புகழின் உச்சிக்குச் சென்றார். தமிழ் திரையுலகில் வருடத்திற்கு சராசரியாக எட்டு படங்கள் நடித்தவர் இவர் ஒருவர் மட்டுமே. இந்தி, தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலிய மொழிகளில் முன்னனி நடிகர்களோடு இணைந்து நடித்தார். தியேட்டர், படவிநியோகம், திரைப்படத் தயாரிப்பு போன்ற திரையுலகத் தொடர்பு சம்பந்தமானத் துறைகளை ஆரம்பித்து தன் தம்பி மூலம் நிர்வாகித்து வந்தார். சர்வதேச மற்றும் தேசிய தலைவர்களாலும், ஆன்மீகம், இலக்கியம், தத்துவம் போன்ற பல்வேறு துறைகளை சார்ந்த அறிஞர்களாலும் உலகத்தில் தலைசிறந்த நடிகர் என புகழாரம் சூட்டப்பட்டார். தமிழ் நாடு மற்றும் இந்திய அரசாங்க விருதுகளான *கலைமாமணி, பத்மஸ்ரீ, பத்ம பூஷன், தாதாசாகேப் பால்கே* முதலிய பட்டங்களை பெற்றார். அண்ணாமலை பல்கலைக்கழகம் இவருக்கு *டாக்டர் பட்டம்* கொடுத்து பெருமைப் படுத்தியது. பிரெஞ்சு அரசாங்கம் *'செவாலியே'* பட்டம் கொடுத்து கௌரவித்தது. 1952ல் தமிழ் திரையுலகில் அறிமுகமாகி 1999 வரை நாற்பத்தியேழு ஆண்டுகளில் 287 படங்களில் நடித்து பெரும் புகழ், செல்வம், சமூகத்தில் உயர்ந்த இடம் முதலியவற்றை அடைந்த விதத்தை விளக்குவதாக அமைகிறது இந்த இயல்.

இயல் நான்கு - சிவாஜிகணேசனின் நடிப்பாற்றல்

பள்ளி ஆரம்பக் கல்வியை நிறுத்திவிட்டு நடிப்பைத் தொழிலாக மேற்கொண்ட சிவாஜி கணேசன் பழந்தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியத்தின் பொருள் அதிகாரத்தில் உள்ள இயல்களில் ஒன்றான மெய்ப்பாட்டியலில் கூறப்பட்டுள்ள எட்டு வகை மெய்ப்பாடுகள்,

“நகையே யழுகை யிளிவரல் மருட்கை
யச்சம் பெருமிதம் வெகுளி யுவகையென்
றப்பா லெட்டே மெய்ப்பா டென்ப” -
தொல்காப்பிய சூத்திரம் எண்.251

மற்றும் அவற்றின் நிலைக்களன்களையும் சேர்த்து 32 சுவைகளையும் அந்நூல் பற்றிய எந்த ஓர் அறிவும் பெறாமல் இயற்கையாகவே அவர் தன் நடிப்பாற்றல் மூலம் வெளிப்படுத்தியது உலகில் ஒப்பற்ற மிகப் பெரிய சாதனையாகும்.

அதுபோல் இருபதாம் நூற்றாண்டில் ஸ்தானிஸ்லாவ்ஸ்கி என்ற ரஷ்ய நாட்டு இயக்குனர் மற்றும் நடிகரால் வகுக்கப்பட்ட நடிப்புக் கோட்பாடுகளுக்குட்பட்டு, ஒரு நடிகனுக்குரிய தகுதிகளையும், உடல் மற்றும் முகபாவனை வகைகளையும், பிறவிதிகளையும் தானே தனக்குள் வளர்த்துக் கொண்டு மிகச்சிறந்த நடிகராக பரிணமளித்தவர் சிவாஜி கணேசன் ஆவார்.

ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் நடிப்புக் கோட்பாடுகளை கடைப்பிடித்து ஆலிவுட்டின் தலைசிறந்த நடிகர்களில் ஒருவராக உருவான மார்லன் பிராண்டோ சிவாஜிகணேசனின் நடிப்பாற்றலைக் கண்டு பாராட்டினார்.

அவர் அறிமுகமான சமயத்தில் தன் குரல் வளத்தால் பாடல்கள் பாடி மக்களை மயக்கும் ஆற்றல் கொண்ட நடிகர்கள் தமிழ் திரையுலகில் கோலோச்சினர். ஆனால் சிவாஜி கணேசன் பிறர் பாடும் பாடல்களுக்கு அதே ஸ்ருதியில் தான் பாடுவது போல் சிறப்பாக வாயசைத்து அதிலும் தனித்திறமை கொண்டு விளங்கினார். வாத்தியக் கருவிகள், தாளக் கருவிகள், இவற்றை தாளம் தப்பாமல் தானே வாசிப்பது போல் பாவனைக் காட்டி தனி முத்திரை பதித்தார். ஒவ்வொரு படத்திற்கும் தன் நடை, உடல் மொழி இவற்றில் வேறுபாடு காட்டிப் பெரும் நடிகர் எனப்பெயர் பெற்றார். இவ்வாறு சர்வதேச திரைப்பட உலகில் தனக்கு நிகர் தான்தான் என்பதைத் தன் திறமையால் சிவாஜி கணேசன் நிலை நிறுத்தியதை விளக்குவதாக அமைகிறது இந்த இயல்.

## இயல் ஐந்து: அரசியலில் சிவாஜி கணேசனின் நிலைப்பாடு

நாடக உலகில் நடிகர் எம்.ஆர். ராதாவிடம் அறிமுகமான சிவாஜி கணேசன்அவர் மூலம் திராவிட இயக்க தலைவர்களான ஈ.வெ.ரா., அண்ணா துரை, சம்பத், கருணாநிதி போன்ற தலைவர்களுடனும், திராவிட இயக்க நடிகர்களுடனும் நெருங்கிய தோழமை கொண்டிருந்தார். 1943இல் நீதிக்கட்சியில் தன்னை இணைத்துக் கொண்டவர் அண்ணாத்துரை ஆவார். 1944இல் நீதிக்கட்சியின் பெயரை திராவிடர் கழகம் என்ற பெயர் மாற்றம் செய்யகாரணமாக இருந்தார். ஆயிரம் கூட்டங்களுக்குப் பதிலாக ஒரு நாடகம் நடத்தினால் திராவிடர் கழகத்தினுடைய கொள்கைகள் மக்கள் மத்தியில் விரைவில் சென்றடையும் என்பதை செயல்படுத்தியவர் அண்ணாத்துரை. அவரே 'சந்திரோதயம்' என்ற நாடகத்தை முதலில் அரங்கேற்றம் செய்தார். அண்ணாத்துரையின் திட்டம் ஈடேரவில்லை. ஆனால் சிவாஜிகணேசன் நடித்த **சிவாஜி கண்ட இந்து ராஜ்ஜியம்** அரங்கேற்றமான பின்பு தான் திராவிடர் கழகத்தின் புகழ் மக்கள் மத்தியில் பரவியது. அந்த நாடகம் அடைந்த வெற்றியில் ஈ.வெ.ராமசாமியால் அளிக்கப்பட்ட '**சிவாஜி**' என்ற பட்டம் சிவாஜி கணேசனை திராவிட கழகத்தின் உறுப்பினராகும் மன நிலையை அவரிடத்தில் உருவாக்கவில்லை. ஆனால் திராவிட இயக்கத் தோழர்கள் மத்தியில் பெரும் செல்வாக்கு பெற்றார். 1952ல் வெளியான 'பராசத்தி', 1954இல் வெளியான 'மனோகரா' ஆகிய இரண்டு படங்களும் மாபெரும் வெற்றியடைந்தன. இந்த இரு படங்களில் 'பராசக்தி'யின் வெற்றி 1949ல் அண்ணாத்துரை உருவாக்கிய திராவிட முன்னேற்றக் கழகத்தின் புகழ் தமிழக அரசியல் உலகில் நிலையான இடத்தை பெற வழிவகுத்தது எனலாம். 'மனோகரா'வின் வெற்றி திராவிட முன்னேற்றக் கழகத்தின் அரசியல் வெற்றி பயணத்தை துவக்கியதற்கு பின்புலமாக இருந்தது எனலாம். *"பராசக்தி"*, "மனோகரா" போன்ற படங்களில் நடித்து திராவிட முன்னேற்ற கழகத்தின் கருத்துக்களை திறம்பட பேசி தன்னை ஒரு திராவிட இயக்கத்தின் அனுதாபியாக காட்டிக் கொண்டார். நடிப்பின் மீது மட்டும் தன் கவனத்தை செலுத்தி வந்த சிவாஜி கணேசன் அரசியலில் அதிககவனம் செலுத்தாமல் இருந்தார்.

இயல்பாகவே நேர்மை, சொல்தவறாமை, போன்றவற்றை அன்றாட வாழ்வில் கடைப்பிடித்த சிவாஜி கணேசனால் அரசியல்வாதியாக பரிணமிக்க முடியவில்லை. அவருடைய ரசிகர்களும் அவரை அரசியல்வாதியாக ஏற்கவில்லை.

காங்கிரசின் அனுதாபிகளாக இருந்த பல நடிகர்கள் திராவிட இயக்கத்தில் தங்களை இணைத்துக் கொண்டிருந்த காலகட்டத்தில், திராவிட இயக்கத்திலிருந்து சிவாஜி கணேசன் தன்னை காங்கிரஸ் கட்சியில் இணைத்துக் கொண்டார். இது அவர் செய்த பெரும் அரசியல் தவறாக அரசியல் விமர்சகர்கள் கருதினர். ஆனால் சிவாஜிகணேசன் தான் ஒரு தேசியவாதி மகன் என்பதால், தானும் ஒரு தேசியவாதி என்றும், காமராஜரின் கொள்கைகள் தன்னை ஈர்த்தன என்றும் பதிவு செய்தார். கொள்கை ரீதியாக காங்கிரஸ் இயக்கத்தில் தன்னை இணைத்துக் கொண்டதாக கூறினார். ஆனால் காங்கிரஸ் கட்சி சிவாஜி கணேசனை முறையாக ஆதரிக்கவில்லை. தொடர்ந்து தோல்விகளை தேர்தல்களில் சந்தித்து வந்த காங்கிரஸ் கட்சியில் தனது ரசிகர்களையும் ஈடுபடுத்தி மன்றங்கள் அமைத்து காங்கிரஸ் கட்சிக்கு ஆதரவாக செயல்பட்டார். காமராஜரின் மறைவிற்குப் பின் இந்திராகாந்தி தலைமையில் காங்கிரசில் அரசியல் பணியாற்றினார். இந்திரா காந்தியின் மறைவிற்கு பின் ராஜீவ்காந்தியின் காலத்தில் காங்கிரஸ் இயக்கத்திலிருந்து விலகினார். திரைபடத் துறையில் தான் சம்பாதித்த பெரும் பணத்தை இழந்தார். இறுதியில் *தமிழக முன்னேற்ற முன்னணி* என்ற கட்சி ஆரம்பித்து அ.தி.மு.க.வின் ஜானகி ராமசந்திரன் அணியோடு கூட்டணி அமைத்து சட்ட மன்றத் தேர்தலில் போட்டியிட்டு தோல்வியை சந்தித்தார். பின்னர் கட்சியை கலைத்து விட்டார். பின் வி.பி.சிங் வேண்டுகோளை ஏற்று ஜனதா தளத்தில் சேர்ந்தார். வி.பி. சிங் தனது பிரதமர் பதவியை ராஜினாமா செய்தபின் சிவாஜி கணேசனும் அக்கட்சியிலிருந்து விலகினார். அதன்பின் இறக்கும்வரை அரசியலை விட்டு ஒதுங்கி வாழ்ந்தார். இவ்வாறு திராவிட இயக்கத்திலிருந்து திரைப்படங்களின் செல்வாக்கால் அரசியலில் சில நடிகர்கள் வெற்றிப்பெற்ற நிலையில் மிகச்சிறந்த நடிகராக விளங்கிய நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அரசியலில் கொண்டிருந்த நிலைப்பாடு என்பது அண்ணாத்துரையின் நாடகத்தால் தனக்கு ஈ.வெ. ராமசாமி மூலம் சிவாஜி என்ற சிறப்பு பட்டம் கிடைத்ததற்காக நன்றி பாராட்டும் வகையில் திராவிட கழகத்தின் அனுதாபியாக இருந்தார். அதுபோல், கருணாநிதியின் சிறப்பான

வசனங்களை பேசியதால் தான் தமிழ் திரையுலகில் புகழ் உச்சிக்கு செல்ல முடிந்தது என்பதால் நன்றியுணர்வுடனும், நட்புணர்வுடனும் திராவிட முன்னேற்ற கழகத்தின் அனுதாபியாக விளங்கினார். ஆனால் காங்கிரஸ் இயக்கத்தில் தன்னை இணைத்துக் கொண்டது கொள்கை ரீதியாக மட்டுமே என்று சிவாஜி கணேசன் பதிவு செய்தார். அந்த நிலைப்பாடு குறித்து விளக்குவதாக அமைகிறது இந்த இயல்.

**இயல் ஆறு: சமுதாயத்தில் சிவாஜி கணேசன்**

நடிப்பு ஒன்றே தன் மூச்சு என்ற நிலையில் தன் குடும்பத்தைப் பற்றியே சிந்தனையில்லாமல் நடித்து வந்தார். இவரது சகோதரர்கள் மற்றும் மனைவியின் கண்காணிப்பில் குடும்பம் நல்ல முறையில் உற்றார், உறவினர், சொந்தம் எல்லாம் ஒற்றுமையாக வாழ்ந்து தமிழ் நாட்டில் இன்று வரை ஒரு சிறந்த மாதிரியம் குடும்பமாக அவரது குடும்பம் விளங்குகிறது. ஒரு மனிதனுக்கு சமுதாயத்தில் புகழ் பெறுவதற்கு மூன்று விஷயங்கள் தேவை. அவை தொழில், குடும்பம், பொதுவாழ்வு ஆகும். நடிகர் சிவாஜிகணேசனின் புகழ் இன்று உலகளவில் வியாபித்து நிற்பதற்கு அடித்தளமாக அமைந்தது அவருடைய நடிப்புத் தொழில். தன் அற்புதமான நடிப்பாற்றலால் "தமிழ் கூறும் நல்லுலகத்தோடும் பிற மொழி பேசுபவர்களையும் தன் வசப்படுத்திய தொழிலைச் செய்தவர் நடிகர் திலகம் சிவாஜி கணேசன்".

தனது தொழிலைக் கவனத்துடன் செய்வதற்கு அவருக்கு உறுதுணையாக நின்றது அவரது குடும்பச்சூழல். அதனால் சிவாஜிகணேசன் சிறந்த நடிப்பாற்றலை வெளிப்படுத்த முடிந்தது. தனது சிறப்பான நடிப்பாற்றலால் அவரது மதிப்பு சமுதாயத்தில் பன்மடங்காக உயர்ந்தது. இவரது இல்லத்திற்கு பல பிரதமர்கள், ஜனாதிபதிகள், கவர்னர்கள் வந்து இவரை கௌரவித்தனர். பிறநாட்டு பிரதமர்கள், தலைவர்கள், நம் நாட்டு அரசர்கள், பிற நாட்டு மன்னர்கள் சிவாஜியின் சிறந்த நண்பர்களாக விளங்கினார்கள். சில வெளி நாடுகளில் அவர் அழைக்கப்பட்டு பட்டம், மரியாதை செய்யப்பட்டு சிறப்பிக்கப்பட்டார்.

திரைப்பட உலகில் பிற மொழியில் பணியாற்றிய தலைசிறந்த நடிகர்கள், பாடகர்கள், தயாரிப்பாளர்கள் இவரது குடும்ப நண்பர்களாக இருந்தனர். வேட்டைப் பிரியரான சிவாஜி கணேசன் அதன் மூலம் பல

ஜமீன்தார்களை நண்பர்களாக பெற்றார். பெரிய தொழில் அதிபர்களும் இவரது நட்பை பேணிகாத்து வந்தனர். அனைத்து தரப்பினர்களுடனும் அன்போடு பழகிய காரணத்தால் பொதுவாழ்வில் இவர் பெரிய மதிப்புடனும், மரியாதையுடனும் இறுதிக்காலம் வரை இருக்க முடிந்ததை விளக்குவதாக இவ்வியல் கூறுகிறது.

நிறைவுரை

ஒவ்வோர் இயலின் முடிவிலும் அவ்வியலில் ஆராய்ந்தறிந்த தகவல்கள் தொகுத்து தரப்பட்டுள்ளன. இந்த தொகுப்பின் அடிப்படையிலும் இவ்வாய்வின் பயனால் அறியப்பட்ட உண்மைகளும் நிறைவுரையில் முழுமையாக வழங்கப்பட்டுள்ளன. மேலும் மேல் ஆய்வுக்கான நல்ல ஆய்வுக் களங்கள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

ஆய்வு முன்னோடிகள்

நடிகர் திலகம் சிவாஜி கணேசனின் வாழ்க்கை வரலாறு, மற்றும் அவரது கலைப்பணிகள் பற்றியும், பல நூல்கள் வெளிவந்துள்ளன. அந்நூல்கள் இவ்வாய்வின் முன்னோடி நூல்களாகும்.

ஆய்வு முன்னோடிகளில் முதன்மையாக வருவது சிவாஜியின் நடிப்பிலக்கணம் என்ற நூலாகும். அதை எழுதிய ஜீவன் ஒரு நாடக நடிகரும் ஆவார். இந்நூலில் சிவாஜி கணேசன் தொல்காப்பிய மெய்ப்பாட்டியலில் கூறப்பட்டுள்ள எட்டு சுவைகளை எவ்வாறு தன் நடிப்பில் வெளிப்படுத்தினார் என்பது கூறப்பட்டுள்ளது. மேலும் ருஷ்ய நாட்டு நடிகரும், இயக்குநருமான கான்ஸ்தான்தீன் ஸ்தானிஸ்லாவ்ஸ்கி நடிப்பு நுட்பங்களைப் பற்றித் தானே உருவாக்கிய “ஸ்தானிஸ்லாவ்ஸ்கி முறை” அல்லது “மெதட் ஆக்டிங்” (Method Acting) பற்றியும் கூறப்பட்டுள்ளது. ஆனால் ஒரு கையேடுக்கு இணையாகத்தான் இந்நூலைக் கருத முடியுமே தவிர பெரிய ஆய்வு நூலாக எடுத்துக் கொள்ள முடியாது.

Theodre Baskaran எழுதிய **Sivaji Ganesan** என்ற நூல் சிவாஜி கணேசனின் இளமைக் காலம் தொடங்கி அவரின் அரசியல் பணி மற்றும் சினிமாக் காலம் வரை செய்திகள் தரப்பட்டுள்ளது. இந்த நூலின் மூலம் ஒரு சுருக்கமான முறையில் சிவாஜி கணேசனைப் பற்றியத் தகவல்களை அறிய முடிகிறதே தவிர விரிவாக அல்ல. திரைக்கதை வசனகர்த்தா, ஆரூர்தாஸ் எழுதிய “சிவாஜி வென்ற சினிமா ராஜ்ஜியம்” என்ற இந்த நூல்

ஆரூர்தாசுக்கும் சிாவஜி கணேசனுக்கும் இடையில் நிகழ்ந்த நிகழ்வுகளைப் பற்றியும் திரையுலகில் அவர் கட்டிக்காத்த பண்பாடுகள் சிலவற்றைப் பற்றியும் கூறுகிறது. திரையுலகில் சிவாஜி கணேசனின் வாழ்க்கை பற்றியத் தகவல்கள் மிகவும் குறையாக உள்ள நூலாகும்.

முத்துச்சாமி என்பவர் எழுதிய சிவாஜி தரிசனம் என்ற இந்த நூலில் சிவாஜிகணேசன் பற்றிய முழுமையானத் தகவல்கள் இல்லையென்றாலும் அது சிவாஜி கணேசனின் சமுதாயக் கண்ணோட்டம் பற்றிய செய்திகள் அடங்கியுள்ள மிகச் சிறிய நூலாகும்.

சான்றுகள்

இந்த ஆய்வேடு முதல் மற்றும் இரண்டாம் தரச் சான்றுகளை பயன்படுத்தி ஆராய்ப்பட்டுள்ளது. முதல் தரச் சான்றுகளாக நடிகர் திலகத்தின் நேர்காணல், மற்றும் வானெலி உரையாடல்கள், அவரால் எழுதப்பட்ட கட்டுரைகள், நூல்கள், அவர் காலத்தில் அவரைப்பற்றி பத்திரிகைகளில் வந்த செய்திகள், அவருடன் நடித்து அவர் காலத்தில் வாழ்ந்த நாடக மற்றும் சினிமா நடிகர்களின், நடிகைகளின் நேர்காணல்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. மேலும் அவர் குடும்பத்தை சேர்ந்தவர்களின் நேர்காணல்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

துணைமைச் சான்றுகளாக பல்வேறு ஆங்கில மற்றும் தமிழ் நூல்கள், இதழ்கள், ஆய்வுக் கட்டுரைகள், பயன்படுத்தப்பட்டுள்ளன.

சிவாஜி கணேசனின் எனது சுயசரிதை எனும் இந்த நூல் முதன்மைச் சான்றுகளில் முதன்மையானதாகும். இந்த நூாலில் உள்ள விஷயங்கள் சிவாஜி கணேசனால், All India Radio-விற்கு அளித்த பேட்டியின் ஒலி நாடாக்களை வைத்து அவர் மறைந்தபின் தொகுக்கப்பட்ட நூலாகும். இந்த நூல் அவரது பிறப்பிலிருநது இறுதிக்காலம் வரை நடந்த அனைத்து விஷயங்களும் அடங்கியுள்ள நூலாகும். மேலும் சிவாஜி கணேசன் மூலமாக வந்த செய்திகள் என்பதால் முதன்மைச் சான்றுகளில் முதல் நூல் எனும் தகுதியினைப் பெறுகிறது. இந்த நூலை நாராயணசாமி என்பவரும் ஆய்வாளரும் இணைந்து தொகுத்த நூலாகும். கதாநாயகனின் கதை என்ற இந்த நூல் சினிமாச் செய்திகளை தரமாகவும் சிறப்பாகவும் வெளியிடும் பொம்மை பத்திரிக்கையில் சிவாஜி கணேசன் பற்றி பல திரையுலக மற்றும் அரசியல் பிரமுகர்கள் எழுதிய சில கட்டுரைகளும் அவரே தன் கதையைப்பற்றி

எழுதிய கட்டுரையும் தொகுக்கப்பட்டு இரண்டு பாகங்களாக வெளியிடப்பட்டுள்ளன. இந்த நூலில் பள்ளிச் சிறுவனாக சிவாஜி கணேசன் இருந்த கால நிகழ்வுகள் சிறப்பாகத் தரப்பட்டுள்ளன. பின்பு நாடக வாழ்க்கையில் பட்ட கஷ்டங்கள், வீரபாண்டியக் கட்டபொம்மன் நாடகத் தயாரிப்பு, சிவாஜி நாடக மன்றம் உருவாக்கம் அதன் மூலம் நடத்தப்பட்ட நாடகங்கள் பற்றிய செய்திகள் எல்லாம் விரிவாகத் தரப்பட்டுள்ளன. **Autobiography of an Actor** என்ற நூல், சிவாஜி கணேசனின் எனது சுயசரிதை என்ற நூலின் ஆங்கிலப் பதிப்பாகும். ஆனால் தமிழ் பதிப்புக்கும் இதற்கும் ஐந்து வருடங்கள் இடைவெளி இருந்ததால் ஒரு சில தகவல்கள் சற்றுக் கூடுதலாகக் கிடைத்தன.

இரண்டாம் தரச் சான்றுகளாக பல நூல்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. வரலாற்றுச் சுவடுகள் எனும் தலைப்பில் வந்தியத்தேவன், கா., என்பவரால் எழுதப்பட்ட நூல், நான்கு பாகங்களைக்கொண்டு வெளிவந்துள்ளன. சிவாஜிகணேசனின் நாடக வாழ்க்கையில் துவங்கி திரையுலகில் அவரின் குறிப்பிடத்தக்க வெற்றி பெற்ற படங்கள் பற்றியும், அந்தப் படங்களின் சிறப்புச் செய்திகளையும் தருகின்றன. மேலும் அவர் செய்த தான தர்மங்கள் பற்றிய விரிவான செய்திகள் தரப்பட்டுள்ளன.

நடிகர் சிவக்குமார் எழுதிய தமிழ் சினிமாவில் தமிழ் எனும் இந்நூலில் தமிழ் மொழியின் தொன்மை, திரைப்படங்களின் வசனங்களில் தமிழ் மொழியை திறம்படக் கையாண்ட இளங்கோவன், அண்ணாத்துரை, கருணாநிதி போன்றவர்கள் எழுதிய வசனங்களின் சிறப்புக்கள் பற்றி கூறிய சிவக்குமார், திராவிட இயக்கத் தலைவர்களின் தமிழை சிவாஜி கணேசன் எவ்வாறு சிறப்புறப் பேசினார் என்பதையும் கூறியுள்ளார்.

வேட்டைக்கு வந்த சிங்கம் எனும் நூலை மரபின் மைந்தன் முத்தையா எழுதியுள்ளார். இந்நூலில் சிவாஜிகணேசனுக்கு வேட்டை நுணுக்கங்களைக் கற்றுத்தந்த வேட்டைக்காரன் புதூர் மாணிக்கம் தந்த தகவல்களின் அடிப்படையில் எழுதப்பட்டது. இதில் சிவாஜிகணேசனின் வேட்டை அனுபவங்களும் வேட்டையின் மூலம் அவர் பெற்ற நண்பர்களும் பற்றிச் சுவையான தகவல்களைத் தருகிறது.

நாடக மேடை நினைவுகள் எனும் இந்த நூலை நாடகத் தந்தை என்றழைக்கப்படும் பம்மல் சம்பந்த முதலியார் எழுதியுள்ளார். மனோகரா நாடகத்தை இவர் எழுதிய வரலாறு, அதில் தான் நடித்தது மற்றும் பல நடிகர்கள் நடித்ததைப் பற்றி எழுதியுள்ளார். இவர் மனோகரனாக நடித்த படம் தோல்வியடைந்தது. ஆனால் சிவாஜி கணேசன் மனோகரானாக நடித்து பெரும் புகழ் பெற்றார். இது போன்ற அரிய விஷயங்களைத் தருகிறது இந்நூல்.

தீனதயாளன் என்பவர் எழுதிய நடிகர் முதல் நடிகர் திலகம் வரை எனும் இந்நூல் சிவாஜிகணேசன் ஒரு சாதாரண நாடக நடிகராக அறிமுகம் ஆகித் தன் நடிப்பாற்றலால் நடிகர் திலகமாக உருவெடுத்த வரலாற்றைச் சுருக்கமாக கூறுகிறது. பெரும்பாலான தகவல்கள் சிவாஜிகணேசனின் எனது சுயசரிதையில் இருந்து பெறப்பட்டுள்ளன.

சிவாஜிகண்ட இந்து ராஜ்ஜியம் எனும் இந்நூலில் அண்ணாத்துரை எழுதிய நாடகத்தின் முழுமையான வசனங்களை நமக்குத் தருகிறது. இந்நூலில் சிவாஜி கண்ட இந்து ராஜ்ஜியம் எனும் நாடகம் அரங்கேற்றமான நாள், மாதம், ஆண்டு ஆகியவை தெளிவாகத் தரப்பட்டுள்ளது.

நாடகக் கலை எனும் இந்நூலில் நாடக உலகிலும், திரையுலகிலும் சிவாஜி கணேசனுக்கு முன்பு அறிமுகமான நடிகரான டி.கே. சண்முகம் மூலம் அரிய தகவல்கள் கிடைத்தது.

நான் ஏன் பிறந்தேன் எனும் இந்நூல் நடிகர் எம்.ஜி. இராமச்சந்திரனால் எழுதப்பட்டது. இரண்டு பாகங்களாக வெளிவந்த இந்நூலின் முதல் பாகத்தில் அவர் நாடக உலகில் பட்ட கஷ்டங்களும் திராவிட இயக்கத் தலைவர்களோடு அவருக்கு இருந்த தொடர்புகள் பற்றியும் அரிய தகவல்களைத் தருகின்றது. அந்தத் தகவல்களின் மூலம் சிவாஜி கணேசன் பற்றிய சில செய்திகளை அறிய முடிந்தது.

தமிழ் சினிமாவின் கதை எனும் இந்நூலை அறந்தை நாராயணன் எழுதியுள்ளார். தமிழ் சினிமாவின் முழு வரலாற்றையும் இந்நூல் விரிவாகத் தருகிறது. தமிழ் சினிமாவில் அறிமுகமான அனைத்து நடிகர்கள், நடிகைகள் மற்றும் அவர்கள் நடித்து வெளிவந்த படங்கள் பற்றிய தகவல்கள் உள்ளன. சிவாஜி கணேசனின் நாடக மற்றும் சினிமா வாழ்க்கைப்பற்றிய விரிவான தகவல்கள் தரப்பட்டுள்ளன. திராவிட இயக்கத் தலைவர்களுடன் அவர்

கொண்டிருந்த நட்பு, அதன் மூலம் திரையுலகில் பராசக்தி, மனோகரா போன்ற படங்கள் பெற்ற வெற்றிகள் சிறப்பாகத் தரப்பட்டுள்ளன. சிவாஜி கணேசனின் அரசியல் வாழ்வு, கலையுணர்வு இல்லாத காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து அவர் பெற்ற இழப்புகள் போன்ற செய்திகள் உள்ளன. சுதந்திரத்திற்கு முன் காந்தியின் கொள்கைகளை மக்களிடம் பரப்பிய கலைஞர்களை, சுதந்திரம் பெற்றபின் மறந்த காங்கிரசின் நிலை பற்றியும், இதனால் திராவிட இயக்கத்தை நோக்கி கலைஞர்களின் கவனம் திரும்பியது பற்றியும் கூறப்பட்டுள்ளது.

இலக்கியவாதி சாண்டில்யன் எழுதிய **சினிமா வளர்ந்த கதை** எனும் இந்நூலில் வங்காளம் மற்றும் தெலுங்கு நாடகங்களின் தாக்கம் எவ்வாறு தமிழ் நாடகங்களில் ஏற்பட்டது மற்றும் தமிழ்த் திரையுலகின் ஆரம்பகால தயாரிப்பாளர்கள், இயக்குநர்கள் பற்றி அறிந்திட உதவியது.

அவ்வை சண்முகம் எழுதிய **எனது நாடக வாழ்க்கை** என்ற நூலில் தனது நாடக வாழ்க்கை, அக்காலத்தில் நாடக உலகின் நிலைமை, காங்கிரஸ் கட்சியோடும், திராவிட இயக்கத் தலைவர்களோடும் தனக்கிருந்த தொடர்பு குறித்த செய்திகளைத் கூறியுள்ளார். நாடக உலகில் பெண் வேடமிட்டு சிவாஜி கணேசன் நடித்த நடிப்பைப் பார்த்து ரசித்த பல விஷயங்களை கூறியுள்ளார்.

**நான் வந்த பாதை** எனும் இந்த நூலை எழுதியவர் நடிகர் எஸ்.எஸ்.இராஜேந்திரன். அவர் முதலில் சிவாஜி கணேசனை சந்தித்தது முதல் இறுதிவரை அவரோடு கொண்டிருந்த தொடர்புகளைக் கூறியுள்ளார். பராசக்தியில் சிவாஜி கணேசனோடு அறிமுகமாகி மனோகரா போன்ற பல வெற்றிப் படங்களில் நடித்த அனுபவங்களைக் கூறியுள்ளார். அக்காலத்தில் தமிழக அரசியலில் நிலவிய சூழ்நிலைகள், சில திரைப்படங்களின் தயாரிப்பு பற்றிய அரிய தகவல்கள் தரப்பட்டுள்ளன.

**An Actor Prepares** எனும் இந்த ஆங்கில நூலை எழுதியவர் கான்ஸ்தன்தீன் ஸ்தானிஸ்லாவ்ஸ்கி ஆவார். இவர் நடிப்புக் கோட்பாடுகளை உருவாக்கியவர். இந்த புத்தகத்தில் ஒரு நடிகனாவதற்கு உரிய தகுதிகளாக பதினாறு தகுதிகளைக் குறிப்பிட்டுள்ளார். இந்தத் தகுதிகளைப் பற்றி ஏதும் அறியாமல் இந்தத் தகுதிகளுக்கு எப்படி சிவாஜி கணேசன் தன்னை உட்படுத்தி இருந்தார் என்பதை அறிய உதவும் நூல்.

**The Techniques of Acting** எனும் இந்த நூலை ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் முக்கிய மாணவர்களில் ஒருவரான ஸ்டெல்லா அட்லர் எழுதினார். நடிப்பு நுட்பங்களைப் பற்றி அறிந்துகொள்ள இந்த நூல் உதவுகிறது. அதில் குறிப்பிட்டுள்ள நுட்பங்களைத் தன் நடிப்பில் சிவாஜிகணேசன் கடைப்பிடித்து உள்ளார். ஸ்டெல்லா அட்லரின் பிரதான மாணவர் பிரபல ஹாலிவுட் நடிகர் மார்லன் பிராண்டோ போன்ற அரிய செய்திகளை உள்ளடக்கிய நூலாகும்.

**Creating A Role** என்ற நூலை ஸ்தானிஸ்லாவ்ஸ்கி எழுதியுள்ளார். ஒரு கதாபாத்திரத்தை உருவாக்க வேண்டிய மூன்று நிலைகளை கூறியுள்ளார். அந்த நிலைகளை எவ்வாறு கடைபிடித்து சிவாஜி கணேசன் வீரபாண்டியக் கட்டபொம்மன் பாத்திரத்தை உருவாக்கினார் என்பதை அறிய முடிகிறது.

**Building A Character** என்ற நூல் ஸ்தானிஸ்லாவ்ஸ்கியால் எழுதப்பட்டது. இதில் ஒரு கதாபாத்திரத்தை வடிவமைக்க தேவைப்படும் பதினைந்து விதிகளை ஸ்தானிஸ்லாவ்ஸ்கி கூறியுள்ளார். அவற்றை சிவாஜி கணேசன் தானே தன் நடிப்பாற்றலில் எவ்வாறு கடைப்பிடித்தார் என்பதை அறிந்துகொள்ள இந்நூல் உதவியாக இருந்தது.

**Acting the First Six Lesson** என்ற நூலை ரிச்சர்ட் பிலஸ்லாவ்ஸ்கி எழுதி உள்ளார். இவர் ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் பிரதான மாணவர். இவர் நடிப்பு பற்றி எழுதியுள்ள முதல் ஆறு பாடங்களும் ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் நடிப்புக் கோட்பாடுகளைத் தழுவி எழுதப்பட்டவையாகும்.

சான்போர்டு மெய்ஸ்னர் எழுதிய நூல் **On Acting** ஆகும். ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் நடிப்புக் கோட்பாடுகள் இவரிடத்தில் ஏற்படுத்திய தாக்கம் பற்றியும், அந்தக் கோட்பாடுகளிலிருந்து இவர் எப்படி மாறுபட்டு ஒரு முறையை உருவாக்கினார் என்பதையும் இந்நூல் வாயிலாக அறிய முடிகிறது. அவர் உருவாக்கிய முறை ‘மெய்ஸனர் முறை’ என்பதும் தெரிகிறது,

மேற்குறித்த அனைத்தினும் வேறுபட்டதாகவும், நடிகர் திலகம் சிவாஜி கணேசனின் வாழ்க்கை வரலாறும் அவரது கலைப்பணிகளும் பற்றிய செய்திகளை ஒட்டு மொத்தமாக ஆய்வதாகவும், இந்த ஆய்வு அமைகிறது.

**நூற்பட்டியல்**

இந்த ஆராய்ச்சிக்கு பயன்படுத்தப்பட்ட முதன்மை ஆதாரங்கள், துணை ஆதராங்களும் ஆகியன நூற்பட்டியலில் முறையாகத் தொகுத்து முறைப்படுத்திக் கொடுக்கப் பட்டுள்ளன.

**பின்னிணைப்புகள்**

ஆய்வேட்டின் இறுதியில் நடிகர் திலகம் சிவாஜி கணேசனின் வரலாறு மற்றும் அவரது கலைப்பணிகள் உள்ளிட்ட, ஆய்வுக்குத் தொடர்புடைய பயன்மிக்க பின்னிணைப்புகள் வழங்கப்பட்டுள்ளன.

# இயல் ஒன்று

## சிவாஜி கணேசனின் இளமைப் பருவம்

### முகவுரை

"நடிப்பு தனது மூச்சு என்றும் நடிப்பு ஒன்றுதான் தனக்குத் தெரிந்த தொழில்! நடிப்பே தான் வணங்கிய தெய்வம்"[1] என்றும் தனது சுயசரிதையில் குறிப்பிட்டார் வி.சி. கணேசன், "எதுவாக வேண்டுமோ அதை உன் நாடி நரம்புகளில் ஏற்று அதுவாக நீ ஆகிவிடுவாய்" என்ற வீரத் துறவி விவேகானந்தரின் வாக்கின்படி நடிகனாக வேண்டும் அதிலும் கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்ற குறிக்கோள் ஒன்றையே இலக்காக வைத்துத் தன் நெடிய கலைப் பயணத்தை இளம் வயதில் துவக்கியவர் வி.சி. கணேசன்.

"தெய்வத்தான் ஆகாதது எனினும் முயற்சி தன்
மெய்வருத்தக் கூலி தரும்" அதிகாரம் 62 - ஆள்வினையுடைமை[2]

என்ற வள்ளுவனின் வாக்கின்படி பசி, பட்டினி, துன்பம் எனத் தன் மெய்யை வருத்திக் கொண்டு, பெற்றோர், மனைவி, மக்கள், உடன் பிறந்தோர், உற்றார், உறவினர்களின் பாசவலையை அறுத்தெரிந்து கொண்டு தன்முனைப்பு முயற்சியுடன் தனது கலைப்பயணத்தைத் தொடர்ந்தார். அதில் அவர் பெற்ற வெற்றி, செல்வம், புகழ், பெருமை, அவரின் முன்னோர்களின் புகழ், அவரது குடும்பப் பின்புலம் மற்றும் இளமைப் பருவம் ஆகியவற்றை விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

### வி.சி. கணேசனின் பூர்வீகமும் முன்னோர்களும்

1900இல் தஞ்சை மாவட்டத்தில் மன்னார்குடி அருகில் உள்ள வேட்டைத்திடல் கிராமத்தில் பிறந்தவர் சின்னையா மன்றாயர்.[3] அவர் தமிழகத்தின் பூர்வக் குடியினரும் போர்புரிவதைத் தொழிலாகக் கொண்டிருந்த வீர மரபினரான 'முக்குலத்தோர்' எனப்படும் இனத்தில் முதல் பிரிவான கள்ளர் பிரிவைச் சேர்ந்தவர். **மன்றாயர்** என்பது கள்ளர் இனத்தில் இதுகாறும் ஆய்வு செய்யப்பட்டு கண்டறியப்பட்ட 1126 பட்டப்பெயர்களில் ஒன்று. 'மன்றாயர்' என்பது மண்டல கோட்டை என்னும் நகரத்தையுண்டு பண்ணி இராசதானியாகக் கொண்ட மண்டலன் என்னும் சோழ அரச மரபினர்க்கு மண்கொண்டார் எனும் பட்டம் உண்டு. மண்கொண்டார் என்பது காலப்போக்கில் மண்டிலராயர் என்றும் மேலும் மருவி மண்டிராயர் ஆகி இன்று மன்றாயர் என வழங்கப்படுகிறது.[4]

திருவாரூர் மாவட்டம் (அன்றைய தஞ்சாவூர் மாவட்டம்) மன்னார்குடி தாலுகா, கர்ணாவூர் வட்டத்தில் அமைந்துள்ளது வேட்டைத்திடல் கிராமம். நன்செய் மற்றும் புன்செய் அடங்கிய 60 வேலி நிலப்பரப்பு உடையது. அக்காலத்தில் மன்னர்கள் வேட்டைக்கு இக்கிராமத்திற்கு வருவது வழக்கம். வேட்டைக்குத் தகுதி வாய்ந்த கிராமம் என்பதால் **வேட்டைத்திடல்** என்ற காரணப்பெயர் இக்கிராமத்திற்கு வந்தது.[5] இந்தக் கிராமம் முழுவதும் மன்றாயர்கள் ஆதிக்கம் உடையதாகும். வி.சி. கணேசனின் முன்னோர்கள் "வேட்டைத்திடல் மன்றாயர் குடும்பம்" சார்ந்தவர்கள் என அழைக்கப்பட்டனர்.[6]

வி.சி. கணேசனின் தந்தையார் சின்னையா மன்றாயரின் பாட்டனார் வேட்டைத்திடல் இராமசாமி மன்றாயர். இராமசாமி மன்றாயரின் மகன் சபாபதி மன்றாயர். சபாபதி மன்றாயருக்கு நான்கு மகன்கள். அவர்களில் மூத்தவர் பொன்னுசாமி மன்றாயர். அவர்தான் வி.சி. கணேசனின் தாத்தா. பொன்னுசாமி மன்றாயருக்கு மூன்று ஆண் மக்கள். இரண்டு பெண் மக்கள். ஆண் மக்களில் இரண்டாமவர் சின்னையா மன்றாயர்.[7]

சின்னையா மன்றாயரின் முப்பாட்டனரான இராமசாமி மன்றாயருக்குக் குஞ்சான் மன்றாயர் என்ற பெயர் உண்டு. அவருடைய அதிகாரத்தின் பெருமையைக் குறிக்கும் ஒரு நாட்டுப்பாடல் அக்கிராமத்தில் இன்றைக்கும் பரம்பரையாக பாடப்பட்டு வருகிறது.

"அஞ்சாமல் மேய்ந்து வரும் குஞ்சா மன்றாயர் மாடு
அதி குதும்பம் போட்டு வரும் பெரிய மன்றாயர் மாடு[8]

சின்னையா மன்றாயரின் குடும்பத்தினர் குலதெய்வமாக மன்னார்குடி அருகில் உள்ள அங்காளபரமேஸ்வரி கோயிலில் உள்ள அம்மனை வழிபடுகின்றனர். சின்னையா மன்றாயரின் குலதெய்வத்தின் அருளால் இன்றளவும் வி.சி. கணேசன் மற்றும் அவர்தம் குடும்பத்தினர் பெற்ற வளமான வாழ்க்கையை மனதில் கொண்டும், அவர்கள் செய்துவரும் அறப்பணிகள் குறித்தும் மன்றாயர் பட்டத்தை உடையவர்கள் இன்றளவும் வேட்டைத்திடல் கிராமத்தில் கீழ்க்கண்ட பாடலைப் பாடுகின்றனர்.

"மங்களம் பொங்கிடும் மன்னையில் கோவில் கொண்டு
மகா கும்பாபிஷேகம் கண்ட அன்னையே,
அங்காளபரமேஸ்வரித் தாயே சரணம்.
தலைமகன் உன் சன்னதியில் கலைமகள் அருளாலே
தமிழ்பாடி வரங்கள் பெற்றார்.

ஆயகலைகள் அத்தனையும் கற்பித்த அன்னை நீ
அகிலமெல்லாம் புகழ்பெற வைத்த அன்னையும் நீயே
தங்கநிகர் குணத்தோடு தைரியமும் தந்தவரை - சென்னைக்குத்
தமிழ்ச்செல்வி அனுப்பி வைத்தாய்
அன்னைக்குத் திருக்கோவில் அமைப்பதற்கு கேட்டவுடன்
ரூபாய் மூன்று இலட்சம் அள்ளிக்கொடுத்த வள்ளல் சிவாஜி மக்கள்,
சென்னையிலே அன்னை இல்லம் சிறப்பாக வாழ்வதற்கு
வரமளித்து வாழ்வளித்துச் சிறப்பளித்தாய் அம்மா.
அவர் மக்கள் யாவரும் ஒற்றுமையாய் வாழ்ந்து
பெறும் செல்வம் பேரின்பம் பெற்று மகிழ வேண்டும்.
கலைத் தவமும் தொழில் யாவும் வளர்ந்தோங்கிச் சிறப்புற்று
கட்டுக்குலையாமல் கவுரவம் பெருக வேண்டும்.
நிலையான புகழ் தந்து நிறைவான பொருள் தந்து
நேர்வழி காட்ட வேண்டும்.
மங்களம் பொங்கிட, சிவாஜி மன்றாயர் வம்சம், மகிழ வைத்த
மாதரசி, அங்காள பரமேஸ்வரி தாயே போற்றி போற்றி[9].

**கள்ளர் இனம்**

"தமிழகத்திலே தஞ்சை, திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டை, மதுரை, இராமநாதபுரம் பகுதிகளில் இன்றளவும் பெரும்பான்மையினராக இருந்து வரும் ஒரு குழுவினரைக் 'கள்ளர்' என்னும் சொல் குறித்து நிற்கின்றது.[10]

"சாதிகளிலெல்லாம் எண்ணிக்கையாலும் மனித இன ஆராய்ச்சிக்குரிய சிறப்புக்களாலும் மிக முக்கியமானது கள்ளர் சாதி ஆகும். கள்ளர், மறவர், அகம்படியர் என்ற மூன்று சாதிகளும் இடம் பெறும் முக்குலத்தோர் என்னும் பெரும் பிரிவில், கள்ளர் முதலாவதாக வைத்து எண்ணப்படுகிறார்கள். 'கள்ளர்' என்னும் சொல்லுக்குப் பல்வேறு பொருள்கள் கூறப்படுகின்றன. கள்ளர்களைப் பாதிக்கும் முறையில் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் குற்றப் பரம்பரைச் சட்டம் கொண்டு வரப்பட்டதால் கள்ளர் என்னும் சொல் அவமதிப்புக்குரிய சொல்லாக இருக்கிறது.[11]

'கள்ளர்' என்னும் இனத்தவர் பற்றிய விளக்கத்தை அமெரிக்கக் கொலம்பியா பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் Nicholas B. Dirks கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

> "My earliest book. **'The Hollow Crown: Ethnohistory of an Kingdom'** is a historical study of the Princely State of Pudukottai in Tamilnadu. ... In Pudukottai, the royal family came from the Kallar Community. What this meant was that while under British rule, Kallars were mostly designated as 'Criminal', in fact in Pudukottai they were not just not criminal but they were the Royal community and had access and all sorts of recognition. They were also involved with everyone from some of the remnants of the Vijayanagar Kingdom, the Nayaks of Madura and Trichy, the Nawabs of Arcot and ultimately the British'[12].

"செவி வழிச் செய்திகளின்படியும் ஏர் மங்கலத்தைப் போலப் போர் மங்களமும் முக்கியமாக இருந்தபோது மக்கள் பலருக்கு வாழ்வளிக்கும் துறையாகப் போர்கள் நடைபெற்ற பழங்காலத்தில் தமிழ் அரசர்கள், தலைவர்கள் ஆகியோர்களுடைய படைகளில் கள்ளர்கள் முக்கியமான இடம் வகித்தனர். முன்னோடிப் படையினராகவும், காலாட் படையினராகவும் திகழ்ந்தனர். போர் புரியும் ஆற்றல், சில சமயம் காட்டும் சீரிய தலைமை, அவர்களுள் சிலர் செல்வம் நிறைந்த நிலக்கிழார்களாக இருப்பது ஆகிய காரணங்களால் சில பகுதிகளில் கள்ளர்கள் சக்தியும் செல்வாக்கும் மிக்கவர்களாக இருந்தனர்.[13]

'பாளையப்பட்டு' என்பது விஜய நகர சாம்ராஜ்யத்தின் மேலாதிக்கத்தை தமது ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் நிலை நிறுத்திட உருவாக்கப்பட்ட ஆட்சி முறையாகும். இக்காலத்தில் தமிழ் மன்னர்களான சேர,சோழ, பாண்டிய மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் சிற்றரசர்களாக விளங்கிய வம்சத்தவர்களுக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டது.[14] ஒவ்வொரு பாளையபட்டுக்கும் தலைவராக ஒரு பாளையக்காரர் நியமிக்கப்பட்டார். பாளையக்காரர் மைய அரசுக்குத் தேவைப்படும் காலத்தில் நிதிவருவாய் மற்றும் இராணுவ உதவியையும் அளிக்கும்படி பணிக்கப்பட்டனர். ஆங்கிலேயர் மதராஸ் ராஜதானியில் 1802ல் கொண்டு வந்த ஜமீன்தாரி முறையில் பாளையக்காரர்கள் ஜமீன்தார்கள் என அழைக்கப்பட்டனர். 'ஜமீன்' நிலம் என்பதின் பாரசீகச் சொல். 'தார்' என்பது உரிமையாளர் என்று பொருள்.[15]

16 ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் விஜயநகர சாம்ராஜ்ஜியத்தின் நிதி மற்றும் ராணுவக் கொள்கையில் பாளையப்பட்டுமுறை அறிமுகப்படுத்தப்பட்டது. தஞ்சைப் பகுதியில் உருவாக்கப்பட்ட 13 பாளையப்பட்டுக்களில் 12 பாளையங்கள் கள்ளர் இனத்தவரால் ஆளப்பட்டன.[16]

| | பாளையம் | பாளையக்காரர் |
|---|---|---|
| 1. | கண்டர் கோட்டை | அச்சுதப் பண்டாரத்தார் |
| 2. | பாலைய வனம் | இராமச்சந்திர விஜய அருணாசல வணங்காமுத்துப் பண்டாரத்தார் |
| 3. | பாப்பா நாடு | இராமலிங்க விஜயத் தேவர் |
| 4. | கல்லாக் கோட்டை | விஜயரகுநாத அரங்கசாமிச் சிங்கப்புலியார் |
| 5. | சில்லத்தூர் | விஜயரகுநாத அரங்கசாமிப் பன்றிகொண்டார் |
| 6. | சேந்தங்குடி | விஜயரகுநாத அருணாசல வணங்காமுடி வழுவடையார் |
| 7. | கோனூர் | சீனிவாசராயர் |
| 8. | பாதரங்கோட்டை | விஜயரகுநாத பாலாஜி சிங்கப்புலியார் |
| 9. | மதுக்கூர் | சவ்வாஜி விஜயரகுநாத பாலாஜி கனகசபைக் கோபாலர் |
| 10. | சிங்கவனம் | சவ்வாஜி விஜயரகுநாத மகாராஜா மெய்க்கண் கோபாலர் |
| 11. | நெடுவாசல் | விஜயரகுநாத முத்தையன் பன்றி கொண்டார் |
| 12. | புனல்வாசல் | அப்புசாமி மழவராயப் பண்டாரத்தார் |

**கள்ளர் இனத்தவரின் தொன்மையும் வீர வாழ்க்கையும்**

அண்மைக்காலத்தில் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் ஸ்பென்சர்வெல் நடத்திய ஆய்வுகள் முடிவின்படி 60,000 ஆண்டுகளுக்கு முன் ஆப்பிரிக்காவில் வாழ்ந்த மனிதனின் "M130Y" மரபணுக்கள் மதுரை மாவட்டம் உசிலம்பட்டியைச் சேர்ந்த விருமாண்டி என்ற கள்ளர் இன இளைஞனுக்குப் பொருந்தியிருப்பது கண்டுபிடிக்கப்பட்டது.[17] இது கள்ளர் இனத்தவரின் தொன்மைக்குச் சான்று. தமிழர்களின் வீர விளையாட்டான 'ஜல்லிக்கட்டு'க்கான காளை மாடுகளை வளர்ப்பதில் கள்ளர்கள் முதன்மை வகிக்கிறார்கள். இந்த வீர விளையாட்டில் மிக்க ஈடுபாடு உடையவர்களாக இருக்கிறார்கள்.[18]

**வில்லுப்புரம் (எ) விழுப்புரம்**

வில்லுப்புரம் என்னும் பெயரின் தோற்றம் சோழர்கள் காலத்தில் 'வில்'புரம் என்பதிலிருந்து வந்தது என்பது செவிவழிக்கதையாகக் கூறப்பட்டது. அதை மெய்ப்பிக்கும் வகையில் அவ்வூரின் பெயர் குறித்து ஆய்வு செய்த ஆங்கிலேய நிர்வாக அதிகாரி C.D. மேக்ளீன் 'BOWMAN'S VILLAGE' என்று குறிப்பிடுகிறார்.[19] எனவே சோழர்கள் காலத்தில் வில்லேந்தும் வீரர்கள் வாழ்ந்த கிராமம் பின்னர் 'வில்புரம்' என அழைக்கப்பட்டுப் பின்னர் வில்லுப்புரம் ஆகி பின் விழுப்புரம் என மருவியது.




விழுப்புரத்திற்கு ஒரு நீண்ட வரலாறு உண்டு. அது சங்க காலச் சோழர்களின் ஆட்சிக்குட்பட்ட பகுதியில் ஒரு சிறிய கிராமமாக விளங்கி வந்தது. பின்பு பல்லவர்கள் ஆட்சிக்குட்பட்டு இருந்தது. 9 ஆம் நூற்றாண்டிலிருந்து 13 ஆம் நூற்றாண்டு வரை பிற்காலச் சோழர்களின் ஆட்சியில் இருந்தது. அதன் பின்னர் சுமார் 50 ஆண்டுகள் பாண்டியர்களின் ஆட்சியின் கீழ் இருந்தது. கி.பி. 1330லிருந்து 1378 வரை மதுரை சுல்தான்களின் ஆட்சிப் பிடியிலிருந்து பின்பு விஜயநகர நாயக்கர்களின் (1374-1677) ஆட்சிக்குள் இருந்தது. 1677இல் மராட்டிய வீரர் சிவாஜி செஞ்சிக்கோட்டையை கைப்பற்றி இப்பகுதியைத் தனது அதிகாரத்திற்குள் கொண்டு வந்தார்.

18 ஆம் நூற்றாண்டின் மத்தியில் நடந்த கர்நாடகப் போர்களின்போது, ஆங்கிலேயர் மற்றும் பிரெஞ்சுக்காரர்களின் போர்க்களமாக விழுப்புரம் விளங்கியது. பின்பு இறுதியாக விழுப்புரம் ஆங்கிலேயரின் ஆட்சிப்பிடியில் 1947ல் இந்தியா சுதந்திரம் அடையும் வரை இருந்தது.

தற்போது விழுப்புரம் 9 வட்டங்கள் அடங்கிய மாவட்டத்தின் தலைநகராகவும், தனி நகராட்சியாகவும் விளங்குகிறது. விழுப்புரம் தேசிய நெடுஞ்சாலை எண்.45ல் சென்னையிலிருந்து தெற்காக 162 கி.மீ. தொலைவிலும் திருச்சிராப்பள்ளியிலிருந்து வடக்காக 157 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது.[20]

இந்த விழுப்புரம் என்னும் சிறிய நகரமே வி.சி. கணேசனின் தாய்வழிப் பாட்டனாரும், தாய், தந்தையும் குடும்பத்தோடு வாழ்ந்து வந்த ஊர் ஆகும்.[21]

இரயில்வே பணியும் விழுப்புரக் குடியேற்றமும்

வேட்டைத்திடல் சின்னையா மன்றாயர் பெரிய வசதியான குடும்பத்தில் பிறந்திருந்தாலும் குறைவான கல்வியறிவு உடையவராக இருந்தார். எனவே திருச்சி இரயில்வேயில் தலைமை அதிகாரியாகப் பணிபுரிந்த தனது மாமனார் சின்னச்சாமிக் கலிங்கராயர் மூலம் இரயில்வேத் துறையில் சாதாரணப் பணியில் சேர்ந்தார்.[22] அப்போது இரயில்வேயின் தலைமை அலுவலகம் விழுப்புரத்தில் இருந்தது. சின்னையா மன்றாயர் நாகப்பட்டினத்தில் இயங்கி வந்த இரயில்வே பணிமனையில் வேலை பார்த்துக் கொண்டு, விழுப்புரத்தில் தன் மாமனார் வீட்டில் குடும்பத்துடன் வாழ்ந்து வந்தார்.[23] இரயில்வேயில் பணிபுரிந்தபோதிலும் இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஆர்வமுடன் இரகசியமாகப் பங்கேற்று வந்தார்.[24]

இந்திய விடுதலைப் போராட்டம்

“இந்திய விடுதலைப் போராட்ட வரலாறு என்பது மன்னர்கள், பாளையக்காரர்கள், புரட்சிக் கூட்டமைப்புகள், சமூக சமயச் சீர்திருத்த இயக்கங்கள், அரசியல் அமைப்புகள், இந்தியத் தேசியக் காங்கிரஸ், இந்தியத் தேசிய ராணுவம் எனும் பலவிதமான சக்திகள், நடத்திய போராட்டங்களின் தொகுப்பாகும். வர்த்தகம் புரிய வந்து ஆட்சியைக் கைப்பற்றி இந்தியாவை அடிமைப்படுத்திய கிழக்கிந்தியக் கம்பெனி மற்றும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை முடிவுக்குக் கொண்டு வரவேண்டும் என்ற ஒரே எண்ணத்தோடு தங்களது உடல், பொருள், ஆவி அனைத்தையும் இழந்த ஒரு உன்னதத் தவமாகும்”.[25]

**இரயில்வே துவக்கமும் அதன் நோக்கங்களும்**

இந்தியாவில் போக்குவரத்து விரிவாக்கத்திற்காகத் திட்டங்கள் தீட்டப்பட்டன. இங்கிலாந்துக் கம்பெனிகளின் மூலமாக இரயில் பாதைகளை அமைக்க முடிவு செய்தனர். ரயில் கம்பெனிகளில் முதலில் சென்னை இரயில் கம்பெனி லண்டனில் 1845 ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது.[26]

1848-56 வரை முக்கியமான இரயில் பாதைத் திட்டங்களைச் செயல்படுத்தியவர் டெல்ஹௌசி பிரபு. 1853 ஆம் ஆண்டு இரயில் பாதைகள் அமைக்கும் நோக்கங்களைத் தனது அறிக்கையில் அறிவித்தார். அதில் மிக முக்கியமானதாக இருந்த நோக்கம் "இந்தியப் பேரரசின் ஒவ்வொரு பகுதியிலும் ஆங்கிலேய அரசின் இராணுவ வலிமையை வலுப்படுத்துதல்" என்பதாகும்.[27]

**சின்னையா மன்றாயரின் தியாக வாழ்வு**

சின்னையா மன்றாயர் இந்திய விடுதலைப் போராட்டங்களில் தீவிரவாத வழியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்ட தேசியவாதி என்பது அறிதற்கு உரியதாகும்.

1928ல் நிறைமாதக் கர்ப்பிணியாக இருந்த தன் மனைவியைப் பார்ப்பதற்காக நாகப்பட்டினத்தில் இருந்து விழுப்புரம் வரும் வழியில் நெல்லிக் குப்பத்தில் மறைமுகமாக விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு வரும் தன் சகாக்களைப் பார்க்கச் சென்றார் சின்னையா மன்றாயர்.[28] அப்போது ஆங்கிலேயர்களின் ராணுவ வீரர்கள் பயணிக்கும் ஒரு ரயிலுக்கு வெடிகுண்டு வைப்பது என்றும், அதைத் தலைமையேற்று நிறைவேற்ற யாரைத் தேர்ந்தெடுப்பது என்பதைத் திருவுளச்சீட்டுப் போட்டுப் பார்க்க முடிவெடுக்கப்பட்டது.[29]

இது குறித்து சிவாஜி கணேசன்,

"டைனமைட்டை யார் வைப்பது. என்று திருவுளச்சீட்டுப் போட்டுப் பார்க்கும்பொழுது தனது தந்தையின் பெயர் அதில் வந்து அதற்குத் தலைமை வகிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதனால் அவர் விழுப்புரத்தில் பிரிட்டிஷார் ராணுவப் படையைச் சுமந்து வந்த ரயிலுக்கு டைனமைட் வைத்தார். வைத்துவிட்டு ஓடும்போது அவரைத் துரத்திய போலீசார் அவரைச் சுட்டுவிட்டனர். கீழே விழுந்த தனது தகப்பனார் எழுந்திருக்கும்போது ஒரு போலிஸ்காரர் துப்பாக்கியின் பின்கட்டையால் தலையில் அடித்திருக்கிறார். இதில் கேட்கும் சக்தியைத் தந்தை

இழந்துவிட்டார். He was shot and caught - மேலும் தனது தகப்பனாருக்கு ஏழு வருடம் ஜெயில் தண்டனை கொடுத்தார்கள்''

எனத் தனது சுயசரிதையில் பதிவு செய்தார்.[30]

இரயில்வேயில் பணிபுரிந்த நிலையில் இந்திய விடுதலை வேட்கையைத் தனக்குள் வளர்த்து வந்த சின்னையா மன்றாயர் ரயிலுக்கு வெடிகுண்டு வைக்கும் திட்டத்தில் ஈடுபட்டமைக்குக் கீழ்க்கண்ட காரணத்தை,

"சைமன் கமிஷனை எதிர்த்து 1928ல் நடந்த இந்தியாவின் பல இடங்களில் போராட்டம் நடந்தது. அதில் லாகூரில் லாலா லஜபதிராயைப் போலீஸ் அதிகாரி தாக்கியதில் மார்புப் பகுதியில் பெரும் காயம் பட்டு அதனால் படுத்த படுக்கையாக இருந்து வருகிறார் என்ற செய்தி எங்கள் நண்பர்கள் மத்தியில் பெரும் மன உளைச்சலை ஏற்படுத்தியிருந்தது. அக்காலத்தின் இரயில் பெட்டிகளில் பயணிகளின் இருக்கையின் அடியில் மூன்று துப்பாக்கிகள் வைப்பதற்கான இடம் வைத்துத்தான் தயாரிக்கப்படும். கலவரத்தை அடக்க விரைவாக இராணுவத்தை அனுப்பப் பிரிட்டீஷாருக்குப் பெரும் வசதியாக இருந்தது இரயில் மட்டுமே. இது இரயில்வேத் துறையில் வேலை பார்க்கும் தொழிலாளிகள் சிலருக்குத் தெரியும். இச்சமயத்தில் தென் மாவட்டங்களுக்கு இராணுவப் பிரிவு ஒன்று செல்வதாகச் செய்தி கிடைத்தது. ஆகையால் இந்த முடிவெடுத்தோம். முயற்சி செய்தோம். திட்டத்தில் தோல்வி ஏற்பட்டது நான் கைது செய்யப்பட்டேன்"

என்று கூறி கூறினார்.[31]

**வி.சி. கணேசனின் தாய் வழி**

திருச்சியில் இரயில்வேத் துறையில் பணிபுரிந்து திருச்சியிலிருந்து மதுரை போன்ற பிற ஊர்களுக்கு இரயில் பாதை போடுவதற்கு தலைமை அதிகாரியாகவும் விளங்கியவர் சின்னச்சாமிக் கலிங்கராயர்.[32] இவர் வி.சி. கணேசனின் தாய் வழி தாத்தா ஆவார்.

கலிங்கராயர் என்பதும் கள்ளர் பட்டங்களில் ஒன்றாகும். கலிங்கத்தை (ஒடிசா) வென்ற குலோத்துங்கச் சோழ மரபினர்க்கு 'கலிங்கராயர்' என்ற பட்டப்பெயர் வழங்கலாயிற்று[33]

சின்னச்சாமி கலிங்கராயரின் பதினோராவது குழந்தையாகப் பிறந்து சின்னைய்யா மன்றாயரின் வாழ்க்கைத் துணைவியாகப் பயணித்தவர் ராஜாமணி அம்மாள் ஆவார்.[34] வெற்றிகரமான மனிதர்கள் ஒவ்வொருவருக்குப் பின்னாலும் ஒரு பெண் இருக்கிறாள் என்பதற்கிணங்கச் சின்னைய்யா மன்றாயரின் சுதந்திரப் போராட்டங்களுக்கு ஒத்துழைத்து வாழ்க்கைச் சவால்களைத் தனியாக நின்று சமாளித்தவர் ராஜாமணி அம்மாள். "வாழ்க்கையில் அவர் பெற்ற அனுபவம், பிரச்சனைகளை எதிர்கொண்ட திறமை, பிற்காலத்தில் சிவாஜி கணேசன் திரையுலகில் புகழ் பெற்று வாழும்போது அவரது திரையுலக நண்பர்களின் வீட்டுப் பெண்களுக்கு ஒரு ஆதரவும் ஆலோசனைகளும் வழங்கிய தலைவியாக விளங்கச் செய்தது எனலாம்.[35] பொறுமை, துணிச்சல் ஆகியவற்றில் சிறந்து விளங்கிய இவரைப்பற்றி,

> "தனது கணவரோ ஜெயிலில் இருக்கிறார். சகோதரர்கள் யாரும் அவர்களைக் கவனிக்கவில்லை. குழந்தைகள் நான்குபேர் இருந்தோம். எங்களை வளர்க்க வேண்டுமே... ஆகையால் அவர்கள் கறவை மாடு வைத்து, பால் விற்று, எங்களை வளர்த்து ஆளாக்கினார்கள். அது காலப்போக்கில் ராஜாமணி அம்மாள் என்பது மறைந்துபோய் பால்காரம்மா என்றாகிவிட்டது"[36]

என்று கணேசமூர்த்தி பதிவு செய்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

**விழுப்புரம் சி. கணேசமூர்த்தி**

விழுப்புரம் நகரத்தின் சுதந்திரப் போராட்ட வீரராகத் திகழ்ந்து வந்த விழுப்புரம் பொ.சின்னையா மன்றாயர் இராஜாமணி அம்மாள் தம்பதியினருக்கு 1928, அஸ்வினி நட்சத்திரத்தில், அக்டோபர் முதல் நாள் மாலை நாலரை மணிக்கு நான்காவது மகனாகப் பிறந்தவர் விழுப்புரம் கணேசமூர்த்தி.[37] அன்றைய தினம்தான் இரயிலுக்கு வெடிகுண்டு வைத்த குற்றத்திற்காகச் சின்னையா மன்றாயர் கைது செய்யப்பட்டு ஏழு ஆண்டுகள் சிறைத்தண்டனை பெற்றார் என்பது குறிப்பிடத்தக்கது.[38] சிவாஜி கணேசனுக்குப் பிற்காலத்தில் விழுப்புர முனிஸிபாலிட்டியில் வரவேற்புக் கொடுத்துக் கௌரவித்தார்கள். அவருடைய பிறப்பை யார் பதிவு செய்தாரோ அவர் மூலம் சிவாஜி கணேசனுக்கு அந்தச் சர்டிபிகேட்டை கொடுத்தார்கள்[39]. தியாகமே தங்களது வாழ்வின் இலட்சியமாகக் கொண்டு வாழ்ந்த சின்னையா- ராஜாமணி அம்மாள் தம்பதியினருக்குப் பிறந்த கணேசமூர்த்திக்குக் குடும்பச் சூழல் சவால்களை எதிர்நோக்கும், ஆழமான, அர்த்தமான பின்புலமாக அமைந்தது எனலாம். விழுப்புரத்தில்தான் காஞ்சி பெரியவர் சந்திரசேகர சுவாமிகள் பிறந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

**தந்தையும் மகனும் முதல் சந்திப்பு**

கணேசமூர்த்தி பள்ளியில் கல்வி கற்கும் பருவத்தில், நன்னடத்தையை முன்னிட்டுத் தனது நான்கு வருடம் ஆறு மாதச் சிறைத் தண்டனையை முடித்துவிட்டுச் சின்னையா மன்றாயர் திருச்சி சங்கிலியாண்டபுரத்தில் குடிபெயர்ந்த தன் குடும்பத்துடன் வந்து சேர்ந்தார். அன்றுதான் முதன்முதலாக விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறைத்தண்டனை பெற்று ஒரு பெரும் வீரராக விடுதலை அடைந்த அவர் தன் மகன் வி.சி. கணேசமூர்த்தியைச் சந்தித்தார். இந்தச் சந்திப்புச்சூழல் மன்னன் அதியமான் நெடுமான் அஞ்சி பிறந்த மகனை முதன்முதலாகச் சந்தித்த காட்சியைக் கூறும் புறநானூற்றுப் பாடலை நினைவூட்டுகிறது,

கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்
வட்கர் போகிய வளரிளம் போந்தை
உச்சிக் கொண்ட ஊசி வெண்தோட்டு
வெட்சி மாமலர் வேங்கையோடு விரைஇச்
சுரி இரும் பித்தை பொலியச் சூடி
வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னும் மாறாது சினனே அன்னோ
உயர்ந்தனர் அல்லர் இவன் உடற்றி யோரே
செறுவர் நோக்கிய கண்தன்
சிறுவனை நோக்கியும் சிவப்பு ஆனாவே[40]

- புறம் 100

பண்டைக்காலத்தில் தமிழ் மன்னர்கள் தங்களுக்குப் பிறந்த மகனை முதன்முதலாகச் சந்திக்கும் சமயம் போர்க்கோலம் பூண்டு சென்று காண்பது வழக்கம். இப்பழக்கத்தின் நோக்கம் தன் மகன் மனதில் போர்க்கோலமும் வீரமும் பதிய வேண்டும் என்பதே.

புறநானூற்றில் வரும் இக்காட்சியைப் போல் வீர மரபான கள்ளர் இனத்தில் தோன்றிய வி.சி. கணேசமூர்த்தி கருவிலே இருந்த காலத்தில் இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு, பிறக்கும் சமயம் சிறைக்குச் சென்ற சின்னையா மன்றாயர் விடுதலைப் பெற்றதும் முதன் முதலாக வீட்டிற்குச் சென்று தன் மனைவியிடம் கூட இருந்து பேசாமல், உடனடியாகத் தான் சிறை சென்ற நாளில் பிறந்த தன் மகன் கணேசமூர்த்தியைத் தேடினார். அவர் பள்ளிக்கூட நேரங்கள் தவிர மீதி நேரங்களில் திருச்சி, சங்கிலியாண்டபுரம் இடையர் தெருவில் உள்ள நண்பர்களோடு விளையாடும் இடத்தில் சந்தித்தார். தன் மகனைச்

சிறையிலிருந்து வந்தவுடன் சந்தித்த விதம் பற்றிப் பிற்காலத்தில் தன் உறவினரிடம் சின்னையா மன்றாயர்,

> “நான் விடுதலைப் போராட்டங்களில் ஈடுபட்டிருந்த காலத்தில் கருவில் உருவானவன் கணேசன். நான் சிறைப்பட்ட நாளில் பிறந்தவன். நான் சிறையில் இருந்த நாட்களில் என் மனைவி மூலமாக என்னைப்பற்றிக் கேட்டு அறிந்திருப்பான். எனவே கணேசன் மனதில் தேசபக்தி என்றால் என்ன ? சுதந்திரப் போராட்டம் என்றால் என்ன ? என்ற கேள்விகள் உருவாகியிருக்கும். அந்த நிலையில் இருப்பவனை நான் சிறையிலிருந்து வந்தவுடன் சந்தித்தால் அவனும் ஒரு தேசியவாதியாக வருவான் என்றுதான் சந்தித்தேன்”

என்று கூறியிருக்கிறார்.[41] இந்த உணர்ச்சிபூர்வமான சந்திப்பு பிற்காலத்தில் விடுதலை வீரர்களான வீரபாண்டியக் கட்டபொம்மன், வ.உ.சிதம்பரம், திருப்பூர்குமரன் மற்றும் பகத்சிங் போன்ற வீரக் கதாபாத்திரங்களை சிவாஜி கணேசன் ஏற்று வீரம் கொப்பளிக்க நடிக்க வழி வகுத்தது என எடுத்துக்கொள்ள இடமளிக்கிறது.[45] இது மானிடவியல் அறிஞரான Franz Boasஇன் Historical Particularism என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது என்று கூறலாம்.

The term ‘HISTORICAL PARTICULARISM’ refers to the idea that each culture has its own particular and unique history that is not governed by Universal laws. It argued that each society is a collective representation of its unique historical past.[42]

இந்தக் கொள்கையின் அடிப்படையில் வீரப்பரம்பரையைச் சேர்ந்த சின்னையா மன்றாயரின் சுதந்திரப் போராட்ட வாழ்வும், அதைத்தான் தன் மகனும் பின்பற்ற வேண்டும் என்பது இக் கொள்கையின் அடிப்படை நோக்கமாகும்.

**பள்ளி மாணவர் கணேசமூர்த்தி**

கணேசமூர்த்தி மூன்று வயதில் சங்கிலியாண்டபுரம் அருகில் இருந்த இடையர் தெருவில் உள்ள “யதுகுல சங்கத்தினரால்” நடத்தப்பட்ட ஆரம்பப் பள்ளியில் சேர்க்கப்பட்டார். அங்குதான் அரிச்சுவடி கற்றார்.[43] ஐந்தாவது வயதில் பொன்னையா உயர்நிலைப்பள்ளியில் கணேசமூர்த்தி சேர்க்கப்பட்டார். இப்பள்ளி கிறித்துவ சபையினரால் நடத்தப்பட்டு வந்தது. இப்பள்ளியில் இவர் படித்தது மொத்தம் பதினைந்து மாதங்கள் மட்டுமே.

இது ஒரு கிறித்துவத் திருச்சபையினரால் நடத்தப்பட்டு வந்தது. கணேசமூர்த்திக்குச் சிறுவயது முதலே பாட்டு என்றால் உயிர். பள்ளியில் படிக்கும்போது 'ஞான சங்கீதப் பண்மணி மண்டபம்' என்று பாடுவதைக் கேட்டு ரசிக்கக்கூட்டம் கூடிவிடுவது வழக்கம். "கடவுள் அரசரைக் காக்கட்டும் (God save the King) என்கிற ஆங்கில இறைவணக்கப் பாடலை சக பள்ளி மாணவர்களோடு சேர்ந்து பாடும் பழக்கம் கணேசமூர்த்திக்கு இளவயதில் பாடும் கலையை வளர்க்க ஏதுவாக விளங்கியது.[44]

கணேசமூர்த்தி, பள்ளியில் கணக்கு, தமிழ், விஞ்ஞானம் முதலிய பாடங்களில் எந்தக் கேள்வி கேட்டாலும் புரியாமல் நின்றதுதான் தனது வழக்கம்[45] என்று தன் கல்வி, அறிவு பற்றிய உண்மையான விமர்சனத்தை நம் முன் வைத்தார். இளம் வயதில் கல்வி கற்கவில்லை என்பதைத் தனக்கு என்றைக்கும் நினைவூட்டப் பிற்காலத்தில் அவரது அன்னை இல்லத்தின் உச்சியில் பாடம் படிக்கும் சிறுவன் சிலையை வைத்தார்.

**விளையாட்டுப் பருவத்தில் கணேசமூர்த்தி**

கணேசமூர்த்தியின் குடும்பம் குடியிருந்தது சங்கிலியாண்டபுரம். ஆனால் அவர் இரவு நேரம் மற்றும் பள்ளி நேரங்கள் தவிர வாழ்ந்தது, விளையாடியது எல்லாம் இடையர் தெருவில்தான். அங்கு கணேசமூர்த்திக்கு நண்பர்கள் அதிகம்.

திருச்சி இடையர் தெருவில் அக்காலத்தில் இருந்த சேமியா உற்பத்தி செய்து சேமித்து வைத்திருக்கும் கிடங்கு அல்லது கிட்டங்கியின் அருகில்தான் கணேசமூர்த்தி தன் நண்பர்களைச் சந்திக்கும் இடமாக விளங்கியது.[46]

இளவயதில் சுறுசுறுப்புடனும், யாருக்கும் அடங்காத குணத்துடனும், சற்று முரட்டுச் சுபாவத்துடனும் இருந்தார். தனக்கும் தன்னைச் சுற்றியிருக்கும் நண்பர்களுக்கும் மற்றவர்கள் 'துஷ்டர்கள்' என்ற பட்டம் சூட்டினார்கள் என்று கூறினார் கணேசமூர்த்தி.[47]

யார் அழுதாலும் அது கணேசமூர்த்தி அடித்த அடியினால்தான் நிகழ்ந்திருக்கிறது. இந்தச் செயல் கணேசமூர்த்தி தாயின் காதுகளுக்கு எட்டினால், வெங்காயத்தைக் கண்ணிலே பிழிந்துவிடும் தண்டனை கிடைத்தது. இந்தத் தண்டனை என்றைக்கும் நிரந்தரம் என்று கூறும் அளவுக்கு முரட்டுத்தனத்தோடு இருந்தார் கணேசமூர்த்தி.[48]

குடும்பத்தில் கடைக்குட்டியான கணேசமூர்த்திக்கு மூன்று மூத்த சகோதரர்கள். அவர்கள் திருஞானசம்பந்தமூர்த்தி, கனகசபாநாதர், தங்கவேல். கணேசமூர்த்தியின் தம்பி சண்முகமும், தங்கை பத்மாவதியும் அவர் நாடக நடிகராக இருந்தபோது பிறந்தவர்கள் ஆகும்.

கடைக்குட்டியாக இருந்தாலும் தன் மூத்தசகோதரர்களைத் தைரியமாக எதிர்த்துச் சண்டைபோட்டார். ஒருமுறை கணேசமூர்த்திக்கும், தங்கவேலுவுக்கும் ஏதோ ஒரு பிரச்சனையில் சண்டை முற்றி, தங்கவேலுவை "இன்று இரவு உன்னை அடித்துக்கொல்கிறேன் பார்" என்று சவால் விட்டு, ஒரு தடியை எடுத்து வைத்தார் கணேசமூர்த்தி. தங்கவேலு தனது தாயாரிடம் அதனைத் தெரிவித்துப் பயமாக இருக்கிறது என்று கூறி தனக்குப் பாதுகாப்பாக இரவில் படுத்துக்கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். தாயார் ராஜாமணி அம்மாளும், கணேசமூர்த்தி செய்தாலும் செய்துவிடுவார் என்று இரவெல்லாம் தூங்காமல் விழித்தபடி எச்சரிக்கையோடு இருந்தார். ஆனால் கணேசமூர்த்தியோ தடியை தன் பக்கத்தில் வைத்துக்கொண்டு நன்றாகத் தூங்கிவிட்டார்.[49] அந்தச் சம்பவம் பிறர் தமக்குத் தீங்கு செய்வதையும், மறந்து மன்னிக்கின்ற குணம் அவருக்கு இயற்கையாகவே இளவயதிலேயே இருந்தது என்பதற்கு இச்சம்பவம் எடுத்துக்காட்டாகும்.

கணேசமூர்த்தி சிறுவனாக இருக்கும்போதே சமூகச் சேவையில் ஈடுபட்டார். திருடர்களிடமிருந்து மக்களைப் பாதுகாக்க இரவு நேரத்தில் காவலுக்குச் சுற்றி வரும் இளைஞர்களோடு சேர்ந்து காவல்செய்தார்.

சில நேரங்களில் சுடுகாட்டுக்குப் பக்கத்தில் உள்ள மரத்தில் ஒருவர் இலைகளைப் பறித்து வர மற்றவர்கள் ஒளிந்துகொண்டு இருக்க இலைகளை பறித்து வருபவன் ஒளிந்துகொண்டு இருப்பவர்களை கண்டுபிடிக்கும் மனோதிடத்தைச் சோதிக்கும் விளையாட்டுக்களையும் விளையாடினார்.[50]

இதுபோன்ற விளையாட்டுக்கள் கணேசமூர்த்திக்குச் சில சமயத்தில் விபரீதமாகவும் முடிந்தது. ஒருமுறை அவரது நண்பர்களில் ராஜு என்பவருடன் ஏற்பட்ட சண்டையில் ராஜு அவரைப் பேனாக்கத்தியால் குத்தினார். அந்தத் தழும்பு மறையாமல் இறுதிவரை இருந்தது.[51]

இந்தப் பிரச்சனைகளுக்கெல்லாம் ஒரே தீர்வாக ராஜாமணியம்மாள் தன் கணவருடன் வெளியில் செல்லும் சமயங்களில் கணேசமூர்த்தியை வீட்டில் வைத்து வெளியில் தாழ் போட்டுச் செல்வது வழக்கமாக இருந்தது. ஆனால் கணேசமூர்த்தியோ கதவை உள்ளிருந்து தள்ளித் தள்ளித் தாழைத் திறக்கும்படி செய்து கொண்டு வெளியில் நண்பர்களைத் தேடி ஓடி விடுவார்.

சில நாட்களில் மிகக் கோபம் கொண்டு சாப்பாடு போட ராஜாமணி அம்மாள் மறுக்கும் சமயங்களில் கோபித்துக் கொண்டு திருச்சி மலைக்கோட்டைப் பிள்ளையார் கோயிலில் நாள் முழுவதும் இருந்துவிட்டு அன்னையைப் பரிதவிக்க விட்டுப் பின்பு இருட்டிய பின் வீட்டிற்கு வருவார் கணேசமூர்த்தி.[52]

இப்படி வீட்டிலும் நண்பர்கள் மத்தியிலும் முரட்டுச் சிறுவனாக விளங்கிய கணேசமூர்த்தி, இடையர் தெருவில் அக்காலத்தில் பெரிய போக்கிரியாக நடமாடிய 'கடவுள் ரங்கன்' என்பவருக்கு மிகவும் பயந்தார். பிற்காலத்தில் திரைப்பட உலகில் பெரும் புகழ் பெற்ற நடிகரான பின்பும் இடையர் தெருவுக்கு வந்தால் 'கடவுள் ரங்கனைப் பற்றி விசாரித்து வந்தார்'[53]

கணேசமூர்த்தியின் இளவயது நண்பர்களில் ஒருவர் மட்டும் தற்பொழுது ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்து வருகிறார். அவர் பெயர் செல்வரங்க நாயக்கர் (வயது 90). அவரை நேர்காணல் செய்தபோது தானும் கணேசமூர்த்தியும் சங்கிலியாண்டபுரம் தண்டவாளத்துக்குப் பக்கத்தில் உள்ள பெரிய கிணற்றில் குதித்து விளையாடியதைக் கூறினார். காவிரி ஆற்றில் குதித்து நீந்துவது, தோப்பில் காவலாளிக்குத் தெரியாமல் மாங்காய் பறிப்பது போன்று கணேசமூர்த்தியுடன் சேர்ந்து செய்த இளவயதுச் சேட்டைகளை நினைவு கூர்ந்தார்.[54]

**இளமையில் வறுமை**

பள்ளியில் இரண்டாவது வகுப்பு படித்துக் கொண்டிருக்கும்போது வீட்டில் வறுமையின்பிடி அதிகமானது. சிறைத்தண்டனை பெற்று வந்த காரணத்தால் சின்னையா மன்றாயருக்கு இரயில்வே பணி நீக்கம் செய்யப்பட்டு, ஒரு பஸ் கம்பெனியில் சொற்பச் சம்பளத்தில்தான் வேலை கிடைத்தது. எனவே கணேசமூர்த்தியின் கல்வி நிறுத்தப்பட்டு மற்ற சகோதரர்களைப்போல் வேலைக்குச் சென்றார். ஒரு இரும்புப் பட்டறையில் நெருப்பு ஊதும் வேலையில் சேர்ந்தவரை பட்டறையின் முதலாளி நடத்திய விதம், கணேசமூர்த்தி வீசிய கல்லால் தாக்கப்பட்டு அவருக்கு இரத்தக் காயம் ஏற்பட்டது. தாயாரின் தண்டனைக்குப் பயந்து இரண்டு நாட்கள் வீடு திரும்பாமல் இருந்தார். தாயாரும், சகோதரர் திருஞான சம்பந்தமும் தேடிப் பார்க்கும்போது தன்னை மறந்து "கம்பளத்தார் கூத்தை" ரசித்துக் கொண்டிருந்திருந்தார் கணேசமூர்த்தி. அந்த இளம் வயதில் அக்கூத்தின் கதாநாயகனான வீரபாண்டியக் கட்டபொம்மன் அவர் மனதில் ஆக்கிரமிக்கத் தொடங்கினார்.[55]

கட்டபொம்மன் பெயரைச் சொன்னால் - இந்த
காசினி எங்கும் கதி கலங்கும்
அட்டதிசை நடுங்கி ஒடுங்கும்
அடங்கி மடங்குவர் யாவருமே" என்ற பாடலையும்

"வானம் பொழியுது பூமி விளையுது
உனக்கேன் வரி கட்டவேண்டும்?
தானமாகக் கேள்: தருகிறேன்
வரி என்றால் தரமாட்டேன்"

என்ற வசனங்களைப் பேசி வீட்டில் கணேச மூர்த்தி நடித்துக் காட்டினார்.

ஒருமுறை சித்திரை மாதம் தன் வீட்டின் அருகில் உள்ள கோயில் திருவிழாவை ஒட்டி நடந்த 'கம்பளத்தார் கூத்தில் வெள்ளைக்காரச் சிப்பாய்களில் ஒருவராக நடிக்கும் சந்தர்ப்பம் கணேச மூர்த்திக்குக் கிடைத்தது. அதைப் பார்த்த தேசியவாதியான சின்னையா மன்றாயர் வெள்ளைக்காரச் சிப்பாய் வேடமணிந்து நடித்த கணேசமூர்த்தியை அடித்தார்.[56]

தந்தையிடம் அடி வாங்கியதால் காய்ச்சல் வந்துவிட்டது. அந்த நிலையிலும் ''வீரமரபில் தோன்றி, தேசியவாதியின் மகனாக பிறந்த காரணத்தால், தான் ஏன் வீரபாண்டியக் கட்டபொம்மனாக ஆகக்கூடாது என்ற எண்ணம் கணேசமூர்த்தியிடம் வலுப்பெற்றது.

அந்த இளம் வயதில் திருவிழா, கண்காட்சி, சர்க்கஸ் போன்றவைகளெல்லாம் கணேசமூர்த்தி நிச்சயம் ரசித்திருப்பார். ஆனால் நாடகத்தில் மட்டும் அவர் மனதைப் பறிகொடுத்தார். அதிலும் கட்டபொம்மன் வாழ்க்கை வரலாற்றைக் கூறும் கம்பளத்தார் கூத்து கணேசமூர்த்தியை வெகுவாகப் பாதித்தது. அதே மனநிலை நடிப்புக் கலைக்கு விதிகளை வகுத்த ரஷ்ய நாட்டு நடிகரும், இயக்குநருமான ஸ்தானிலாவ்ஸ்கி இளவயதில் பிற பொழுதுபோக்கு அம்சங்களைவிடத் தன் மனதில் ஆழமாகவும், கூர்மையாகவும் பசுமையாகவும் பதிந்த 'ஒபரா' பற்றிக் கூறினார்.[57]

ஒரு கலைஞனுக்கு நல்ல கலைகள், ஓவியம், இசை, அருங்காட்சியகம், கடல் பயணம் மற்றும் படங்களின் உறுதியான பதிவுகள் இளவயதில் இருக்க வேண்டும். இந்த பதிவுகள் அந்தக் கலைஞனின் ஆன்மாவை அசைத்து விலை

மதிக்கமுடியாத கற்பனை வளமிக்க பொக்கிஷப் பெட்டகத்தைத் திறப்பதற்கு வழிவகுக்கும் என்றார்.[58]

ஸ்தானிஸ்லாவ்ஸ்கி மேலும் கூறுகையில், ஒரு நடிகர் மனித உணர்ச்சிகளில் முழுமையாக வாழட்டும், ஏமாறட்டும், ஆனந்தமடையட்டும், அதே நேரத்தில் தன் வாழ்வையும், உணர்ச்சிகளையும் கலையாக உருவாக்க வேண்டும்.[59] மேற்கூறப்பட்டுள்ள அறிஞர் ஸ்தானிலாவ்ஸ்கின் அனைத்துக் கருத்துக்களும், கணேசமூர்த்தியின் வாழ்வில் அவரால் உணரப்பட்டன.

மேலும், அப்போதுதான் குடும்பத்தின் கஷ்டங்கள் ஓரளவிற்குத் தெரிய ஆரம்பித்தன. கை நிறையச் சம்பாதிக்க வேண்டும், தன் தாயாரின் கண்ணீரைத் துடைக்க வேண்டும் என்றெல்லாம் மனதில் எண்ணம், ஒரு வெறி, ஒரு உத்வேகம் கணேசமூர்த்தியின் மனதில் வேரூன்ற ஆரம்பித்தது.[60]

**கம்பளத்தாரும் அவர்களின் கூத்தும்**

விஜயநகரம், விசாகம், கஞ்சம் முதலிய வடநாடுகளிலிருந்து தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட,

| | | |
|---|---|---|
| தோகலவார் | - | பசுமாடுகளை உடையவர்கள் |
| மேகலவார் | - | வெள்ளாடுகள் உடையவர்கள் |
| கொல்லவார் | - | செம்மறியாடு உடையவர்கள் |
| பாலவார் | - | பால் கறந்து உதவி வந்தவர்கள் |
| சில்லாவார் | - | இளங்கன்றுகளை உடையவர்கள் |
| எறசில்லாவார் | - | சிவப்பான இளங்கன்றுகளை உடையவர்கள் |
| நலசில்லாவார் | - | கரிய இளங்கன்றுகளை உடையவர்கள் |
| குரு சில்லாவார் | - | தலைமைப் பதவியை வகித்தவர்கள் |

என்ற பிரிவுகளடங்கிய இனத்தவர் 12 ஆம் நூற்றாண்டில் தென்தமிழ் நாட்டில் குடியேறத் துவங்கினர். இந்தப் பிரிவுகளைச் சேர்ந்த இனத்தவர்களின் பூர்வீகப் பூமிக்குக் **கம்பளம்** என்ற பெயர் உண்டு. மேலும் கால்நடைகளை மேய்ப்பது மற்றும் பராமரிப்பதைத் தங்கள் தொழிலாகக் கொண்டனர். அவர்கள் கம்பளி (குளிருக்கு உதவும்) அல்லது போர்வையை (Bed Sheet) உபயோகப்படுத்தியதாலும் கம்பளத்தார் என்று காரணப் பெயரால் அழைக்கப்பட்டனர்.[61]

இதில் 'தோகலவார்' இனத்தைச் சேர்ந்தவர்கள் வீரபாண்டியக் கட்ட பொம்மனின் முன்னோர்கள் ஆவர். 'தோகலவார்' பிரிவினர் இயற்கையிலேயே வீரத்துடனும், திறமை மிக்கவர்களாகவும் விளங்கினர். இவர்கள் தங்கள் இன மன்னன் ஆங்கிலேயர்களை எதிர்த்து நின்று வீர மரணம் அடைந்த கதையை 'நாட்டுப்புற பாடல்களாக'த் தொகுத்து ஓய்வு நேரத்தில் கூத்தாக ஆடி மகிழ்ந்தனர். அந்தக் கூத்துதான் 'கம்பளத்தார் கூத்து' என்று அழைக்கப்பட்டது. பாடல்களோடு ஆடி மகிழ்ந்த அக்கூத்தில் காலப்போக்கில் சம்பவங்களின் கோர்வை கலந்த நாடகமாக உருவானது. அதற்கு 'கட்டபொம்மு நாடகம்' என்ற பெயர் வந்தது. இந்த நாடகம் தமிழகத்தில் பல நாடகக் குழுக்களால் நடத்தப்பட்டது.[62]

**நாடகக்குழுவில் கணேசமூர்த்தி**

கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்ற முனைப்போடு இருந்த கணேசமூர்த்தி திருச்சியில் முகாமிட்டிருந்த மதுரை ஸ்ரீ பால கான சபா எனும் நாடகக்குழுவினர் தங்களது முகாமை முடித்து வேறு ஊருக்குப் புறப்பட ஆயத்தம் செய்து கொண்டிருக்கும்போது அங்குச் சென்று சக்கரபாணி என்ற நடிகரிடம் நடிக்க விருப்பம் உள்ளதாகவும், தனக்கு பாடவும் தெரியும் என்று "பழனிவேல் இது தஞ்சம்" என்ற பாடலைப் பாடிக் காட்டினார்.[63] அக்காலத்தில் உணவு, உறைவிடம், ஒழுக்கம், கல்வி போன்ற வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவைகள் அனைத்தும் ஒருங்கே ஒரே இடத்தில் கிடைத்தது நாடகக் குழுக்களில்தான். நடிகர் எம்.ஜி.ஆரையும், அவரது சகோதரர் சக்கரபாணியையும் அவர்களது தாயார் நாடகக் கம்பெனியில் சேர்த்தமைக்குக் காரணமாக இருந்தவை மேற்கூறப்பட்ட காரணங்கள்தான்[64] வி.சி. கணேசமூர்த்தி வறுமையின் காரணமாக நாடகக் கம்பெனியில் சேர்ந்தார் என்பதைவிட தான் ஒரு நடிகனாக அதிலும் கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்ற உந்துதல்தான் காரணமாக இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

1935ல் தனது ஏழாவது வயதில் கட்டபொம்மனின் வீர வரலாறு ஏற்படுத்திய தாக்கமும், தன் குடும்ப வறுமையைத் தீர்க்க நடிகனாக வேண்டும் என்ற உறுதியும் கணேசன் தன்னை ஓர் அனாதை எனக் கூறி நாடகக் குழுவில் சேர்ந்தார்.

அந்த நாடகக் குழுவில் கணேசனின் பால்ய நண்பரும் பிற்காலத்தில் அவரோடு 'மனோகரா', 'துளி விஷம்', 'தேவர் மகன்' போன்ற பல வெற்றிப்படங்களில் இணைந்து நடித்தவருமான காகா ராதாகிருஷ்ணன்

இருந்தார். அவர் கணேசன் தன்னை அனாதை என்று கூறிக் குழுவில் சேர்ந்த விதம் குறித்துக் கேட்டுத் தெரிந்துகொண்டார்.[65]

பிற்காலத்தில் சிவாஜி நாடக மன்றத்தின் உறுப்பினராகவும் சிவாஜி கணேசனோடு பல சரித்திர, இதிகாச, புராணக் கதைகள்கொண்ட திரைப்படங்களில் நடித்தவருமான கே.வி. சீனிவாசனும் நாடகக் குழுவில் இருந்தார். கணேசன் மதுரை பாலகான சபாவில் சேருவதற்கு ஐந்து வருடங்களுக்கு முன் அக்குழுவில் சேர்ந்தார்.[66]

கணேசன் சேர்ந்த நாடகக் குழுவின் உரிமையாளர்களில் இரண்டுபேர் பொன்னுச்சாமி எனும் பெயர் கொண்டவர்கள். ஒருவர் யதார்த்தம் பொன்னுசாமிப் பிள்ளை மற்றொருவர் பொன்னுச்சாமி படையாச்சி. கணேசனுக்கு பாடம் சொல்லிக் கொடுக்கும் வாத்தியாராக இருந்தவர் பொன்னுச்சாமிப் படையாச்சி. அதனால் அவருக்கு வாத்தியார் பொன்னுச்சாமி என்ற பெயர். வாத்தியார் என்பதற்கு ஆசிரியர் என்று பொருள். பெயர் ஒன்றாக இருந்த காரணத்தால் வாத்தியாரை பெரிய பொன்னுசாமி என்றும் மற்றவரைச் சின்னப்பொன்னுசாமி என்றழைக்கப்பட்டதைத் தன் சுயசரிதையில் குறிப்பிட்டுள்ளார்.[67]

**கலைப்பயணம் துவக்கம்**

திருச்சியில் முகாமிட்டிருந்த மதுரை ஸ்ரீ பாலகான சபா நாடகக்குழு திருச்சியை விட்டுத் திண்டுக்கல் நோக்கிப் பயணம் ஆகியது. கணேசன் தணியாத கலைத் தாகத்துடனும் வேகத்துடனும் மதுரை ஸ்ரீ பாலகான சபா நாடகக்குழுவினருடன் தனது கலைப்பயணத்தைத் திருச்சியிலிருந்து திண்டுக்கல் நோக்கித் துவக்கினார்.[68]

**திண்டுக்கல் - சிறுமலை**

திண்டுக்கல் திருச்சியிலிருந்து சுமார் 100 கி.மீ. தொலைவில் உள்ள ஊர் ஆகும். இங்கு மிகப்பெரிய அளவில் நீளமாகவும், அகலமாகவும் கற்பாறை இருக்கிறது. இது ‘திட்டு’ போன்று இருக்கும் என்பதால் ‘திட்டுக்கல்’ என்பது மருவி திண்டுக்கல் என்று அழைக்கப்பட்டது. திண்டுக்கல்லுக்கு மிக அருகில் இருக்கும் ஊர் சிறுமலையாகும். அது தென்னவனாகிய பாண்டியனுடைய நாட்டின் வட எல்லையாக இருந்தது. அந்தச் சிறுமலைப்பற்றிய குறிப்பு சிலப்பதிகாரத்தில் உள்ளது,

“வாழையும் கமுகும் தாழ்குலைத் தெங்கும்
மாவும் பலாவும் சூழடுத்து ஓங்கிய
தென்னவன் சிறுமலை திகழ்ந்து தோன்றும்”[69]

கூத்தின் வகைகள், இசை நுணுக்கங்கள், தாள வகைகள், திரை வகைகள், மற்றும் நாடகக் கலை அரங்க அமைப்பு பற்றிய நுண்குறிப்புகள் அடங்கிய முதல் தமிழ் நாடக நூல் சிலப்பதிகாரமாகும். நடிப்புலகில் தனி முத்திரை பதித்த வி.சி. கணேசனின் நாடக வாழ்க்கைப் பயணம் துவங்கிய திண்டுக்கல் சிறுமலைப் பற்றிய குறிப்பு சிலப்பதிகாரத்தில் இருப்பது சிறப்புக்குரியதாகும்.[70]

ஆங்கிலேயர்களின் ஆட்சிக்கு முன் திண்டுக்கல் என்பது விஜய நகர மன்னர்களின் ஆட்சிக்காலத்தில் 12 பாளையங்களின் தலைநகராக விளங்கியது. விவசாயம் இங்கு முதன்மைத் தொழிலாக விளங்கியது என்பது அக்காலத்தின் நிலவருவாயின் குறிப்புகளில் உள்ளது[65] இந்தியா சுதந்திரம் பெற்றபின் மதுரை மாவட்டத்தில் சேர்க்கப்பட்டுப் பின்னர் 1985ல் திண்டுக்கல் மாவட்டம் உருவாக்கப்பட்டுத் திண்டுக்கல் நகரம் அதன் தலைநகராகச் செயல்பட்டு வருகிறது.[71]

'விவசாயம்' முதன்மைத் தொழிலாக விளங்கியதால், அறுவடைக்குப் பின் இங்குத் திருவிழாக்கள், கூத்து, நாடகம் போன்றவைகளை நடத்திக் கண்டு களிப்பது மக்களின் பழக்கம். எனவே திண்டுக்கல் போன்ற சிறு நகரங்களில் அக்காலத்தில் நாடகம் நடத்துவதற்குப் பெரும் வாய்ப்பும் வரவேற்பும் இருந்தது. மேலும் இம்மாதிரி நாடகங்கள் நடத்தும் குழுவினருக்கு அந்த ஊரில் இருக்கும் பெரிய நிலச்சுவான்தார்கள், தொழில் அதிபர்கள், ஜமீன்தார்கள் போன்றவர்களின் பெரும் ஆதரவு இருந்தமையால், வி.சி. கணேசன் சேர்ந்த மதுரை ஸ்ரீ பாலகான சபா திண்டுக்கல் நோக்கிப் பயணித்தனர். அதில் புதிதாகச் சேர்ந்திருந்த வி.சி. கணேசனும் ஆர்வத்துடனும், கனவுகளுடனும், இலக்கை நோக்கிய தளராத நம்பிக்கையுடனும் திண்டுக்கல் நோக்கித் தன் கலைப் பயணத்தை துவக்கினார்.

**நிறைவுரை**

மன்னார்குடி அருகில் உள்ள வேட்டைத்திடல் எனும் கிராமத்தில் மன்றாயர் எனும் பட்டத்துக்குரிய கள்ளர் இனத்தில் பிறந்து, ரயில்வே பணியில் சேருவதற்காக விழுப்புரம் வந்து குடியேறி சின்னையா மன்றாயர், ராஜாமணி அம்மாளின் நான்காவது மகனாகப் பிறந்தவர் வி.சி. கணேசன் ஆகும். சின்னையா மன்றாயர் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டு சிறைத்தண்டனைப் பெற்றதனால் ராஜாமணி அம்மாள் திருச்சி சங்கிலியாண்டபுரத்தில் தன் குழந்தைகளுடன் குடியேறினார். பால் வியாபாரம் செய்துகொண்டு குடும்பத்தை மிகுந்த சிரமத்துடன் நடத்தி வந்தார். ஏழு ஆண்டுகள் சிறைத்தண்டனை பெற்ற சின்னையா மன்றாயர் நன்னடத்தையின் காரணமாக 4 ½ ஆண்டுகளில் விடுதலை பெற்றுத் திருச்சி வந்து தன் குடும்பத்தோடு இணைந்தார். இளம் வயதில் 'கம்பளத்தார் கூத்தை'ப் பார்த்து மனதைப் பறிகொடுத்தார். தானும் நடிகனாக வேண்டும் அதிலும் கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்ற

உறுதியை மனதில் தீர்மானித்துக் கொண்டார். மேலும், தன் குடும்ப நிலைமையை நினைத்துத் தன் தாயின் வறுமையைப் போக்க வேண்டும் என்றும் முடிவெடுத்தார். இளம் வயதில் துடிப்புடனும், முரட்டுக் குணத்தோடும் வளர்ந்த வி.சி. கணேசன், இயற்கையிலேயே பாடல் பாடும் ஆற்றலுடனும் நல்ல குரல் வளத்துடனும் இருந்தார். அத்திறமையை வெளிப்படுத்தி மதுரை ஸ்ரீ பாலகான சபாவில் நடிகராக தனது ஏழாவது வயதில் சேர்ந்தார். அறுபத்து மூன்று ஆண்டுகள் அடங்கிய அவரது நீண்ட நெடிய கலைப்பயணம் திண்டுக்கல் சிறுமலைப் பகுதியில் இருந்து துவங்கியது. தமிழின் முதல் நாடக நூலான சிலப்பதிகாரத்தில் திண்டுக்கல் சிறுமலை பற்றிய குறிப்புகள் உள்ளன. இது மிகவும் சிறப்புக்குரிய அம்சமாகும். கட்டபொம்மன் நாடகத்தைப் பார்த்துத் தானும் ஒரு நடிகராக, அதிலும் கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்ற உணர்வோடும், ஒரு உந்துதலுடனும் இருந்தார்.

## இறுதிக்குறிப்புகள்

---

1 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **சிவாஜிகணேசனின் எனது சுயசரிதை,** சிவாஜி-பிரபு சாரிட்டீஸ் டிரஸ்ட், சென்னை, 2002 ப.xi

2 **பரிமேலழகர் உரை, திருக்குறள்,** பூம்புகார் பதிப்பகம், சென்னை, 1991, ப.286

3 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ,** ப.2

4 இராஜபூஷணம் மன்னையார், அ., **கள்ளர் குல வரலாறு**, குருவருள் பதிப்பகம், சென்னை, 2009, ப.34.

5 நேர்காணல், காந்தி, நா., சிவாஜி கணேசனின் சிறிய தந்தை மகன், வேட்டைத்திடல், 01.10.2012.

6 **மேலது.**

7 **மேலது.**

8 **மேலது.**

9 **மேலது.**

10 வேங்கடசாமி நாட்டார்,ந.மு., **கள்ளர் சரித்திரம்**, நூற்றாண்டு விழா வெளியீடு, தஞ்சாவூர், 1984, ப.1

11 இராமசாமி, அ., **இந்திய விவரச்சுவடி**, தமிழ்நாடு இராமநாதபுரம் மாவட்டம், 1990, ப.172

12 Interview of Nicholas B Dirks, Colombia University, U.S. in **The Hindu**, 15 January, 2007.

13 இராமசாமி, அ., **மு.கூ.நூ.**, ப.173.

14 Nelson, J.H., **Madura Country A Manual**, Part II, Asylum Press, Madras, 1868, p.99.

15 Ranganathan, M. **Zamindary System in the Madras Presidency**, Siva Publications, Chennai, 2010, p.1

16 வேங்கடசாமி நாட்டார், ந.மு., **மு.கூ.நூ.** ப.62.

17 Spencerwel, Journey of Man, **National Geography Programme**, A Genetic Odyssey. video 15

18 Francis, W., **Madurai Gazetter**, Government Press, Madras, 1906, p.83.

19 Mclean, C.D., **Madras Manual of Administration,** Vol.3, 1893, p.983.

20 Villupuram, Wikipedia

21 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.** ப.3.

22 **மேலது.**, ப.3

23 **மேலது.**

24 **மேலது.**, ப.4

25 மருதுமோகன், 'மலேசியா' சுதந்திரப் போராட்ட வீரர், வீ.தி. சம்பந்தன் 33 ஆம் ஆண்டு நினைவு நாளில், கோலாலம்பூரில் பேசியது, 20 மே, 2012

26 Indian Railways, Wikipedia.

27 Ibid

28 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.** ப.4

29 **மேலது.**,ப.4

30 **மேலது.** பப. 4-5

31 நேர்காணல், காந்தி, ந., சிவாஜிகணேசனின் சிறிய தந்தை மகன், வேட்டைத்திடல், 01.10.2012.

32 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.** பப. 4-5

33 இராஜபூஷணம் மன்னையார், **மு.கூ.நூ.** ப.36

34 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.** ப. 3

35 நேர்காணல், ராம்குமார், க., சிவாஜி கணேசனின் மூத்த மகன், 08.10.2012.

36 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.** ப. 7.

37 **மேலது.**, ப.6

38 **மேலது.**, பப.5-6

39 **மேலது.**, ப.6

40 மாணிக்கனார், அ., **புறநானூறு**, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999, பப.207-

41 நேர்காணல், காந்தி, ந., சிவாஜிகணேசனின் சிறிய தந்தை மகன், வேட்டைத்திடல், 01.10.2012.

42 Haris Marvin, **The Rise of Anthropoligical Theory. A History of Theories of Culture,** Thomas Y Crowell Company, New York, 1968, p.110.

43 நேர்காணல்: **சீனிவாசன்,** பி., சிவாஜி கணேசனின் குடும்ப நண்பர் திருச்சி, 02.07.2014

44 சிவாஜிகணேசன், **கதாநாயகனின் கதை,** விஜயா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2009, பப.40-41.

45 **மேலது.,** ப.40

46 நேர்காணல்: **சீனிவாசன்,** பி., சிவாஜி கணேசனின் குடும்ப நண்பர் திருச்சி, 02.07.2014

47 சிவாஜிகணேசன், **மு.கூ.நூ .,** ப.46

48 **மேலது.,** ப.37

49 **மேலது.**

50 **மேலது.**

51 **மேலது.,** ப.40

52 **மேலது.,** பப.37-38

53 நேர்காணல்: **சீனிவாசன்,** பி., சிவாஜி கணேசனின் குடும்ப நண்பர் திருச்சி, 02.07.2014

54 நேர்காணல், செல்வரங்க நாயக்கர்,க., சிவாஜிகணேசனின் பள்ளித் தோழர் 09.07.2014

55 Theodre Baskaran, S., **Sivaji Ganesan,** Wisdom Tree, New Delhi, 2008, p.4.

56 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.** ப.11

57 Constantin Stanislavsti, **My Life in Art**, Theatre Arts Books, New York, 1948, p.32

58 **Ibid.,** p.37

59 **Ibid.,** p.38

60 சிவாஜிகணேசன், **மு.கூ,நூ,** ப.41

61 ஜெகவீரபாண்டியன், **பாஞ்சாலங்குறிச்சி, வீரசரித்திரம்,** திருவள்ளுவர் நிலையம், மதுரை, 1950, பப.17-18

62 **மேலது.,** ப.19.

63 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ,நூ.** ப.12.

64 இராமச்சந்திரன், எம்.ஜி.. **நான் ஏன் பிறந்தேன்,** இராஜராஜன் பதிப்பகம், சென்னை, 2003, பாகம் 1, ப.483.

65 நேர்காணல், நடிகர் கா.கா. இராதாகிருஷ்ணன் சிவாஜிகணேசனோடு நாடகம் மற்றும் சினிமாவில் நடித்தவர், 08.02.2011

66 நேர்காணல் - **சீனிவாசன்,** கே.வி. சிவாஜி கணேசனோடு நாடகம் மற்றும் சினிமாவில் நடித்தவர், 27.01.2013

67 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ,நூ.** ப.14

68 மேலது., ப.12.

69 **ஸ்ரீசந்திரன், சிலப்பதிகாரம், மதுரைக் காண்டம், காடுகளின் கதை** (வரிகள் 83-85) வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1988 - ப.204.

70 வரதராசன், மு. **தமிழ் இலக்கிய வரலாறு,** சாகித்திய அகாதெமி வெளியீடு, டெல்லி - 1972, ப.263

71 Nelson, J.H. op.cit., part IV, p. 3.

# இயல் இரண்டு

## நாடக உலகில் சிவாஜி கணேசன்

முகவுரை

1935இல் தனது ஏழாவது வயதில் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டுத் தான் நடிகராக வேண்டும் அதிலும் வீரபாண்டியக் கட்டபொம்மனாக வேண்டும் என்ற உறுதியோடு மதுரை ஸ்ரீபால கானசபாவில் சேர்ந்த கணேசமூர்த்தி, பத்து நாட்களுக்குள் எடுத்த பயிற்சியைக் கொண்டு கொடுக்கப்பட்ட சீதை வேடத்தில் நன்றாக நடித்து வாத்தியார் பொன்னுச்சாமி படையாச்சியிடம் பாராட்டுதலைப் பெற்றார். படிப்படியாக ஒரே நாடகத்தில் நான்கு வேடங்களை ஏற்று நல்ல நடிகர் என்ற பெயர் வாங்கினார். கணேசமூர்த்தி என்ற இவரது பெயர் வி.சி. கணேசன் என மாற்றப்பட்டது. தான் ஒரு அநாதை என்று நாடகக் குழுவில் சேர்ந்த வி.சி. கணேசன் பின்பு குடும்பத்துடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டார். மதுரை ஸ்ரீ பாலகானசபாவினர் பல ஊர்களுக்குச் சென்று நாடகம் நடத்தினார்கள். நாமக்கல்லில், சாமண்ணா ஐயர் நடித்த ‘டம்பாச்சாரி’ என்ற நாடகத்தைப் பார்த்துத் தானும் இதுபோன்று பல வேடங்களில் நடிக்க வேண்டும் என்று உறுதி கொண்டார். தனது 7வது வயதில் நாடகக் கம்பெனியில் சேர்ந்த அவர் ஐந்து வருடங்கள் கழித்துத் தன் வீட்டிற்குத் திரும்பித் தாய் மற்றும் உடன்பிறப்புகளுடன் தீபாவளியைக் கொண்டாடினார்.

பின்பு நடிகவேள் எம்.ஆர். ராதாவின் நாடகக் கம்பெனியில் சேர்ந்து சென்னையில் பல சமூக நாடகங்களில் நடித்தார். ஈரோட்டில் நாடகங்களில் நடித்த காலத்தில் திராவிட இயக்கத் தலைவர்களான ஈ.வெ.ராமசாமி, அண்ணாத்துரை, ஈ.வெ.கி. சம்பத், மு.கருணாநிதி, நடிகர்கள் என்.எஸ். கிருஷ்ணன், கே.ஆர். ராமசாமி, எஸ்.எஸ். ராஜேந்திரன் போன்றவர்களைச் சந்திக்கும் வாய்ப்பைப் பெற்றார். சிறிது காலம் கழித்து ராதாவின் கம்பெனி நஷ்டமடையவே வேறு நாடகக் கம்பெனியில் சேர்ந்து நடித்தார். இந்த நாடகக் கம்பெனியும் நஷ்டமடைந்து உணவுக்கே கஷ்டம் வந்த காலத்தில் தன் தாயின் வேண்டுகோளை ஏற்றுத் திருச்சிக்குத் திரும்பி, சிலமாதங்கள் திருச்சி ஸ்ரீரங்கம் டிரான்ஸ்போர்ட் கம்பெனியில் பேருந்து பழுது பார்க்கும் வேலை பார்த்தார்.

மீண்டும் நடிக்க வேண்டும் என்ற ஆசையில் கும்பகோணத்தில் மதுரை ஸ்ரீ மங்கள கானசபா எனும் கம்பெனியில் சேர்ந்து தன் நாடக வாழ்க்கையைத்

தொடர்ந்தார். இந்தக் கம்பெனியும் நஷ்டமடைந்தது. பின்பு அந்தக் கம்பெனியை விலைக்கு வாங்கிய என்.எஸ். கிருஷ்ணனின் நாடகக் கம்பெனியில் நடித்தார். கொலை வழக்கு ஒன்றில் என்.எஸ். கிருஷ்ணன் தண்டனை பெற்றுச் சிறை சென்றதும் நடிகர் கே.ஆர்.ராமசாமியோடு அக்கம்பெனியிலிருந்து விலகிக் காஞ்சிபுரத்தில் அண்ணாத்துரையுடன் தங்கினார். தனது 18வது வயதில் 1945ல் சென்னையில் நடந்த ஏழாவது சுயமரியாதை மாநாட்டில் அண்ணா எழுதிய 'சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்' என்ற சுயமரியாதைக் கொள்கைகள் அடங்கிய நாடகத்தில் சத்ரபதி சிவாஜி வேடமேற்றுச் சிறப்பாக நடித்த காரணத்தால் ஈ.வெ. ராமசாமி நாயக்கரால் "சிவாஜி" கணேசன் என்ற பட்டம் சூட்டப்பட்டார்.

காஞ்சிபுரத்தில் அண்ணாத்துரையுடன் தங்கியிருந்த கணேசன் கே.ஆர். ராமசாமி ஆரம்பித்த புதிய நாடகக் கம்பெனியில் சேர்ந்து சிறிது காலம் நடித்தார். சில நாட்களில் அந்தக் கம்பெனியிலிருந்து விலகி அண்ணாத்துரையிடம் மீண்டும் திரும்பிவிட்டார். அண்ணாத்துரையின் வேண்டுகோளை ஏற்று அப்போது பிரபலமாக விளங்கிய சக்தி நாடகச் சபையில் சேர்ந்து நடிக்க ஆரம்பித்தார். கணேசனின் நடிப்பாற்றலை வேலூரில் பார்த்த வேலூர் நேஷனல் தியேட்டர் அதிபர் பெருமாள் முதலியார் அக்காலத்தில் பிரபலமாக நடந்த "பராசக்தி" எனும் நாடகத்தை ஏ.வி.மெய்யப்பச் செட்டியாரோடு இணைந்து திரைப்படமாகத் தயாரித்தார். அப்படத்தில் சிவாஜி கணேசனைக் கதாநாயகனாக அறிமுகம் செய்தார். சிவாஜி கணேசனின் 24வது வயதில் 1952ல் வெளிவந்த "பராசக்தி"யில் கதாநாயகனாக அறிமுகம் ஆகித் தமிழ்த் திரை உலகின் முன்னணிக் கதாநாயகர்களில் ஒருவராகத் திகழ்ந்தார். சிவாஜி கணேசன் நாடக உலகில் தனி முத்திரை பதித்து நடித்து வரும் காலத்தில், திரையுலகில் கதாநாயகனாக அறிமுகமான பின்னணியை விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

**நாடகத்தின் தோற்றுவாய்**

மோனத்து இருந்த முன்னோன் கூத்தில்
உடுக்கையில் பிறந்தது ஓசையின் சுழலே
ஓசையில் பிறந்தது இசையின் உயிர்ப்பே
இசையில் பிறந்தது ஆட்டத்து இயல்பே
ஆட்டம் பிறந்தது கூத்தினது அமைவே

கூத்தில் பிறந்தது நாட்டியக் கோப்பே

நாட்டியம் பிறந்தது நாடக வகையே

என நாடகத்தின் தோற்றம் பற்றிக் கூத்தநூலில் வரும் இப்பாடலின் விளக்கமாவது:

சிவபெருமான் ஆடிய ஆதிக்கூத்தின்போது உடுக்கையிலிருந்து பிறந்தது ஓசை; ஓசையின் சுழலிருந்து இசை தோன்றியது. இசைக்கேற்ப அங்க அசைவுகளின் தொகுப்பான ஆட்டம், மலர்ந்தது. ஆட்டம் என்பது கூத்தின் ஒழுங்காகும். அந்த ஒழுங்கிலிருந்து நாட்டியமும், நாட்டியத்திலிருந்து நாடகம் பலவகைகளாகத் தோன்றின என்பதாகும். இதன் மூலம் நாடகத்தின் தோற்றுவாயாகக் **கூத்து** விளங்கியது எனலாம்.[1]

**கூத்து சொல் விளக்கம்**

கூத்து, கூம்பு, கூடு, கூட்டு என்னும் சொற்களுக்கு வேர்ச்சொல் ‘கூ’ என்பதாகும். ‘கூ’ என்பது ஒன்று சேர் என்னும் பொருண்மையுடையது. கூத்து என்பது கூடி ஆடும் ஆட்டம் குறிப்பது.[2]

‘கூத்து’ என்ற சொல்லுக்கு நடம், நட்டம், நாடகம் என்பதாகவும், கூத்து நிகழ்த்துபவர்களுக்கு கூத்தர், நாடகர், கண்ணுளாளர், நடர், வயிரியர், நிருத்தர், கோடியர், பொருநர், அவினயர் என்றும் **சூடாமணி நிகண்டு** பொருள் தருகிறது.[3]

**தமிழ் நாடகத்தின் தோற்றமும் காலமும்**

“மிகவும் பிற்காலத்தே தோன்றி வளர்ந்த ஐரோப்பிய நாடுகளின் நாடகத் தோற்றமே இறைப்பணியோடு இரண்டறக் கலந்து காணப்படுகிறதென்றால், இவற்றிலும் பல நூறு ஆண்டுகளுக்கு முற்பட்டதான தமிழ் நாடகமும் தெய்வீகத்தோடு தொடர்புடையதாகத்தான் இருந்திருக்கும் என்று எண்ணிப் பார்ப்பதில் தவறு ஒன்றுமில்லை” என்று தன் கருத்தைப் பதிவு செய்திருக்கிறார் அறிஞர் பழனி. அரங்கசாமி.[4]

ஈழத் தமிழ் அறிஞர் கா. சிவத்தம்பி, “To the historians, drama was just a part of the social entertainment and did not deserve any serious inquiry” என்று கூறுகிறார். மேலும் “It may perhaps, be said that as long as there was no history of Tamil drama, there was no need for a major inquiry into the origins of it.[5]

“தமிழ் நாடகம் முதலிலுண்டானது மத விடயமாகவே என்பது துணியப்படும்” என்பது நாடகவியலை இயற்றிய சூரிய நாராயண சாஸ்திரியார் என்ற பரிதிமாற்கலைஞரின் கருத்தாகும்[6]

“தமிழ் நாடகத்தின் தோற்றம் பற்றித் தெளிவான கருத்து இன்னும் அறிய இயலாத ஒன்றாகவே உள்ளது தமிழ் நாடகம் பெரும்பாலும் சமயத்துடன் தொடர்பு கொண்டது” என்றார் அறிஞர் ஏ.என். பெருமாள்.[7]

தமிழ் நாடக வரலாற்றை ஆய்வு செய்த சக்தி பெருமாள் “தமிழ் நாடகம் சமய வழிபாடுகளிலேயே தோன்றியிருக்கும்” என்றார்.[8] மேலும் எல்லா நாடுகளிலும் சமயச் சடங்குகளுடன் சேர்ந்த ஆடல் பாடல்களிலிருந்தே அரங்கக் கலையான நாடகம் வளர்ச்சிப் பெற்றுள்ளது. கிரேக்கத் திறந்தவெளி அரங்குகளில் டாக்கஸ், டையானிசியஸ், அப்போலோ போன்ற தெய்வ வழிபாடுகளின்போது ஆடப்பெற்ற ஆடல்களிலிருந்தே நாடகக் கலை தோன்றி வளர்ந்தது என்று கூறியுள்ளார்.[9]

“தமிழ் மொழியின் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் ஆதித் தமிழர்களின் வாழ்வியலை விளக்கும் முகமாக ஏழு புறத்திணைகள் கூறப்பட்டுள்ளன. அவை, வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பவையாகும். இவற்றுள் வெட்சி, வஞ்சி, உழிஞை தும்பை என்ற நான்கு திணைகளும் போர் வகைகள் ஆகும்.

போர் வகைகளில் முதலாவதாக வரும் ‘வெட்சிப்போர்’ என்பது வேட்டைச் சமூகத்தில் வாழ்ந்திருந்த ஆதித் தமிழ் மக்கள் எதிரி நாட்டினுள் நுழைந்து “ஆநிரைகளை” (கால்நடைகள்) கவர்ந்து வருவதன் மூலம் அந்நாட்டின் மீது படையெடுப்பு நிகழவிருப்பதை முன்னறிவிப்புச் செய்வது ஆகும்.[10]

வெட்சிப்போரின்போது செல்லுகின்ற வீரர்களுக்கு ஒரு வேகத்தை, போர் வெறியை ஊட்டுவதற்காக, ‘துடி’ எனும் தோல் கருவியை அடிப்பார்கள். துடி என்பது உடுக்குப் போன்ற வடிவத்தில், ஆனால் பெரிதாக விளங்கிய இருமுகப் பறை ஆகும். இதுவே ஆதித் தமிழ் இசைக் கருவியாகவும் விளங்கியுள்ளது. இந்த ‘துடி’யின் ஓசையைக் கேட்ட வண்ணம் எதிரி நாட்டினை நோக்கி ஆடிக்கொண்டே செல்லுவார்கள். இந்த ஆட்டத்தின் பெயர் ‘துடிக் கூத்து’ ஆகும்.[11]

துடிக்கூத்தினை ஆடிச் செல்பவர் துடியர்கள் என்று அழைக்கப்பட்டனர். எனவே 'துடி' என்ற தோல் கருவியை அடிப்பதன் மூலம் எழுந்த ஓசையை, அதில் உருவான தாளத்தை வைத்து ஆடிச்சென்ற 'துடிக் கூத்தே' தமிழர்களின் முதல் நாடகம் என்று அறிய முடிகிறது.

துடிக்கூத்தினை ஆடிய துடியர்களே தொல்தமிழ்க் குடியினர் என்பது "துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று இந்நான்கு அல்லது குடியும் இல்லை" என்ற புறநானூற்றுப் பாடல் (335) அடிகளால் அறியலாம்.[12]

மேலும் வெட்சிப்போரின்போது துடியர்கள் தங்களுக்குப் பிடித்த பூக்களை தலையில் சூடிக்கொள்ளுதல் வழக்கத்தில் இருந்தது. அவர்களில் போந்தை (பனம்பூ) வேம்பு, ஆர் (ஆத்தி) மலர்களைக் சூடிய மூன்று காலாட்படைப் பிரிவுகள் இருந்தன. அந்த வழக்காறே பின்னர் சேரர், சோழர், பாண்டியர் என்ற அரசகுல மரபுகள் உருவாக வித்திட்டிருக்க வேண்டும் என்று கருதுகிறார் பேராசிரியர் ஷாஜகான் கனி. அவர்களே பிற்காலத்தில் கள்ளர், மறவர், அகப்படையர் எனும் போர்த் தொழிலைச் செய்து வந்த மூன்று இனக்குழுக்கள் ஆயினர்.[13]

இதன் மூலம் தமிழ் நாடகத்தின் பிறப்பிடம் போர்க்களம் என்றும் உலக நாடகத் தோற்றங்களில் தமிழ் நாடகம் காலத்தால் பழமையானது என்றும் அறியப்படுகிறது. இதன் காலம் சுமார் 20,000 ஆண்டுகள் முற்பட்டது என்பது பேராசிரியர் ஷாஜகான் கனி மேற்கொண்ட தொல்காப்பிய ஆய்வின் முடிவுகள் உறுதிப்படுத்துகின்றன.[14]

**துடியர்கள் – கள்ளர்கள்**

'துடியர்களின்' வழி வந்த ஆர் (ஆத்தி) மலர்களைச் சூடும் கள்ளர் பிரிவைச் சேர்ந்த சிவாஜி கணேசனுக்கு வீரபாண்டியக் கட்டபொம்மன் எனும் ஒரு வீரனின் கதை கூறும் 'கட்டபொம்மன்' கூத்தின் மீது ஏற்பட்ட பற்றும் கட்டபொம்மனாகத் தான் நடிக்க வேண்டும் என்ற எண்ணம் வலுப்பெறப் பின்புலமாக இருந்தது. சிவாஜி கணேசனின் அந்த நிலை மானிடவியல் அறிஞர் ரூத் பெனிடிக்ட் உருவாக்கிய 'கலாச்சார வடிவங்கள்' கொள்கைகளுக்கு இணைந்து வருவதை உணரலாம்.

"The life history of the individual is first and foremost an accommodation to the patterns of culture and standards of traditionally handed down in his community.

The careful study of primitive societies is important rather, as we have said, because they provide cultured forms and process. They help us to gauge and understand the immensely important role of culturally conditioned behaviour.[15]

தமிழ் நாடக இலக்கியங்கள்

சிலப்பதிகாரத்தின் உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் சில நாடக மற்றும் நாடக இலக்கண நூல்களைக் குறிப்பிட்டுள்ளார். அவை சயந்தம், செயற்றியம், முறுவல், மதிவாணர் நாடகத் தமிழ்நூல், விளக்கத்தார் கூத்து, செயன் முறை, குணநூல், கூத்தநூல் ஆகும்.[16]

19 ஆம் நூற்றாண்டில் பெரும்பாலான நாடகங்கள் புராணங்களை அடிப்படையாகக் கொண்டவை. இவற்றில் "இரணிய சம்ஹாரம்", "உத்தரராமாயணம்", "மார்க்கண்டேயர்" முதலிய நாடகங்கள் குறிப்பிடத் தக்கவைகளாகும்.

20 ஆம் நூற்றாண்டிலிருந்து இன்றுவரை பெரிய இலக்கியமாக கருதப்படும் நாடகம் "மனோன்மணியம்" ஆகும். ஆங்கிலத்தில் 'Lord Litton' எழுதிய 'The Secret Way' என்ற நாடகத்தின் கதையைத் தழுவிப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளையால் (1855-1897) இயற்றப்பட்ட நாடகம் இது ஆகும்[17]

20 ஆம் நூற்றாண்டில் தமிழ் நாடகக் கலை

பம்மல் சம்பந்த முதலியார்

'தமிழ் நாடகத் தந்தை' என்றும், நாடகப் பேராசிரியர் என்றும் 'தமிழ் மேடை நாடகத்தின் சேக்சுபியர்' என்றும் நாடகக் கலைவாணர்களால் பம்மல் சம்பந்த முதலியார் போற்றிப் பாராட்டப்பட்டார். 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் இரங்கத்தக்க நிலையில் இருந்த தமிழ் நாடகக் கலையைத் தூக்கி நிறுத்தினார். 1891 ஆம் ஆண்டு 'சுகுண விலாச சபா அவரால் துவக்கப்பட்டது.[18]

தமிழ் நாடகக் கலைக்குப் புத்துணர்வும், புதுப்பொலிவு தந்தார் பம்மல் சம்பந்த முதலியார். இதிகாச நாடகங்களையும், புராண நாடகங்களையும், நடத்தி வந்த நாடகக் குழுவினரின் போக்கையும் மாற்றினார். வரலாறு மற்றும் சமூக நாடகங்கள் நடிக்கத் தூண்டுகோலாக இருந்தார்.[19]

பம்மல் சம்பந்த முதலியார் 94 நாடகங்கள் எழுதினார். இவற்றுள் 'மனோகரா' நாடக உலகிலும், திரைப்பட உலகிலும் பெரும் வெற்றி பெற்றது. 'மனோகரா' நாடகம் தமிழ்நாட்டில் இருந்த பல நாடகக் கம்பெனிகளால் பலமுறை நடத்தப்பட்டது. 'மனோகரா' கதாபாத்திரத்தை முதன்முதலாக ஏற்று நடித்தவர் பம்மல் சம்மந்த முதலியார்.[20] அதன் பின் எம்.ஜி. தண்டபாணி, டி.கே. சண்முகம், கே.ஆர். ராமசாமி, எம்.ஜி. இராமச்சந்திரன், சிவாஜி கணேசன், ஆர்.எஸ். மனோகர் (இயற்பெயர் லட்சுமிநாராயணன் 'மனோகரன்' வேடமேற்று நாடகத்தில் நடித்ததால் இவருக்கு இப்பெயர் உண்டாயிற்று) உள்ளிட்டோர் ஏற்று நடித்திருக்கின்றனர்.[21]

தமிழ் நாடக மேடைகளில் பாரசீக நாடகக் குழுவினர் பயன்படுத்திய பக்கத் திரைகளை அறிமுகப்படுத்தினார். அத்துடன் ஒரு காட்சிக்கும் இன்னொரு காட்சிக்கும் விடப்பட்ட இடைவெளிப் பழக்கத்தை மாற்றினார். பாத்திரத்திற்கேற்ற உடையணிந்து வரும் பாரசீக நாடகப் பழக்கத்தை அறிமுகப்படுத்தினார்[22]

'ருக்குமாங்கதா' என்ற ஒரு நாடகத்தை, உரையாடல்கள், பாடல்கள் இன்றி மௌனக் காட்சி வகையை நடத்திக் காட்டினார். நாடக நடிகர்களுக்கு ஒழுக்கமும் கட்டுப்பாடும் இருக்க வேண்டிய அவசியத்தை வலியுறுத்தினார்.[23]

தம் நாடக அனுபவங்களை 'நாடக மேடை நினைவுகள்' எனும் நூலில் எழுதினார். தமிழ் நாடகத் தோற்றத்தை விளக்கும் வகையில் 'நாடகத் தமிழ் என்ற நூலை எழுதினார். நான் கண்ட நாடகக் கலைஞர்கள், என் சுயசரிதம், நடிப்புக் கலையில் தேர்ச்சி பெறுவது எப்படி? முதலிய நூல்களின் மூலம் தன் நாடக அனுபவங்களை வெளிப்படுத்தினார். பம்மல் சம்பந்த முதலியார் தமிழ் நாடகக் கலை வளர்ச்சிக்கு ஆற்றிய தொண்டு தமிழர்கள் என்றும் நினைவில் வைக்கத் தக்கதாகும்.[24]

இந்த நூற்றாண்டில் தமிழ் நாடகக் கலையைப் பேணிக் காத்தவர்களில் முக்கியமானவர் சங்கரதாஸ் சுவாமிகள் ஆவார். (1867-1922). இவர் தனது 16 வயதில் கவி இயற்றும் ஆற்றல் பெற்றார். 24வது வயதில் நாடகத் துறையில் சேர்ந்து நடிகராகவும், நாடகங்களை இயற்றும் திறனும் பெற்றவர். இயல், இசை, நாடகம் என முத்தமிழிலும் முதன்மை பெற்றார்.

1910 ஆம் ஆண்டில் சமரச சன்மார்க்க நாடக சபையை நடத்தினார். பிரபல பாடகர்கள் எஸ்.ஜி. கிட்டப்பா மற்றும் மதுரை மாரியப்பா இவரது மாணவர்களாகும். 1916 ஆம் ஆண்டில் ஜகநாத ஐயர் நடத்திய 'பாலமீன ரஞ்சனி சங்கீத சபையின் ஆசிரியராக விளங்கினார்.[25]

"ஞானப் பழத்தைப் பிழிந்து", "காயாத கானகத்தே நின்றுலாவும் நற்காரிகையே" என்ற பிரபலமான பாடல்களை இயற்றியவர். அப்பாடல்கள் இரண்டும் நாடக உலகிலும், பின்னர் திரை உலகிலும் பிரபலமான பாடல்கள் ஆகும்.[26]

அவர் மொத்தம் 68 நாடகங்களை எழுதியிருந்தாலும், இன்றைக்கு 16 நாடகங்களே கிடைத்துள்ளன. அவற்றில் சத்தியவான் சாவித்திரி, பவளக்கொடி, அல்லி சரித்திரம், அபிமன்யுசுந்தரி, அரிச்சந்திர மயான காண்டம், வள்ளி திருமணம், லவகுச முதலியவை புராண நாடகங்களாகும்.[27]

அவர் எழுதிய இலக்கிய நாடகம் 'கோவலன் சரித்திரம்' ஆகும். இதில் கண்ணகியின் பிறப்பைத் தெய்வப்பிறப்பாக எழுதினார். அதை அடிப்படையாக வைத்து தயாரிக்கப்பட்ட திரைப்படம் பி.யூ. சின்னப்பா, பி.கண்ணாம்பாள் நடித்த **"கண்ணகி"** (1942) ஆகும்.

பிற்காலத்தில் நாடகத் துறையிலும் திரைப்படத் துறையிலும் பிரபலமான எஸ்.ஜி. கிட்டப்பா, டி.கே. சண்முகம் சகோதரர்கள், உடுமலை நாராயண கவி போன்றவர்கள் அவரது குறிப்பிடத்தக்க மாணவர்கள்.[28]

சங்கரதாஸ் சுவாமிகளின் கலையாற்றல் பற்றி மறைந்த நடிகர் டி.கே.சண்முகம் இவ்வாறு குறிப்பிட்டார். 'சுவாமிகள் தாமே நடிப்புச் சொல்லிக் கொடுப்பதை நான் பலமுறை பார்த்திருக்கிறேன். எமதருமன், இரணியன், கடோத்கஜன் முதலிய வேடங்களுக்கு அவரே தாம் நடிப்புப் பயிற்சி அளிப்பார். கம்பீரமான அவரது குரல் வெண்கல நாதம் போல் ஒலிக்கும். ஒரே நாளிரவில் நூற்றுக் கணக்கான பாடல்கள், உரையாடல்களுடன் அடித்தல், திருத்தல் இல்லாமல் எழுதியிருந்த **அபிமன்யு சுந்தரி** நாடகத்தைக் கண்டு எல்லோரும் அதிசயப்பட்டார்கள். ஒரு நாடகத்தை நகல் எடுப்பதற்குகூட ஒருநாள் இரவில் முடியாது. நான்கு மணி நேரம் நடைபெறக்கூடிய நாடகத்தை கற்பனையாகவே ஓர் இரவுக்குள் எழுதி முடித்துவிட்டார் சுவாமிகள். அவரை முருகன் அருள்பெற்ற அருட்பெரும் புலவர் என்றே எல்லோரும் பாராட்டினார்கள்.[29]

திகை சண்முகம்பிள்ளை என்பவர் சங்கரதாஸ் சுவாமிகளின் காலத்தவர். 'சம்பூர்ணராமாயணம்', 'கண்டிராஜா', 'அரிச்சந்திரா' என்ற புராண நாடகங்களைப் படைத்தவர். அவர் எழுதிய நாடகங்களும் பிற்காலத்தில் திரைப்படங்களாகத் தயாரிக்கப்பட்டன.[30]

நாடகத்தின் இலக்கணம் பற்றி **'நாடகவியல்'** எனும் நூலை இயற்றினார் சூரிய நாராயண சாஸ்திரியார். (1870 - 1903) **கலாவதி, ரூபாவதி, மானவிஜயம்** முதலான நாடக நூல்களையும் இயற்றினார். அந்நாடக நூல்கள் வழக்கில் இல்லாத அருஞ்சொற்கள் மிகுந்த தமிழ்நடையில் அமைந்ததால் நடிப்பதற்குரிய நாடகங்களாக அவை அமையவில்லை.[31]

பம்மல் சம்பந்த முதலியாரின் நாடகங்கள் பலவற்றை மக்களறியச் செய்தவர்களில் குறிப்பிடத்தக்கவர் மோசூர் கந்தசாமி முதலியார். அவர் **'நாடக மறுமலர்ச்சித் தந்தை'** என்று தமிழ் நாடக உலகத்தினரால் போற்றப்பட்டார். **'இராஜாம்பாள்', இராஜேந்திரா, 'சந்திரகாந்தா', மோகனசுந்தரம், 'ஆனந்த கிருஷ்ணன்', 'மேனகா'** முதலிய நாவல்களை நாடகமாக அரங்கேற்றினார்.[32]

"வள்ளி திருமணம்", "கோவலன்", "பவளக்கொடி", "ராமாயணம்" போன்ற புராணக் கதைகள் பெரும்பாலான நாடகக் கம்பெனிகளால் நடத்தப்பட்டு வந்த காலத்தில் சமூக நாவல்களை நாடகங்களாக எழுதினார்.[33]

**நாடகக் கம்பெனிகளும் நடிகர்களும்**

1880 ஆம் ஆண்டு தமிழ்நாட்டில் ஆரம்பிக்கப்பட்ட நாடகக் கம்பெனிகளுள் ஒன்றாக விளங்கியது 'ஒரிஜினல் மனமோகன நாடகக் கம்பெனி' யாகும். அதைத் துவக்கியவர் டி.எஸ். கோவிந்தசாமி ராவ் என்பவர் ஆவார்.[34]

அக்காலத்தில் மதுரை நகரம் நாடகங்களின் தாயகமாக விளங்கிய காரணத்தால், பெரும்பான்மையான நாடகக் கம்பெனிகள் 'மதுரை'யின் பெயரை முன்வைத்துத் துவக்கப்பட்டன. 'மதுரை' தத்துவ மீனலோசினி வித்துவ பாலசபாவின் (1918-1922) நாடக ஆசிரியராக விளங்கியவர் சங்கரதாஸ் சுவாமிகள். அந்த நாடக சபாவில் பிற்காலத்தில் 'டி.கே.எஸ். சகோதரர்கள்' என்று நாடக உலகில் பிரபலமாக விளங்கிய டி.கே. சங்கரன், டி.கே. முத்துசாமி, திரைப்பட உலகில் பிரபலமாக விளங்கிய டி.கே. சண்முகம், டி.கே.பகவதி, அவர்களின் தந்தை கண்ணுச்சாமிபிள்ளையும் தன் மகன்களோடு சேர்ந்து நடித்து வந்தார்.[35]

மதுரை ஸ்ரீ பாலசண்முகானந்த சபை டி.கே.சண்முகம் சகோதரர்களால் 1925ல் துவக்கப்பட்டது. இதில் என்.எஸ். கிருஷ்ணன், கே.ஆர்.ராமசாமி, ஏ.பி.நாகராஜன், எஸ்.வி.சுப்பையா, எஸ்.வி. சகஸ்ரநாமம், எஸ்.எஸ். ராஜேந்திரன், பிரண்ட் ராமசாமி, டி.என். சிவதாணு, குண்டு கருப்பையா போன்ற நடிகர்கள் இருந்தனர்.[36] டி.கே. சகோதரர்கள் கம்பெனி ஏற்படுவதற்கு முன்பாக நடிப்பு என்ற சொல்லுக்கே தமிழகத்தில் அர்த்தமில்லை[37]

மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனியில் மோகூர் கந்தசாமி முதலியார், அவரது மகன் எம்.கே. ராதா, பி.யூ. சின்னப்பா, காளி என் ரத்தினம், எம்.ஜி. ராமச்சந்திரன் போன்றவர்கள் தங்களின் நாடக வாழ்க்கையைத் துவக்கினார்கள்.[38]

மதுரை பால மீன ரஞ்சனி சங்கீத சபா எனும் நாடகக் கம்பெனியை ஜெகன்னாத ஐயர் என்பவர் நடத்தி வந்தார், கே. சாரங்கபாணி, நவாப் ராஜமாணிக்கம் பிள்ளை, பி.டி. சம்பந்தம், எம்.எஸ். முத்துக்கிருஷ்ணன், டி.பி.பொன்னுசாமி, எம்.ஆர். ராதா, சிதம்பரம், எஸ். ஜெயராமன், ஏ.எம். மருதப்பா போன்றவர்கள் நடிகர்களாக நடித்தனர்.[39]

இராமநாதபுரம் பால மனோகரா கான பாய்ஸ் கம்பெனியை தெ.பொ. கிருஷ்ணசாமிப் பாவலர் 1920ல் நடத்தி வந்தார். 'தேசியக்கொடி', 'கதரின் வெற்றி', 'பம்பாய் மெயில்' போன்ற புரட்சிகரமான நாடகங்களை நடத்தி வந்தார். தனது குழுவை இங்கிலாந்து நாடு வரை கொண்டு சென்றார்.[40]

மேலும் அக்காலத்தில் பெண்கள் நாடக நடிகைகளாகவும், நாடக சபாக்களின் ஆதரவாளர்களாகவும் விளங்கினர். 'பாலாமணி அம்மாள்' என்பவர் **பாலாமணி அம்மாள்** நாடகக் கம்பெனியை ஆரம்பித்து நடத்தி வந்தார். சாமண்ணா ஐயர் பதினொரு வேடங்களில் நடித்த 'டம்பாச்சாரி' நாடகம் இக்குழுவினரால் நடத்தப்பட்டது.[41] இதுவே தமிழகத்தில் முதன் முதலாக நடத்தப்பட்ட சமுதாய நாடகம்.

கணேசன் நாடக நடிகராகத் தன் கலையுலக வாழ்க்கையைத் துவக்கிய காலத்தில் நாடக நடிகர்களை ஒரு தொழிலும் இல்லாதார் நாடகக்காரரானார் என்று மக்கள் நகையாடி வந்தனர். "கூத்தாடிகள், குடிகாரர்கள் என்ற பெயர்கள் நாடகக்காரர்களுக்கு அடைமொழிகளாயிருந்தன. இளம் பிள்ளைகள் நாடகம் பார்க்க அனுமதிக்கப்படவில்லை. தான் நாடகம் பார்த்ததை மற்றவர்களிடம் சொல்வதற்குகூட வெட்கப்படுவார்கள். நாடகக் கொட்டகைக்கு எதிரிலேயே கள்ளுக்கடை இருக்கும்" என நடிகர் டி.கே. சண்முகம் கூறியுள்ளார்.[42]

**மதுரை ஸ்ரீ பாலகான சபா**

மேற்குறிப்பிடப்பட்டுள்ள நாடகக் கம்பெனிகள் போல் யதார்த்தம் பொன்னுசாமிப்பிள்ளை, பொன்னுச்சாமிப் படையாச்சி மற்றும் கே.டி. சந்தானம் என்ற பாடல் ஆசிரியரும் பங்குதாரர்களாக நடத்திய நாடகக் கம்பெனியின் பெயர் மதுரை ஸ்ரீ பாலகான சபா. இந்தக் கம்பெனி திருச்சியில் முகாமிட்ட சமயத்தில் சிவாஜி கணேசன் நடிகராகச் சேர்ந்தார். அப்போது அக்கம்பெனியில் நடிகர்களாக டி.ஆர். மகாலிங்கம், நடிகவேள் எம்.ஆர். ராதா, 'காகா' ராதாகிருஷ்ணன், கே.வி. சீனிவாசன் ஆகியோர் நடித்து வந்தனர்.[43]

யதார்த்தம் பொன்னுச்சாமிப்பிள்ளைக்கு 'யதார்த்தம்' என்ற பட்டப்பெயர் வந்தமைக்கு ஒரு காரணம் உண்டு. சேலம் மாடர்ன் தியேட்டரில் தயாரிக்கப்பட்டு பி.யு. சின்னப்பா நடித்து 1940ல் வெளிவந்த 'மனோன்மணி' படத்தில் வரும் 'யதார்த்தம்' எனும் கதாபாத்திரத்தில் நடித்தவர் பொன்னுச்சாமி பிள்ளை.[44] அடுத்தவர் வாத்தியார் பொன்னுச்சாமி. மூன்றாமவரான கே.டி. சந்தானம் ஒரு சிறந்த நாடகாசிரியர். கணேசமூர்த்தியாக இருந்த பெயரை வி.சி.கணேசன் என்று மாற்றினார். கணேசனுக்கு இசை மற்றும் வசனம் பேசும் ஆற்றலைக் கற்பித்தார். வசனங்களை எப்படி, ஏற்ற இறக்கத்துடன் பேச வேண்டும் என்ற பயிற்சியை அளித்தார். திரைப்படங்களில் கணேசன் நடித்த **அம்பிகாபதி, பாசமலர்** போன்ற திரைப்படங்களில் இணைந்து நடித்தார். அம்பிகாபதியில் "சிந்தனை செய் மனமே" "வடிவேலும் மயிலும் துணை" என்ற இனிய பாடல்களை எழுதினார்.[45]

**கணேசன் பெற்ற குருகுலப் பயிற்சிகள்**

அக்காலத்தில் நாடகக் கம்பெனியில் சேர்ந்து நடிக்கும் நடிகர்களுக்குக் கடுமையான கட்டுப்பாடுகள் இருந்தன. காலை 7 மணிக்கு எழுந்து குளித்துவிட்டு இறைவழிபாட்டிற்குப் பின், பாட்டு மற்றும் நடனப் பயிற்சிகள் அளிக்கப்பட்டன. மதியம் 12.30 மணிக்கு இறைவணக்கம் பாடியபின் 1 மணிக்கு உணவு. மதிய உணவுக்குப் பின் கண்டிப்பாக அனைவரும் தூங்க வேண்டும். மாலை நாலு மணி முதல் ஐந்து மணி வரை ஒத்திகை பின்பு கொஞ்சம் ஓய்வு, 7 அல்லது 7.30 மணிக்கு உணவு, 9 மணிக்கு நாடகம் நடக்கும் கொட்டகைக்குச் செல்லுதல், 10.30 மணிக்கு நாடகம் ஆரம்பிக்கும். அன்று நடக்க இருக்கின்ற நாடகத்திற்கு வேண்டிய உரையாடல்கள், பாடல்கள் மற்றும் நடனத்திற்கு ஒத்திகை நடக்கும்.

பாட்டுப் பயிற்சி கொடுத்தபின் சரியாகச் சுருதியோடு ராகம் தவறாமல் பாடிக் காட்ட வேண்டும். தவறாகப் பாடியவர்களுக்குப் பாட்டு வாத்தியார் கே.டி. சந்தானம் கடுமையான தண்டனை அளித்தார்.[46] ஒருநாள் தவறாகப் பாடிய அவரை நாடகக் கம்பெனியின் பாட்டு வாத்தியார் கே.டி. சந்தானம் வயிற்றில் உதைத்துத் தள்ளியதையும் அடுத்து வரிசையில் வந்த கணேசன் மிகவும் எச்சரிக்கையோடும், கவனமாகவும் பாடி தண்டனையிலிருந்து தப்பியதை நினைவு கூர்ந்த அவர், பாடலையும் சரி, நடனம், வசனங்கள் போன்றவற்றைத் தவறாமல் செய்யப் பழகியவர் கணேசன் என்றும் கூறினார்.[47]

ஓய்வு பெற்ற காலத்தில் திரைப்படங்களில் பாடல்களுக்கு மிகத் துல்லியமாக வாயசைத்தபோது தொண்டையின் நரம்புகள் புடைத்தெழுவது போல் நடித்த ரகசியம் பற்றி சிவாஜி கணேசனிடம் கேட்டபொழுது,

> "சிறுவயதிலிருந்து தான் முறைப்படி இசையைக் கற்றுக்கொண்டதையும், முறைப்படி நடனம் கற்றுக்கொண்டதையும் குறிப்பிட்டு அதனால் பாடல்களுக்கு வாயசைக்கும்போது அதே சுருதியில் தானும் பாடியதால் தானே பாடியதுபோல் திரையில் காட்சியளித்ததாக" கூறினார்.[48]

பிற்காலத்தில் 'சிம்மக்குரலோன்' என்ற பெயர் தனக்கு வந்ததற்கான அடிப்படைக் காரணமாக இருப்பது நாடகக் கம்பெனியில் குரல் பயிற்சியை ஒரு யோகா மாதிரி செய்து பழகியதையும் குறிப்பிட்டார்.[49]

பிற்காலத்தில் **'பாசமலர்'** படப்பிடிப்புத் தளத்தில் அதன் வசனகர்த்தா ஆரூர்தாசிடம் சிவாஜி கணேசன் அந்தப்படத்தில் அவரின் நண்பராக நடித்த கே.டி. சந்தானத்தை சுட்டிக்காட்டி, நாடக உலகில் இவரிடம் வசனங்களை மறந்தபோதும், பிழையாக உச்சரித்தபோதும் வாங்கிய அடிகள்தான் தனக்கு வசனங்கள் பேசுவதில் தனித்திறமை பெற உதவியாக இருந்தது என்று கூறினார்.[50] ராமசுப்பையா கம்பெனியில் வசனப் பயிற்சியின்போது தான் வெறும் உடம்பில் பிரம்படி பட்டதைக் கணேசன் உறுதி செய்தார்.[51]

## கடுமையான விதிகள்

நாடகக் குழுக்களில் கடுமையான விதிகளும் கட்டுப்பாடுகளும் இருந்தன. ஒரு நடிகர் நினைத்த நேரத்தில் சொந்த ஊருக்குச் சென்று வர அனுமதி மறுக்கப்பட்டது. கடிதப் போக்குவரத்துகளுக்குக் கடுமையான தணிக்கை விதிகள் விதிக்கப்பட்டிருந்தன. நடிகர்களின் வீட்டிலிருந்து வரும் கடிதங்கள் முதலாளிகள் படித்த பிறகே நடிகர்களிடம் வந்து சேர்ந்தன.

நடிகர்களின் அம்மா, அப்பா உடன் பிறந்தவர்களுக்கு உடல்நலம் சரியில்லை என்ற செய்தியோ அல்லது மரணச் செய்தியோ வரும் சமயத்தில் அந்த நடிகருக்குத் தெரிவிக்கப்படமாட்டாது. அதற்குக் காரணம் ஒரு நடிகர் குறைந்தாலும் அன்று நாடகம் நடத்துவது என்பது கேள்விக்குரியாகிவிடும். இதுவே காரணமாகக் கூறப்பட்டு வந்தது. அதிலும் நாடகத்தில் முக்கிய வேடங்கள் போடும் நடிகருக்கு அந்த விதிகள் மிக மிக கவனமாகவும் கடுமையாகவும் நடைமுறைப்படுத்தப்பட்டது.

சிவாஜி கணேசனின் மூத்த சகோதரர் திருஞானசம்பந்தமூர்த்தியின் மரணச் செய்தி நீண்ட நாட்களுக்குப் பின் கணேசனுக்குத் தெரிந்தது. அதுவும் சக நடிகர் காகா ராதாகிருஷ்ணன் விடுமுறைக்குச் சென்று வந்து கூறினார். செய்தி கிடைத்தவுடன் கணேசன் கம்பெனி நிர்வாகிகளிடம் ஊருக்குச் சென்றுவர அனுமதி கேட்டபோது அனுதாபம் கிடைத்தது ஆனால் அனுமதி மறுக்கப்பட்டது.

இதைத் தொடர்ந்து அவரது மற்றுமொரு சகோதரர் கனகசபாநாதரும் இறந்துவிட்டார். அனுமதி கிடைக்கவில்லை. அதற்கு முக்கிய காரணம் கணேசன் ஒரே நாடகத்தில் பல வேடங்கள் போட்டு நடிக்கும் முக்கிய நடிகராக அன்றைய தினம் விளங்கினார்.[52]

நாடகக் கம்பெனியில் சேர்ந்து ஐந்து வருடங்களுக்குப் பின் கிடைத்த விடுமுறையில் வீட்டிற்குச் சென்றபின்தான் தன் சகோதரர்கள் இருவர் இறந்தது குறித்துத் துக்கமும், தனக்கு ஓர் தம்பியும், தங்கையும் பிறந்திருக்கிறார்கள் என்பதை அறிந்து மகிழ்ந்தார்.[53]

இதுபோன்ற பிரச்சனைகள் நாடகத்திலும் பின்பு திரைப்படத்திலும் சிறப்பான இடம் பெற்ற டி.கே. சண்முகம் மற்றும் எம்.ஜி. இராமச்சந்திரன் இருவருக்கும் ஏன் ஏற்படவில்லை எனும் காரணங்களையும், அவர்களது நாடக அனுபவங்களையும் இங்கு ஒப்பிட்டு நோக்குதல் மூலம் அறிவது அவசியமாகிறது.

தனது ஐந்தாவது வயதிலேயே பள்ளிப்படிப்பை நிறுத்திவிட்டு நாடக மேடையில் தோன்றியவர் சண்முகம். சங்கரதாஸ் ஆசிரியராக விளங்கிய மதுரை தத்துவ மீனலோசினி வித்துவ பால சபாவில், தன் தந்தை கண்ணுச்சாமி பிள்ளை, தாயார் சீதையம்மாள், சகோதரர்கள் சங்கரன், முத்துசாமி, பகவதி என குடும்பத்துடன் நாடகக் கம்பெனியின் வீட்டிலிருந்தபடியே தன் நாடக வாழ்க்கையைத் துவக்கினார். தன் குடும்பத்தினரோடு, தாயாரின் அரவணைப்பில் அவரின் கைப்பக்குவத்தில் உணவு உண்டு, தந்தையின் கண்காணிப்பில் நடிக்கத் தொடங்கினார். தன் வீட்டில் நடந்த இன்ப, துன்ப, நிகழ்ச்சிகளுக்குப் பங்கேற்பதில் சண்முகத்திற்கு எந்த இடையூறும் ஏற்படவில்லை. இதனால் இவர் ஏற்றுக்கொண்ட வேடங்களில் கவனம் செலுத்தி நடித்தார்.[54]

எம்.ஜி. ராமச்சந்திரனின் நாடக வாழ்வை எடுத்துக்கொண்டால் தனது ஏழாவது வயது முதல் நாடக வாழ்க்கையைத் துவக்கினார். இவருடன் நாடகத்தில் நடிக்க வந்தவர் இவரது சகோதரர் சக்கரபாணி ஆவார். தந்தையையும் தனது சகோதரியையும் இளவயதிலேயே பறிகொடுத்தார் ராமச்சந்திரன். இவரது தாயார் சத்தியபாமா தன் மகன்கள் நடிக்கும் நாடகக் கம்பெனியில் கொடுக்கப்படும் உணவு, வேடம், சம்பளம் மற்றும் வேறு எந்தப் பிரச்சனைகள் வந்தாலும், அந்தக் கம்பெனியின் முதலாளிகளிடம் நேருக்கு நேர் வாக்குவாதம் செய்து அவற்றைச் சரி செய்துவிடும் மனத்திண்மை, வைராக்கியம் போன்ற தன்மை உடையவராக இருந்தார்.[55]

ராமச்சந்திரன், சக்கரபாணி உரிய பருவம் வந்து தங்களுடைய பிரச்சனைகளைத் தாங்களே பார்த்துக்கொள்ளும் காலம் வந்த பிறகும், ஒரு ராஜதந்திரிபோல் அரிய யோசனைகள், அறிவுரைகள் வழங்கித் தன் மகன்களின் நடிப்புலக வாழ்க்கையை சத்தியபாமா செம்மைப்படுத்தினார்.[56]

சண்முகம் மற்றும் இ.ராமச்சந்திரனின் நாடக வாழ்வுச் சூழ்நிலைகளுக்கு நேர் எதிர் ஆனது கணேசனின் நாடக வாழ்வு. தாயின் அன்பு, தந்தையின் அரவணைப்பு, சகோதரர்களின் பாசப்பிணைப்பு இவற்றை உதறித் தள்ளி நடிக்க வந்தார் சிவாஜி கணேசன். நடிப்பது ஒன்றே தன் மூச்சு என்ற குறிக்கோளைக் கொண்டு, மிகக் குறுகிய காலத்தில் ஒரே நாடகத்தில் பல வேடங்கள் ஏற்று நடிக்கும் ஆற்றலை வளர்த்துக்கொண்டார்.

இந்தச் சூழ்நிலையில் தனது நடிப்புத்திறமையை வளர்த்துக் கொண்டு கதாநாயகன் ஆக வேண்டும், கட்டபொம்மனாக ஆகவேண்டும் என்ற தனது லட்சியம் நிறைவேற வேண்டும் என்பதற்காகத்தான் இந்தக் கஷ்டங்களை எல்லாம் அனுபவித்ததாகத் தனது சுயசரிதையில் குறிப்பிட்டார்.[57]







அன்றைய காலக் கட்டத்தில் நாடகக் கம்பெனிகளின் வருமானத்தைப் பொறுத்துத்தான் நடிகர்களின் உணவுகளின் தரம் இருந்தது. நன்றாக நடிக்கவும், பாடவும், வசனங்கள் பேசினாலும் இது மாறாமல் இருந்தது. கணேசன் சேர்ந்திருந்த நாடகக் கம்பெனியில் அன்றையச் சூழ்நிலையில் சாப்பாட்டிற்கு ஒரு ரசம் அல்லது மோர், தொட்டுக்கொள்ள ஒரு அப்பளம் ஆகியன வழங்கப்பட்டன. அப்பொழுது கணேசன் நாடகத்தில் பல வேடங்களை ஏற்றுத் திறம்பட நடித்தார்.[58] திண்டுக்கல்லில் முகாமிட்டுப் பின் பழனியில் முகாம் முடிந்தபின் மதுரை சென்ற பிறகுதான் கணேசன் முழுவேளைச் சாப்பாடு சாப்பிட்டார்.[59] மதுரையில் கம்பெனியின் 'கிருஷ்ணலீலா' நாடகம் நாளொன்றுக்கு இரண்டு காட்சிகள் வீதம் மூன்று மாத காலம் நடந்த காரணத்தால் கம்பெனி நிர்வாகத்தினர் உணவுக்காகத் தாராளமாகச் செலவு செய்தனர்.[60]

**முதல் மேடை முதல் வெற்றி**

பாடல், நடனம், குரல் இவற்றில் பத்து நாட்களுக்குள் பயிற்சி எடுத்துப் பழகிய கணேசனுக்கு முதன்முதலாக நாடகத்தில் கிடைத்த வேடம் பெண் வேடம். இராமாயணத்தில் 'சீதா' வேடம்.[61]

திண்டுக்கல்லில் தனக்கு ஏற்பட்ட முதல் மேடை அனுபவத்தைக் கணேசன் இவ்வாறு குறிப்பிட்டார். "சீதையாக அலங்கரிக்கப்பட்டேன். என் மனதிற்குள்ளே கடவுளை வேண்டிக்கொண்டேன். திரை தூக்கப்பட்டுவிட்டது. கடவுளையும் என் குருநாதரையும் மனதில் நினைத்துக்கொண்டு மேடைக்குள் நுழைந்தேன். போட்டிருந்த வேடம், என் பாவனை, வேடத்திற்கு வேண்டிய உணர்ச்சி, நடிப்பு இவை மட்டும்தான் என் கவனத்திலும், கண் முன்னும் வந்து நின்றன. மேலும் கணேசன் பின்வருமாறு பாட்டுப் பாடினார்.

"யாரென இந்தப் புருஷனை அறிகிலேனே, என் ஆசைக்கினிய என் முன்னே நின்றவன்"

இதற்கு ராமன்

"திருவோ மலர் வாழ் உருவோ
எனக்கிசைந்த தேனோ"

மீண்டும் சீதையாக நின்ற சிவாஜிகணேசன்,

"உருவாய் எழுதும் சித்திரம்
உயிர் பெற்று எழுந்தாற்போல உன்னதமாகவே என் முன்
நிற்பது எனது மாதவமோ"

என்ற பாட்டைப் பாடி, அதற்கேற்றவாறு நடனமாடினார். அதற்கு அவருக்குப் பயிற்சி அளித்த பொன்னுசாமிப் படையாச்சி "ரொம்ப நல்லா செஞ்சுட்டேடா" என்று முதுகில் தட்டிக்கொடுத்தார் என்று சிவாஜி கணேசன் குறிப்பிட்டார்.[62]

**ஒரே நாடகத்தில் பல வேடங்கள்**

இராமாயண நாடகத்தில் சீதை, பரதன், சூர்ப்பனகை, இந்திரஜித் என்ற நான்கு வேடங்கள் போட்டு, ஒவ்வொரு வேடத்திற்கும் உரிய வசனங்கள், வேறுபட்ட அங்க அசைவுகள் கொடுத்து நாடகக் கம்பெனியில் சிறந்த நடிகன் என்ற பெயர் எடுத்தார் கணேசன். சிவாஜி கணேசன் இல்லாமல் ஒருநாள்கூட நாடகம் நடத்த முடியாது. அந்த அளவிற்கு ஒரு முக்கிய நடிகராக அந்த நாடகக் குழுவில் அவர் விளங்கினார்.

**பல ஊர்களில் முகாம்**

மதுரை ஸ்ரீ பாலகான சபாவில், திருச்சியில், தன்னை நடிகராக இணைத்துக் கொண்ட வி.சி. கணேசன், அதன்பின் திண்டுக்கல், பழனி, மதுரை, மேலூர், பரமக்குடி, சேலம், நாமக்கல், குமாரபாளையம் போன்ற ஊர்களில் முகாமிட்டு நாடகங்களை நடத்தியபோது பல புராண, இதிகாச, சமூக நாடகங்களில் ஒன்றுக்கும் மேற்பட்ட பல வேடங்கள் ஏற்றுத் தன் திறமையைக் கொஞ்சம் கொஞ்சமாக வெளிப்படுத்தினார்[63] நாமக்கல்லில் சி.எஸ். சாமண்ணா ஐயர் நடித்த 'டம்பாச்சாரி' எனும் நாடகத்தைப் பார்த்தார். அதில் ஐயர் ஏற்று நடித்த நாவிதர், தவசிப்பிள்ளை, டாபர்மாமா, எஞ்சினீயர், தமிழ்ப்புலவர், கோமுட்டிச்செட்டியார், ஷேக்மீரா லெப்பைடு, அமீனா, வக்கீல், அப்பர்சாமிகள், சட்டிப்பரதேசி எனும் 11 வேடங்களை என்றாவது ஒருநாள் தன் வாழ்வில் நடிக்க வேண்டும் என்ற உறுதி பூண்டார்.[64] அதுவே பிற்காலத்தில் 'நவராத்திரி' எனும் திரைப்படம் உருவாகக் காரணமாயிற்று எனலாம்.

**மறுபிறப்பு**

குமாரபாளையத்தில் பவானி ஆற்றில் சக நடிகர்களுடன் குளித்துக் கொண்டிருக்கும்போது வெள்ளம் அதிகமாகி நீருடன் அடித்துச் செல்லப்பட்டபோது ஊர்க்காரர்களால் காப்பாற்றப்பட்டார். இது கணேசனுக்கு மறுபிறப்பு ஆகும்.[65]

**வீட்டில் சோகமும் மகிழ்ச்சியும்**

1940ல் பொள்ளாச்சியில் கணேசன் நடித்த நாடகக் குழு முகாமிட்டிருந்த வேளையில் தீபாவளியை முன்னிட்டு அனுமதி பெற்றுத் திருச்சி சங்கிலியாண்டபுரம் வந்து சேர்ந்தார். வீட்டைவிட்டு வெளியேறி ஐந்து வருடங்கள் கழித்துத் தனது பன்னிரெண்டாவது வயதில் இறந்துவிட்டதாகக் கருதிய காலத்தில் வீட்டிற்கு வந்த மகன் கணேசனை பார்த்த அவரது தாயார் கண்ணீர் விட்டுக் கதறி அழுதார். அவர் மனதிற்கு மகிழ்ச்சி தந்தவை அவரது தம்பி சண்முகமும், தங்கை பத்மாவதியும்தான். தாய், தந்தை, அண்ணன் தங்கவேல், தம்பி, தங்கையோடு தீபாவளி கொண்டாடி மகிழ்ந்தார்[66]

**எம்.ஆர். ராதாவின் நாடகக் கம்பெனி**

திருச்சி சங்கிலியாண்டபுரம் வந்து கணேசனைத் தனது கம்பெனியில் சேரும்படி நடிகவேள் எம்.ஆர். ராதா விடுத்த வேண்டுகோளை ஏற்று அவரது கம்பெனியில் சேர்ந்தார். ராதாவோடு முதல்முதலாக சென்னைக்கு வந்தார். இக்கால கட்டத்தில் நடிகவேள் எம்.ஆர். ராதாவின் நாடக கம்பெனியான 'சரஸ்வதி கானசபா' மற்றும் 'திராவிட மறுமலர்ச்சி' நாடக சபாக்களில் **'பம்பாய் மெயில்'**, **'இழந்த காதல்'**, **'கண்டிராஜா'**, **'விமலா அல்லது விதவையின் கண்ணீர்'**, **'லட்சுமிகாந்தன்'**, **'சூதாடி அல்லது வைஸ்ராய் சப்'** போன்ற சமூக நாடகங்களில் கணேசன் நடித்தார்.[67]

எம்.ஆர். ராதாவின் நாடகக் கம்பெனியில் நாடகங்களுக்கு மதிப்பு குறைந்து நஷ்டம் ஏற்பட்டு மூடவேண்டிய நிலை ஏற்பட்டது. அப்போது கிருஷ்ணபிள்ளை என்பவரின் தலைமையில் உருவாக்கப்பட்ட நாடகக் குழுவில் கணேசன் சேர்ந்தார். இந்த நாடகக் குழு பாலக்காடு, நம்மாரா, வில்லங்கி, கொல்லங்கோடு போன்ற இடங்களில் நடத்திய நாடகங்களில் கணேசன் நடித்தார்.[68]

**ராஜபார்ட் வேடமும் வெள்ளித்தட்டும்**

கொல்லங்கோட்டில் 'மனோகரா' நாடகத்தில் மனோகரனாக நடிக்கும் வாய்ப்பு கணேசனுக்கு கிடைத்தது. தினந்தோறும் மனோகரா நாடகத்தை பார்த்த கொல்லங்கோடு மகாராஜா கணேசனின் நடிப்புத்திறமைக்கு ஒரு வெள்ளித்தட்டைப் பரிசாக அளித்தார். சில மாதங்களில் நாடகங்கள் சரிவர நடக்காமல் அதனால் ஏற்பட்ட நஷ்டத்தால் நாடகக் கம்பெனியின் முதலாளிகளால் நடிகர்களின் உணவுப் பிரச்சனையைச் சமாளிக்க அந்த வெள்ளித்தட்டு விற்க வேண்டிய நிலை ஏற்பட்டது.[69]

மேலும் ஒரு மாத காலம் நாடகம் நடத்தப்படவில்லை. அப்போது சக நடிகர்களே பட்டினி கிடக்கும் நிலை ஏற்பட்டபோது இரவு நேரங்களில் நாடகம் நடந்த ஊரின் தோட்டத்துப் பகுதியில் சேனைக் கிழங்கினைச் சாப்பிட்டுத் தன் பசியைப் போக்கிக்கொண்டார். இந்தச் சூழ்நிலையைப் பற்றி "ஊரைச்சுற்றி, வயல்காட்டில் தோட்டத்துப் பகுதியில் சேனைக்கிழங்கு விளைந்திருக்கும். அவற்றையெல்லாம் தோண்டி எடுத்து, அதை வேக வைத்து, உப்புப் போட்டுச் சாப்பிட்டோம். சாப்பாடு இல்லை." என்று பிற்காலத்தில் குறிப்பிட்டார்.[70]

**வீட்டிற்குத் திரும்ப முடிவு**

பல நாட்கள் நாடகங்கள் நடத்த முடியாத சூழ்நிலை நிர்வாகத்திற்கு ஏற்பட்டது. கையிலே பணமில்லாமல் பட்டினியாக இருந்த கணேசன் வீட்டிற்குத் திரும்ப முடிவெடுத்தார். அப்போது உடன் நடித்த நண்பர் தங்கவேலுவின் தாயார் வந்திருந்தார். இவர்கள் சேனைக் கிழங்கை வேகவைத்துச் சாப்பிட்டதை அறிந்ததும் தன் மகனை அழைத்துக்கொண்டு கிளம்பினார். கணேசனும் அவர்களோடு சேர்ந்து புறப்பட்டார். கையில் பணம் இல்லாத நிலையில் பாலக்காட்டிலிருந்து காட்டு வழியில் 40 மைல்கள் தொலைவில் உள்ள பொள்ளாச்சி நோக்கி மலைச்சரிவில் நடந்தார்கள். சிறிது நேரத்தில் இடியுடன் கூடிய மழை வந்தது. அப்போது, கணேசனின் நண்பன் தங்கவேலுவைப் பாம்பு கடித்துவிட்டது. கணேசன் நண்பனைத் தூக்கிக்கொண்டு, நடிகர்களுக்குரிய சிறிய இரும்புப் பெட்டியையும் சுமந்துகொண்டு நடந்து ஒரு கிராமத்தை அடைந்து அங்கு சிகிச்சை அளிக்க ஏற்பாடு செய்து தங்கவேலுவைப் பிழைக்க வைத்தார். இரண்டுநாள் ஓய்வுக்குப்பின் பொள்ளாச்சி சென்றடைந்தனர்.[71] பின் போத்தனூர் சென்று தெரிந்த நண்பர் மூலம் வேறு பலரையும் சேர்த்துக்கொண்டு ஒரு நாடகம் நடத்தித் தானும் நடித்து அதன் மூலம் கிடைத்த பணத்தை வைத்துப் பேருந்தில் திருச்சி போய் சேர்ந்தார்.[72]

### பேருந்து பழுது பார்க்கும் தொழிலாளி கணேசன்

திருச்சி வந்து சேர்ந்த கணேசன் திருச்சி ஸ்ரீரங்கம் டிரான்ஸ்போர்ட் கம்பெனியில் மாதம் ஏழு ரூபாய் சம்பளத்துக்குப் பேருந்தினைப் பழுது பார்க்கும் வேலையில் சேர்ந்தார். ஆனால் மனதிற்குள் காலம் கனியும் என்று காத்து இருந்தார்.[73]

### மீண்டும் நாடகத்தில் கணேசன்

கும்பகோணத்தில் அப்போது டி.கே. சம்பங்கி, எம்.இ. மாதவன் என்ற இரு புகழ்பெற்ற நாடக நடிகர்கள் பொன்னுச்சாமி பிள்ளையின் மதுரை ஸ்ரீ'பாலகான சபா கம்பெனியை விலைக்கு வாங்கி **"மதுரை ஸ்ரீ மங்கள கான சபா"** என்ற பெயரில் நாடகம் நடத்திக் கொண்டிருந்தனர். அதில் நடித்துக் கொண்டிருந்த கணேசனின் பழைய நண்பர்கள் அவரை வற்புறுத்தி மீண்டும் நடிக்க அழைத்தார்கள்.[74]

இதற்கு அனுமதி அளிக்க ராஜாமணி அம்மாள் மறுத்தார். கணேசன் தன் தாயாரிடம் "எனக்கு நல்ல நம்பிக்கை இருக்கிறது. எனக்கு ஆசீர்வாதம் தந்து அனுப்புங்கள்" என்று வேண்டினார். ராஜாமணி அம்மாள் 'தன் மகன் மீண்டும் நாடகத்தில் நடிக்க ஆசைப்படுகிறான், மீண்டும் கஷ்டப்படுவானே என்று தஞ்சை மாரியம்மனை வேண்டி என் மகன் கணேசனை நீ பெரிய ஆளாக்க வேண்டும். அவனின் நடிப்பிலே கொண்ட வெறிக்கு நீதான் வழி வகுக்க வேண்டும் என்று மனதுக்குள் வேண்டுதலை வைத்துக்கொண்டு ஆசீர்வாதம் தந்து அனுப்பினார்.[75] பிற்காலத்தில் சிவாஜி கணேசன் பெரிய நடிகராக வந்தபின் தன் தாயாரின் வேண்டுதலை நிறைவேற்றத் தஞ்சை மாரியம்மன் கோயிலுக்கு **வெள்ளையம்மாள்** என்ற பெயருடைய ஒரு யானையை பரிசளித்தார்.[76] (சமீபத்தில் அந்த யானை இறந்துவிட்டது) தாயாரின் அனுமதி கிடைத்து கும்பகோணம் சென்று 'மங்களகான சபா'வில் நடிக்க ஆரம்பித்தார்.[77]

கும்பகோணத்தில் நாடகம் நடத்திக் கொண்டிருந்த 'மங்கள கான சபா' சென்னை வந்தடைந்தது. 'லட்சுமி காந்தன்' நாடகத்தை மங்களகான சபாவினர் சென்னையில் நடத்தினர். 'லட்சுமி காந்தன்' என்பது ஒரு பத்திரிகையாளர் பெயர். அவர் சமூகத்தில் புகழ் பெற்றவர்களின் அந்தரங்க வாழ்க்கைகளை தமது **"இந்து நேசன்"** என்ற பத்திரிக்கையில் எழுதி அதன் மூலம் பிரபலமானவர்.

அதனால் பிரபலமான அவர் பெயரை வைத்து நாடகம் நடத்தினர். நன்றாக நடந்து கொண்டிருந்த 'மங்கள கான சபா'வின் நாடகங்களைச் சிறிது நாட்களில் மக்கள் விரும்பிப் பார்க்கவில்லையாதலால் வருமானம் குன்றி மங்கள கான சபாவும் நஷ்டத்தில் இயங்கத் தொடங்கியது.[78]

**என்.எஸ்.கே. நாடகக் கம்பெனியில் கணேசன்**

'மங்கள கான சபா'வின் கஷ்ட காலத்தை அறிந்த என்.எஸ். கிருஷ்ணன் அதை விலைக்கு வாங்கி என்.எஸ்.கே. நாடகக் கம்பெனி என்ற பெயர் வைத்து நாடகங்களை நடத்தினார். இந்த நாடகக் குழுவில் கே.ஆர்.ராமசாமி, டி.வி. நாராயணசாமி போன்ற நடிகர்கள் சேர்ந்து நடித்தனர். இவர்கள் அவ்வமயம் திரைப்படங்களிலும் நடித்துக் கொண்டிருந்தனர். என்.எஸ்.கே. நாடகக் கம்பெனியில் **'ரத்னாவளி'**, **'மனோகரா'** போன்ற நாடகங்கள் நடத்தப்பட்டன. இக்குழுவினர் நடத்திய **'மனோகரா'** நாடகத்தில் மனோகரனின் தாய் பத்மாவதி வேடத்தில் கணேசன் நடித்தார்.[79]

ஒருநாள் பத்மாவதி பாத்திரத்தில் நடித்த கணேசனின் நடிப்பாற்றலை பார்த்த அவ்வை டி.கே. சண்முகம், "அன்று மனோகரனின் தாயார் பத்மாவதியாக நடித்த இளைஞரின் நடிப்பு என்னை மிகவும் கவர்ந்தது. 1922 முதல் 1946 வரை தொடர்ந்து மனோகரன் பாத்திரத்தை ஏற்று நடித்து வந்திருக்கிறேன். ஆண்களும், பெண்களுமாக எத்தனையோ நடிக-நடிகையர் என்னுடன் பத்மாவதியாக நடித்திருக்கிறார்கள். ஆனால் அன்று பத்மாவதியாக நடித்த அந்த இளைஞரைப்போல் அவ்வளவு நுணுக்கமாகவும், திறமையாகவும் யாருமே நடித்ததில்லையென உறுதியாகக் கூறலாம். அன்றுதான் முதல் முறையாக கணேசனின் நடிப்பைப் பார்த்தேன். நாடகம் முடிந்ததும் கே.ஆர். ராமசாமியிடம் "இந்த இளைஞர் விரைவாக முன்னுக்கு வரக்கூடியவர். இவரை விட்டுவிட வேண்டாம்" என்று கூறியதாகத் தன் நூலில் பதிவு செய்தார்.[80]

இந்தச் சமயத்தில் 'லட்சுமிகாந்தன்' என்ற பத்திரிகையாளரின் கொலை வழக்குச் சம்பந்தமாக என்.எஸ். கிருஷ்ணன், சென்ட்ரல் ஸ்டுடியோ அதிபர் ஸ்ரீராமுலு நாயுடு மற்றும் எம்.கே. தியாகராஜ பாகவதரோடு டிசம்பர் 29, 1945ல் கைது செய்யப்பட்டுச் சிறை சென்றார்.[81]

**அண்ணாத்துரையிடம் தங்கிய கணேசன்**

என்.எஸ். கிருஷ்ணன் சிறை சென்றபின் நாடகக் கம்பெனியின் நிர்வாகம் நடிகர் எஸ்.வி. சகஸ்ரநாமத்திடம் ஒப்படைக்கப்பட்டது. இதனால் கோபம் கொண்ட கே.ஆர். ராமசாமி, கணேசனைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு காஞ்சிபுரத்தில் இருந்த அண்ணாவின் **'திராவிட நாடு'** பத்திரிகை அலுவலகத்தில் தங்க வைத்தார்.[82]

அண்ணாவின் **'திராவிட நாடு'** பத்திரிகை அலுவலகத்தில் தங்கியிருந்த கணேசன், அண்ணா எழுதும் கட்டுரைகள், கதைகள், நாடகங்கள் இவற்றைப் படித்துப் பக்கம் குறித்து வைப்பது, அண்ணாவின் மாட்டு வண்டியைப் பராமரிப்பது போன்ற வேலைகளைச் செய்து வந்தார்.[83]

1945 ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 15 ஆம் நாள் திராவிடர் கழகத்தின் ஏழாவது சுயமரியாதை மாநாடு சென்னையில் நடைபெற ஏற்பாடுகள் நடந்தன.[84] அந்த மாநாட்டில் **'சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்'** எனும் நாடகத்தை அண்ணா எழுதி அதில் நடிகர் எம்.ஜி. ராமச்சந்திரன் மராட்டிய வீரர் சிவாஜியாக நடிப்பதற்குச் சம்மதித்தார்.[85]

"அண்ணா எழுதிய வசனங்களில் சில மாற்றங்களைச் செய்து தருமாறு இராமச்சந்திரன் கேட்க அதற்கு அண்ணாவும் சம்மதித்தார். மாநாட்டு ஏற்பாடு வேலைகளில் அண்ணா மூழ்கிவிட்டதால், அண்ணாவின் அனுமதியோடு இயக்குநர் ஏ.எஸ்.ஏ. சாமியிடம் வசனங்களை மாற்ற முற்பட்டார் ராமச்சந்திரன் ஆனால் இராமச்சந்திரனின் சகோதரர் சக்கரபாணி அண்ணாவின் வசனங்களை மாற்றுவது மரியாதை இல்லை. எனவே நீ இந்த நாடகத்தில் நடிக்க வேண்டாம் என்று கூறினார். அவரும் நடிக்கவில்லை.[86] மிகவும் இக்கட்டான சூழ்நிலையில் அண்ணா கணேசனை மராட்டிய வீரர் சிவாஜியாக நடிக்கச் சொன்னார். அதற்கு கணேசன் தன்னால் இந்தப் பாத்திரத்தில் நடிப்பது இயலுமா என்று தயக்கத்துடன் பதில் கூறினார்.[87] ஆனால் அண்ணாவோ கணேசனைப் பார்த்து உன்னால் முடியும் இந்த வசனங்களைப் படித்து வைத்திரு என்று கூறி, தான் எழுதிய 90 பக்க வசனங்கள் அடங்கிய தொகுப்பைக் கையில் கொடுத்துவிட்டுச் சென்றார்.

ஏழு மணி நேரங்களுக்குப் பின் வந்து அண்ணாத்துரை கணேசனிடம் வசனங்களைப் படித்தாயா என்று கேட்டார். உடனே கணேசன் அவரை ஒரு நாற்காலியில் அமரச் சொல்லிவிட்டு மராட்டிய வீரர் சிவாஜி பேச வேண்டிய 90 பக்க வசனங்களைப் பேசி நடித்துக் காட்டினார். ஆச்சரியப்பட்டு, "ஏழே மணி நேரத்தில் மனப்பாடம் செய்துவிட்டாயே கணேசா நீதான் சிவாஜி" என்று அண்ணா பாராட்டினார்.[88]

**‘சிவாஜி’ என்ற பட்டம்**

எம்.ஜி. ராமச்சந்திரனுக்காகத் தைக்கப்பட்ட நாடக உடைகளை மிகவும் மெலிந்த உடல்வாகு கொண்டிருந்த கணேசனுக்காக மாற்றம் செய்யப்பட்டது. தேவைப்பட்ட இடத்தில் பஞ்சை வைத்துத் திணித்துச் சரி செய்தனர்.[89] இந்த நாடகத்தில் ‘காகபட்டர்’ என்ற பாத்திரத்தில் சி.என். அண்ணாத்துரை நடித்தார். நாடகம் நடைபெற்றது. பொதுவாக ஈ.வெ.ராமசாமி கூத்து, நாடகம், ஆட்டம் போன்ற கலைகளை ஒதுக்கும் மனோபாவம் உடையவர். “இந்தக் கலைகளையெல்லாம் தூக்கி எறியுங்கள், நீங்கள் யாரென்று உணர்ந்து கொள்ளுங்கள், எழுந்து நில்லுங்கள் என்று தன் சுயமரியாதைக் கொள்கையை முழக்கம் செய்தவர் ஈ.வெ. இராமசாமி. மராட்டிய சிவாஜியாக நடித்த கணேசனின் நடிப்பை ரசித்துப் பார்த்த ஈ.வெ. இராமசாமி நாயக்கர் ‘சிவாஜி’ என்ற பட்டத்தைத் தந்தார். வி.சி. கணேசனை இனிமேல் சிவாஜி கணேசன் என்று அழைக்க வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். இது கணேசனின் வாழ்வில் ஏற்பட்ட ஒரு திருப்புமுனையாகும். அந்த நாடகத்தில் சிவாஜிகணேசன் அணிந்து நடித்த உடைகள் ரூ.600க்கு ஏலத்தில் விடப்பட்டது.[90]

ஈ.வெ. இராமசாமியின் பாராட்டும், அளித்த பட்டமும் கணேசனை அவரையறியாமல் பகுத்தறிவுக் கொள்கைகளில் தன்னை ஆட்படுத்திக் கொள்ள வைத்தது. அண்ணாவுடன், அவர் சென்ற அரசியல் கூட்டங்களுக்கெல்லாம் சிவாஜி கணேசனும் கலந்துகொண்டு பேசினார்.[91] ஆனால் அண்ணாதுரை “சிவாஜி நீ நடிக்கப் பிறந்தவன். அரிய பெரிய சாதனைகளைச் செய்யப் போகிறாய். அரசியல் வேண்டாம்” என்று கூறினார்.[92]

**சக்தி நாடக சபாவில் சிவாஜி கணேசன்**

தங்கவேலுப்பிள்ளை என்பவருக்குச் சொந்தமான ‘சக்தி நாடக சபா’வின் பொறுப்பாளராகக் கிருஷ்ணசாமி என்பவர் இருந்தார். இந்த நாடக சபாவில் நல்ல எழுத்தாளராக விளங்கிய காரணத்தால் பிற்காலத்தில் ‘சக்தி’ கிருஷ்ணசாமி எனப் பெயர் பெற்றார். வீரபாண்டியக் கட்டபொம்மன் நாடகம் மற்றும் திரைப்படத்தின் திரைக்கதை, வசனங்களை எழுதினார். அந்த சபாவில் நடித்துக் கொண்டிருந்தவர்களும் பிற்காலத்தில் பெரிய நடிகர்களாக விளங்கியவர்களுமான எஸ்.வி. சுப்பையா, எம்.என். நம்பியார் இருவரும் ஜுபிடர் பிக்சர்ஸ் தயாரித்த “வித்யாபதி” எனும் திரைப்படத்தில் நடிக்கச் சென்றுவிட்ட காரணத்தால் அந்தச் சபாவில் நடிப்பதற்கு நடிகர்கள் தேவைப்பட்டனர். சக்தி கிருஷ்ணசாமி

சிவாஜிகணேசனின் பால்ய நண்பர் கரந்தை சண்முகவேலுவிடமும், கலைஞர் கருணாநிதியிடத்திலும் அண்ணாவிடம் சொல்லி சக்தி நாடகச் சபாவில் நடிப்பதற்குக் கணேசனை அழைத்து வரச் சொன்னார். அண்ணாத்துரையும் "கணேசா, நீ சக்தி நாடக சபாவிற்குப் போ. உன்னை எப்பொழுது திரும்பக் கூப்பிடவேண்டுமோ அப்போது நான் கூப்பிட்டுக் கொள்கிறேன்" என்றார்.[93]

1946இல் ஆகஸ்ட் திங்கள் 10 ஆம் நாள் திண்டுக்கல்லில் முகாமிட்டிருந்த 'சக்தி நாடக சபா'வில் கணேசன் நடிகராகச் சேர்ந்தார். சக்தி நாடக சபாவில் எஸ்.ஏ. நடராஜன், கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் போன்றவர்கள் நடிகர்களாக இருந்தனர்.[94]

**மீண்டும் ஈ.வெ. இராமசாமியின் பாராட்டு**

1947இல் ஆகஸ்டு 15 ஆம் நாள் பெங்களூரில் குப்பி வீரண்ணாவின் தியேட்டரில் 'விதி' நாடகத்தில் சிவாஜி கணேசனின் நடிப்பைப் பார்த்து, ஈ.வெ. ராமசாமி தேம்பி, தேம்பி அழுதார். மேலும் வில்லனாக நடித்த கணேசன் சுடப்பட்ட காட்சியில் வேகமாக விழுந்து சாகவேண்டும் எனக் கூக்குரல் எழுப்பினார். நாடகம் முடிந்தபின் நாடகம் நடத்துபவர்களிடம் தான் கணேசனுக்குக் கொடுத்த சிவாஜி எனும் பட்டத்தை ஏன் உபயோகப்படுத்தவில்லை என்று ஈ.வெ. ராமசாமி கேட்டார். பெங்களூரில் நாடகங்களை நடத்திக் கொண்டிருந்த 'சக்தி நாடக சபா' வேலூருக்கு முகாமை மாற்றி நாடகங்களை நடத்தினர்.[95]

**கஷ்டங்களின் உச்சம்**

வேலூரிலிருந்து குடியாத்தம், பின்பு பெரிய குளத்தில் பல நாடகங்களைச் சக்தி நாடக சபாவினர் நடத்தினர். இடையில் சக்தி கிருஷ்ணசாமிக்குத் திரைப்படத்தில் எழுத வாய்ப்பு கிடைத்துச் சென்றதால் நாடகக் கம்பெனி கஷ்டத்தில் தள்ளாடத் துவங்கியது. பெரியகுளம் அருகில் உள்ள தேவதானப்பட்டி என்னும் ஊரில் இருந்த தன் நண்பர் ஒருவரிடம் கணேசன் அரிசி பெற்றுக்கொண்டு இரவில் யாருக்கும் தெரியாமல் கொண்டு வந்து சாப்பாட்டுப் பிரச்சனையைத் தீர்த்துக் கொண்டார். ஒருமுறை கணேசன் கொண்டு வந்த அரிசியில் யாரோ மண்ணெண்ணெயை தெரியாமல் ஊற்றிவிட்டார்கள். அரிசிகளைச் சோப்பு போட்டுக் கழுவிச் சமைத்து அவரும் நாடகக் குழுவினரும் சாப்பிட்டு இருக்கிறார்கள்.[96]

**மகிழ்ச்சியான நாள்**

ஒரு ஊரைவிட்டு வேறொரு ஊருக்குச் செல்லும்போது இறுதியாக இராமாயணத்தில் வரும் 'பட்டாபிஷேகம்' காட்சியை நடத்திவிட்டுத் தான் முடிப்பார்கள். நாடகங்களில் நடித்த நடிகர்கள், தொழில்நுட்பக் கலைஞர்கள், அனைவரும் மேடைக்கு வந்து பொதுமக்களை வணங்கியபடி இறங்குவார்கள். அப்போது தங்களுக்குப் பிடித்த நடிக நடிகையர்களுக்குப் பலரும் பரிசளிப்பார்கள். அந்நாளில் அனைவரும் மகிழ்ச்சியாக இருந்தார்கள்.[97]

**ஏ.வி.எம். நிறுவனம் :**

அன்றைய இராமநாதபுரம் மாவட்டம் காரைக்குடியில் 1907 ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 28 ஆம் நாள் ஆவிச்சி செட்டியாரின் ஒரே மகனாகப் பிறந்தவர் மெய்யப்ப செட்டியார். ஆவிச்சி செட்டியாரின் ஏவி. அண்ட் சன்ஸ் 1928 ஆம் ஆண்டு ஐந்து தென் மாவட்டங்களில் கிராமபோன் இசைத் தட்டுக்களை விற்பைன செய்யும் உரிமை பெற்று விளங்கியது. 1932ல் மெய்யப்பச் செட்டியார், நாராயண ஐயங்கார், சிவம் செட்டியார் மூவரும் சென்னையில் சரஸ்வதி ஸ்டோர்ஸ் எனும் கம்பெனி துவக்கி ஜெர்மன் ஒடியன் கம்பெனியாருடன் சேர்ந்து இசைத் தட்டுக்கள் தயாரித்துத் தென்னிந்தியா முழுமைக்கும் விற்பனை உரிமை பெற்று வியாபாரம் செய்தார்கள்.[98]

தொடர்ந்து திரைப்படங்கள் தயாரிக்க மெய்யப்பச் செட்டியாரும் அவரது பங்குதாரர்களும் திட்டமிட்டு கல்கத்தா நியூ தியேட்டர்ஸ் ஸ்டுடியோவில் 'அல்லி அர்ஜுனா ', 'ரத்னாவளி' எனும் இரு படங்களைத் தயாரித்து 1935ல் வெளியிட்டனர்.[99]

1940ல் சொந்தப் படப்பிடிப்பு நிலையத்தைச் சென்னையில் உருவாக்கச் செட்டியாரும் அவரது பங்குதாரர்களும் திட்டமிட்டு மைலாப்பூரில் இருந்த விஜயநகரம் மகாராஜாவின் மாளிகையை வாடகைக்கு எடுத்துப் பிரகதி ஸ்டுடியோ எனும் பெயரிட்டுத் தெலுங்குப் படங்களைத் தயாரித்தனர்.[100] 1941ல் பம்மல் சம்பந்த முதலியாரின் சமூக நாடகமான 'சபாபதி' கதையைத் திரைப்படமாகத் தயாரித்து வெற்றி பெற்றார்கள். 1943ல் கன்னடத்தில் 'ஹரிச்சந்திரா' படத்தைத் தயாரித்துப் பின்பு அதை முதன்முதலாகத் தமிழில் டப் செய்து வெற்றி பெற்றது பிரகதி ஸ்டுடியோ.[101]

1945ல் நடிகர் டி.ஆர். மகாலிங்கம், குமாரி ருக்மணி வைத்து 'ஸ்ரீவள்ளி' படம் தயாரித்துப் பெரும் பொருள் ஈட்டினார். இவ்வெற்றியைக் கொண்டாடக் காஷ்மீர் சென்ற நேரத்தில் பிரகதி ஸ்டுடியோவை அவரது பங்குதாரர்கள் விற்றுவிட்டனர். எனவே தனியாகத் திரைப்படத் தயாரிப்புத் தொழிலில் இறங்கினார். அதற்கான கருவிகளை வாங்க முனைந்தார். பம்பாய் ஆர்.சி.ஏ. கம்பெனி தாங்கள் முதன் முதலாக இறக்குமதி செய்த கேமரா மற்றும் ஒலிப்பதிவுக் கருவிகளை மெய்யப்ப செட்டியாருக்கு 1946ல் விற்பனை செய்தார்கள்.

இரண்டாவது உலகப் போரின்போது சென்னையில் மின்சார வெட்டு இருந்த காரணத்தால் தன் சொந்த ஊரான காரைக்குடியில் தேவகோட்டைச் சாலையில் தேவகோட்டை ஜமீன்தாரின் இடத்தை வாடகைக்கு எடுத்தார். 'மீனாட்சி சுந்தரேஸ்வரர் கார்ப்பரேஷன்' என்கிற மின்சார விநியோகஸ்தர்கள் மூலமாகத் தேவையான மின்சாரம் பெற்று ஏ.வி.எம். ஸ்டுடியோ என்ற பெயரில் 'நாம் இருவர்' (ராம் ராஜ்யா தெலுங்கு டப்பிங்) 'வேதாள உலகம்' என்ற படங்கள் தயாரித்து வெளியிட்டார்.[102]

தேவகோட்டை ஜமீன்தார் தனது இடத்திற்கு அதிக வாடகை கேட்ட காரணத்தால் மெய்யப்ப செட்டியார் ஏ.வி.எம். ஸ்டுடியோவைச் சென்னைக்கு மாற்றத் திட்டமிட்டார். சென்னை ஆற்காடு சாலையில் தற்போது ஏ.வி.எம். ஸ்டுடியோ இருக்கும் இடத்தைப் பாகிஸ்தான் இந்தியாவிலிருந்து பிரிந்தபோது பாகிஸ்தான் செல்ல எண்ணிய முஸ்லிம்களில் ஒருவரிடம் பத்து ஏக்கர் நிலத்தை ரூபாய் முப்பத்து ஏழாயிரத்து ஐநூறுக்கு வாங்கி படப்பிடிப்பு தளங்களை நிர்மாணித்துத் திரைப்படங்கள் தயாரித்து வெளியிட்டார்.[103]

**பி.ஏ. பெருமாள் முதலியார்**

வேலூரில் நேஷனல் தியேட்டர் வைத்துத் திரைப்படங்களை வெளியிட்டு வந்த பி.ஏ. பெருமாள் முதலியார். ஏ.வி.எம். நிறுவனத்தின் படங்களுக்கு விநியோகஸ்தராக இருந்தார். வேலூரில் நடந்த சக்தி நாடக சபாவின் 'விதி', 'நூர்ஜஹான்' போன்ற நாடகங்களில் வி.சி. கணேசனின் நடிப்பாற்றலைத் தவறாமல் ரசித்து வந்தார். ஏ.வி.எம்முடன் இணைந்து ஒரு திரைப்படம் தயாரிக்க நினைத்தார். அதற்கான கதையைத் தேடினார்.[104]

ரத்தினம் என்பவர் தனது தேவி சபா எனும் நாடக கம்பெனியில் 'பெண்', 'மனோகரா', 'பராசக்தி' ஆகிய நாடகங்களைக் கடலூரில் நடத்தினார். இதில் திராவிட கழகப் பேச்சாளர்களில் ஒருவரான பாவலர் பாலசுந்தரம் எழுதிய

'பராசக்தி' நாடகம் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றது. அந்த நாடகத்தில் கல்யாணியாக நடிகர் வீராசாமி (முதல் மரியாதை திரைப்படத்தில் செருப்பு தைக்கும் தொழிலாளியாக சிவாஜி கணேசனோடு நடித்தார்)யும், குணசேகரனாக நடிகர் சாமிக்கண்ணு (உதிரிப்பூக்கள் திரைப்படத்தில் சவரத் தொழிலாளியாக நடித்தார்)வும் நடித்தனர்.[105]

பெருமாள், மெய்யப்பச் செட்டியாரைக் கடலூருக்கு அழைத்துச் சென்று 'பராசக்தி' நாடகத்தைப் பார்க்கச் செய்தார். 'பராசக்தி' நாடகம் விலை பேசப்பட்டுத் திரைப்படமாகத் தயாரிக்க முடிவெடுக்கப்பட்டது.[106] பராசக்தி திரைப்படத்தில் கதாநாயகனாக நடிப்பதற்கு கே.ஆர். ராமசாமி, தெலுங்கு நடிகர் நாகேஸ்வரராவ் இருவரும் பரிசீலனையில் இருந்தனர். நடிகர் ஆர்.எஸ். மனோகருக்கு ஒப்பனைச் சோதனை நடத்தப்பட்டது. ஆனால் நடிகர் கே.ஆர். ராமசாமியை நடிக்க வைக்கச் செட்டியார் முடிவெடுத்தார். ஆனால் பெருமாள் 'ஒரு புது நடிகரைப் போடலாம், அவர் சக்தி நாடக சபாவின் நாடகங்களில் நடித்துக் கொண்டிருக்கிறார்' என்று கூறினார்.[107] பெருமாளும், செட்டியாரும் திண்டுக்கல்லில் முகாமிட்டிருந்த சக்தி நாடக சபாவின் 'நூர்ஜஹான்' நாடகத்தைப் பார்த்தனர். அதில் கணேசனின் நடிப்பைப் பார்த்த செட்டியார், பையன் புதிது, நாடகம் வேறு திரைப்படம் வேறு என்று கூறினார்.[108] இக்கருத்தினை அறிந்த நடிகவேள் எம்.ஆர். ராதா தன் நண்பர் பெருமாள் முதலியாரிடம் நாடகத்தில் நடிப்பவர்களுக்குத்தான் சினிமாவில் நன்றாக நடிக்க முடியும். கணேசனை வைத்து எடுப்பதுதான் நல்லது என்றார்.[109]

நடிகர் ராதாவின் இக்கருத்தினை மனதில் வைத்துப் பெருமாள் முதலியார் மெய்யப்பச் செட்டியாரிடம் "கணேசனையே நடிக்கச் சொல்வோம். பிற்காலத்தில் சிறந்த நடிகராக வருவார்" என்று கூறினார்.[110]

**என் தங்கை**

திண்டுக்கல்லில் ரத்தினம் நடத்திய 'என் தங்கை' நாடகத்திற்குத் தலைமை தாங்குமாறு இயக்குனர் ஏ.எஸ்.ஏ. சாமியை அழைத்துச் சென்றார் அந்த நாடகத்தை எழுதியவர் டி.எஸ். நடராஜன். இந்த நாடகத்தில் கணேசன் நடித்தார். கணேசனின் நடிப்பாற்றலைக் கண்ட சாமி நாடகக் கதையையும், கணேசனின் நடிப்பையும் ஜூபிடர் பிக்சர்ஸ் சோமுவிடம் கூறித் திரைப்படமாக எடுக்கச் சொன்னார். சாமியையே படத்தின் இயக்குநராக பொறுப்பேற்கச் சொன்னார் சோமு.[111]

இதற்கிடையில் இயக்குநர் சாமியைச் சந்தித்து 'பராசக்தி' நாடகக் கதையைக் கூறி அந்தப் படத்துக்கு வசனம் எழுதித் தரும்படி பெருமாள் கேட்டிருக்கிறார். சாமி, பெருமாளிடம் 'என் தங்கை' நாடகத்தைப் பாருங்கள் என்று கூறினார். இருவரும் அந்த நாடகத்தைப் பார்த்தனர். 'பராசக்தி'யும் 'என் தங்கை'யும் ஒரே மாதிரியான கதையமைப்பைக் கொண்டிருப்பதை உணர்ந்த பின், இரண்டு கதையையும் கலந்து திரைப்படமாக எடுக்கலாம் என்று நடராஜனைத் திருச்சியில் அவரது இல்லத்தில் சந்தித்தனர். நடராஜன் இரண்டு கதைகளையும் இணைப்பதற்கு மறுத்துவிட்டார். எனவே 'பராசக்தி' நாடகத்தைத் திரைப்படமாக்கும் முயற்சியில் பெருமாள் இறங்கினார்.[112]

திருச்சியில் முகாமிட்டிருந்த சக்தி நாடக சபாவுக்கு வந்த இயக்குநர் ஏ.எஸ்.ஏ. சாமி சிவாஜி கணேசனைச் சந்தித்து ஒப்பனைச் சோதனைக்கு சென்னைக்கு வரச் சொன்னார். இச்சம்பவம் பற்றி "என்னுடைய வாழ்க்கையைப் பாருங்கள் ஒவ்வொருவரும் சினிமாக் கம்பெனி முன் நின்று சந்தர்ப்பம் கேட்பார்கள். இல்லையென்றால் பிறரை அழைத்து வந்து சிபாரிசு செய்வார்கள். இதுபோன்று எனக்கு இல்லை. எனது முதல் சினிமா வாழ்க்கையே விமானத்தில்தான் ஆரம்பித்தது என்று தனது சுயசரிதையில் பதிவு செய்தார் சிவாஜி கணேசன்.[113]

**ஒப்பனை சோதனை**

சிவாஜி கணேசனுக்கு ஒப்பனைச் சோதனை ஏ.வி.எம். படப்பிடிப்பு கம்பெனியில் நடந்தது. ஆர்.என். நாகராஜ்ராவ் வீட்டுக்கு அழைத்துச் செல்லப்பட்டார். ஸ்டில்கள் நிறைய எடுக்கப்பட்டன. தன் முகம் கேமராவில் நன்றாக இருக்கிறதா என்று நாகராஜ்ராவிடம் கணேசன் கேட்டார். அதற்கு அவர் "நன்றாக இருக்கிறது" என பதில் கூறினார்.[114]

**மெய்யப்பச் செட்டியாரின் மாற்று ஏற்பாடுகள்**

'பராசக்தி'யின் இயக்குநராக முதலில் ஒப்பந்தம் செய்யப்பட்ட ஏ.எஸ்.ஏ. சாமிக்கு மாற்றாக அண்ணாதுரையின் 'நல்ல தம்பி' பட இயக்குநர்கள் கிருஷ்ணன்-பஞ்சுவை மெய்யப்பச் செட்டியார் ஏற்பாடு செய்தார். அதுபோல் முதலில் திரைக்கதை வசனம் எழுத இருந்த திருவாரூர் தங்கராசுக்கு மாற்றாக மு. கருணாநிதியை ஒப்பந்தம் செய்தார்.[115]

**வசனம் பேசும் சோதனை**

'பராசக்தி 'யின் வசனங்கள் தரப்பட்டன. முதல் வசனமாக "சக்சஸ்" "சக்சஸ்" எனும் வார்த்தைகள் தரப்பட்டன. கணேசன் பேசினார். சவுண்ட் இஞ்சினீயர் "என்ன இது 'சத்தத்' 'சத்தத்' என்று பேசுகிறார்" எனக் கேலி செய்தார்.[116]

**இயக்குநர் கிருஷ்ணனின் ஆறுதல்**

படப்பிடிப்பு 1950ல் துவங்கியது. இடையில் பல தரப்பிலும் சிவாஜி கணேசன் பரிகசிக்கப்பட்டார். "என்ன இந்தப் பையன் மிக மெலிவாக இருக்கிறானே சினிமாவிற்கு ஒத்து வருவானா" படப்பிடிப்பு இல்லாத சமயங்களில் வெளியில் சென்று வந்தால், "பையன் தெருத்தெருவாகச் சுற்றுகிறானே" சினிமாவில் நடிக்க ஒத்துழைப்பானா?" என்றெல்லாம் கேலி செய்தனர்.

இவற்றையெல்லாம் நினைத்து ஏ.வி.எம். படப்பிடிப்பு நிலையத்தில் சிவாஜி கணேசன் கண்ணீர் விட்டு அழுதார். இதுபற்றி அவர், "தான் விட்ட கண்ணீரால்தான் அங்கு வேப்பமரங்கள் வளர்ந்தன" என்று தனது சுயசரிதையில் குறிப்பிட்டார்.[117]

அச்சமயத்திலெல்லாம் இயக்குனர் கிருஷ்ணன்

> "என்ன கணேசா கவலைப்படுகிறாயா?" இதெல்லாம் இத்துறைக்கு வரும் புதியவர்களுக்கு ஏற்படும் சோதனைதான். முதலில் கஷ்டமாகத்தான் இருக்கும். கஷ்டப்பட்டு இந்தப்படத்தை முடி. இந்தப் படம் உனக்கு நன்றாக வந்து கண்டிப்பாக நீ வெற்றி பெறுவாய். அதன் பிறகு சினிமாக்காரர்கள் எல்லோரும் உன் பின்னால்தான்"

என சிவாஜி கணேசனுக்கு ஆறுதல் வார்த்தை சொன்னார்.[118]

**செட்டியாரின் மறுதயக்கம்**

'பராசக்தி' படம் 3 ஆயிரம் அடி வளர்ந்துவிட்ட நிலையில், மெய்யப்பச் செட்டியாருக்கு நம்பிக்கை வரவில்லை. 'விஷப்பரீட்சை வேண்டாம் கே.ஆர். ராமசாமிக்குத் திரைப்படத் துறையில் பெயர் அதிகமாக உள்ளது. அவரையே போட்டு எடுத்துவிடலாம் என்று கூறினார்.[119]

பெருமாள் பிடிவாதமாக இருந்தார். "கணேசனே நடிக்கட்டும், நன்றாக வரும் பாருங்கள்" என்றார். படப்பிடிப்பு மெதுவாக நடந்தது.[120]

'பராசக்தி ' படத்தில் நடிப்பதில் ஒரு நிச்சயமாற்ற சூழ்நிலை இருப்பதால், கணேசன் பல கம்பெனிகளில் நடிக்க வாய்ப்புக் கேட்டார். ஒருமுறை ஜெமினி படப்பிடிப்பு நிலையத்திற்குச் சென்று நடிகர்களைத் தேர்வு செய்யும் உதவியாளராக இருந்த ஆர். கணேஷ் என்ற இளைஞரிடம் 'நான் ஒரு தொழில் நடிகர்' என அறிமுகப்படுத்திக்கொண்டு வாய்ப்புக் கேட்டார். அந்த இளைஞர் கணேசனைப் பற்றி எழுதிய குறிப்பில் "தகுதியானபடி பாத்திரம் தந்து நடிக்கத் தயார் செய்தால் மிகப் பெரிய நடிகராக வருவார்" அப்படிக் குறிப்பு எழுதிய இளைஞர் கணேஷ் பிற்காலத்தில் புகழ் பெற்ற நடிகர் ஜெமினி கணேசன் ஆவார்.[121]

மற்றொருமுறை அஞ்சலி பிக்சர்ஸ் அலுவலகத்தில் போய்ச் சந்தர்ப்பம் கேட்டார். இயக்குநர் அக்கினி லட்சுமி வரப்பிரசாதராவ் (எல்.வி.பிரசாத்) சிவாஜி கணேசனின் கண்களைப் பார்த்து படத்தில் நடிக்கச் சந்தர்ப்பம் கொடுத்தார். அந்தப்படம் "பூங்கோதை"எனும் பெயரில் 1953ல் வெளிவந்தது. தெலுங்கில் "பரதேசி" என்ற பெயரில் வெளிவந்தது. இரண்டிலும் அந்தந்த மொழிகளில் பேசி நடித்தார்.[122]

### திரையில் குரல் முதலில் ஒலித்தது

'பராசக்தி' யில் நடிக்க அழைத்துவரப்பட்ட சிவாஜி கணேசனை, 'நிரபராதி' எனும் படத்தில் கதாநாயகனாக நடித்த முக்காமலா கிருஷ்ணமூர்த்தி எனும் நடிகருக்குக் குரல் கொடுக்கச் சொன்னார் தயாரிப்பாளர் பெருமாள்.[123]

### மூன்று படங்கள்

'பராசக்தி' க்கு முன்பே சிவாஜி கணேசனின் குரல் கேட்டு அனைவரும் அதிசயித்தனர். திரையுலகில் பெரும் பரபரப்பு ஏற்பட்டது. 'பராசக்தி' வெளிவரும் முன்பே 'பணம்', 'பூங்கோதை' , 'மனிதனும் மிருகமும்' என்ற படங்களுக்குச் சிவாஜி கணேசன் ஒப்பந்தம் செய்யப்பட்டார்.[124]

‘பராசக்தி’ 10 ஆயிரம் அடிகளுக்கு மேல் எடுக்கப்பட்டவுடன் எடிட் செய்து பார்த்த மெய்யப்ப செட்டியார் சிவாஜிகணேசனின் நடிப்பு நன்றாக அமைந்திருந்ததை உணர்ந்தார். முன்பு எடுக்கப்பட்ட 7 ஆயிரம் அடிக் காட்சிகளை நீக்கிவிட்டு மீண்டும் இரவு பகலாக ஏ.வி.எம்மின் அனைத்து தளங்களிலும் படப்பிடிப்பு நடந்து முடிந்தது. பாரதிதாசனின் “வாழ்க வாழ்கவே வாழ்க” என்ற பாடலை டைட்டில் பாடலாக சேர்க்கப்பட்டது. ‘பராசக்தி’யின் பிற வேலைகளும் முடிந்து 1952 அக்டோபர் திங்கள் 17ம் நாள் தீபாவளியன்று வெளியிடுவதற்கு திரையிடப்பட்டது.[125]

**நிறைவுரை**

கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்ற லட்சியத்தோடு இளம் வயதில் நாடகக் கம்பெனியில் சேர்ந்த சிவாஜி கணேசன் “விளையும் பயிர் முளையிலேயே தெரியும்” எனும் முதுமொழிக்கேற்பத் தன் முதல் மேடையிலேயே நடிப்பதில் தேர்ச்சி பெற்றார். மிகக் குறுகிய காலத்தில் ஒரே நாடகத்தில் நான்கு வேடங்கள் ஏற்று நடிக்கும் திறமையைப் பெற்றார். ஒரு நாடகத்தில் நடிக்கும்அனைத்து நடிகர்களின் வசனங்களை நினைவில் நிறுத்திப் பேசும் ஆற்றலை வளர்த்துக் கொண்டார்.

நாடக உலகில் பசி, பட்டினி போன்ற துன்பங்களைத் தாங்கிக் கொண்டு நடிப்பில் தொடர்ந்து ஈடுபாட்டுடன் விளங்கினார். சொந்தச் சகோதரர்களின் இழப்பையும் பொருட்படுத்தாமல் கட்டபொம்மன் ஆகவேண்டும் என்ற கனவை மனதில் இறுத்திக் கொண்டு நடிப்பாற்றலை மெருகேற்றிக் கொண்டார். தமிழை உச்சரிக்கும் திறன், வசனம் பேசும் ஆற்றல், குரல்வளப் பயிற்சி, இசை மற்றும் நடனம் போன்ற கலைகள் அனைத்தையும் கற்றுத் தேர்ந்தார்.

திராவிட இயக்கத் தலைவர்களின் தொடர்பால் 1945ல் ஏழாவது சுயமரியாதை இயக்கத்தின் மாநாட்டில் அண்ணாத்துரை எழுதிய ‘சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்’ எனும் நாடகத்தில் சத்ரபதி சிவாஜியாக நடித்து கலை, கூத்து போன்றவைகளின் மீது ஈடுபாடு இல்லாத ஈ.வெ.இராமசாமி நாயக்கரால் ‘சிவாஜி’ என்ற பட்டம் சூட்டப்பட்டார்.

திராவிட இயக்கத் தலைவர்களில் ‘அண்ணாத்துரை மற்றும் கருணாநிதியின் எழுத்தாற்றலால், என்.எஸ். கிருஷ்ணன், கே.ஆர். ராமசாமி, எம்.ஜி. ராமச்சந்திரன் போன்ற நடிகர்கள் திரையுலகில் நுழைந்து புகழ்பெற்ற காலத்தில் நான்காவது நடிகராக கதாநாயகனாக ‘பராசக்தி’ படத்தில் அறிமுகமாகித் தமிழ்த்திரையுலகில் முன்னணி நட்சத்திரமாக அடியெடுத்து வைத்தது அவரது திறமைக்குக் கிடைத்த ஊக்கமாகும்.

## இறுதிக்குறிப்புகள்

1 சாத்தனார், சுவைநூல், தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம் 1968, இயல்-2

2 சுந்தரம், வீ.பா.க., **தமிழிசைக் கலைக் களஞ்சியம்**, தொகுதி 2, பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி, 1994, ப.198.

3 ஆறுமுக நாவலர், **சூடாமணி நிகண்டு**, கோல்டன் ஸ்டீம் பிரஸ், மதராஸ் 1917, ப.41.

4 அரங்கசாமி, பழனி., **தமிழ் நாடகம் தோற்றமும் வளர்ச்சியும்**, தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு, தஞ்சாவூர், 1989, ப.6.

5 Karthigesu Sivathambi, **Drama in Ancient Tamil Society**, New Century Book House, Pvt. Ltd., Madras, 1981, p.399.

6 பரிதிமாற் கலைஞர், **நாடகவியல்**, உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004, ப.7.

7 பெருமாள், ஏ.என்., **தமிழ் நாடகம் ஓர் ஆய்வு**, தமிழ்ப் பதிப்பகம், சென்னை 1979, ப.1.

8 சக்தி பெருமாள், **தமிழ் நாடக வரலாறு**, வஞ்சிக்கோ பதிப்பகம், மதுரை, 1979, ப.16.

9 **மேலது.**, ப.9.

10 ஷாஜகான் கனி, வெ.மு., **தமிழ் நாடக வகையும் வரலாறும்**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2010, ப.35.

11 ஷாஜகான் கனி, வெ.மு., **தமிழ் நாடகக் (குறுங்) கலைக் களஞ்சியம்**, ஓவியம் பதிப்பகம், மதுரை, 2010, ப.86.

12 ஷாஜகான் கனி, வெ.மு., **தமிழ் நாடக வகையும் வரலாறும்**, ப.47.

13 **மேலது.**, ப.48.

14 **மேலது.**, ப.35.

15 Ruth Benedict, **Patterns of Culture,** Houghton Mifflin Company, Boston, 02108 1934, p.20.

16 வரதராசன், மு., **மு.கூ.நூ.**, ப.263.

17 மேலது., ப.273.

18 சம்பந்த முதலியார், பம்மல், **நாடகமேடை நினைவுகள்**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998, ப.11.

19 **மேலது.**, ப.11.

20 **மேலது.**, ப.69.

21 ஆரூர்தாஸ், **சிவாஜி வென்ற சினிமா ராஜ்யம்**, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2012, ப.43.

22 சம்பந்த முதலியார், பம்மல், **மு.கூ.நூ.** ப.10.

23 **மேலது.**

24 **மேலது.**

25 பத்மநாபன், சு., **சங்கரதாஸ் சுவாமிகள்**, காவ்யா பதிப்பகம், சென்னை, 2008 ப.XII.

26 **மேலது.**, ப. IV.

27 **மேலது.**, பப. X-XI.

28 **மேலது.**, ப. XV

29 சண்முகம், டி.கே., **எனது நாடக வாழ்க்கை**, வானதி பதிப்பகம், சென்னை, 1972, பப.41-43.

30 சண்முகம், டி.கே., **நாடகக் கலை**, சங்கரதாஸ் சுவாமகள் நினைவு மன்றம், சென்னை, 1967, ப.27.

31 வரதராசன், மு., **மு.கூ.நூ.**, பப.276-277.

32 **மேலது.**, ப.280

33 இராமச்சந்திரன், எம்.ஜி., **நான் ஏன் பிறந்தேன்**, ராஜராஜன் பதிப்பகம், சென்னை, 2003, ப.516.

34 சம்பந்த முதலியார், பம்மல், **மு.கூ.நூ.** ப.8.

35 சண்முகம், டி.கே., **எனது நாடக வாழ்க்கை**, **மு.கூ.நூ.** பப.34-35.

36 **மேலது**, ப.155.

37 சாண்டில்யன், **சினிமா வளர்ந்த கதை**, விஜயா பப்ளிகேஷன்ஸ்,சென்னை, 2008, ப.44

38 இராமச்சந்திரன், எம்.ஜி., **மு.கூ.நூ.** ப.98.

39 சண்முகம், டி.கே., நாடகக்கலை, **மு.கூ.நூ.** ப.26.

40 வரதராசன், மு., மு.கூ.நூ. ப.281.

41 சண்முகம், டி.கே., **எனது நாடக வாழ்க்கை**, **மு.கூ.நூ.** பப-120-121.

42 **மேலது.**, ப. 33.

43 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.22.
44 ஆரூர்தாஸ், **மு.கூ.நூ.**, ப.18.
45 **மேலது.**, பப.20, 22.
46 நேர்காணல், நடிகர் சீனிவாசன், கே.வி., சிவாஜிகணேசனோடு நாடகம் மற்றும் சினிமாவில் நடித்தவர், 21.02.2012.
47 **மேலது.**
48 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.127.
49 **மேலது.**, ப. 21
50 ஆரூர்தாஸ், **மு.கூ.நூ.**, பப.21-23.
51 சிவாஜி கணேசன், **மு.கூ.நூ.**, ப.91.
52 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.25.
53 **மேலது.**, ப.28.
54 சண்முகம், டி.கே., **எனது நாடக வாழ்க்கை, மு.கூ.நூ.** பப.35-36.
55 இராமச்சந்திரன், எம்.ஜி., **மு.கூ.நூ.**, பப.102-104.
56 **மேலது.**, பப.236-237.
57 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.** ப.27.
58 **மேலது.**, ப.23.
59 **மேலது.**, ப.31.
60 சிவாஜி கணேசன், **மு.கூ.நூ.**, ப.72.
61 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.15.
62 சிவாஜி கணேசன், **மு.கூ.நூ.**, பப.56-57.
63 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, பப.30-46.
64 சண்முகம், டி.கே., **எனது நாடக வாழ்க்கை, மு.கூ.நூ.**, ப.121.
65 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.45.
66 **மேலது.**, ப.48.
67 ஆரூர்தாஸ், மு.கூ.நூ, ப.24.
68 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, பப.53-54.
69 **மேலது.**, ப.54.
70 **மேலது.**, ப.53.
71 **மேலது.**, ப.56.
72 **மேலது.**, ப.61.
73 **மேலது.**, ப.61.
74 **மேலது.**, பப.62-63.
75 சிவாஜி கணேசன், **மு.கூ.நூ.**, ப.60.
76 நேர்காணல், குமார், வி.ஆர்., சிவாஜி கணேசனின் மனைவி கமலாவின் தங்கைமகன், 1.10.2015.
77 சிவாஜி கணேசன், **மு.கூ.நூ.**, ப.24.
78 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.64.
79 **மேலது.**, பப.64-65.
80 சண்முகம், டி.கே., **எனது நாடக வாழ்க்கை**, மு.கூ.நூ. பப.511-512.
81 **மேலது.**, ப.486.
82 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.66.
83 சிவாஜி கணேசன், அகில இந்திய வானொலிக்கு அளித்த பேட்டி, 1998.
84 அண்ணா, சிவாஜி கண்ட இந்து ராஜ்யம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2007, ப.5.
85 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.68
86 இராமச்சந்திரன், எம்.ஜி., மு.கூ.நூல். பப.995-996.
87 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.67.
88 **மேலது.**, ப.68.
89 **மேலது.**, ப.69.
90 வந்தியதேவன், கா., **வரலாற்றுச்சுவடுகள்**, இதயவேந்தன் வாசகர் வட்டம், சென்னை, 2011, ப.20.
91 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.73.
92 சிவாஜி கணேசன், **மு.கூ.நூ.**,ப.29.

93 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.74.
94 ஆரூர்தாஸ், 'சினிமாவின் மறுபக்கம்', **தினத்தந்தி**, நாள் 20.09.2014.
95 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, பப.75-76.
96 **மேலது.**, ப.83.
97 சிவாஜி கணேசன், **மு.கூ.நூ.**, ப.66.
98 நாராயணன், அறந்தை., **தமிழ் சினிமாவின் கதை**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, 1981, ப.72.
99 **மேலது.**, ப.162.
100 **மேலது.**, ப.164.
101 **மேலது.**, பப.208-209.
102 **மேலது.**, பப.246-247.
103 **மேலது.**, பப.308-309.
104 **மேலது.**, ப.336.
105 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.83
106 நாராயணன், அறந்தை., தமிழ் சினிமாவின் கதை, ப.336.
107 ஆரூர்தாஸ், மு.கூ.நூல், ப.62.
108 நாராயணன், அறந்தை., தமிழ் சினிமாவின் கதை, ப.337.
109 வந்தியதேவன், கா., **மு.கூ.நூ.**, ப.13.
110 நாராயணன், அறந்தை., தமிழ் சினிமாவின் கதை, பப.336-337.
111 **மேலது.**, ப.390.
112 **மேலது.**, பப.390-391.
113 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.84
114 வந்தியதேவன், கா., **மு.கூ.நு.**, ப.18.
115 நாராயணன், அறந்தை., **மு.கூ.நூ.**, ப.336.
116 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.**, ப.25
117 **மேலது.**, ப.87.
118 **மேலது.**, பப.98-99.
119 நாராயணன், அறந்தை., தமிழ் சினிமாவின் கதை, ப.339.
120 **மேலது.**, ப.340.
121 **மேலது.**, ப.331.
122 **மேலது.**, ப.407.
123 **மேலது.**, ப.375.
124 **மேலது.**, ப.400.
125 **மேலது.**, பப.395-396

# இயல் - 3

## திரை உலகில் சிவாஜி கணேசன்

### முகவுரை

1952இல் "பராசக்தி" திரைப்படம் மூலமாக தமிழ்த் திரையுலகில் கதாநாயகனாக அறிமுகமான சிவாஜி கணேசன் ஒரே நாளில் முதல்தர நட்சத்திரமாக விளங்க ஆரம்பித்தார். 1954இல் 'மனோகரா' படத்தின் மூலமாக தென்னிந்தியத் திரைப்பட உலக மட்டுமல்லாது வட இந்திய திரைப்பட உலகையும் திரும்பிப் பார்க்க வைத்தார். இம்மாபெரும் வெற்றிக்கு இவரது குரல், தமிழ் உச்சரிப்பு, வசனம் பேசும் முறை முதலியவை உறுதுணையாக இருந்தன. கலைஞர் மு. கருணாநிதியின் சிறப்பான வசனங்கள் பின்புலமாக உதவின. நீண்ட வசனங்கள் பேசும் ஒரே நடிகராக உயர்ந்து நின்றார்.

கதாநாயகனாக அறிமுகம் ஆன சிவாஜி கணேசன் குறுகிய காலத்தில் வில்லன் வேடங்கள் ஏற்றுத் தன் நடிப்பாற்றலை நிரூபித்தார். புராண இதிகாச, சரித்திர வேடங்கள் ஏற்றுத் தனக்கென்றுத் தனி பாணி வகுத்தார். "நடிகர் திலகம்" எனும் பட்டமும், ஆசியாவின் சிறந்த நடிகருக்கான விருதும் இவரைத் தேடி வந்தன. நடிகனாக அதிலும் கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்ற தன் வாழ்க்கை லட்சியக் கனவை "வீரபாண்டிய கட்டபொம்மன்" எனும் நாடகத்தைத் தயாரித்து பின் திரைப்படமாக உருவாக்கம் பெற்றபோதுக் கட்டபொம்மனாக நடித்து நனவாக்கிக் கொண்டார். தமிழ்ப்பண்பாட்டின் அடையாளமான குடும்ப உறவுகளை சித்தரிக்கும் வேடங்கள் ஏற்றுத் தமிழ் மக்களை வெகுவாகக் கவர்ந்தார்.

ஒன்றுக்கு மேற்பட்டு ஒன்பது வேடங்கள் வரை ஏற்று, சிறப்பாக நடித்துப் பாத்திரத்திற்கேற்ற வகையில் உடல் மொழியை வேறுபடுத்திக் காட்டி நடித்தார். கடவுள்களாக, கடவுளின் அவதாரங்களாக அற்புதமாக நடித்தார். கவிஞர்களாக, புலவர்களாகத் திரையில் தோன்றித் தன் திறமையை வெளிப்படுத்தினார். மன்னர்களாகவும், பேரரசர்களாகவும் மற்றும் சுதந்திரப் போராட்ட வீரர்களாகவும் திரையில் தோன்றி மக்களைப் பரவசப்படுத்தினார். இசைக் கருவிகளை மற்றும் வாத்யங்களை வாசிப்பதுபோல் நடித்துப் பெரும் புகழ் பெற்றார். பல வெளிநாடுகள் அவரை வரைவழைத்து சிறப்புப் பட்டங்களையும் விருதுகளையும் வழங்கி கௌரவித்தன. பிற்காலத்தில் குறிப்பிடத்தக்க வேடங்கள் ஏற்று நடிப்பில் சக்கரவர்த்தியாக விளங்கினார்.

தமிழ்த் திரையுலகில் சிவாஜிகணேசனின் வருகைக்குப்பின் ஏற்பட்ட மாற்றங்கள், திரையுலகில் அவர் காட்டிய பண்பு நலன்கள், தொழில் பக்தி பெற்ற விருதுகள் போன்றவற்றைக் கண்டு விளக்குவதாக அமைகிறது இவ்வியல்.

**சினிமாவின் வரலாறு**

சினிமாவின் வரலாறு என்பது ஒரு தனிப்பட்ட மனிதனால் உருவாக்கப்பட்டது அல்ல. பல அறிஞர்களின் விஞ்ஞான பூர்வமான கண்டுபிடிப்புகளின் மொத்த வெளிப்பாடு ஆகும். அமெரிக்க நாட்டைச் சேர்ந்த தாமஸ் ஆல்வா எடிசனின் 'கினிட்டோஸ்கோப்', எட்வர்ட் முப்பிரிட்ஜின் 'ஜீப்ராக்டோஸ்கோப்' மற்றும் இங்கிலாந்தின் வில்லியம் ஃபிரிஸ்கிரீன் போன்றவர்களின் கண்டுபிடிப்புகள் சினிமா உருவாக்கத்தில் பெரும்பங்காற்றின.

1895ல் லூமியர் சகோதரர்கள் உருவாக்கிய 'சினிமாட்டகிராஃப்' நகரும் படமாக சினிமாவை மக்களுக்கு அறிமுகப்படுத்தியது. அது நடிகர்களின் அசைவுகளையும், தொலைதூரத்து தேசங்களையும், அதன் மலைகளையும் ஆறுகளையும் மக்களின் இருப்பிடத்தில் கொண்டு வந்து சேர்த்த சிறப்புக்குரிய கண்டுபிடிப்பாகும். அந்தக் கண்டுபிடிப்புச் 'சினிமாட்டோகிராஃபி' எனும் பெயர் பெற்றது.[1] 1896 ஆம் ஆண்டு ஜூலை மாதம் 17 ஆம் தேதி பம்பாய் வாட்சன் ஹோட்டலில் இந்தியர்களுக்காக, லூமியர் சகோதரர்களால் சினிமா அறிமுகப்படுத்தப்பட்டது.[2]

**இந்திய சினிமாவின் முன்னோடிகள்**

1905இல் திருச்சி இரயில்வேயில் பணிபுரிந்த சாமிக்கண்ணு வின்சன்ட், டுபான்ட் (DU PONT) எனும் பிரெஞ்சு நாட்டவரிடம் 'ஏசுவின் வாழ்க்கை' (Life of Christ) எனும் படச்சுருளை ரூபாய் இரண்டாயிரம் கொடுத்து வாங்கினார். மதராஸில் 'Edisons Grand Cinemamegaphone' எனும் தற்காலிக சினிமாக் கொட்டகை அமைத்து தமிழக மக்களுக்குப் பேசாத சினிமாவை அறிமுகம் செய்தார். 1914ல் 'வெரைட்டி ஹால்' எனும் நிரந்தர சினிமாக் கொட்டகையை தன் சொந்த ஊரான கோயம்புத்தூரில் கட்டி தென்னிந்தியாவின் முதல் சினிமாக் கொட்டகையை கட்டியப் பெருமைக்கு உரியவரானார். அதன் காரணமாக சாமிக்கண்ணு வின்சன்ட் 'தமிழ் சினிமா வரலாற்றின் முதல்வர்' என அழைக்கப்பட்டார்.[3]

1913 ஆம் ஆண்டு மே திங்கள் மூன்றாம் நாள் பம்பாய் காரனேஷன் திரையரங்கில் இந்தியாவின் முதல் பேசாத திரைப்படமாகிய 'ஹரிச்சந்திரா' திரையிடப்பட்டது. இப்படத்தைத் தயாரித்து, இயக்கி, எடிட்டிங் செய்து வெளியிட்ட பெருமை தாதாசாகிப் பால்கே என்பவருக்கு உரித்தானது.[4]

1917 ஆம் ஆண்டு தென்னிந்தியாவில் முதல் பேசாத படத்தை தயாரித்து, இயக்கி வெளியிட்டவர் ரங்கசாமி நடராஜ முதலியார் ஆகும். படத்தின் பெயர் **'கீசக வாதம்'**[5].

**அர்தேசிர் எம். இரானி**

1929 ஆம் ஆண்டில் இந்தியாவில் ஆங்கில மொழியில் பேசும்படம் ஒன்று கல்கத்தாவில் திரையிடப்பட்டது. 'மெலடி ஆஃப் லவ்' என்பது அதன் பெயர். இதைப்பார்த்த பம்பாய் இம்பீரியல் மூவிடோன் நிறுவன அதிபர் சர்தே ஷிர் இரானி 1931 ஆம் ஆண்டு மார்ச் மாதம் 14 ஆம் தேதி 'ஆலம் ஆரா' எனும் முதல் பேசும் படத்தை இந்தி மொழியில் வெளியிட்டார். 'நூர்ஜஹான்' எனும் ஆங்கிலப் படத்தை 1934ல் திரையிட்டார். 1937ல் 'கிஸான் கன்யா' எனும் இந்தியாவின் முதல் வண்ணப்படத்தைத் தயாரித்து வெளியிட்டார். அவரது 'இம்பீரியல் மூவி டோன்' என்ற கம்பெனி மூலம் முதல் தமிழ் பேசும் படமான 'காளிதாஸை' 1931இல் வெளியிட்ட பெருமைக்குரியவரானார். மேலே கூறப்பட்டுள்ள சிறப்புக்குரியச் சாதனைகளைப் புரிந்தமையால் 'இந்திய மற்றும் தமிழ் மொழிப் பேசும் படங்களின் தந்தை' என்றழைக்கப்பட்டார்.

**ஹெச்.எம். ரெட்டி**

அர்தேசிர் எம். இரானியின் உதவியாளராக ஹெச்.எம். ரெட்டி பணிபுரிந்தார். 'காளிதாஸ்' எனும் முதல் தமிழ் பேசும் படத்தை அவர் இயக்கினார்.[6]

**சமுதாயத்தில் சினிமாவின் தாக்கம்**

விஞ்ஞானத்தின் அரிய கண்டுபிடிப்புகளில் ஒன்றான சினிமா இந்தியாவில் ஒரு தனிக் கலையாக உருவகமானது. சமுதாயத்தில் அனைத்துத்தர மக்களிடையே மிகப்பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியது. ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையை, பல நிகழ்வுகளை திரையில் பிரதிபலித்தது. எனவே மக்கள் சினிமாவோடு மிக நெருக்கமாக ஐக்கியமானார்கள். குறிப்பாகச் சினிமா தமிழ்நாட்டில் ஆழமான தாக்கத்தை ஏற்படுத்தியது. அரசியலும், சினிமாவும் மக்களின் வாழ்க்கையில் இரண்டற கலந்து நின்றன.

**சினிமாத் தொழில் ஓர் பெரும் வணிகம்**

1931இல் வெளிவந்த 'காளிதாஸ்' எட்டு நாட்களில் எட்டாயிரம் ரூபாய் செலவில் தயாரிக்கப்பட்டு எழுபத்து மூவாயிரம் ரூபாய்க்கு விற்பனை ஆகி சாதனை புரிந்தது. இந்தக் குறுகிய கால வணிகமும் அதிக லாபமும் பெரும் பணம் படைத்தவர்களையும் பிற தொழில் புரிபவர்களையும் சினிமாத் தயாரிப்பில் ஈடுபட ஆர்வத்தை உண்டாக்கியது.[7]

1931ல் துவங்கி 1990 வரை 5000 படங்கள் தமிழ்த் திரையுலகில் தயாரிக்கப்பட்டன என்பதை மலையாள மனோரமா - 2000 எனும் பத்திரிக்கைச் செய்தி உறுதிப்படுத்துகிறது.

**ஆரம்பக்கால சினிமாக் கதைகள்**

1916 ஆம் ஆண்டிலிருந்து 1932 வரை தென்னிந்தியாவில் நூற்றி எட்டுப் பேசாத படங்கள் உருவாக்கப்பட்டன. இவற்றில் பெரும்பான்மையான படங்கள் புராண இதிகாசக் கதைகளைக் கொண்டிருந்தன. காரணம் ஒலியில்லை, மொழியில்லை. எனவே மக்களுக்கு கர்ண பரம்பரையாக தெரிந்தகதைகளையே படமாக்கினார்கள். சர்க்கஸ், ஸ்டண்ட் படங்களை மக்கள் விரும்பி பார்த்தனர். பாட்லிங் மணி, ஸ்டண்ட் ராஜு, பி.கே. ராஜா சாண்டோ போன்ற நடிகர்கள் பிரபல கதாநாயகர்களாக விளங்கினார்கள். அக்காலத்தில் இருந்த ஏராளமான நாடக நடிகர்கள் பாடத் தெரிந்தவர்கள். ஆனால் ஒலியில்லாத காரணத்தால் அவர்களால் சினிமாவில் நடிக்க முடியவில்லை.[8]

1931 ஆம் ஆண்டில் துவங்கி 1935 ஆம் ஆண்டு வரை வெளிவந்த பேசும் படங்கள் மொத்தம் ஐம்பத்து ஒன்பது ஆகும். அவற்றில் மூன்று படங்கள் தவிர மற்றவை அனைத்தும் புராண இதிகாசக் கதைகளை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டு வெளியிடப்பட்டன. 'மேனகா', 'டம்பாச்சாரி' மற்றும் 'ராஜாம்பாள்' ஆகியன சமூகக் கதைகளை களமாகக் கொண்டு வெளிவந்தவைகள் ஆகும்.[9]

பேசாத சினிமாக்கள் பேச ஆரம்பித்ததும் பாடத் தெரிந்த நாடக நடிகர், நடிகைகள் சினிமாவை நோக்கி படையெடுத்தனர். அவ்வாறு 1931 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 31 ஆம் தேதி வெளியிடப்பட்ட 'காளிதாஸ்' எனும் திரைப்படத்தில் முதன் முதலில் தமிழில் பேசி, பாடி, நடித்த பெருமை நடிகை டி.பி. ராஜலஷ்மிக்கு கிடைத்தது.[10]

‘காளிதாஸ்’ வெளிவந்த பின் பாடும் நாடக நடிகர்கள், பாடலாசிரியர்கள், நாடக இசைக் குழுவினர் ஆகியோரை திரையுலகம் தேடிப் பிடித்து வாய்ப்புக்களை வழங்கியது.[11]

1934 ஆம் ஆண்டில் அந்தத் தேடலில் கிடைத்தவர்தான் தமிழ்த் திரையுலகின் முதல் சூப்பர் ஸ்டார் எம்.கே. தியாகராஜ பாகவதர். ‘பவளக்கொடி’ என்ற நாடகத்தில் நடித்தார். அந்த நாடகத்தை திரைப்படமாக தயாரித்தவர்கள் காரைக்குடி அழ.ராம.அழகப்பச் செட்டியாரும், லெட்சுமணன் செட்டியாரும் ஆவார்கள். நாடகத்தில் நடித்த தியாகராஜ பாகவதரையும், நடிகை எஸ்.டி. சுப்புலட்சுமியையும் படத்திலும் நடிக்க வைத்தவர் இயக்குனர் கே.சுப்ரமணியம்.[12] பாகவதர் போல் பாடவும், நடிக்கவும் மேலும் அனைத்து சண்டைப் பயிற்சிகளும் பயின்ற நடிகர் பி.யூ. சின்னப்பா 1936இல் நாடகத்திலிருந்து ‘சந்திரகாந்தா’ எனும் திரைப்படத்தின் மூலம் தமிழ்த் திரையுலகில் நுழைந்தார்.[13]

தியாகராஜ பாகவதர், பி.யூ. சின்னப்பா இருவரின் பாடல்களுக்கு மிகச் சிறந்த வரவேற்பு கிடைத்து வந்ததால் இருவரும் நடித்த படங்களும் பெரு வெற்றிகளைக் குவித்தன. பாடல்கள் பாடத்தெரிந்தவர்கள்தான் திரையுலகில் புகழ்பெற முடியும் என்ற நிலை அன்றைய காலக் கட்டத்தில் இருந்தது. 1952ல் அந்த நிலை முற்றிலும் மாறியது.

**‘பராசக்தி’ – ‘மனோகரா’**

1952 ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள் 17 ஆம் நாள் தீபாவளி தினத்தன்று ‘பராசக்தி’ வெளிவந்தது. திரைக்கதை, வசனம் மு. கருணாநிதி எழுதினார். படப்பிடிப்பு முதல் நாளில் சிவாஜிகணேசன் பேசிய முதல் வசனங்கள் ‘சக்சஸ்’, ‘சக்சஸ்’. அது பலித்தது. ‘பராசக்தி’ மாபெரும் வெற்றி பெற்றது.

‘பராசக்தி’யில் சிவாஜி கணேசன் என்ற புதிய நடிகர் கதாநாயகனாக நடித்திருக்கிறார். இதுபோல வேறு யாராலும் இவ்வளவுச் சிறப்பாக நடிக்க முடியாது. குரல் சிம்மக்குரல்தான். வசனம் என்றால் இதுவல்லவா வசனம். தீப்பொறி பறக்கிறது. அதிலும் நீதிமன்றக் காட்சி பிரமாதம். அது சினிமா ரசிகர்கள் ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்ட கருத்துக்கள் ஆகும்.[14]

தமிழ்ச்சினிமாவின் எண்பது ஆண்டு கால வரலாற்றில் முதல் படத்திலேயே 'சூப்பர் ஸ்டார்' ஆனவர்கள் இருவர். முதலாமவர் எம்.கே. தியாகராஜபாகவதர் (பவளக்கொடி, 1934) இரண்டாமவர் சிவாஜிகணேசன்.[15] தன் காந்தர்வக் குரலில் பாடிய பாடல்களினால் பாகவதர் சிகரம் தொட்டார். சிவாஜிகணேசன் தன் சிம்மக்குரலில்,

> "உன் பலாத்கார அணைப்பிலே" சிக்கிய என் தங்கை ஆயிரம் முறை இந்த பராசக்தியை அழைத்தாளாமே ஓடி வந்து அபயம் கொடுத்தாளா? நாட்டிலே போலிப் பூசாரிகளை நடமாடவிட்டது யார் குற்றம் கடவுளின் குற்றமா? அல்லது கடவுளின் பெயரைச் சொல்லி உயிர் வளர்க்கும் கயவர்களின் குற்றமா?[16]

என்று பேசிய வசனங்களினால் சிகரம் தொட்டார்.

கருணாநிதியின் கூர்மையான கருத்தாழமுள்ள வசனங்களை சிவாஜிகணேசன் தன் சிறப்பான நடிப்புடன் வசனங்களை பேசியவிதத்திலும், தமிழை உச்சரித்தவிதத்திலும் படத்திற்கு பெரு வெற்றியைத் தேடித் தந்தார். தியேட்டர்களில் நாளுக்கு நாள் கூட்டம் பெருகியது. காலை ஆறு மணிக்கே வரிசையில் நின்றனர். கொட்டகை நிறைந்த காட்சிகளாக படம் ஓடியது. 'பராசக்தி' படம் பார்க்க வரும் கூட்டம் பெருகியதற்கு இணையாக படத்திற்கான எதிர்ப்பும் வலுத்தது. படத்தில் நாத்திகக் கருத்துக்கள் அதிகம் இருப்பதாக பத்திரிக்கைகளும் எதிர்ப்பு தெரிவித்தன. படத்துக்கு தடை வருவதாக வதந்தி பரவியது.[17]

"The film was accused of trying to portray Brahmins in poor light. Abuse of Hindu Customs and religious practices evoked strong protests from the Hindu Orthodoxy. The Then Chief Minister of Madras Chakravarthi Rajagopalachari was unhappy with the extremely provocative nature of the film. The State Government unsuccessfully requested the Union Government to reconsider this film's certification".[18]

மாநில அரசின் வேண்டுகோளை ஏற்று தலைமை தணிக்கை அதிகாரி ஸ்டாலின் சீனிவாசன் படத்தைப் பார்த்து படம் நன்றாக இருப்பதாக பாராட்டினார்.[19]

“தீபாவளி வந்தது. அத்துடன் நேஷனல் பிக்சர்ஸின் ஓர் அபூர்வத் தயாரிப்பான ‘பராசக்தி’ படமும் வந்தது. சிவாஜி கணேசன் என்ற பெயரில் நாடக மேடையில் புகழ்பெற்ற - பட உலகின் புது அழைப்பான கணேசன் திரையில் ரசிகர்களின் முன்னே தோன்றினார்.

..நாடகத்தில் முகபாவ விளக்கங்கள் அதிகம் தேவையில்லை... ஆனால் சினிமாவில் முகபாவ விளக்கம் ரொம்பவும் அவசியம். சிவாஜிகணேசன் அதிலே மகத்தான வெற்றி பெற்றிருக்கிறார்.

..வசனம் பிரமாதமாக அமைந்துவிட்டால் மட்டும் போதாது. அதைச் சோபிக்கச் செய்யும் பொறுப்பு நடிகர்களின் கையில்தான் இருக்கிறது. .. தன் உச்சரிப்பு மற்றும் நடிப்பின் மூலம் வசனத்திற்கு சிறப்பளித்திருக்கிறார் கணேசன்.[20]

பராசக்தி படத்தின் வசனங்களையும், கதைப் போக்கினையும் கண்டித்து ‘தினமணி கதிர்’ இதழ் கடுமையாக விமர்சனம் எழுதியது. அட்டையில் பராசக்தியைக் கிண்டல் செய்வது போல் கேலிச்சித்திரம் வரையப்பட்டிருந்தது. அதன் தலைப்பு ‘பரப்பிரம்மம்’ என்பதாகும். இந்த விமர்சனம் குறிப்பாக கருணாநிதியைத் தாக்கி எழுதப்பட்டிருந்தது. அதற்கு உடனடியாக அவர் ‘பரப்பிரம்மம்’ என்ற தலைப்பில் ஒரு நாடகம் எழுதி அதற்குப் பதிலடி கொடுத்தார். அதில் அவரும் சிவாஜிகணேசனும் நடித்தனர்.[21]

‘பராசக்தி’ சிறப்புச் செய்திகள்

- முதன் முதலாக வெளிநாட்டில் வெள்ளி விழாவைக் கடந்து ஓடிய தமிழ்ப் படம் ‘பராசக்தி’. கொழும்பு - மைலன் தியேட்டர் - 294 நாட்கள்.

- கதை, வசனம், இசைத்தட்டாகவும், புத்தகமாகவும் வெளிவந்த முதல் சமூகப்படம் - ‘பராசக்தி’

- அறுபதுக்கும் மேற்பட்ட அரங்குகளில் 50 நாட்களைக் கடந்த முதல் தமிழ்ப்படம் ‘பராசக்தி’.[22]

1952ல் வெளிவந்த மொத்தம் முப்பது படங்களில் பெரும் வெற்றி பெற்றது ‘பராசக்தி’ மட்டும்தான். அந்த வருடம் வெளிவந்த படங்களில் எம்.கே. தியாகராஜ பாகவதர், கே.ஆர். ராமசாமி, எம்.கே. இராதா, எம்.ஜி. இராமச்சந்திரன், டி.ஆர். மகாலிங்கம், என்.டி. ராமாராவ், பிரேம்நசீர் போன்ற முன்னணி நடிகர்கள் நடித்தனர்.[23]

திரைப்பட ஊடகத்தின் மூலமாகத் தங்களின் கொள்கைகளை பரப்புவதற்கு திராவிட முன்னேற்றக் கழகம் எடுத்த முயற்சிக்கு குறிப்பிடத்தக்க வெற்றியை 'பராசக்தி' தேடித் தந்தது. 'பராசக்தி'யில் தன் அற்புதமான நடிப்பாற்றலைக் காட்டிய சிவாஜி கணேசன். ஹாலிவுட் நடிகர் ஸ்பென்சர் ட்ரேசி (Spencer Tracy)க்கு இணையாக வைத்து ஒப்பிடப்பட்டார்.[24]

**மனோகரா**

1895 ஆம் ஆண்டில் 'மனோகரா'வை நாடகமாக எழுதியவர் பம்மல் சம்பந்த முதலியார்.[25] 1936இல் 'மனோகரா'வை திரைப்படமாக பாரத் பிலிம்ஸ் என்ற நிறுவனம் தயாரித்தது. மனோகரனாக நடித்தவர் பம்மல் சம்மந்த முதலியார். ஆனால் படம் தோல்வியைத் தழுவியது.[26] அந்த நாடகத்தை அரங்கேற்றம் செய்த நாடகக் கம்பெனிகள் பல. 'மனோகரா' கதாபாத்திரத்தை நாடகங்களில், பம்மல் சம்பந்த முதலியார், டி.கே. சண்முகம், எம்.ஜி. இராமச்சந்திரன், ஆர்.எஸ். மனோகர், எஸ்.எஸ். இராஜேந்திரன் போன்றவர்கள் ஏற்று நடித்தனர்.[27]

சிவாஜிகணேசன் நாடக உலகில் முதன்முதலாக ராஜபார்ட் வேஷம் ஏற்றது மனோகரன் கதாபாத்திரம்தான். மேலும் மனோகரா நாடகத்தில் பத்மாவதி, புருசோத்தமன், வசந்தசேனன், ராஜபிரியன் போன்ற அனைத்து முக்கிய வேடங்களையும் ஏற்று நடித்தார்.[28]

1954 ஆம் ஆண்டு மார்ச் திங்கள் மூன்றாம் நாள், மனோகர் பிக்சர்ஸ் என்ற நிறுவனப் பெயரில் தயாரித்து வெளியிட்டவர் ஜூபிடர் பிக்சர்ஸ் பங்குதாரர்களில் ஒருவரான சோமசுந்தரம். தமிழ், தெலுங்கு, இந்தி என மூன்று மொழிகளில் இயக்கியவர் எல்.வி. பிரசாத்.[29]

பராசக்திக்குப் பின் இரண்டு வருடங்களில் பன்னிரண்டு படங்கள் சிவாஜி கணேசன் நடித்து வெளிவந்தன. அவற்றில் மீண்டும் கருணாநிதியின் திரைக்கதை வசனத்தில் சிவாஜி கணேசன் நடித்து வெளிவந்த வெற்றிப் படம் 'மனோகரா'. அது சிவாஜி கணேசனை இமாலயப் புகழுக்கு உயர்த்தியது.

**மனோகரா வசனங்கள்**

தர்பார் மண்டபத்தில்

"மனோகரன் மன்னிப்புக் கேட்க வேண்டும். ஆம். அரை நொடிக்குள். அரை நொடியென்ன, அதற்குள்ளாகவே கேட்கிறேன். ஆனால் யாரிடம் கேட்க வேண்டும் தெரியுமா, கூவும் குயில், குதிக்கும் மான், கோமேதகச் சிலை என்றெல்லாம் உம்மால் புகழப்படும் அந்தக் கோணல்காரியின் கொள்ளிக் கண்களை, கூரிய நாக்கை, என் கூர்வாளுக்கு இரையாகத் தந்துவிட்டு, எதிர்த்தால் உம்மையும், உமக்குப் பக்கத் துணையாக வந்தால் இந்தப் பட்டாளத்தையும் சூறையாடிவிட்டு சூன்யக்காரிக்கு ஆலவட்டம் சுழற்றியவர்களை சுடுகாட்டுக்கு அனுப்பிவிட்டேன் என்று சூழும் புகழுடன், சுழலும் வாளுடன் என் அன்னையிடம் ஓடிச்சென்று மன்னிப்புக் கேட்க வேண்டும். நிறைவேற்றட்டுமா அந்த உத்தரவை தயார்தானா?....

"என் தமிழ்த்தாயே இன்பச் சோலையின் இடையில் தோன்றிய கணவாய் மூலமாக இந்த பூமியில் குடியேறி நிலை பெற்றுவிட்ட குள்ளநரி இன்று ஆட்சி பீடம் ஏறுவதற்கு அச்சாரம் போட்டுவிட்ட அக்கிரமத்தைக் கண்டபிறகாவது ஆணையிடுங்கள் தாயே.....

மேற்கூறப்பட்டுள்ள வசனங்கள் கைபர் கணவாய் வழியாக குடியேறிய ஆரியர்கள் பற்றியும், அன்றைய நடுவண் அரசு கொண்டு வர இருந்த இந்தி மொழித் திணிப்பையும் சாடுகின்ற வசனங்களை கருணாநிதி எழுதி சிவாஜிகணேசன் ஆவேசமாய் பேசினார்.[30]

**மனோகரா சிறப்புச் செய்திகள்**

- 'பராசக்தி' படத்தில் சிவாஜி கணேசனின் நடிப்பைப் பார்த்துவிட்டு அவரையே மனோகரனாக ஒப்பந்தம் செய்தார் தயாரிப்பாளர்.
- இப்படத்தின் மூலம் 'கலைஞர்' எனும் பட்டம் கருணாநிதிக்குக் கிடைத்தது.
- சிவாஜி கணேசன் நடித்த முதல் சரித்திர கதையமைப்புக் கொண்ட படம்.
- தமிழ், தெலுங்கு, இந்தி என மும்மொழியிலும் 'மனோகரா'வாக சிவாஜி கணேசன் நடித்து ஒரே ஆண்டில் வெளியானது. இதில் தமிழ், தெலுங்கு, இந்தி மூன்று மொழிகளிலும் சிவாஜி சொந்தக் குரலில் பேசி நடித்தார்.
- மனோகரா'வின் வசனங்களும் கிராமபோனில் (Gramaphone Record) வெளியிடப்பட்டு பிரபலமடைந்தது.[31]

**பராசக்தி - மனோகரா - வெற்றிக்கு காரணம் யார்?**

பராசக்தி - மனோகரா படங்களின் வெற்றிக்கு யார் காரணம்? கருணாநிதியின் வசனங்கள்தான் என ஒரு தரப்பினரும், வசனங்கள் பேசிய சிவாஜி கணேசன்தான் என மற்றொரு தரப்பினரும் அக்காலத்தில் விவாதத்தில் ஈடுபட்டனர்.

"சிவாஜி கணேசன் திரைப்படத் துறைக்கு அறிமுகம் ஆவதற்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன்பே திரைக்கதை வசனங்களை பல படங்களுக்குச் சிறப்பாக எழுதினார் கருணாநிதி. 'அபிமன்யு' (1948) என்ற படத்தில் 'ஒடிந்த வாளானாலும் போதும் ஒரு வாள் கொடுங்கள்' என்று எழுதினார். 'நாம்' (1953) படத்தில் 'ஆச்சரியக் குறிக்கும் கேள்விக் குறிக்கும் அதிக வித்தியாசமில்லை. கேள்விக் குறி சற்று வளைந்தால் அது அருவாளாக மாறிவிடும்' போன்ற வசனங்களைக் குறிப்பிடலாம். ஆனால் அந்த வசனங்கள் மக்கள் மனதில் இடம் பிடிக்கவில்லை. சிவாஜி கணேசனின் கம்பீரமான குரல், தமிழ் உச்சரிப்பு, வசனம் பேசிய விதம், சிறந்த நடிப்பாற்றல் இவைகள்தான் கருணாநிதி எழுதிய பராசக்தி, மனோகரா படங்களுக்கு வெற்றியைத் தேடித் தந்தன என்பது நிதர்சனமான உண்மை.[32]

**வில்லன் வேடங்களில் சிவாஜி கணேசன்**

தமிழ்த் திரையுலகின் சூப்பர் ஸ்டார் என்ற தகுதியை அடைந்தபின் தன் நடிப்பாற்றலைக் காட்டவேண்டும் என்பதற்காக வில்லன் வேடங்களை சிவாஜி கணேசன் ஏற்று நடித்தார். திரும்பிப்பார் (1953), அந்த நாள் (1954), துளிவிஷம் (1954), கூண்டுக்கிளி (1954), பெண்ணின் பெருமை (1956), ரங்கோன் ராதா (1956) போன்ற படங்கள் சான்று. இவற்றில் 'துளிவிஷம்' படத்தில் அக்காலத்தில் பெரிய நடிகராக விளங்கிய கே.ஆர். ராமசாமி கதாநாயகனாக நடித்தார். 'கூண்டுக்கிளி' படத்தில் எம்.ஜி. இராமச்சந்திரன் கதாநாயகனாகவும், சிவாஜிகணேசன் வில்லனாகவும் நடித்தார்கள். இருவரும் இணைந்து நடித்த ஒரே படமாகும் அது. தான் வில்லனாக நடித்தது பற்றி சிவாஜி கணேசன், "எனக்கு என் மேல் உள்ள நம்பிக்கையாலும், என் நடிப்பாற்றலில் உள்ள பிடிப்பாலும், என்னுடைய நடிப்பு நிச்சயமாக மக்களைக் கவர்ந்து அவர்களும் ஆதரிப்பார்கள் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையாலும், வில்லன் பாத்திரத்தை ஏற்று நடித்தேன். வில்லனாக இருந்தாலும் சிவாஜி கணேசன் நன்றாக நடித்தார் என்று சொல்ல வைத்துவிட்டால், மக்கள் பாராட்டுவார்கள் என்றார்.[33]

ஜப்பான் நாட்டு இயக்குனர் அகிரோ குரசோவாவின் படமான 'ரோஸமானின்' திரைக்கதை தழுவலில் ஏ.வி.எம். நிறுவனம் எடுத்த படம் 'அந்த நாள்' ஆகும். அந்தப் படத்தை முதலில் 'கல்கத்தா விசுவநாதன் என்ற நடிகரை வைத்து எடுத்து முடிக்கப்பட்டிருந்தது. ஆனால் மெய்யப்ப செட்டியார், அதை வெளியிடாமல் வைத்துவிட்டு சிவாஜியை வைத்து எடுத்து முடித்தார்.[34]

'பராசக்தி' படமாக்கப்படும்போது சிவாஜியை நீக்கிவிட்டு கே.ஆர். ராமசாமி, டி.ஆர். மகாலிங்கம் போன்ற நடிகர்களை வைத்து எடுக்கச் சொன்ன மெய்யப்பச்செட்டியார், 'அந்த நாள்' படத்தை சிவாஜியை வைத்துத்தான் எடுக்க வேண்டும் என உறுதிபடக் கூறினார். அந்த மாற்றத்திற்கு மெய்யப்ப செட்டியார் தந்த பதில், 'பராசக்தி' படத்தின்போது சிவாஜியின் நடிப்புத் திறமையைப்பற்றி தெரியாமல் கூறினேன். இப்போது தெரிந்து கொண்டேன் என்று கூறினார்.[35] 'அந்த நாள்' பாட்டு, நடனம் இல்லாமல் எடுக்கப்பட்ட படம். சிவாஜி கணேசன் ஹாலிவுட் நடிகர்களுக்கு இணையாக நடித்தார். அப்படத்திற்கு தேசீய விருது கிடைத்தது.

**ஓரங்க நாடகம்**

ஓரங்க நாடகம் என்பது எடுக்கப்படுகின்ற படத்தின் கதையில் ஒரு நாடகம் நடத்தப்படுவது போல் காட்சி இருக்கும். அம்மாதிரி ஓரங்க நாடகங்களில் தமிழ், ஆங்கிலம் மற்றும் வடமொழிப் புராண, இதிகாச கதைகள் மற்றும் சரித்திரக் கதைகளுள் ஒரு சிறிய ஓரங்க நாடகங்கள் நடத்தப்படும். அம்முறை 1950-1960 காலக்கட்டத்தில் மிக அதிகமாக இடம் பெற்றன. மக்களும் அதை பெரிதும் விரும்பி வரவேற்றனர். சிவாஜி கணேசன் அதிலும் தன் சிறப்பான நடிப்பாற்றலைக் காட்டினார். அன்பு (1953) எனும் திரைப்படத்தில் முதன்முதலாக ஷேக்ஸ்பியரின் 'ஒத்தல்லோ' கதாபாத்திரத்தில் நடித்தார். அதே நாடகம் 'இரத்தத் திலகம்' (1963) எனும் படத்தில் இடம் பெற்றது. இரத்தத் திலகம் படத்தில் சிவாஜி கணேசனின் கறுப்புநிற ஒப்பனையோடு, வங்காள நடிகர் உத்பல்தத்தின் ஆங்கில வசனங்களுக்கு வாயசைத்து நடித்த விதம் மேல்நாட்டு நடிகர்களின் நடிக்கும் முறையை நினைவுப்படுத்தியது.[36]

"இல்லற ஜோதி" (1953) எனும் படத்தில் கவிஞர் கண்ணதாசன் எழுதிய வசனங்களை பேசி மொகலாயப் பேரரசர் அக்பரின் மகனாக சிவாஜிகணேசன் நடித்தார். அன்றைய காலகட்டத்தில் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் மத்திய அரசை அடிக்கடி மேடையிலும், எழுத்திலும் குறிப்பிடும் 'டெல்லி ஏகாதிபத்தியம்' என்ற வார்த்தைகள் இடம் பெற்றிருந்தன.[37]

‘ராஜாராணி’ (1956) எனும் திரைப்படத்தில் இரண்டு ஓரங்க நாடகங்கள் இடம் பெற்றன. இரண்டும் கருணாநிதியால் எழுதப்பட்டவை. ஒன்று ‘சேரன் செங்குட்டுவன்’ - சங்க காலத்தில் தமிழ் மன்னர்களின் வீரத்தையும், தமிழ் மக்களின் வீர வாழ்க்கையும் வெளிப்படுத்தும் நாடகம். அந்த நாடகத்தின் பதினாறு பக்க வசனங்களை சிவாஜிகணேசன் ஒரே ஷாட்டில் பேசி முடித்தார். படச்சுருள் 810 அடி நீளத்தில் பதிவாகி இருந்தது. இது ஒரு உலகச் சாதனையாகும்.[38] ஆனால் அதனை உலகச் சாதனையாக பதிவு செய்ய அக்காலத்தில் யாரும் முயற்சி செய்யவில்லை.

மற்றொன்று, திராவிட இயக்கத்தின் நிறுவனரான ஈ.வெ. இராமசாமியை நினைவுப்படுத்தும் வகையில் ஒப்பனையிடப்பட்டு கிரேக்க நாட்டின் தத்துவ மேதை ‘சாக்ரடீஸ்’ வேடத்தில் சிவாஜி கணேசன் நடித்தார்.[39]

அன்னையின் ஆணை (1958) என்ற படத்தில் இடம்பெற்ற ஓரங்க நாடகத்தில் ‘சாம்ராட் அசோகன்’ வேடத்தில் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்களில் ஒருவரான முரசொலி மாறன் வசனங்களை பேசி சிவாஜிகணேசன் நடித்தார்.

‘ராமன் எத்தனை ராமனடி’ (1970) என்ற திரைப்படத்தில் மராட்டிய வீரர் சிவாஜியாக சிவாஜிகணேசன் நடித்தார். வசனங்களை எழுதியவர் கவிஞர் கண்ணதாசன்.[40]

‘எங்கிருந்தோ வந்தாள்’ (1970) எனும் திரைப்படத்தில் சாகுந்தலை கதையை இசைக் காவியமாக கவிஞர் கண்ணதாசன் எழுதியிருந்தார். அதில் சிவாஜிகணேசன் துஷ்யந்தன் வேடத்தில் நடித்தார், வசனங்கள் இல்லை.

‘சொர்க்கம்’ (1970) எனும் திரைப்படத்தில் ரோமபுரிச் சக்கரவர்த்தி ஜூலியஸ் சீசராக சிவாஜி கணேசன் நடித்தார். வசனம் எழுதியவர் சக்தி கிருஷ்ணசாமி. இந்தக் கதாபாத்திரத்தில் சரித்திர கால ஜூலியஸ் சீசருக்கு இருந்த வலிப்பு நோயை இறக்கும் தருவாயில் வெளிப்படுத்தி நடித்து இருந்தார்.[41]

‘ராஜபார்ட் ரங்கதுரை’ (1979) நாடக உலகில் தான் சந்தித்த இன்ப, துன்பங்களை எடுத்துக் காட்டுவதற்காக எடுக்கப்பட்ட இப்படத்தில் நாடக நடிகராக நடித்த சிவாஜி கணேசன், மூன்று ஓரங்க நாடகங்களிலும் நடித்தார். ஷேக்ஸ்பியரின் ‘ஹேம்லட்’ கதாபாத்திரமாகவும், விடுதலைப் போராட்ட வீரர்களான ‘கொடிகாத்த குமரன்’ மற்றும் ‘பகத்சிங்’ வேடங்களில் நடித்தார். அந்த நாடகங்களுக்கு வசனம் எழுதியவர் பாலமுருகன்.[42]

**இரண்டு, மூன்று மற்றும் ஒன்பது வேடங்கள்**

இரண்டு வேடங்களில் நடிப்பது அக்காலத்தில் சாதனையாக இருந்தது. கதாநாயகன் ஒருவர் தமிழ் சினிமாவில் முதன் முதலில் இரட்டை வேடங்களில் நடித்தவர் பி.யூ. சின்னப்பா, படம் உத்தமபுத்திரன் (1940).[43] அபூர்வ சகோதரர்கள் (1949) என்ற படத்தில் நடிகர் எம்.கே. ராதா இரட்டை வேடங்கள் ஏற்று நடித்தார்.[44] மூன்றாவது நடிகராக இரட்டைவேடங்களில் தமிழ்த் திரையுலகில் நடித்தவர் சிவாஜி கணேசன். உத்தமபுத்திரன் (1958) என்பது படத்தின் பெயர். சின்னப்பா, ராதா, கணேசன் நடித்த மூன்று படங்களிலும் உருவ ஒற்றுமை இருந்தது. காரணம் கதையின்படி ஒன்றாக பிறந்த சகோதரர்கள் நேர்மாறான குணங்களைக் கொண்டிருந்தனர். ஆனால் பிற நடிகர்கள் தோற்றத்தில் ஒரே மாதிரியாக தோன்றிப் பேசும் வசனங்களின் அர்த்தங்களை வைத்து வேடத்தின் தன்மையை ரசிகர்கள் புரிந்து கொண்டார்கள். ஆனால் சிவாஜிகணேசன் கண்களினாலும், வசனம் பேசும் முறையிலும், உடல் மொழியினாலும் வேறுபாடுக் காட்டி நடித்தார். வித்தியாசமான முறையில் நடனம் ஆடினார்.[45]

பலே பாண்டியா (1962) என்ற படத்தில் ஒரு அப்பாவி, ஒரு முரடன், ஒரு விஞ்ஞானி என மூன்று வேடங்கள் ஏற்று நடித்தார். அந்தப்படத்தில் நடிகர் எம்.ஆர். ராதா இரண்டு வேடங்களில் நடித்தார். அந்தப்படம் பதினொரு நாட்களில் எடுக்கப்பட்டது. அக்காலத்தில் அது ஒரு உலக சாதனையாகும்.[46]

'தெய்வமகன்' 1969 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள், ஐந்தாம் நாள் வெளிவந்தது. அப்படத்தை தயாரித்தவர் சிவாஜி கணேசனின் நண்பர் பெரியணன் என்பவர் ஆகும். அப்படத்தின் கதை 'உல்கா' என்ற வங்காள நாடகத்தின் தழுவல். அந்தக் கதையை ஜி.வி. அய்யர் என்பவர் 'தாயின் கருணை' என்ற தலைப்பில் நடிகர் முத்துராமன், நடிகர் கல்யாணகுமார் போன்றவர்களை வைத்து எடுத்தப் படம் தோல்வி கண்டது. இயக்குநராக பொறுப்பேற்ற ஏ.சி. திருலோகசந்தர் அக்கதையைக் கவனத்துடன் கையாள நினைத்தார். படத்தின் கதைப்படி ஒரு தந்தைக்கு இரண்டு மகன்கள் வேடத்தில் நடிக்க இரண்டு இளம் வயது நடிகர்களைத் தேடினார். ஆனால் சிவாஜி கணேசன் தந்தை, மகன்கள் இருவர் என மூன்று வேடங்களையும் தானே ஏற்று நடித்து, வெவ்வேறு முகபாவங்களையும், உடல்மொழிகளையும் காட்டி வெற்றி பெறுவேன் என்ற சவாலுடன் நடித்தார். படம் பெரிய வெற்றி பெற்றது. படத்தின் வசனங்களை ஆரூர்தாஸ் எழுதினார். பாடல்களை கண்ணதாசன் எழுதி எம்.எஸ். விஸ்வநாதன் இசையமைத்தார். அந்த ஆண்டுக்கான இந்தியாவிலிருந்து சிறந்த வெளிநாட்டு

பட வரிசையில் ஆஸ்கார் விருதுக்கு பரிந்துரை செய்து அனுப்பப்பட்ட முதல் தமிழ்படம் தெய்வமகன் ஆகும். தமிழக அரசின் மூன்றாவதுச் சிறந்த படத்திற்கானப் பரிசு பெற்றது. சிவாஜிகணேசன் சிறந்த நடிகருக்கான விருதினைப் பெற்றார்.[47]

ஆனந்த விகடன் ஒரு நடிகரின் பல வேடங்களை குழப்பம் இல்லாமல் எடுத்திருப்பதே ஒரு நல்ல வெற்றியாகும். படத்தினை தயாரித்தவர்கள் ஒரே தூணில் ஒரு அரங்கத்தை கட்டியிருக்கிறார்கள். அந்த ஒரு தூணாக சிவாஜிகணேசன் விளங்கினார். விஜய் என்ற இரண்டாவது மகன் வேடத்தை மிக அழகாகவும் நேர்த்தியாகவும் செய்து ஒரு சாதனை செய்தார் என்று அதன் விமர்சனத்தில் குறிப்பிட்டது.[48]

நவராத்திரி

நாடக உலகில் இருந்தபோது சிவாஜிகணேசன் ‘டம்பாச்சாரி’ என்ற நாடகத்தைப் பார்த்தார். அதில் நடித்த சாமண்ணா ஐயர் பதினொரு வேடங்களை ஏற்று நடித்தார். அவர் போல் தாமும் பல வேடங்களில் எதிர்காலத்தில் நடிக்க வேண்டும் என்ற உறுதி கொண்டார். பிற்காலத்தில் பிரபல தயாரிப்பாளராக, இயக்குநராக, கதை மற்றும் திரைக்கதை, வசன கர்த்தாவாக விளங்கியவர் ஏ.பி. நாகராஜன். அவர் டி.கே. சண்முகம் நடத்திய மதுரை ஸ்ரீ பாலஷண்முகானந்த சபா குழுவில் நடித்து வந்தபோது பார்த்து ரசித்த நாடகங்களில் டம்பாச்சாரியும் ஒன்று. எனவே நாகராஜனும் சிவாஜி கணேசனும் இணைந்து உருவாக்கிய படம் ‘நவராத்திரி’ (1964) ஆகும்.[49] அந்தப் படத்தில் அற்புதம், பயம், கருணை, கோபம், சாந்தம், அருவருப்பு, சிங்காரம், வீரம் மற்றும் ஆனந்தம் எனும் ஒன்பது நவரசங்களையும் தன் முகத்தில் காட்டி நடித்தார். இந்த வேடங்களில் சிவாஜி கணேசன் ஒவ்வொரு வகையான உடல்மொழித்திறன் காட்டி நடித்தார்.

அப்படத்தில் சங்கரதாஸ் சுவாமிகள் எழுதிய ‘சத்தியவான் சாவித்திரி’ தெருக்கூத்தினை சிவாஜிகணேசன் நடிகை சாவித்திரியோடு இணைந்து ஆடி நடித்தார். ‘நவராத்திரி’ படம் தெலுங்கில் மொழி பெயர்க்கப்பட்டுத் திரையிடப்பட்டது. நவராத்திரி இந்தியில் Naya Din Naya Raat என்ற பெயரில் எடுக்கப்பட்டது. சஞ்சீவ்குமார் மற்றும் ஜெயபாதுரி நாயகன், நாயகியாக நடித்தார்கள்.[50] “இதுபோன்ற நடிப்பை சினிமாவில் பார்ப்பது மிகவும் அபூர்வமானது” என்று ஆனந்தவிகடன் நவராத்திரியில் சிவாஜிகணேசனின் நடிப்பைப் பற்றி விமர்சனம் எழுதியது.[51] அப்படம் அவர் நடித்த நூறாவது படமாகும்.

திருவிளையாடல்

1965 ஆம் ஆண்டில் ஜூலைத் திங்கள் முப்பத்து ஒன்றாம் நாளில் ‘திருவிளையாடல்’ படம் வெளிவந்தது. 1939இல் நடிகர் டி.கே. சண்முகத்தின் நாடகக்குழுவினருக்காக ‘சூலமங்கலம்’ வைத்தியநாத பாகவதர் சிவபெருமானின் திருவிளையாடல் புராணத்தை அடிப்படையாக வைத்து எழுதிய நாடகத்தின் பெயர் ‘சிவலீலா’. அதில் தருமிக்கு பொற்கிழி அளிப்பது, கால்மாறி ஆடியது. வலை வீசும் கதை, விறகு விற்ற கதை முதலிய திருவிளையாடல்கள் இடம் பெற்றன.[52]

சிவலீலா நாடகம் அந்த சபாவில் அரங்கேற்றம் ஆன சமயத்தில் இளம் நடிகராக சேர்ந்தார் ஏ.பி. நாகராஜன். பிற்காலத்தில் அந்த நாடகத்தை அப்படியே திரைப்படத்திற்கு ஏற்ற வகையில் திரைக்கதை அமைத்து வசனங்களும் எழுதித் தானே தயாரித்து திருவிளையாடல் என்ற பெயரில் படத்தை வெளியிட்டார்.[53]

சிவாஜி கணேசன் நடித்த ‘நான் பெற்ற செல்வம்’ (1956) என்ற சமூகப் படத்தில் வசனகர்த்தாவாக விளங்கிய ஏ.பி. நாகராஜன் சிவனுக்கும், நக்கீரனுக்கும் தமிழ் குறித்து நடக்கும் விவாதம் புரியும் காட்சியை எழுதியிருந்தார். அதில் சிவாஜி கணேசன், நக்கீரனாகவும், சிவனாகவும் இரட்டை வேடங்களில் நடித்திருந்தார். இந்த நாடகம் 1965ல் ஏ.பி. நாகராஜன் தயாரித்த ‘திருவிளையாடல்’ படத்தில் இடம் பெற்ற ‘தருமிக்கு பொற்கிழி’ கொடுக்கும் காட்சியின் முன்னோடியாக விளங்கியது.[54]

திருவிளையாடல் படத்தில் சிவாஜி கணேசன் சிவனாக நடித்தார். ஒவ்வொரு திருவிளையாடலுக்கும் ஏற்ற பாத்திரத்தில் சிறப்பாக நடித்தார். நக்கீரருடன் தமிழின் வளமை குறித்து வாதிடும் காட்சியில் புலவராகவும் தமிழ் இசையின் வளமையை நிலைநாட்டி ஹேமநாத பாகவதரின் கர்வத்தை அடக்கிய விறகு வெட்டியாகவும், மீனவன் மகளாக பிறந்த சக்தியை திருமணம் செய்ய மீனவராகவும், வேடங்களை ஏற்று அற்புத நடிப்பாற்றலை வெளிப்படுத்தினார். பாண்டிய மன்னனுக்காக சிவன் கால் மாறி ஆடிய கதையை சிவசக்தி நடனமாக மாற்றம் செய்யப்பட்டு சிவாஜி கணேசன் சிவதாண்டமும் ஆடி பிரமிக்க வைத்தார்.[55]

‘பராசக்தி’ படத்தின் மூலம் சமூகக் கதைகளின் பக்கம் தமிழ்த் திரையுலக ரசிகர்களை திருப்பிய சிவாஜி கணேசன் இந்தப் படத்தின் மூலம் மீண்டும் பக்திப் படங்களின் பக்கம் ரசிகர்களைத் திருப்பினார் என்று கூறலாம். இது அவரது நடிப்பாற்றலுக்குக் கிடைத்த மாபெரும் வெற்றியாகும்.[56]

"பாட்டும் நானே" என்ற பாடலுக்கு மேடையில் ஐந்து உருவங்களாக சிவாஜி கணேசன் தோன்றி நடித்தார். இக்காட்சி ஜகதலப் பிரதாபன் என்ற படத்தில் பி.யூ. சின்னப்பா ஐந்து உருவங்களாக மேடையில் தோன்றி நடித்த காட்சியை நினைவுபடுத்துவது போல் இயக்குநர் அமைத்திருந்தார்.[57] பாடுதல், வீணை, புல்லாங்குழல், மிருதங்கம் போன்ற இசைக்கருவிகளை வாசிப்பது மற்றும் ஜதி சொல்லுதல் போன்றவற்றை மிகவும் நேர்த்தியாக தானே செய்வது போல் நடித்திருந்தார். இக்காட்சியின் சிறப்பு என்னவென்றால் பி.யூ. சின்னப்பா முறையாக சங்கீதம் படித்தவர், திரையிலும் அவரே பாடினார். ஆனால் சிவாஜிகணேசன் சங்கீதம் கற்று இருந்தாலும் திரையில் பாடுவதில்லை. அந்த நிலையில் திருவிளையாடல் படத்தில் பிறர் பாடிய பாடலுக்கும், ஜதிக்கும் வாயசைத்து திறம்பட நடித்தார். மேலும் வாத்தியக் கருவிகள் வாசித்து பழக்கமில்லாத சிவாஜி கணேசன் மிருதங்கம், புல்லாங்குழல் போன்ற கருவிகளைத் தானே தாளம் தப்பால் வாசிப்பதுபோல் நடித்ததுத் தனிச்சிறப்பு ஆகும். திருவிளையாடல் படத்திற்கு இப்பாடல் காட்சி மிகப்பெரியப் பலமாக அமைந்தது. சிவனாக சிவாஜி கணேசன் தோன்றும் காட்சிகளில் கண்களை இமைக்காமல் நடித்திருந்தார். இது ஒரு குறிப்பிடத்தக்க நடிப்பு ஆகும்.[58]

திருவிளையாடல் படத்தின் பாடல்களை சங்கரதாஸ் சுவாமிகள், கா.மு. ஷெரீப் (பாத்தாபசுமரம், பாட்டும் நானே) கண்ணதாசன் முதலியவர்கள் எழுதினர்.[59] "சமூகப் படங்கள் தமிழ்த் திரையுலகில் ஆக்கிரமித்திருந்த காலத்தில், இதுபோன்ற ஆன்மீகப் படத்தின் வரவு வரவேற்கத் தக்க மாற்றமாகும்" என ஆனந்தவிகடன் எழுதியது.

'சரஸ்வதி சபதம்' (1966) என்ற படத்தில் இரண்டு வேடங்களிலும், திருவருட்செல்வர் (1967), திருமால் பெருமை (1967) என்ற படங்களில் மூன்று வேடங்களிலும் நடித்தார். இம்மூன்று படங்களையும் தயாரித்து, திரைக்கதை வசனம் எழுதி ஏ.பி. நாகராஜன் வெளியிட்டார்.[60]

**இதிகாச கதாபாத்திரங்களில் சிவாஜிகணேசன்**

சிவாஜி கணேசன் முதன்முதலாக இதிகாச பாத்திரமான 'பரதன்' வேடத்தில் 'சம்பூர்ண ராமாயணம்' (1950) என்ற படத்தில் நடித்தார். அந்தப் படத்தை பார்த்த மூதறிஞர் இராஜாஜி 'பரதனைக் கண்டேன்' எனக் குறிப்பிட்டார். பரதன் வேடத்தில் சிவாஜிகணேசன் நடித்த நடிப்பு திரைப்படங்களை அதிகம் பார்க்காத இராஜாஜியை கவர்ந்தது என்பது முக்கியமான விஷயமாகும்.[61]

கர்ணன் 1964 ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் பதினான்காம் நாள் பொங்கலன்று வெளிவந்தது. சில சிங்களப் படங்களை இயக்கிய ஏ.எஸ்.நாகராஜன் எழுதிய திரைக்கதையை வைத்து பி.ஆர். பந்துலுவால் தயாரிக்கப்பட்ட படமாகும். படத்தில் இடம் பெற்ற பன்னிரெண்டு பாடல்கள், மூன்று நாட்களில் எழுதப்பட்டு இசையமைக்கப்பட்டன. 7000 மைல்கள் பயணம் செய்து படப்பிடிப்பு இடங்களைத் தேர்வு செய்தனர். படப்பிடிப்பு மொத்தம் 160 நாட்கள் நடந்தன. போர்க்காட்சிகள் பத்து நாட்களில் 3000 பேர் வேலைசெய்து நான்கு லட்ச ரூபாய் செலவில் ஜெய்ப்பூரில் முடிக்கப்பட்டன.[62]

'கர்ணன்' 2012 ஆம் ஆண்டு மார்ச் 16 ஆம் நாள் மறுவெளியீடு செய்யப்பட்டது. நாற்பது லட்சம் ரூபாயில் ஒலியைச் சரி செய்து Digi Beta – DVC – Prowan File Noise Restoration செய்து சேலம் திருமதி. சாந்தி சொக்கலிங்கம் வெளியிட்டார். இப்படம் 30 திரையரங்குகளில் 25 நாட்களும், 14 திரையரங்குகளில் 50 நாட்களும், 3 திரையரங்குகளில் 75 நாட்களும், இரண்டு திரையரங்குகளில் 150 நாட்களும் ஓடி பெருவெற்றி அடைந்தது. அமெரிக்கா, கனடா, மலேஷியா மற்றும் சிங்கப்பூரில் 36 திரையரங்குகளில் வெளியிடப்பட்டது. ஐந்து கோடி ரூபாய் வசூல் செய்து சாதனை நிகழ்த்தியது.[63]

வீரபாண்டிய கட்டபொம்மன்

1957இல் சிவாஜிகணேசன் ஆரம்பித்த சிவாஜி நாடக மன்றத்தின் சார்பாக வெற்றிகரமாக நடத்தப்பட்டுப் பலராலும் பாராட்டுப் பெற்ற வீரபாண்டிய கட்டபொம்மன் நாடகத்தை தயாரிப்பாளர் பி.ஆர். பந்துலு தனது பத்மினி பிக்சர்ஸ் மூலமாக திரைப்படமாக்க முன் வந்தார்.[64]

வீரபாண்டிய கட்டபொம்மன் படத் தயாரிப்புக்கு இடையூறுகள் பல ஏற்பட்டன. அதில் அரசியல்வாதிகள் தலையீடும் இருந்தன. கண்ணதாசன் தனது சொந்த செலவில் "சிவகங்கைச் சீமை" என்று பெயரிட்டு மருது பாண்டியர்களின் வாழ்க்கை வரலாற்றை இதே காலக்கட்டத்தில் தயாரிக்கத் தொடங்கினார்.[65]

"வீரபாண்டிய கட்டபொம்மன்" படத்தில் வெள்ளையத் தேவனாக முதலில் எஸ்.எஸ். ராஜேந்திரன் ஒப்பந்தம் செய்யப்பட்டிருந்தார். ஆனால் இறுதி நேரத்தில் "சிவகங்கைச் சீமை" படத்தில நடிக்கச் சென்றுவிட்டார். அதனால் அவசரமாக நடிகை சாவித்திரியிடம் சிவாஜி கணேசன் பேசி அவரது கணவர் ஜெமினி கணேசனை அனுப்பச் செய்தார். வெள்ளையத் தேவன் பாத்திரத்தில் ஜெமினி கணேசன் நடித்தார்.[66]

இரண்டு படங்களில் எந்தப்படம் வெற்றியடையும் என்ற விவாதம் திரையுலகில் மட்டுமல்லாமல் வெளி உலகிலும் நடைபெற்றது. இரண்டு படங்களும் படப்பிடிப்பு முடிவுற்ற நிலையில் வெளிவருவதற்கு முன்பே பார்த்த டி.கே. சண்முகம், வீரபாண்டிய கட்டபொம்மன் படத்தை சிவகங்கைச் சீமை முறியடித்துவிடும் என்று பொருள்பட கருத்துக் கூறினார்.[67]

ஏ.வி. மெய்யப்பச் செட்டியார் "இரண்டு படங்களையும் பார்த்தேன். இரு படங்களும் ஒன்றுக்கொன்று போட்டிப் படங்களல்ல. ஒரே வரலாற்றின் தொடர்ச்சி. எனவே வீரபாண்டிய கட்டபொம்மன் வெளிவந்து ஐம்பது நாட்கள் ஆன பிறகு சிவகங்கைச் சீமை வெளியிட்டால் இரண்டுமே வெற்றி பெறும் என்றார். அவரது பேச்சை இரண்டு படங்களின் தயாரிப்பாளர்களும் கேட்கவில்லை. வீரபாண்டிய கட்டபொம்மன் 1959, மேத் திங்கள் ஆறாம்நாள் வெளிவந்தது. சிவகங்கைச் சீமை அதே வருடம், அதே மாதத்தில் பதிமூன்று நாட்கள் கழித்து வெளியிடப்பட்டது. வீரபாண்டிய கட்டபொம்மன் பெரும் வெற்றியடைய சிவகங்கைச் சீமை தோல்வியைத் தழுவியது.[68]

ஆனந்த விகடன் தனது விமர்சனத்தில் "படத்தை பார்த்த ஒவ்வொருவர் இதயத்திலும் நீங்காத இடத்தை இப்படம் பெற்றுவிடும். சிவாஜிகணேசன் மிக நன்றாக நடித்தார். தமிழனாய் பிறந்த ஒவ்வொருவருக்கும் பெருமை தரக்கூடிய படம்" என்று எழுதியது.[69]

வீரபாண்டிய கட்டபொம்மனின் வசனங்களைக் காட்டிலும் சிவகங்கைச் சீமையின் வசனங்களை கண்ணதாசன் மிக அற்புதமாக இலக்கிய நடையில் எழுதியிருந்தார். ஆனால் சிவாஜிகணேசன் கட்டபொம்மன் படத்தின் வசனங்களை மிகத் திறமையாக உணர்ச்சியுடன் பேசியும், வீரம் கொப்பளிக்க நடித்தும் வெற்றி பெறச் செய்தார். அந்த வெற்றி முழுக்க முழுக்க சிவாஜி கணேசன் என்ற தனிப்பட்ட மனிதனையே சேரும் என்பது நிதர்சனமான உண்மை.

அந்த வெற்றிக்கு சிவாஜி கணேசன்.

> "அதெல்லாம் கட்டபொம்மன் எனக்குக் கொடுத்த சிறப்பு. ஏழு வயதில் என்னுள்ளே புகுந்து நான் கட்டபொம்மன் ஆகவேண்டும் என்ற ஆர்வத்திற்கும், அதை வளர்த்துக் கொள்ள நான் எடுத்துக்கொண்ட முயற்சிக்கும் அது ஒரு பரிசு"

என்று கூறினார்.[70]

1960 ஆம் ஆண்டு வீரபாண்டிய கட்டபொம்மன் படம் ஆப்பிரிக்க ஆசிய திரைப்பட விருதுக்காக தேர்வு செய்து இந்திய அரசாங்கத்தால் அனுப்பி வைக்கப்பட்டது. இந்த விழாவில் கலந்துகொள்ள சிவாஜிகணேசன், பி.ஆர். பந்துலு, பத்மினி முதலியவர்கள் எகிப்து நாட்டின் தலைநகரான கெய்ரோவிற்குச் சென்றனர். விழாவில் 1960 ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 15 ஆம் நாள் எதிருதின் தலைநகரான கெய்ரோவில் நடைபெற்ற ஆப்ரிக்க-ஆசியா திரைப்பட விழாவில், ருஷ்ய நாட்டின் "Prince of Samarkand" மற்றும் இந்தியாவின் 'Taj Mahal' என்ற படங்களும் திரையிடப்பட்டு சிறந்த படங்களுக்கான தங்கப் பருந்து விருதுகள் வழங்கப்பட்டன. வீரபாண்டிய கட்டபொம்மன் படம் திரையிடப்பட்டது. ஜாக்சன் துரை - கட்டபொம்மன் சந்திப்புக் காட்சியில் தமிழ்நாட்டில் கைதட்டியது போல் அங்கும் கைதட்டி மகிழ்ந்தார்கள்.[71]

வீரபாண்டிய கட்டபொம்மன் படத்திற்கு சிறந்த நடிகர், சிறந்த இசை, சிறந்த நடனம், சிறந்த கதை என நான்கு 'வெள்ளிப்பருந்து' விருதுகள் தரப்பட்டன. சிறந்த நடிகருக்கான விருதை பெற்றுக்கொள்ள சிவாஜி கணேசன் அழைக்கப்பட்டபோது, உணர்ச்சி வசப்பட்டு மேடையில் மயங்கி விழ இருந்த அவரை நடிகை பத்மினி தாங்கிப் பிடித்தார்.[72] நடிகை பத்மினிக்கு சிறந்த நடிப்புக்கான சான்றிதழ் தரப்பட்டது. படத்திற்கு சிறப்புப் பரிசும் வழங்கப்பட்டது.[73]

ஆப்பிரிக்க - ஆசிய திரைப்படங்களில் சிறந்த நடிகருக்கான விருதை பெற்ற சிவாஜி கணேசன் சர்வதேச அளவில் விருது பெற்ற முதல் இந்திய நடிகர் என்ற பெருமைக்கு உரியவர் ஆனார். சிவாஜி கணேசன் பெற்ற முதல் விருதும் ஆகும்.

கெய்ரோவில் நடந்த விழாவில் தலைமை வகித்து பரிசுகள் வழங்குவதாக இருந்த எகிப்து அதிபர் கமால் அப்தெல் நாசர் (Gamal Abddel Nasser) அன்று விழாவில் கலந்து கொள்ளவில்லை. அரசாங்க விஷயமாக சிரியாவிற்கு சென்றுவிட்டார். அதிபர் நாசரின் மனைவியை அவரது இல்லத்தில் சந்தித்த சிவாஜிகணேசன், அதிபர் இந்தியா வந்தால் தன்னுடைய விருந்தாளியாக கொஞ்ச நேரமாவது இருக்க வேண்டும் என்ற கோரிக்கையை வைத்தார்.[74]

சில மாதங்களில் இந்தியா வந்த அதிபர் நாசரை தன்னுடன் சில மணி நேரங்கள் இருக்க அனுமதியளிக்க பிரதமார் நேருவுக்கு சிவாஜி கணேசன் கடிதம் எழுதி அனுமதி பெற்றார். சிவாஜி கணேசனின் விருந்தாளியாக இருக்க இரண்டு மணி நேரம் இந்திய அரசால் ஒதுக்கப்பட்டது. ஆனால் அதிபர் நாசர் மூன்று மணி முப்பது நிமிடங்கள் வரை இருந்து சிவாஜி கணேசன் அளித்த விருந்தில் கலந்துகொண்டு பெருமைப்படுத்தினார். அதிபர் நாசருக்கு பல உயர்ந்த பரிசுகளை தந்து கௌரவப்படுத்தினார் சிவாஜி கணேசன்.[75]

**வீரபாண்டிய கட்டபொம்மன் - சிறப்புச் செய்திகள்**

- ❖ தமிழ் சினிமாவின் முதல் நிஜ வரலாற்றுப்படம்
- ❖ இலண்டனில் இப்படத்தின் பிரதிகள் எடுக்கப்பட்டுப் பின்னாளில் ஈஸ்ட்மென் கலருக்கு மாற்றப்பட்ட முதல் படம்.
- ❖ 1959ல் மாநில அரசாங்கத்தால் சிறந்த படமாகத் தேர்வு செய்யப்பட்டது.
- ❖ மதுரை நகரில் நான்கு மாசி வீதிகளிலும் சிவாஜி கணேசன் திறந்த காரில் பவனி வந்து மக்களின் பாராட்டுதலை ஏற்றார்.
- ❖ இந்தியாவில் திரையிடப்படும் முன்பு லண்டன் தமிழ்ச் சங்கத்தின் ஏற்பாட்டினால் லண்டனில் திரையிடப்பட்ட தமிழ்ப் படம் என்ற பெருமை பெற்றது. லண்டனில் 1959 மே 10ந் தேதி திரையிடப்பட்டது. அன்றைய இந்திய ஹை கமிஷனர் ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட் தலைமையில், தமிழர்களும் மற்றும் ஆங்கிலேயர்களும் ரசித்துப் பார்த்த படம் அது.[76]

வீரபாண்டிய கட்டபொம்மன் வெற்றியை மனதில் கொண்டு, கயத்தாரில் கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்ட இடத்தை (47 சென்ட்) விலைக்கு வாங்கி கட்டபொம்மனுக்குச் சிலையும்,நினைவுச் சின்னமும் எழுப்பினார் சிவாஜி கணேசன். 1970 ஜூலை மாதம் 16 ஆம் தேதி நடைபெற்ற அச்சிலை திறப்பு விழாவிற்கு நீலம் சஞ்சீவரெட்டி தலைமை தாங்க காமராஜர் சிலையைத் திறந்து வைத்தார். சிவாஜி கணேசன் தமிழ்த் திரையுலக நடிக நடிகையரை அழைத்துச் சென்றார். அவ்விழாவில் அச்சிலையை பராமரிப்பதற்கு கயத்தாறு பஞ்சாயத்து யூனியனுக்கு ரூபாய் பத்தாயிரம் நன்கொடை வழங்கினார். கட்டபொம்மன் சிலையை செதுக்கிய சுப்பையா ஆசாரி என்பவருக்கு பட்டாடை போர்த்தி தங்க மோதிரம் பரிசளித்தார்.[77] பிற்காலத்தில் கயத்தாரில் கட்டபொம்மன் சிலையையும் நிறுவியுள்ள இடத்தையும் தமிழக அரசிற்கு சொந்தமாக்கினார் சிவாஜிகணேசன்.[78]

**கப்பலோட்டிய தமிழன்**

சிவாஜி கணேசன், வீரபாண்டிய கட்டபொம்மன் போல் இந்திய சுதந்திரத்திற்காக பாடுபட்ட வ.உ. சிதம்பரம் பிள்ளையின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் வகையில் ‘கப்பலோட்டிய தமிழன்’ (1961) என்ற திரைப்படத்தில் நடித்தார். இப்படத்தை தயாரித்து, இயக்கி பி.ஆர். பந்துலு 1961 ஆம் ஆண்டு நவம்பர்த்திங்கள் 7 ஆம் நாள் வெளியிட்டார். கப்பலோட்டிய தமிழன் வ.உ.சியாக நடிப்பதற்கு முன் தனக்கு இருந்த மனநிலை பற்றி சிவாஜி கணேசன், “நம்மால்

அந்தப் பாத்திரத்தை சரிவர சித்தரிக்க முடியுமா, பங்கம் வராமல் நடிக்க முடியுமா என்ற சிந்தனை இருந்தது. அதே நேரத்தில் அடக்க முடியாத ஆசையோடு இருந்தேன். அந்த உத்தமர் சம்பந்தப்பட்ட பலருடன் தொடர்பு கொண்டேன். அவர் எப்படியிருப்பார், பேசுவார், எப்படி நடப்பார் என்றெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டேன். அவரைப் பற்றிய எழுத்தோவியங்களைப் படித்தேன். அவரைப்பற்றி என்னுள் ஒரு உருவகத்தை அமைத்துக் கொண்டேன். அன்பில், பாசத்தில் அவர் அன்னை - அச்சம் என்பது அவர் அறியாதது. பண்பின் உறைவிடம் - விடுதலை அவரது மூச்சு. அவரது நடையுடைப் பாவனைகளை நன்கு பிரதிபலித்து, அவரது செயல்களை அப்படியே வைத்து, அந்தப் பாத்திரத்தை நான் மட்டுமல்ல, நாட்டு மக்களும் மறக்க முடியாத வண்ணம் காவியமாக்கிக் காட்டிட வேண்டும் என்ற வெறி என்னுள் எழுந்தது" என்று கூறினார்.

கப்பலோட்டிய தமிழர் வ.உ.சிதம்பரம் பிள்ளையின் மகன் சுப்பிரமணியன் "என் தந்தை காலமானபோது எனக்கு பதினொரு வயது. என் தந்தை பட்ட துயரங்கள், துன்பங்கள் எல்லாம் அறிந்துகொள்ள முடியாத வயது. "கப்பலோட்டிய தமிழன்" படத்தைப் பார்த்தவுடன் என் தந்தை எப்படிப்பட்ட துன்பம் அனுபவித்திருப்பார் என்பதை என்னால் உணர முடிகிறது என்று கூறினார்.[79]

**இயக்குநர் பீம்சிங்கின் இயக்கத்தில் சிவாஜிகணேசன்**

1952ல் 'பராசக்தி' படத்தில் இயக்குநர்கள் கிருஷ்ணன், பஞ்சுவிடம் உதவி இயக்குநராக பணியாற்றியனார் பீம்சிங். 1956இல் கருணாநிதி வசனம் எழுதி சிவாஜிகணேசன் நடித்த 'ராஜாராணி' படத்தின் மூலம் முதன் முதலில் இயக்குனர் ஆனார் பீம்சிங். அது முதல் 18 படங்களில் பீம்சிங் இயக்கத்தில் சிவாஜி கணேசன் நடித்தார். சிவாஜி கணேசன் பீம்சிங் கூட்டணி தமிழ்த் திரையின் பொற்காலமாக கருதப்படுகின்றது. அவற்றில் ராஜாராணி (1956), பெற்ற மனம் (1961), செந்தாமரை (1962), சாந்தி (1965) என்ற நான்கு படங்களைத் தவிர மீதி படங்கள் 'ப' என்ற எழுத்தில் தொடங்கும் படப் பெயர்களை உடையது. 'ப' வரிசையில் தொடங்கும் படங்களாக பதிபக்தி (1958), பாகப்பிரிவினை (1959), படிக்காத மேதை (1960), பாவமன்னிப்பு (1961), பாசமலர் (1961), பாலும் பழமும் (1961), பார்த்தால் பசிதீரும் (1962), படித்தால் மட்டும் போதுமா (1962), பந்தபாசம் (1962), பார் மகளே பார் (1963), பச்சை விளக்கு (1964), பழநி (1965) இருந்தன. பாலாடை (1967), பாதுகாப்பு (1970).[80] மேற்கூறப்பட்டுள்ள படங்களில் வெள்ளிவிழா கொண்டாடிய படங்கள் மூன்று. அவை, பாவமன்னிப்பு, பாசமலர், பாலும் பழமும் ஆகிய படங்கள் ஆகும்.[81]

பாவமன்னிப்பு 1961 (தேசிய விருது பெற்ற படம்) ஆம் ஆண்டு மார்ச் திங்கள் மூன்றாம் நாள் வெளிவந்தது. இந்தப் படம் உருவான கதையை ஏவி.எம். சரவணன் 'கல்கி' பத்திரிக்கைக்கு அளித்த பேட்டியில்,

"நடிகர் சந்திரபாபு எழுதிய கதை இது. ஒருவன் ஹிந்துவாகப் பிறந்து, இசுலாமியரால் வளர்க்கப்பட்டு ஒரு கிறித்துவ பெண்ணை மணம் முடிப்பதுதான் கதை. அந்தக் கதையை 'அப்துல்லா' என்ற தலைப்பில் பீம்சிங் 2000 அடி எடுத்தும் திருப்தியில்லை. மறுபடியும் எடுப்பதற்கு பண வசதியில்லை. அச்செய்தியை நான் என் தந்தையிடம் தெரிவித்தேன். அவர் பீம்சிங்கை அழைத்து செலவை தான் ஏற்றுக் கொள்வதாகவும் லாபத்தில் பாதி என்றும் ஒப்பந்தம் கையெழுத்தானது. கதை வளர்ந்த பின் இந்தக் கதையை சிவாஜிகணேசனை வைத்து எடுத்தால்தான் நன்றாக இருக்கும் என்ற பீம்சிங்கின் கருத்தை ஏற்று, சந்திரபாபுவிடம் சம்மதித்தபின் எடுக்கப்பட்ட படம் பாவமன்னிப்பு ஆகும் என்று கூறினார்.[82]

பாவமன்னிப்பு - படத்தின் சிறப்புச் செய்திகள்

மத நல்லிணக்கத்தை வலியுறுத்தும் முதல் படமாகும்.

தமிழகத்தில் குளிர்வசதி செய்யப்பட்ட திரையரங்கில் வெள்ளிவிழா கொண்டாடிய முதல் தமிழ் படம்

முதன்முதலாக ஒரு நிரந்தரமற்ற திரையரங்கத்தில் (டூரிங்டாக்கீஸில்) 100 நாட்கள் ஓடியத் திரைப்படம் - ஊர் இராமநாதபுரம்.

படம் வெளியாவதற்கு முன்பே பாடல்கள் இலங்கை வானொலி மூலம் ஒலிபரப்பப்பட்டு பிரபலமடைந்தன.

1961 ஆம் ஆண்டில் அகில இந்திய சர்டிபிகேட் ஆப் மெரிட் (Certificate of Merit) பெற்ற படம். அகில இந்திய இரண்டாவது சிறந்த படத்திற்கான விருது கிடைத்தது.

சிறந்த பாடல்களுக்கான போட்டி வைத்து வெற்றி பெற்றவர்களுக்கு பணமுடிப்பு மதுரை சென்ட்ரல் திரையரங்கில் வழங்கப்பட்டது.

ஜப்பானிலிருந்து ராட்சத பலூன் இறக்குமதி செய்யப்பட்டு விளம்பரம் செய்யப்பட்டது.

‘பாப பரிகாரம்’ என்று தெலுங்கில் மொழி மாற்றம் செய்யப்பட்டு சிறப்பாக ஓடியது.

‘சப்கா சாத்தி’ என்று இந்தியில் சஞ்சய்கான் நடித்து பீம்சிங் இயக்கத்தில் வெளியானது.

திராவக வீச்சில் பாதிக்கப்பட்டு ஒரு பக்க முகம் கருகிய நிலையில் முதன் முதலில் தமிழ் திரையில் காட்டப்பட்ட கதாபாத்திரத்தை ஏற்று நடித்த முதல் கதாநாயக நடிகர் சிவாஜி கணேசன் ஆவார்.[83]

1961ல் ஆகஸ்டு திங்கள் 5ம் தேதி இந்தோனேசியாவின் தலைநகரான ஜகார்த்தாவில் நடைபெற்ற சர்வதேச திரைப்பட விழாவில் பாவமன்னிப்பு திரையிடப்பட்டது. அதில் திராவகம் பட்டு சிவாஜி விழுந்து துடிக்கும் காட்சியில் மக்கள் எழுந்து நின்று கைதட்டினார்கள்.[84]

பாசமலர்

சிவாஜி கணேசனின் நெருங்கிய நண்பர்களான நடிகர் எம்.ஆர். சந்தானம் மற்றும் மோகன் ஆர்ட்ஸ் உரிமையாளர் மோகன் இருவரும் இணைந்து சிவாஜிகணேசனின் தாயார் பெயரில் ராஜாமணி பிக்சர்ஸ் என்று ஒரு நிறுவனம் தொடங்கினார்கள். அதன் மூலம் கே.பி. கொட்டாரக்காராவின் கதையை ‘பாசமலர்’ என்ற பெயரில் படத்தை தயாரித்து 1961 ஆம் ஆண்டு மேத் திங்கள் 7ம் நாள் வெளியிட்டார்கள். அண்ணன் தங்கை பாசத்தை அற்புதமாக விளக்குவதாக அமைந்தது படம்.[85]

‘பாசமலர்’ எனும் தலைப்பு வைத்தவர் கவிஞர் கண்ணதாசன். படத்திற்கு வசனம் எழுதியவர் ஆரூர்தாஸ். திரைக்கதை அமைத்து இயக்கியவர் பீம்சிங்.[86]

இசையமைப்பாளர் எம்.எஸ். விசுவநாதனின் தாயார் நல்ல விமர்சகர் என்பதால், அவரை படம் பார்க்க வைத்தனர். படத்தை பார்த்துவிட்டு ஒன்றும் பேசாமல் சென்றுவிட்டார். மறுநாள் போன் செய்து அற்புதமான படம் என்று கூறினார்.

பாசமலர் வெள்ளிவிழா நிகழ்ச்சியில் விஜயா வாஹினி ஸ்டுடியோ அதிபர் நாகிரெட்டி, “என் வீட்டுப் பணியாள் நல்ல விமர்சகர். அவர் பாசமலர் படத்தை பார்த்துவிட்டு என்னங்க சிவாஜி செத்தும் நடிக்கிறார் என்று கூறி வியந்தார். செத்து எப்படிப்பா நடிக்க முடியும் என்ற கேள்விக்கு “படத்தில் சிவாஜி இறந்து

படுக்கையில் இருக்கும்போது கூட அவரது தோற்றம் ஒரு நடிப்பைத் தருகிறது என்றார். அந்தப் பணியாளரின் கருத்துத்தான் என் கருத்தும்" என்றார்.[87] 'தினமணி' பத்திரிக்கை (04.06.1961) தனது விமர்சனத்தில் "மொத்தத்தில் ரசிகர்களுக்கு நல்லதோர் படைப்பு, சிவாஜிக்கு மற்றுமோர் உயர்வு" எனக் குறிப்பிட்டிருந்தது.[88]

பாலும் பழமும்

1961 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் ஒன்பதாம் நாள் வெளியிடப்பட்டது. கதை, வசனம் ஜி. பாலசுப்ரமணியம் என்பவர் எழுதினார். திரைக்கதையும் எழுதி படத்தையும் இயக்கினார் பீம்சிங். அந்தப் படத்தில் சிவாஜிகணேசனின் சிகை அலங்காரம் புதுவகையாக இருந்தது. அதனால் அக்காலத்தில் பலரும் தங்களது சிகை அலங்காரத்தை அதுபோல் மாற்றிக் கொண்டனர்.

சிவாஜி கணேசன் புற்றுநோய் ஆராய்ச்சி மருத்துவராக நடித்தார். விழி திறந்த நிலையில் ஒப்பனை செய்து கொண்டு கதையின்படி சிறிது காலம் கண் பார்வை இழந்தவராக நடித்தார். அது ஒரு வெள்ளிவிழாப் படம் ஆகும். 'பிராயச்சித்தம்' என்ற பெயரில் தெலுங்கில் மொழி மாற்றம் செய்யப்பட்டது.[89]

**சிவாஜி கணேசன் நடித்த குறிப்பிடத்தக்க திரைப்படங்கள்**

மக்களைப் பெற்ற மகராசி 1957 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் இருபத்தி ஏழாம் நாள் வெளிவந்த படம். சிவாஜி கணேசன் (வட்டார மொழி) கொங்கு தமிழ் பேசி நடித்த முதல் தமிழ் படம். நடிகர் வி.கே. ராமசாமி, ஏ.பி. நாகராஜன் இணைந்து தயாரித்த படம். கதை, வசனத்தை நாகராஜன் எழுதினார். இசையமைத்தவர் கே.வி. மகாதேவன். கா.மு. ஷெரீப், மருதகாசி, தஞ்சை இராமையாதாஸ், பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் முதலிய கவிஞர்கள் பாடல்களை எழுதினார்கள்.[90]

பாகப்பிரிவினை 1959 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் முப்பத்து ஒன்றாம் நாள் வெளிவந்த படம். உடல் ஊனமுற்றவராக சிவாஜி கணேசன் நடித்தார். இப்படத்தில் அவரின் உடல்மொழியைக் கவனித்து குறிப்பு எடுத்து வைக்க தனி உதவியாளரை இயக்குநர் பீம்சிங் நியமித்தார். வெள்ளிவிழா கண்ட படம். சிறந்த படமாக மாநிலப் பிரிவில் தேசிய விருது பெற்றது. கதை, வசனம் சோலைமலை எழுதினார். விஸ்வநாதன் - ராமமூர்த்தி இசையமைத்தார்கள். "தாழையாம் பூ முடிச்சு" என்ற பாடலுக்கு மூன்று இசைக்கருவிகள் மட்டும்

பயன்படுத்தப்பட்டன.[91] பாடல்களை கண்ணதாசன், மருதகாசி மற்றும் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் எழுதினார்கள். இந்தியில் இப்படத்தில் நடிக்க நடிகர்கள் ராஜ்கபூர், தேவானந்த் மற்றும் திலீப் குமாரை கேட்டபோது அவர்களால் அந்தக் கதாபாத்திரத்தில் நடிக்க முடியாது என்று மறுத்துவிட்டனர். இறுதியாக நடிகர் சுனில்தத் நடித்து 'காந்தான்' என்ற பெயரில் வெளிவந்து பெரும் வெற்றியடைந்தது.[92]

மோட்டார் சுந்தரம்பிள்ளை - 1966 ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் இருபத்தி ஆறாம் நாள் வெளிவந்த படம். அப்படத்தில் சிவாஜி கணேசன் நடித்தபோது அவருக்கு வயது 38. ஆனால் 13 குழந்தைகளுக்குத் தந்தையாக நடித்து இருந்தார். எந்தக் கதாநாயகனும் ஏற்றுக் கொள்ள முடியாத பாத்திரம். 'கிராந்தி' என்ற இந்திப் படத்தின் தமிழாக்கம். எஸ்.எஸ். வாசன் தயாரித்த இப்படத்தை வாசனின் மகன் பாலசுப்ரமணியம் இயக்கியிருந்தார். கதை, வசனத்தை வேப்பத்தூர் கிட்டு எழுதியிருந்தார். பாடல்களை கொத்தமங்கலம் சுப்புவும் வாலியும் எழுதினார்கள். படம் 100 நாட்கள் ஓடியது.[93]

தில்லானா மோகனாம்பாள் - 1968 ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் இருபத்து ஏழாம் நாள் வெளி வந்த படம். நாதசுவர வித்வானாக சிவாஜி கணேசன் நடித்திருந்தார். மதுரை நாதசுவர வித்வான்கள் சேதுராமன் பொன்னுச்சாமி வாசிப்பதை சில மணி நேரங்கள் பார்த்துவிட்டு படத்தில் வாசிப்பதுபோல் நடித்தார். இப்படத்தை பார்த்த மதுரை வித்வான்கள், சிவாஜி உண்மையான வித்வான் போல் பாவனைக் காட்டி நடித்துள்ளார். அழுத்தி வாசிக்கும்போது கழுத்து புடைப்பதைக்கூட அழகாகப் பண்ணினார். எங்களுக்கு பிரமிப்பாக உள்ளது என்று கூறினார்கள். இது சிவாஜி கணேசனின் நடிப்புத் திறமைக்கு ஒரு சான்று.

தில்லானா மோகனாம்பாள் படத்தின் மூலக் கதையை எழுதியவர் கொத்தமங்கலம் சுப்பு. அதை திரைக்கதை அமைத்து, வசனம் எழுதி, தயாரித்து, இயக்கியவர் ஏ.பி. நாகராஜன். கண்ணதாசன் பாடல்களுக்கு இசையமைத்தவர் கே.வி.மகாதேவன். தமிழ் கலாச்சாரத்தை விளக்குவதாக இப்படம் அமைந்திருந்தது. மாநிலத்தில் இரண்டாவது சிறந்த படமாகவும், தேசீய அளவில் வெள்ளி மடலையும் பெற்றது.[94]

உயர்ந்த மனிதன் - 1968 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 29 ஆம் தேதி வெளிவந்த படம் ஆகும். சிவாஜி கணேசனுக்கு 125வது படம் ஆகும். 'பராசக்தி'யை இயக்கிய கிருஷ்ணன்-பஞ்சு இயக்கிய படம். திரைக்கதை, வசனம் எழுதியவர் நடிகர் ஜாவர் சீதாராமன். ஏ.வி.எம். நிறுவனத்தினர் தயாரித்து

வெளியிட்டனர். சிவாஜி கணேசன் திராவிட முன்னேற்றக் கழகத்தை விட்டு ஒதுக்கிய பின் அண்ணாதுரை கலந்துகொண்ட விழா உயர்ந்த மனிதனின் நூறாவது நாள் விழாவாகும். உயர்ந்த மனிதன் படத்தில் மிகப் பெரிய பணக்காரராக சிவாஜி கணேசன் நடித்தார். நடை, உடை, உடல்மொழி, வசனம் பேசிய முறை அனைத்திலும் மிக நாகரிகமாக, நேர்த்தியாக நடித்தார்.[95]

வியட்நாம் வீடு - 1970 ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்கள் பதினொன்றாம் நாள் வெளிவந்தது. சிவாஜி நாடக மன்றத்திற்காக இயக்குநர் சுந்தரம் எழுதிய நாடகம் பின்னர் திரைப்படமாக, சிவாஜி புரொடக்ஷன்ஸ் தயாரித்து வெளியிடப்பட்டது. படத்தை இயக்கியவர் பி. மாதவன். வியட்நாம் வீடு நாடகத்தை தயாரிப்பதற்கு முன்பு சிவாஜி "இதுவரை பிராமணர்கள் பேசும் முறையை காமெடியாகத்தான் பார்த்து இருப்பீர்கள். நான் அந்த முறையில் பேசி அழ வைப்பேன்" என்று சவால் விட்டு உருவாக்கப்பட்ட கதை அது.[96]

'வியட்நாம் வீடு' சென்னையில் அரங்கேற்றம் ஆனபோது நாடகத்தில் முதல் காட்சியில் ஒரு விதவைத் தாயின் படம் எடுக்கப்பட்டு இருந்தது. சிவாஜி கணேசன் அந்தப் படத்தின் முன் நின்று "நான் ஒரு சாதாரண ஏழை. ஓட்டலில் எனது அம்மா மாவரைத்துக் கொண்டிருந்தாள். பாத்திரத்தோடு பாத்திரமா தேய்ஞ்சாளே, விறகோடு விறகாக வெந்தாளே.. அவளுடைய பிள்ளைதாண்டா நான்" என்று வசனம் பேசி முடித்ததும் நாடகம் பார்க்க இந்தி நடிகர் ராஜேந்திரகுமாருடன் வந்திருந்த ஜெமினி பட அதிபர் வாசன் விம்மி அழுதுவிட்டார். நாடகம் முடிந்ததும் சிவாஜிகணேசனைக் கட்டிப்பிடித்துக் கொண்டு அழுதார். பின்பு சிவாஜியைப் பார்த்து, "சிவாஜி நீங்க ரொம்ப நல்லா இருக்கணும், நீங்க இதுபோல நிறைய நாடகங்கள் போட வேண்டும் என்று வாழ்த்தினார். அந்த அளவுக்கு சிவாஜிகணேசன் ஒரு பிராமணன் போல் பேசி நடித்திருந்தார்.[97]

வசந்த மாளிகை - 1972 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் இருபத்து ஆறாம் நாள் வெளிவந்த படம். தெலுங்கில் நடிகர் நாகேஸ்வரராவ் நடித்த தேவதாஸ் படத்தின் கதைக் கருவை வைத்து, உருவாக்கப்பட்ட படம் 'பிரேம் நகர்'. கதாநாயகனாக நடிகர் நாகேஸ்வரராவ் நடித்தார். அப்படத்தை தமிழில் தயாரித்து வெளியிட்டனர். கதை ஏ. கௌசல்யா தேவி திரைக்கதை மற்றும் இயக்கம் கே.எஸ். பிரகாஷ்ராவ், வசனம் பாலமுருகன், தயாரிப்பாளர் ராமா நாயுடு. மிகப்பெரிய வெற்றி பெற்று வெள்ளிவிழா கண்ட படம். இலங்கையில் 41 வாரங்கள் ஓடியது. இப்படத்தில் நடித்த சிவாஜிகணேசனுக்கும், நடிகை

வாணிஸ்ரீக்கும் சிறந்த நடிகர், நடிகைக்கான விருது கிடைத்தது. அரங்க அமைப்புகள் குறிப்பாக மாளிகை, கண்ணுக்கு குளிர்ச்சியான வண்ணங்கள் பிரம்மாண்டமாக அமைக்கப்பட்டு இருந்தது என்று **ஆனந்த விகடன்** தனது விமர்சனத்தில் குறிப்பிட்டு இருந்தது. பாடல்களை கண்ணதாசனும் இசையை கே.வி. மகாதேவனும் சிறப்பாக படைத்திருந்தனர்.[98]

தங்கப் பதக்கம் - 1974 ஆம் ஆண்டு, ஜூன் திங்கள், ஒன்றாம்நாள் வெளிவந்து வெள்ளிவிழா கொண்டாடிய படம். இயக்குநர் மகேந்திரன் நடிகர் செந்தாமரைக்காக எழுதிய நாடகம் 'இரண்டில் ஒன்று'. இந்த நாடகத்தின் உரிமையை வாங்கி தலைப்பை 'தங்கப்பதக்கம்' என்று மாற்றி சிவாஜி நாடகமன்றத்தார் சார்பில் சிவாஜி கணேசன் காவல்துறை அதிகாரியாக நடித்தார். மிகக் குறுகிய காலத்தில் 100 முறை மேடை ஏறியது. பின்னர் சிவாஜி புரொடக்ஷன்ஸ் சார்பில் திருமதி. சாந்தி நாராயணசாமி மற்றும் டி. மனோகர் தயாரித்து வெளியிட்டனர். மிகப்பெரிய வெற்றி அடைந்து வெள்ளிவிழா கண்டது. ஒரு காவல்துறை அதிகாரி எப்படி கம்பீரமாக, நேர்மையாக, கடமை தவறாமல் பணியாற்ற வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்கியது அந்தப்படம். சிவாஜி கணேசன் காவல்துறை கண்காணிப்பாளராக மிகச் சிறப்பாக தன் நடிப்பை வெளிப்படுத்தி நடித்தார். சிவாஜி கணேசனோடு நடிகை கே.ஆர்.விஜயா, நடிகர் ஸ்ரீகாந்த், வி.கே. ராமசாமி, சுந்தரராஜன், சோ ராமசாமி (இரட்டை வேடங்களில்), மனோரமா, நடிகை பிரமீளா, ஆர்.எஸ். மனோகர் (கௌரவத் தோற்றம்) ஆகியோர் நடித்தனர். அந்தப் படம் பிற்காலத்தில் காவல்துறை சம்பந்தப்பட்ட கதைகளுக்கு ஒரு முன்மாதிரியாக அமைந்தது. படத்தின் கதை மற்றும் வசனங்களை இயக்குநர் மகேந்திரன் எழுதினார். திரைக்கதை அமைத்து இயக்கியவர் பி. மாதவன். கண்ணதாசனின் பாடல்களுக்கு இசை அமைத்தவர் எம்.எஸ். விஸ்வநாதன்.[99]

முதல் மரியாதை 1985 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள், முப்பதாம் நாள் வெளி வந்த படம். இயக்குநர் பாரதிராஜாவின் இயக்கத்தில் தன்னுடைய ஆழ்ந்த நடிப்பாற்றலைக் காட்டி நடித்திருந்தார் சிவாஜி கணேசன். கதை, வசனம், ஆர். செல்வராஜ் எழுதினார். திரைக்கதை எழுதி இயக்கியவர் பாரதிராஜா. வைரமுத்து பாடல்களை எழுதியிருந்தார். படத்துக்கு கிராமிய இசையை தந்தவர் இளையராஜா.[100]

சிவாஜி கணேசனோடு நடிகை ராதா, நடிகை வடிவுக்கரசி, நடிகர் ஜனகராஜ் முதலியவர்கள் நடித்திருந்தனர். **ஆனந்தவிகடன்** தனது விமர்சனத்தில் சிவாஜி கணேசனின் சினிமா வாழ்வு முடிந்துவிட்டது என்று பேசி வந்த

நிலையில், இல்லை அது முடியவில்லை என்று தனது அற்புதமான திரைக்கதை அமைப்பால் இயக்குநர் பாரதிராஜா நிரூபித்த படம் என்று 100க்கு 54 மதிப்பெண்கள் கொடுத்து பாராட்டி எழுதியிருந்தது. இப்படம் பற்றி பாரதிராஜா "நூற்றுக்கணக்கான படங்களில் பல்வேறு கதாபாத்திரங்களில் நடித்த அந்த மகா நடிகர் சிவாஜிகணேசன் சுவரைப் பார்த்து emotional ஆக பேசிப்பேசி பழகியதை நான் பார்த்து வியந்தேன் என்றார்.[101] முதல் மரியாதை படம் இரண்டு தேசிய விருதுகளைப் பெற்றது. சர்வதேச திரைப்பட விழாவில் இந்திய சினிமாப் பிரிவில் திரையிடப்பட்டது. "ஆர்மா பந்துவு" என்ற பெயரில் அப்படம் தெலுங்கில் மொழி மாற்றம் செய்யப்பட்டது.[102]

தேவர் மகன் - 1992 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் இருபத்து ஐந்தாம் நாள் வெளிவந்த படம். நடிகர் கமலஹாசன் கதை, திரைக்கதை, வசனம் எழுதி தயாரித்து இருந்தார். படத்தின் இயக்குநர் பரதன். படத்தின் பாடல்களை வாலி எழுதி, இளையராஜா இசையமைத்திருந்தார். ஒளிப்பதிவாளராக பி.சி. ஸ்ரீராம் இருந்தார்.

கோவிலில் முதல் மரியாதை மற்றும் மதிப்புக்காக வன்முறையில் இறங்கும் சூழ்நிலை ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் உருவாகும் விதத்தினை கதையின் கருவாக அமைத்திருந்தார் நடிகர் கமல்ஹாசன். தேவர் மகன் படத்தில் சிவாஜி கணேசன் அமைதியான ஆழமான, நேர்த்தியான முறையில் நடிப்பை வெளிப்படுத்தியிருந்தார். முதன் முறையாக சிவாஜி கணேசனின் திரையுலக வாழ்க்கையில் சிறந்த நடிகருக்கான தேசிய விருது விசேஷ தீர்ப்பாயக் குழுவின் சார்பாக கிடைத்தது. ஆனால் அதை வாங்க சிவாஜிகணேசன் மறுத்துவிட்டார். மாநில மற்றும் தேசிய அளவில் பல விருதுகள் அப்படத்திற்கு கிடைத்தன. அன்னிய மொழிப் படப்பிரிவில் ஆஸ்கார் விருதுக்காக இந்தியாவின் சார்பில் நுழைவுக்காக 'தேவர் மகன்' படம் அனுப்பப்பட்டது.[103]

**சிவாஜி கணேசனின் கடின உழைப்பு**

சிவாஜிகணேசன் 1957 முதல் கடின உழைப்பை மேற்கொண்டார். ஒரு நாளைக்கு மூன்று ஷிப்டில் (shift) வேலை செய்தார். காலை 7 மணி முதல் 11 மணி வரை, மதியம் 2 மணியிலிருந்து இரவு 9 மணி வரை, இரவு 10 மணியிலிருந்து அதிகாலை 5 மணி வரை வேலை செய்தார். சிவாஜி கணேசனுக்காக ஒவ்வொரு ஸ்டுடியோவிலும் ஒரு தனி அறை உண்டு. பெரும்பாலும் காரில் தூங்குவதை வழக்கமாக வைத்தார். ஒரு நாளைக்கு சராசரியாக 20 மணி நேரம் வேலை செய்தார்.[104]

இதற்கிடையில் சிவாஜி நாடக மன்றத்தின் நாடகங்களில் இடைவிடாமல் நடித்தார். 1957லிருந்து 1961 வரை வீரபாண்டியன் கட்டபொம்மன் நாடகத்தை 100 முறை அரங்கேற்றம் செய்யப்பட்டது. அந்த சமயங்களில் சுமார், 23 படங்களில் நடித்துக் கொண்டிருந்தார்.

அது பற்றி அவர், "ஒரு கால்ஷீட் முடிந்து அடுத்த கால்ஷீட் இன்னொரு ஸ்டுடியோவில் இருந்தால், நேராக அந்த ஸ்டுடியோவிற்குப் போய்விடுவேன். நாடகம் உள்ள நாட்களில் ஷூட்டிங் முடித்துக் கொண்டு நாடகத் தியேட்டருக்குப் போய்விடுவேன். நாடகம் முடிந்து இரவு பத்து மணிக்கெல்லாம் மீண்டும் படப்பிடிப்புக்குச் சென்றுவிடுவேன். 24 மணி நேரமும் நடித்துக்கொண்டுதான் இருப்பேன். அந்த நேரத்தில் எனது குடும்பம், மனைவி, பிள்ளைகள் யாரையுமே நான் பார்க்கவில்லை. குடும்ப வாழ்க்கை என்பதை நான் சரியாக அனுபவிக்கவில்லை என்று பதிவு செய்தார்.[105]

1953இலிருந்து வருடத்திற்கு சராசரியாக எட்டுப் படங்கள் சிவாஜி கணேசன் நடித்தார். ஒரு படத்துக்கு 60 - 70 கால்ஷீட்டுகள் கொடுத்து 14 ஆண்டுகள் நடித்தார்.[106]

1967-லிருந்து ஒரு நாளைக்கு 15 மணி நேரம் வேலை செய்தார்.[107]

சிவாஜி கணேசனின் தொழில் பக்தி

"நடிப்பு என் மூச்சு, நடிப்பு என் உயிர், நடிப்பு ஒன்றுதான் எனக்குத் தெரிந்த தொழில்" என்று கொள்கையை தன் வாழ்வில் கடைப்பிடித்தவர் சிவாஜிகணேசன்.

வீரபாண்டியக் கட்டபொம்மன் நாடகத்தில் நடிக்கும் சமயங்களில் வசனம் பேசும்போது சில நேரங்களில் வாயிலும், மூக்கிலும் இரத்தம் வருவது உண்டு. இருந்தாலும் தொடர்ந்து நடிப்பார். அந்த அளவிற்கு அவருக்கு தொழில் மீது பக்தி இருந்தது.

"தான் ஏற்றுக்கொண்ட தொழிலுக்கு அவர் மதிப்பளித்தார். அந்தத் தொழிலும் அவருக்கு நிறைய மதிப்பையும் மரியாதையையும் கொடுத்தது.[108]

தன் தொழிலை உயிருக்கு உயிராக நேசித்த சிவாஜி கணேசன் அதன் மேல் மிகுந்த பக்தியுடன் விளங்கினார். அது பற்றி நடிகர் சிவக்குமார்,

"திருமால் பெருமை படப்பிடிப்பில் திருமங்கை மன்னனாக சிவாஜி கணேசன் நடித்தார். நான் திருமாலாக நடித்தேன். புராணக் கதையின்படி திருமாலாகிய நான் ஒரு திருமணக் கோஷ்டியில் மணமகனாக வருவேன். அந்தத் திருமணக் கோஷ்டியை கொள்ளை அடிக்க வருவார் திருமங்கை மன்னன். அனைவரின் நகைகளையும் கொள்ளை அடிப்பார். மணமகனாகிய என் காலில் இருந்த மிஞ்சியை கழட்டச் சொல்வார். நான் கழட்டிப் பார்த்துவிட்டு முடியவில்லை என்பேன். திருமங்கை மன்னனாக நடித்த சிவாஜிகணேசன், கைகளால் கழட்ட முயற்சிப்பார், முடியவில்லை என்றதும், என் கால் விரலை வாய்க்குள் விட்டு கழட்டுவார். இதில் என்ன முக்கியமானது என்றால், படப்பிடிப்பு நடந்த இடம், அப்பகுதியில் வசிக்கக்கூடிய பொதுமக்கள் காலைக் கடன்களைக் கழிக்கும் இடமாகும். இதுபற்றியெல்லாம் கவலை கொள்ளாமல், திருமாலாக நடிக்கும் நான் பிரபலமாகாத நடிகர். அவரோ பெரிய நடிகர். இதில் எதையும் மனதில் கொள்ளாமல் அவர் தொழிலில் காட்டிய பக்தி மிகப்பெரியது.

அவர் நினைத்திருந்தால் இயக்குநரிடம் கூறி கால் மிஞ்சிக்குப் பதில் கைவிரல் மோதிரமாக மாற்றி இருக்கலாம். ஆனால் அவர் அதை செய்யவில்லை. இந்தக்காட்சி ஒன்று போதும் அவருடைய தொழில் பக்தி பற்றி அறிந்து கொள்வதற்கு என்றார்.[109]

சிவாஜி கணேசனின் தொழில் பக்திக்கு மற்றொரு சான்றாக இருப்பது 'பாசமலர்' படம். அப்படத்தில் இறுதிக்காட்சி எடுப்பதற்கு முன்தினம் படத்தின் தயாரிப்பாளரும், தனது நண்பருமான மோகன் ஆர்ட்ஸ் மோகனை வீட்டிற்கு அழைத்தார். சிறிது நேரம் பேசிய பின் கிளம்பிய மோகனை ஒரு ஆங்கிலப் படம் பார்க்கலாம் என்று அன்னை இல்லத்திலிருந்த மினி திரையரங்கில் ஒரு படம் பார்த்தார்கள். இரவு 12.00 மணி ஆனது. மோகன் வீட்டிற்குப் போய்விட்டார். சிவாஜி கணேசன் மேலும் மூன்று படங்கள் பார்த்தார். அதிகாலை 4 மணி ஆனது. அதன்பின் வீட்டைச் சுற்றி மெதுவாக ஓட்டம் ஓடினார். 6 மணி ஆனதும் குளித்துவிட்டு தயாராக இருந்த அவரை மோகன் வந்து நெப்டியூன் ஸ்டுடியோவிற்கு அழைத்துச் சென்றார். அங்குதான் பாசமலர் படப்பிடிப்பு. அங்கே ஒப்பனை அறையில் நுழைந்து மேலும் தன்னை பரிதாபகரமான தோற்றத்திற்கு தயார் பண்ணிவிட்டு, செட்டுக்குள் நுழைந்து சாய்வு நாற்காலியில் படுத்துக் கொண்டு இயக்குநர் வந்ததும் எழுப்பச் சொன்னார். பீம்சிங் வந்ததும் எழுப்பினார்கள். எழுந்த சிவாஜி கணேசன், வசனங்கள் எங்கே என்று கேட்டுப் பார்த்தார். பின்பு அந்த வசனங்களை கொடுத்துவிட்டு, முதல்நாள் தான் என்ன பேச வேண்டும் என்பதை முடிவு செய்து வந்திருந்த அவர், பேசிய வசனங்கள்தான் "கை வீசம்மா கை வீசு" என்ற வசனங்களாகும். அன்றைக்கு நடித்த நடிப்பையும், அந்தக் காட்சியையும் அப்படம் அடைந்த வெற்றியையும் மறக்க முடியாது.[110]

சிவாஜிகணேசன் பெற்ற சிறப்பான விருதுகள்

செவாலியே விருது (Chevalier Award)

பிரெஞ்சு அரசாங்கத்தின் ordre des Arts et des Letters (order of Arts and Letters) "கலை மற்றும் இலக்கியம்" துறைகளில் சிறந்து விளங்குபவர்களுக்குக் கொடுக்கப்படும் உயர்ந்த விருது செவாலியே விருது (Chevaliar Award) ஆகும். அந்த விருதுக்குத் தகுதியானவர்களை பரிசீலிக்கும் ஆறு நீதிபதிகள் கொண்ட குழுவிற்குச் சிவாஜி கணேசன் பெயரை நியமனம் செய்துள்ளதாக பிரெஞ்சு அரசாங்கத்தின் கலாச்சாரம் மற்றும் பிரெஞ்சு மொழி அமைச்சர் ஜேக்ஸ் டவுபானிடமிருந்து 1994 ஏப்ரல் 29 தேதியிட்ட கடிதம் ஒன்று சிவாஜி கணேசனுக்கு வந்தது.[111]

அதைப் பெற்றுக்கொள்ள பிரெஞ்சு நாட்டிற்கு வந்து செல்லவும் என மற்றுமொரு கடிதம் வந்தது. ஆனால் சிவாஜி கணேசன் அங்கு சென்று வாங்க வேண்டுமா என்று எண்ணி பேசாமல் இருந்துவிட்டார்.[112]

அதன்பின் கலையுலகப் பிரமுகர்கள் ஒன்றுகூடி நடத்திய 1995 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் நான்காம் நாள் விழாவில் பிரெஞ்சு நாட்டின் தூதர் மாண்புமிகு பிலிப் பெத்தி அவர்கள் சிவாஜி கணேசனிடம் வழங்கினார். அன்றைய முதல்வர் ஜெயலலிதா கலந்துகொண்டு சிறப்பித்தார்.[113]

தாதா சாகேப் பால்கே விருது

1997ல் அன்றைய இந்திய ஜனாதிபதி மாண்புமிகு சங்கர்தயாள் சர்மா டெல்லியில் சிவாஜிகணேசனுக்கு அளித்தார்.

சிவாஜி கணேசன் தாதா சாகேப் பால்கே விருது பெற்றமைக்கு, இலங்கை, ஆந்திரா மற்றும் கேரளாவில் சிவாஜி கணேசனை அழைத்து விழா நடத்தி கௌரவித்தார்கள்.[114]

சினிமா இதழ், பேசும் படம் மூலமாக சிவகங்கை நாகராஜன் மற்றும் வெங்கட்ராமன் எனும் ஆசிரியர்களால் சிவாஜி கணேசனுக்கு வழங்கப்பட்ட பட்டம் 'நடிகர் திலகம்'. அதை முதன் முதலில் பயன்படுத்தியது 'அம்பிகாபதி' படத்தில்தான்.[115]

தமிழ்த் திரையுலகில் சிவாஜி கணேசனின் தாக்கம்

சிவாஜிகணேசனின் தமிழ்த் திரையுலக பிரவேசம் ஒரு மிகப்பெரிய மாற்றத்தை கொண்டு வந்தது. அவரது நுழைவு ஒரு சூறாவளியின் தாக்குதலுக்கு

ஒப்பானது என்று கூறினார் தெலுங்கு நடிகர் நாகேஸ்வவராவ். “நான் மற்றும் நடிகர் என்.டி. ராமராவ் தமிழ்த் திரையுலகில் பெரிய நடிகர்களாக இருந்த காலம் அது. 1952ல் ஒரு பெரிய சூறாவளி தாக்குதல் போல் இருந்தது சிவாஜி கணேசனின் திரையுலகப் பிரவேசம். நாங்கள் மீண்டும் எங்கள் மாநிலத்திற்கு குடிபெயர்வுக்கு அது வழி வகுத்தது” என்றும் அவர் கூறினார்.[116]

‘பராசக்தி’ படம் வெளிவந்தபின் பாடல்களினால்தான் படங்கள் வெற்றி பெற முடியும் என்ற நிலை மாறி இனி வசனங்கள்தான் படங்களின் வெற்றி தோல்வியை நிர்ணயிக்கும் என்ற நிலை உருவாக்கம் பெற்றது.[117]

சிவாஜி கணேசன் நடிப்புத் தொழிலை தெய்வமாக வழிபட்டார். நடிப்பவர்கள் என்றால் கூத்தாடிகள் என்ற சொல்லை மாற்றி நடிகர்கள் என்ற மதிப்பைப் பெற்றுத் தந்தார்.

**திரையுலகில் தனிப்பட்ட பண்புகள்**

நடிப்புத் தொழிலில் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டார். வீடு, வாசல், தாய், தந்தை, மனைவி, மக்கள் மற்றும் உடன் பிறந்தோர் உற்றார் உறவினர்கள் இரண்டாம் பட்சமாக வைத்திருந்தார்.

நடிக்கத் துவங்கிய காலத்தில் இருந்து நடிப்பதை நிறுத்திய காலம் வரை நேரந் தவறாமையை கடைபிடித்தார். இது பிற நடிகர்களுக்குப் பாடமாக அமைந்தது. பணம் முதலீடு செய்து படம் தயாரிப்பவர்களை முதலாளி என்று அழைப்பதையே வழக்கமாக வைத்து இருந்தார். இப்பண்பு குறித்து நடிகை அஞ்சலிதேவி “பராசக்தி வளர்ந்து வரும் நிலையில், எங்கள் கம்பெனியில் தயாரித்த ‘பரதேசி’யில் சிவாஜி கணேசன் நடித்துக் கொண்டிருந்தார். தன்னுடைய திருமணத்திற்கு சென்று வர என்னிடம் வந்து நின்று அமைதியான குரலில் “முதலாளி நீங்க அனுமதி கொடுத்தால் என் திருமணத்திற்கு சென்று சீக்கிரம் படப்பிடிப்புக்கு திரும்பி விடுவேன் என்று கேட்டதை சொல்லிக் கண் கலங்கினார்.[118]

நன்றி உணர்ச்சி மிக அதிகம் உள்ளவராக சிவாஜிகணேசன் விளங்கினார். தன்னை வைத்துப் படம் எடுத்து பெரிய புகழுக்கும், பெருமைக்கும், பெரும் செல்வத்திற்கும் வழி வகுத்த ‘பராசக்தி’ படத்தின் தயாரிப்பாளர் பெருமாள் முதலியார் வீட்டிற்கு தவறாமல் பொங்கலன்று சென்று புதுத்துணி கொடுத்து ஒரு

தட்டு நிறைய வெள்ளிக்காசுகள் வைத்து வணங்கி வருவதை வழக்கமாக வைத்து இருந்தார். அப்பழக்கம் பெருமாள் முதலியார் உயிரோடு இருக்கும் வரையிலும் சிவாஜிகணேசன் உடல் நலத்துடன் இருக்கும்வரையிலும் கடைபிடிக்கப்பட்டது. அவருக்குப் பின் சிவாஜியின் மகன்களான ராம்குமார், பிரபு இன்றும் அந்தக் குடும்பத்தினருக்கு செய்து வருகின்றனர்.[119]

தயாரிப்பாளர்கள் எந்த விதத்திலும் நஷ்டப்பட்டு விடக்கூடாது என்பதில் தனிக்கவனம் செலுத்தி வந்தார். நடிகை சாவித்திரி நீண்ட இடைவெளிக்குப் பின் ‘பிராப்தம்’ என்ற திரைப்படம் எடுக்க திட்டமிட்டார். படத்தின் வசனகர்த்தா ஆரூர்தாசிடம் “சாவித்திரி அவருக்கு ஏற்ற குடும்பக் கதையாக தேர்வு செய்து தயாரிக்கலாம்”. மேலும் சாவித்திரி இயக்குநர் சுப்பராவை விட்டு இப்படத்தை இயக்க வேண்டும். இதற்கு மாறான முடிவு படத்தின் வெற்றியை பாதிக்கும் என்று கூறினார். தயாரிப்பாளர்கள் நஷ்டம் ஆனால் நமக்கென்ன, நமக்கு பணம் கிடைத்தால் போதும் என்ற காலத்தில் அதற்கு மாறாக தயாரிப்பாளர் பணத்தை இழந்துவிடக் கூடாது என்ற நல்லெண்ணத்துடன் இருந்தார்.[120]

ஒரு படத்தில் நடிகர் வி.கே. ராமசாமி சில நாட்கள் நடித்துவிட்டு ஏதோ ஒரு காரணத்திற்காகப் படப்பிடிப்புக்கு வர மறுத்துவிட்டார். அந்தப் படத்தின் தயாரிப்பாளர் சிவாஜி கணேசனிடம் கூறி கண்ணீர் வடித்தார். சிவாஜிகணேசன் வி.கே. ராமசாமியை சமாதானப்படுத்திச் சில நாட்கள் தினந்தோறும் தானே ராமசாமி வீட்டிற்குச் சென்று படப்பிடிப்புக்கு அழைத்து வந்து அந்தப் பிரச்சனையை தீர்த்து வைத்தார்.[121]

சிவாஜி கணேசன் தன்னுடைய இறுதிக் காலத்தில் ஒருநாள் வீட்டில் மன்னர் போல் புதிய உடையணிந்து சில புகைப்படங்கள் எடுத்துக்கொண்டார். தன் மகன் ராம்குமாரை அழைத்து,

> “என் காலத்திற்குப்பின் யாராவது எனக்கு சிலை வைக்க விரும்பினால் நான் தற்போது எடுத்த புகைப்படங்களைக் கொடுங்கள். நான் நடித்த எந்தப் படத்தின் ஸ்டில்களையும் கொடுக்கக் கூடாது. ஏனென்றால், ஒவ்வொரு படமும் அந்த படத்தயாரிப்பாளரின் தனிப்பட்ட சொத்து”[122]

என்று கூறினார்.

நஷ்டம் அடைந்த பல தயாரிப்பாளர்களுக்கு கைகொடுத்து அவர்களுக்கு மீண்டும் தொழில்புரிய உதவிகள் செய்தார். குறிப்பாக ‘வடிவுக்கு வளைகாப்பு’ என்ற படத்தை எடுத்து நஷ்டம் அடைந்திருந்த இயக்குநர் ஏ.பி. நாகராஜனுக்கு, தானே மூலதனமாக இருந்து ‘நவராத்திரி’ படத்தை இலவசமாக நடித்துக் கொடுத்தார்.[123] அது மட்டுமல்லாமல் அப்போது முன்னணி நட்சத்திரங்களில் ஒருவராக இருந்த சாவித்திரியை சந்தித்து, நாகராஜனின் நிலைமையை எடுத்துக் கூறி தினமும் இரண்டு மணிநேரம் ஒதுக்கி நவராத்திரி படத்தில் நடித்துக் கொடுக்க கேட்டுக் கொண்டார்.[124] படம் வெற்றிகரமாக ஓடி ஏ.பி. நாகராஜன் பணக்கஷ்டத்திலிருந்து மீண்டார்.

‘அண்ணாவின் ஆசை’ படம் எடுத்து திரைப்படத் தயாரிப்பாளர் பாலாஜி நஷ்டம் அடைந்தார். அதனால் பாலாஜியின் வீடு மற்றும் கார்கள் ஏலத்திற்கு வந்தபோது, பாலாஜி சிவாஜிகணேசனை சந்தித்து உதவிபுரியும்படிக் கேட்டுக்கொள்ள உடனே ‘தங்கை’ படத்திற்கு கால்ஷீட் கொடுத்து அதன் மூலம் கிடைத்தப் பணத்தில் ஏலத்தில் இருந்து சொத்துக்களை மீட்பதற்கு உதவிபுரிந்தார்.[125]

எம்.ஜி. இராமச்சந்திரனிடம் “உங்களைத்தவிர வேறு யாரையும் வைத்து படம் எடுக்க மாட்டேன் என்று சத்தியம் செய்து கொடுத்தவர் சின்னப்பா தேவர். ஒரு கால கட்டத்தில் எம்.ஜி. இராமச்சந்திரனிடம் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டில் சின்னப்பா தேவர் சிவாஜி கணேசனை சந்தித்து அவரிடம் கால்ஷீட் கேட்டார். சிவாஜி கணேசன், வேண்டாம் நீங்கள் அண்ணனிடம் (எம்.ஜி. இராமச்சந்திரன்) கருத்து வேறுபாடு கொண்டிருக்கும் இந்த நேரத்தில் என்னை வைத்து படம் எடுப்பது தவறு என்று பண்போடு மறுத்துவிட்டார்.[126]

சின்னப்பா தேவருக்கு அறுபதாம் ஆண்டு மணி விழா எடுக்க சிலர் முனைந்தபோது தேவர் மறுத்துவிட்டார். அவர்கள் சிவாஜிகணேசனை சந்தித்து தேவரிடம் பேசச் சொன்னார்கள். சிவாஜியும் சின்னப்பா தேவரை அவரது இல்லத்தில் சந்தித்து ஒப்புதல் வாங்கிவிட்டார். விழா நடத்த நினைத்தவர்களை அழைத்து, இந்த விழாவின் முழுச் செலவையும் தானே ஏற்பதாகக் கூறி அந்த விழாவை 29.06.1975 அன்று கலைவாணர் அரங்கத்தில் நடத்தினார். தன்னை வைத்துப் படம் எடுக்காத ஒரு தயாரிப்பாளருக்குத் தானே பணம் செலவழித்து விழா எடுத்த விதம் சிவாஜிகணேசன் கலை உலகில் யாரையும் எதிரியாக நினைக்காத ஒரு பண்பாளர் என்பதைக் காட்டுகிறது.[127]

ஒருமுறை கதை வசனகர்த்தா ஆரூர்தாசிடம் ஒரு கதை கேட்டார். அவரும் கதையை சிவாஜியிடம் கூறினார். சிவாஜி வேறு சில படங்களில் ஓய்வில்லாமல் நடித்த காரணத்தினால் ஆரூர்தாசிடம் ஒரு முடிவைக் கூறாமல் காலம் தாழ்த்தினார். அப்போது எம்.ஜி. இராமச்சந்திரன் தனக்கு ஒரு கதை அவசரமாக வேண்டும் என்று ஆரூர்தாஸிடம் கேட்டார். அவர் சிவாஜிகணேசனிடம் கூறிய கதையை எம்.ஜி. இராமச்சந்திரனிடம் ஆரூர்தாஸ் கூற அது அவருக்கு பிடித்து உடனடியாக முன்பணம் கொடுத்து, படத்திற்கான வேலைகள் துவங்கப்பட்டுவிட்டன. படத்தின் தயாரிப்பாளர் நடிகர் எம்.ஆர். ராதா. படம் சில மாதங்களில் முடிவடைந்து வெளிவந்தது. அந்தப் படம் 'பெற்றால்தான் பிள்ளையா'. தன்னிடம் கூறிய கதைதான் 'பெற்றால்தான் பிள்ளையா' படத்தின் கதை என்று அறிந்த சிவாஜி கணேசன் ஆரூர்தாஸை அழைத்து ஏன் என்னிடம் கூறிய கதையை அண்ணனிடம் கூறினாய். நான் அதைத் தயாரிக்கலாம் என்று எண்ணியிருந்தேன். "இனிமேல் என் படத்திற்கு உன் பெயரை கதைக்கோ அல்லது வசனத்திற்கோ பரிந்துரை செய்யமாட்டேன். ஆனால் தயாரிப்பாளர் உன்னை ஒப்பந்தம்செய்தால் நான் தடுக்க மாட்டேன்" என்று கோபத்துடன் கூறினார். ஆரூர்தாஸ் மிகவும் வருத்தத்துடன் சென்றுவிட்டார்.[128]

அதன்பின் ஆரூர்தாஸ் சில காலம் சிவாஜி கணேசனை சந்திப்பதை தவிர்த்துவிட்டார். ஒருநாள் தற்செயலாக வாகினி திரைப்பட நிலையத்தின் ஒப்பனை அறையிலிருந்து வெளிவந்த சிவாஜி கணேசன், எதிரில் வந்த ஆரூர்தாசை பார்த்து 'ஒருமையில்' ஏன் இத்தனை நாட்களாக என்னை சந்திக்கவில்லை, ஏதோ கோபத்தில் உன்னிடம் அப்படி பேசிவிட்டேன். உன் உடன்பிறந்த சகோதரன்போல் என்னை நினைத்துக்கொள், அதை மறந்துவிடு என்று கூறினார். இதுபற்றி ஆரூர்தாஸ் "சிவாஜி கணேசன் கோபத்தில் கடிந்துகொள்வார் பின்னர் அதை மறந்துவிடுவார். திரையுலகில் அப்பண்பு அவரிடம் மட்டுமே உண்டு. மற்றவர்கள் மனதில் வஞ்சம் வைத்து பழி வாங்கிவிடுவார்கள். சிவாஜிக்கு யாரையும் பழி வாங்கும் எண்ணம் எப்போதும் கிடையாது" என்று கூறினார்.[129]

நடிகை அஞ்சலிதேவி பிற்காலத்தில் படம் தயாரிக்கும் தொழிலில் தொய்வு ஏற்பட்டு, சிவாஜி கணேசனை 'பக்த துக்கராம்' என்ற தெலுங்குப் படத்தில் 'வீர சிவாஜியாக நடிக்க வேண்டும் என்று கேட்டார்" சிவாஜி கணேசனும் நடிக்க ஒப்புக் கொண்டுப் படப்பிடிப்பு நடந்தது. இடையில் பணம் பற்றாக்குறை காரணத்தால் நடிகை அஞ்சலிதேவி சிரமப்படுவதை உணர்ந்தார்.

உடன் சிவாஜி தனது தம்பி சண்முகத்தை அழைத்து "பராசக்தியில் மாதம் ரூபாய் 250 வாங்கி நடித்து வந்த காலத்தில் முதலாளியம்மா (நடிகை அஞ்சலிதேவி) 'பரதேசி' எனும் தெலுங்கு படத்திற்கும், அதன் தமிழாக்கம் 'பூங்கோதை'யில் நடிப்பதற்கும் முன் பணமாக ரூ.25,000/- கொடுத்தவர். இப்போது பணக்கஷ்டத்தில் இருக்கிறார். எனவே இந்தப் படத்தில் எனக்கு சம்பளம் கேட்காதே, மேலும் இந்தப் படத்தை முடிப்பதற்கு வேண்டிய பணத்தை நாம்தான் கொடுத்து உதவ வேண்டும் என்று கூறி, அப்படியே ஏற்பாடும் செய்தார்.[130]

அதுபோல், நடிகர் எஸ்.வி. சுப்பையாவின் சொந்தத் தயாரிப்பான 'காவல் தெய்வம்' படத்திற்கு அவரது கஷ்ட நிலையை அறிந்து பணம் வாங்காமல் இலவசமாக நடித்துக் கொடுத்தார்.[131]

'பதிபக்தி' படத்தின் இறுதிக் காட்சியில் சிவாஜி கணேசன் சுட்ட போலிக் குண்டு அந்தப் படத் தயாரிப்பாளர்களில் ஒருவரான வேலுமணி என்பவரின் மீது பாய்ந்து காயத்தை உண்டாக்கிவிட்டது. அதனால் மனம் வருத்தமடைந்த சிவாஜிகணேசன் வேலுமணிக்காக பாகப்பிரிவினை மற்றும் பாலும்பழமும் படங்களில் நடித்துக் கொடுத்து அவரை தனியாக பெரிய தயாரிப்பாளர் ஆக்கினார்.[132]

'பராசக்தி' படம் திரையிட்ட நாளிலிருந்தே அவரது மார்க்கெட் உச்சத்தில் இருந்தது. அவர் நடிக்கும் படங்கள் பூஜை போட்ட நாளிலேயே அனைத்துப் பகுதிகளிலும் விற்றுத் தீர்ந்துவிடும் நிலை. அச்சமயத்தில் இயக்குநர் ஸ்ரீதரும் அவரது நண்பர்கள் கிருஷ்ணமூர்த்தி மற்றும் கோவிந்தராஜன் மூவரும் சேர்ந்து சிவாஜியை வைத்து ஒரு படம் எடுக்க முடிவு பண்ணினார்கள். போதுமான பணம் இல்லாத சூழ்நிலையில் ஸ்ரீதர் சிவாஜியை தனியாக சந்தித்து, உங்களின் அனுமதியோடு உங்கள் படத்தைப் போட்டு விளம்பரம் செய்து கொள்ள அனுமதி வேண்டும் என்று கேட்டார். என்னிடம் அனுமதி கேட்க வேண்டிய அவசியமில்லை என்று கூறிவிட்டார். 'சிவாஜி அளிக்கும் ஸ்ரீதரின் அமரதீபம்' என்று ஸ்ரீதர் விளம்பரம் கொடுத்தார். உடனே அனைத்து வியாபாரப் பகுதிகளும் விற்றுவிட்டன. அந்த விளம்பரத்தின் மூலம் வீனஸ் பிக்சர்ஸ் என்ற நிறுவனம் உருவானது. ஸ்ரீதர் தயாரிப்பாளர் ஆனார். நடிக்க வந்த இரண்டு ஆண்டுகளில் தன் பெயரில் சொந்தமாக (அமரதீபம் 1954) ஒரு படத்தை வெளியிட்ட முதல் நடிகர் சிவாஜிகணேசன். அந்த அளவுக்கு குறுகிய காலத்தில் தமிழ்த் திரைப்பட உலகில் நம்பிக்கை நட்சத்திரமாக ஜொலித்தார்.[133]

ஒரு படம் வெற்றியடைய தன் சொந்த விருப்பு மற்றும் வெறுப்பு முதலியவற்றை ஒதுக்கி வைத்துவிட்டு நடித்துக் கொடுக்கும் குணம் உடையவர் சிவாஜி கணேசன். அதற்கு உதாரணமாக 'உயர்ந்த மனிதன்' படப்பிடிப்பில் நடந்த சம்பவங்கள் எடுத்துக்காட்டாகும்.

ஏ.வி.எம். நிறுவனம் சிவாஜிகணேசனின் 125வது படமான 'உயர்ந்த மனிதன்' படத்தை 1968 ஆம் ஆண்டில் எடுத்தனர். அதில் அவருடன் மருத்துவர் வேடத்தில் நடிகர் எஸ்.ஏ. அசோகன் நடித்தார். ஒரு சில காட்சிகளில் அசோகனின் நடிப்பு சரிவர வெளிப்படுத்தப்படவில்லை. அதனால் அந்தக் காட்சி எதிர்பார்த்த அளவுக்கு திருப்தி அளிக்கவில்லை. அந்த சமயத்தில் சிவாஜி கணேசனுக்கும் அசோகனுக்கு அரசியல் காரணமாக கருத்து வேறுபாடுகள் இருந்தன. பேச்சுவார்த்தை இல்லை. இருந்தாலும் தொழில் மீது கொண்ட பக்தியால் சுயமரியாதையைப் பார்க்காமல், அக்காட்சியில் எப்படி நடிக்க வேண்டும் என அசோகனுக்கு நடித்து காட்டினார்.[134]

கலையை அரசியலோடு இணைத்து பார்க்கும் பழக்கம் சிவாஜி கணேசனிடம் என்றும் இருந்ததில்லை. உதாரணமாக திராவிட முன்னேற்றக் கழகத்தை விட்டு ஒதுங்கி நடித்துக் கொண்டிருந்த காலத்தில் கலைஞர் கருணாநிதி சிவாஜி கணேசனை அவரது அலுவலகத்தில் சந்தித்து தனக்கு ஏற்பட்டிருக்கும் நிதி நெருக்கடியைக் கூறினார். அதன் காரணமாக குறவஞ்சி (1960) படத்தை குறுகிய காலத்தில் நடித்துக கொடுத்து உதவினார்.[135]

அதுபோல் காங்கிரஸ் கட்சியில் இருந்தபோதும் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த இராம. அரங்கண்ணலின் வேண்டுகோளை ஏற்று 'பச்சைவிளக்கு' (1964) என்ற படத்தில் நடித்தார். அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த கோவைத் தம்பி கேட்டுக் கொண்டதன் பேரில் 'மண்ணுக்குள் வைரம்' படத்தில் நடித்தார்.[136]

**சிவாஜி கணேசனின் குறிப்பிட்ட சாதனைகள்**

தமிழ்த் திரையுலகில் ஒரு கதாநாயகன் நடித்த 10 படங்கள் ஒரே ஆண்டில் வெளிவந்து சாதனை புரிந்தது சிவாஜி கணேசனுடைய படங்கள் மட்டுமே.

தமிழ், தெலுங்கு, மலையாளம் மூன்று மொழிகளிலும் முதன் முதலாக எடுக்கப்பட்ட சினிமாஸ்கோப் படங்களில் நடித்தவர் சிவாஜி கணேசன் மட்டுமே. 'இராஜராஜசோழன்' (1979), 'சந்திரகுப்த சாணக்யா' (1977), 'தச்சோளி அம்பு' (1978) ஆகியன அப்படங்களாகும்.[137]

சிவாஜிகணேசன் நடித்து சென்னையில் ஒரே நாளில் மூன்று அரங்குகளில் வெளியிடப்பட்டு மூன்றிலும் வெள்ளிவிழா கொண்டாடிய படங்கள் மூன்று. அவை திருவிளையாடல், தங்கப்பதக்கம், திரிசூலம் ஆகியன ஆகும்.

'கந்தன் கருணை' திரைப்படத்தில் 56 கிலோவிற்கும் மேலாக எடைகொண்ட உடை, அணிகலன்களை அணிந்து நடித்தவர் சிவாஜி கணேசன்.[138]

**சக நடிகர்களின் திறமையை மதிக்கும் பண்பு**

தன்னுடன் நடிக்கும் சக நடிகர்களின் நடிப்பைச் சிவாஜி கணேசன் பெரிதும் மதிக்கும் குணம் கொண்டிருந்தார்.

'இருவர் உள்ளம்' படப்பிடிப்பில் ஒரு காட்சியில் இயக்குநர் எல்.வி.பிரசாத், சிவாஜிகணேசனை அழைத்து ஒரு காட்சியை விளக்கி அந்தக் காட்சியில் நீ அமைதியாக இரு, நடிக்க வேண்டாம். அப்படி நீ இருந்தால்தான் கதாநாயகியான சரோஜாதேவியின் நடிப்பு எடுபடும் என்ற கூறினார். அவர் அறிவுரையைக் கேட்டு சிவாஜிகணேசன் அமைதியாக நடித்தார்.[139]

காவல்தெய்வம் படத்தில், சிவாஜி சாமுண்டி வேடத்திலும் படத்தின் தயாரிப்பாளர் நடிகர் எஸ்.வி. சுப்பையா ஜெயிலர் வேடத்திலும் நடித்தார்கள். ஒரு காட்சியில் சாமுண்டி கொலை வெறியோடு குமுறும் கட்டத்தில் ஜெயிலர் அமைதி கலந்த முகத்தோடு வந்து சாந்தப்படுத்துவார். அந்தக் காட்சியை போட்டுப் பார்த்த சிவாஜி கணேசன் நான் நிக்கறதே தெரியலை. ஜெயிலராக நடித்த சுப்பையா பிரமாதமாக நடித்து இருக்கிறார் என்று பாராட்டினார்.[140]

'புதிய பறவை' படத்தில் கதாநாயகியாக நடிக்க சௌகார்ஜானகிதான் பொருத்தமாக இருப்பார் என்று பரிந்துரை செய்தவர் அவர். அதுபற்றி நடிகை சௌகார் ஜானகி.

பொருத்தமான கலைஞர்களை, பொருத்தமான வேடங்களுக்குத் தேர்வு செய்வதில் சிவாஜிக்கு இணை யாருமில்லை. புதிய பறவை படத்தில் நான் ஏற்று நடித்த கதாபாத்திரம், என்னுடைய திரையுலக வாழ்க்கையில் மறக்க முடியாத அனுபவத்தைக் கொடுத்ததுடன் என் கலைப்பயணத்தில் மாபெரும் திருப்புமுனையாகவும் அமைந்தது. அது நவநாகரீகமான யுவதி கதாபாத்திரம். எனக்கு அந்த வேடம் ஒத்துவராது என வாதாடியவர்களிடம் சௌகாரிடம் மட்டுமேநான் எதிர்பார்க்கும் Style, English Pronounciation, வேடத்திற்கேற்ற Body Language உள்ளது. நான் என் நடிப்புத் திறமை மீது வைத்திருந்த நம்பிக்கையைக் காட்டிலும் அவர் அதிகமாக நம்பிக்கையை வைத்திருந்தார். அவர் வாக்கு பலித்தது.[141]

## திரையுலகில் தேசபக்தி

சிவாஜிகணேசன் திரையுலகில் சக கலைஞர்கள் மத்தியில் தேச பக்தியை வளர்த்தார். 1962இல் இந்திய-சீனா யுத்தம் நடைபெற்றபோது, நடிகர் சந்திரபாபு, நடிகை பத்மினி, நடிகை சாவித்திரி, மற்றும் பாடகி சுசிலா போன்ற கலைஞர்களை அழைத்துச்சென்று இந்திய எல்லையில் போர்முனையில் கலைநிகழ்ச்சிகளை நடத்தி இராணுவ வீரர்களை மகிழ்வித்தார்.[142]

யுத்த நிதிக்காக, தென்னிந்தியாவின் பிரபல நடிகர்களான என்.டி.ராமாராவ், நாகேஸ்வரராவ் மற்றும் பிற நடிகர்களை வைத்து சென்னையில் "ஸ்டார் கிரிக்கெட் மேட்ச்" நடத்தி பணம் வசூல் செய்து கொடுத்தார்.[143] யுத்த பிரச்சார படமாக "சிங்கநாதம் கேட்குது" என்ற ஆவணப் படத்திலும், தமிழக காவல் துறையின் மேன்மையைக் காட்ட, "உங்கள் நண்பன்" என்ற ஆவணப்படத்திலும் இலவசமாக நடித்துக் கொடுத்தார்.[144]

## நடிகர் சங்கமும் சிவாஜி கணேசனும்

தென்னிந்திய நடிகர் சங்கத்தில் 109வது உறுப்பினராக 1960களில் சேர்ந்த சிவாஜி கணேசன் 1971இல் அச்சங்கத்தின் தலைவராக பதவியேற்றார். நடிகர் சங்கத்திற்காக சங்கர்தாஸ் சுவாமிகள் பெயரில் ஒரு அரங்கத்தையும், சின்னப்பா தேவர் பெயரில் ஒரு சிறிய திரையரங்கையும் கட்டினார்.[145]

தமிழ்த் திரையுலகத்தின் மதிப்பு இந்திப் பட உலகில் சிவாஜி கணேசனின் வரவாலும், பேசிய தமிழாலும், காட்டிய நடிப்பாற்றலாலும் பன்மடங்கு உயர்ந்தது என்பது நிதர்சனமான உண்மை.

1952ல் 'பராசக்தி'யில் துவங்கி 1999 "பூப்பறிக்க வருகிறோம்" படம் வரை 47 ஆண்டுகளாக கதாநாயகனாக நடித்த ஒரே நடிகர் சிவாஜி கணேசன். சிவாஜி கணேசன் நடித்த மொத்தப் படங்களின் எண்ணிக்கை 304. இதில் பிற மொழிப் படங்களும் கௌரவ வேடத்தில் நடித்த படங்களும் அடக்கம்.[146]

**சிவாஜி கணேசன் பற்றி ஹாலிவுட் நடிகர்கள்**

**மார்லன் பிராண்டோ** (Marlon Brando)

தெய்வமகன் படம் ஆஸ்கர் விருது போட்டிக்கு அனுப்பப்பட்டபோது, அப்படத்தைப் பார்த்த ஹாலிவுட் நடிகர் மார்லன் பிராண்டோ, "என்னால் நம்பவே முடியவில்லை! இப்படியும் ஒருவர் நடிக்க முடியுமா? அபாரம், அற்புதம், இதுபோன்று வேறு எவராலும் நடிக்க முடியாது[147] என்று கூறினார்.

**சார்ல்டன் ஹெஸ்டன் (Charlton Heston)**

சிவாஜி கணேசன் அவர்களை விருந்தினராகப் பெற்றிருப்பது குறித்துப் பெருமைப்படுகிறோம். அவரது வருகை பல நாட்டு மக்களிடையேயும் நல்லுணர்வு வளரப் பெரிதும் உதவும்.[148]

**சிவாஜி கணேசன் பற்றி இந்திய திரை உலகக் கலைஞர்களின் பதிவுகள் :**

**தமிழ்த் திரையுலக நடிகர்கள்**

**எம்.கே. தியாகராஜபாகவதர்**

**மனோகரா** படம் பார்த்த பின் "அம்மா" என்று ஒரு வார்த்தையை உணர்ச்சி பிழம்பாகச் சொல்லி கைதட்டல் பெற்ற ஒரே நடிகர் சிவாஜிதான்.[149]

**கலைவாணர் என்.எஸ்.கிருஷ்ணன்**

பராசக்தியின் வெற்றி சிவாஜிகணேசனின் வெற்றியாகும். பட உலகுக்கு ஒரு நல்ல கதாநாயகன் கிடைத்துவிட்டார். பராசக்தியின் வெற்றி சிவாஜி கணேசனின் புகழேணி என்பதே என் எண்ணம்.[150]

**நடிகர் எம்.ஆர். ராதா**

சிவாஜி என்ன சாதாரணமானவரா ? நடிப்புச் சக்கரவர்த்தி அல்லவா ? பிற கலைஞர்கள்அவரைப்போல நடிக்க ஆசைப்படுவதில் தவறில்லை.[151]

**நடிகர் எம்.ஜி. இராமச்சந்திரன்**

"தோன்றிற் புகழோடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் தோன்றாமை நன்று"

என்னும் குறளுக்கு முற்றிலும் பொருத்தமும் தகுதியும் உடையவர் அருமைத் தம்பி கணேசன் ஆவார். இன்று புகழேணியின் உச்சியிலிருக்கும்

கணேசன் பல ஆண்டுகளுக்கு முன்னரே, 'கவியின் கனவு' நாடகத்தில் நடித்தபோதே இப்புகழுக்கு உரிய, முன்னோட்டமான அடிப்படைத் திறமைகள் பெற்றிருந்தார். மற்றொரு புகழ்பெற்ற நாடகமான மனோகராவில் அவர் மனோகரனின் தாய் பத்மாவதி வேடத்தில் அற்புதமாக வீர வசனங்கள் பேசி, தாய்மையுணர்வையும் பாசத்தையும் நெஞ்சுருகப் பொழிந்து நடித்ததை மறக்க இயலாது. வாலிபன் ஒருவன் இயற்கைக்கு மாறாக, தன்னுடைய கம்பீரமான குரலை மாற்றிக்கொண்டு பெண்களுக்கே உரிய மென்மையான குரலில் பேசி நடித்து வெற்றி பெறுதல் மாபெரும் சாதனையாகும்.[152]

**நடிகர் வி.கே. இராமசாமி**

பல ஆண்டுகளாக கதாநாயகனாக நடிக்கும் ஒரே நடிகர் உலக சரித்திரத்திலேயே நம் சிவாஜி ஒருவராகத்தான் இருக்க முடியும்.[153]

**நடிகர் டி.ஆர். இராமச்சந்திரன்**

அவர் ஒரு தனிப்பிறவி இந்த சினிமாவுக்கு. ஆர்ப்பாட்டம் இல்லாதவர்.[154]

**நடிகர் ஜெமினி கணேசன்**

சிவாஜியும் நானும் இணைந்து நடிச்ச முதல் படம் பெண்ணின் பெருமை. கட்டபொம்மன் படத்துலே வெள்ளையத்தேவன் கேரக்டரை நான் பண்ணினேன். அதற்குப் பிறகு நானும் அவரும் **பதிபக்தி, பாசமலர், பாவமன்னிப்பு, பந்தபாசம், பார்த்தால் பசி தீரும்** போன்ற படங்கள்லே நடித்தோம். எல்லாப் படங்களும் மக்களிடையே அமோக வரவேற்பு பெற்றன.[155]

**இலட்சிய நடிகர் எஸ்.எஸ். இராஜேந்திரன்**

1942ம் வருஷத்துல ஒரு நாள் டி.கே.எஸ். சகோதரர்களின் **மகாபாரதம்** நாடகம் பார்க்க நடிகவேள் எம்.ஆர். ராதாவும் அவருடன் பதினைந்து வயது மதிக்கத்தக்க இளைஞர் ஒருவரும் வந்திருந்தனர். அந்த இளைஞர் அன்று இரவு என்னுடன் தங்கினார். அவர் பொன்னுச்சாமிபிள்ளையின் நாடக சபாவுலே பெண் வேடமிடும் நடிகர் என்று கூறினார்கள். அவர்தான் அழியாப் புகழ் பெற்ற நடிகர் திலகம் சிவாஜி கணேசன். அன்றிலிருந்து அவர் மறைந்ததாகத் தகவல் வந்த அந்தக் கடைசி நிமிடம் வரை எனக்கு மிகவும் நெருக்கமான சகோதரராகவே விளங்கினார். 'பராசக்தி'இல் அவருடைய அண்ணன் வேடத்தில் நடிக்கச் சந்தர்ப்பம் கிடைத்தது. பராசக்திக்குப் பிறகு **பணம், மனோகரா, ராஜாராணி, ரங்கோன்ராதா, தெய்வப்பிறவி, செந்தாமரை, ஆலயமணி, குங்குமம், பச்சைவிளக்கு, கைகொடுத்த தெய்வம், சாந்தி** போன்ற படங்களில்

உணர்ச்சிகரமான வேடங்களில் சிவாஜியோடு நடித்தேன். அவர் மட்டும்தான் இங்கு நடிகர். நான் ராஜ்யசபை எம்பியானதும், "ராஜு, நீ எம்.பி. ஆனதிலே எனக்கு சம்மதமேயில்லை. எந்த வயசுல வேணும்னாலும் நீ எம்.பி. ஆகலாம். நீ எம்.பி.யானதால தமிழ்த் திரையுலகம் நல்ல நடிகனை இழக்குது என்றார். வாழ்க சிவாஜியின் புகழ்.[156]

நடிகர் வி. நாகையா

சிவாஜிகணேசன் கடவுள் நமக்களித்த ஒரு கலைப்பொக்கிஷம். எந்தவிதமான பாத்திரத்தையும் அதன் ரசங்களையும் தானே அனுபவித்து, அப்பாத்திரமாகவே மக்களுக்கு அளிப்பவர். அவர் ஒரு கலை அவதாரம். கடவுள் ஒவ்வொரு துறையிலும் இருக்கிறார். அதுபோல் கலைத்துறையில் கணேசன் அவர்கள் கடவுள்.[157]

நடிகர் ரஜினிகாந்த்

இந்தச் சினிமா உலகம் எத்தனையோ நடிகர்களைக் கண்டிருக்கிறது. அவர்கள் எல்லோருமே நட்சத்திரங்கள்தான். சொற்பகாலம் மின்னி அற்ப ஆயுளில் உதிர்ந்து விடுகிறார்கள். ஆனால் பல நட்சத்திரங்களுக்கும் ஒளி கொடுக்கும் சூரியனாய் நடிக்கத் தொடங்கிய காலம் முதல் இருந்தவர் சிவாஜிகணேசன் மட்டும்தான். சினிமா உலகத்தால் மற்றவர்கள் புகழ் பெற்றிருக்கிறபோது நடிகர் திலகத்தால் சினிமா உலகம் புகழ் பெற்றது. சத்ரபதி சிவாஜி, வீரபாண்டியக் கட்டபொம்மன், வ.உ.சி. போன்ற வரலாற்று நாயகர்களை எல்லாம் இளைஞர்கள் மனதில் வீறு கொண்டு வலம் வரச் செய்தவர் அவர். ஒத்தெல்லோ, ஜூலியஸ் சீசர், சாக்ரடீஸ், அலெக்சாண்டர் போன்ற மேலைநாட்டுக் கதாபாத்திரங்களையும் கூட அவர் விட்டு வைக்கவில்லை. திரையில் உயிரோட்டமாய் அறிமுகம் செய்து சரித்திரம் படைத்துவிட்டார். இமேஜ் என்ற எல்லையை அவர் வகுத்துக் கொள்ளாததால் நெகடிவ் கதாபாத்திரங்களையும் ஏற்றுக்கொண்டு பரிமளித்திருக்கிறார். அவரதுப் படங்கள் மக்களுக்கு நல்ல பாடமாகவும், புதிதாக நடிக்க வருபவர்களுக்கு ஒரு பொக்கிஷமாகவும் விளங்கிக் கொண்டிருக்கின்றன. வாழ்க அவர் புகழ்![158]

நடிகர் விஜய்

'ஒன்ஸ்மோர்'தான் நான் சிவாஜி என்கிற கலை மேதையுடன் நடித்த படம். என் திரையுலக வாழ்க்கையில் மறக்க முடியாத ஒன்று. மூன்று மாதங்களில் அந்தப்படத்தின் படப்பிடிப்பு முடிந்தது. அந்த மூன்று மாதங்களும் ஒரு நடிப்புக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த உணர்வுதான் எனக்கு இருந்ததே தவிர.

அவரோடு நடித்தோம் என்ற உணர்வு ஏற்பட்டதில்லை. மற்றொரு விஷயம் நான் அவரிடம் திகைத்துப் போனது, ஒழுக்கம். அந்த வயதிலும் காலை ஏழு மணிக்கெல்லாம் மேக்கப் போட்டு ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வந்து நின்று விடுவார். ஏழு மணிக்கு செட்டுக்கு உள்ளே வருபவர், டைரக்டர் பிரேக் என்று சொல்கிற வரைக்கும் செட்டைவிட்டு வெளியேப் போகமாட்டார். ஒரு காட்சியை இயக்குனர் விளக்கும்போது, அந்த இயக்குனரை நடிக்கச் சொல்லி அதை உன்னிப்பாக கவனிப்பார். அந்தக் காட்சியை அவர் நடித்துவிட்டு இயக்குனரிடம் "ஓ.கே.யா? அல்லது ஒன்ஸ்மோர் வேண்டுமா?" என்றும் கேட்பார். இதை எல்லாம் பார்த்து நான் திகைத்துப் போயிருக்கிறேன். எனக்குப் பிடித்த நடிப்புலக மாமேதை அவர்தான்.[159]

**நடிகை மனோரமா**

அண்ணன் சிவாஜி கணேசனோடு பல படங்களில் நடித்திருக்கிறேன். அவரோடு நடிப்பது என்பதே பெரிய அனுபவம். நானும் ஒரு நடிகை என்பதை மறந்து அவரது நடிப்பைப் பார்த்து மெய்மறந்து இருந்திருக்கிறேன். அவரோடு நடித்தப் படங்களில் நான் மிகவும் ரசித்து நடித்தது தில்லானா மோகனாம்பாள் படம். என்னை ஒரு நடிகையாக மட்டும் பார்க்காமல் சொந்த சகோதரிபோல் பழகினார். என் தாய் இறந்தபோது ஒரு சகோதரன் செய்ய வேண்டிய அனைத்து சடங்குகளையும் செய்ததை என்னால் மறக்க முடியாது.[160]

**நடிகை பத்மினி**

நான் சிவாஜிக்கு ஜோடியாக நடித்த முதல் படம் 'பணம்'. நான் அவருக்கு ஜோடியாக 39 படங்களில் நடித்திருக்கிறேன். உடன் நடிக்கும் நட்சத்திரம் யாராக இருந்தாலும் பெரியவர், சிறியவர் என்ற வித்தியாசம் இல்லாமல் சொல்லிக் கொடுப்பார். கர்வமில்லாத நடிகர். சிவாஜி 'தங்கப்பதுமை' படத்தில் குருடனாக நடிக்கும்போது, காலையிலிருந்து மாலை வரையில் கண்களை மூடியபடியே வைத்திருந்து அவர் நடித்ததை இன்றும் என்னால் மறக்க முடியாது. அதுவே படத்தின் சிறப்புக் காட்சியாக அமைந்தது. 'தில்லானா மோகனாம்பாள்' படத்தில் நடிக்கும்போது எனக்கு வயது முப்பத்தெட்டு. ஆனால் படப்பிடிப்பு நடக்கும் சமயத்தில் எல்லாம் என்னைப் பார்க்கும்போதெல்லாம் இந்தப் படத்தில் உனக்கு வயது பதினெட்டு, அதை மனதில் வைத்துக்கொண்டு நடிக்க வேண்டும் என்று கூறுவார்.[161]

**நடிகை பி. பானுமதி**

எனது நீண்ட காலத் திரையுலக அனுபவத்தில் சிவாஜிகணேசன் போன்ற திறமைமிக்க ஒரு நடிகரை நான் சந்தித்ததே இல்லை. நடிப்புக்கலை என்பதை வைத்துக்கொண்டு எடை போட்டால் இன்று நம் நாட்டிலேயே அவர்தான் தலைசிறந்த நடிகராக விளங்கி வருகிறார் என்று துணிந்து சொல்லலாம். சிவாஜிகணேசன் ஒரு பிறவி நடிகர். மாறுபட்ட உணர்ச்சிகளை மின்னல் வேகத்தில் மாற்றி வெளிக்காட்டக்கூடிய அபூர்வத் திறமை பெற்றவர்.[162]

**நடிகை சாவித்திரி**

'பாசமலர்' படம் பார்த்துவிட்டு வெளியே வரும்போது பெண்கள் பேசிக் கொண்டது இதுதான். 'பிறந்தால் இப்படி ஓர் அண்ணனுக்குத் தங்கையாகப் பிறக்க வேண்டும்' பாசமிகு ஓர் அண்ணனின் கதாபாத்திரத்தை ஆசிரியர் மானசீகமாக கற்பனை செய்திருந்தார். அந்தப் பாத்திரத்தை ஏற்று நடிகர் திலகம் தனது ஒப்பற்ற நடிப்புத்திறத்தால், பாசமே வடிவான ஓர் அண்ணனை ரசிகர் நினைவில் என்றும் நீங்காமல் நிலைபெற்று விளங்கச் செய்துவிட்டார். கூட நடிக்கும்போது, நான் ஒரு நடிகை என்பதனையும் மறந்து, அவரது தங்கை என்றே என்னை நான் கருதிக் கொண்டு நடித்தேன். ஆனால் நடிக்கும்போதும் நடித்த பிறகும், அவர் என் அண்ணன் என்ற நினைப்பு என்னை விட்டு நீங்கவே இல்லை. அண்ணன் சிவாஜியுடன் நடிக்கும்போது நான் நடிக்கிறேன் என்னையறியாமல் நடிக்கக் கற்றுக்கொள்ளவும் செய்கிறேன்.[163]

**நடிகை சரோஜாதேவி**

நடிகர் திலகம் சிவாஜி அவர்களுடன் நடித்த நாட்களை என்னால் மறக்கவே முடியாது. 'பாகப்பிரிவினை' தான் நான் அவரோடு ஜோடியாக நடித்த முதல் படம். அந்தப் படத்தில் கர்ப்பிணிப் பெண் பிரசவ வலியால் கஷ்டப்படுவது போன்று நான் எப்படி நடிக்க வேண்டும் என்று அவர்தான் நடித்துக் காட்டினார். தொடர்ந்து பாலும் பழமும், பார்த்தால் பசி தீரும், ஆலயமணி, இருவர் உள்ளம், புதிய பறவை போன்ற படங்களில் நடித்தேன். மனதிற்குள் எவ்வளவு துன்பம் இருந்தாலும், அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் நடிப்பை மட்டுமே சந்தோஷமாக ஏத்துக்கிட்ட ஒரு மேதை அவர். சிரிப்பதில் பல பாவனைகள் காண்பிப்பார். பார்த்தால் பசி தீரும் படத்தில் அவர் நடந்து வரும் விதம் எல்லோருடைய கைத்தட்டல்களையும் பெற்றது. அவரது இடத்தை சினிமாவில் வேறு யாராலும் நிரப்ப முடியாது. அவரே இன்னொரு ஜென்மம் எடுத்து வந்தால்தான் அந்த இடத்தை நிரப்ப முடியும்.[164]

**நடிகை தேவிகா**

நடிகர் திலகம் விருதுகளை எதிர்பார்த்து என்றுமே நடித்தது கிடையாது. தன்னுடைய திறமை வெளிப்பட வேண்டும் என்ற எண்ணத்துடனேயே 100 சதவீதம் நடிப்பிலேயே கவனம் செலுத்தி நடித்தார். தானே நடிப்பை உற்பத்தி செய்து உலகமகா நடிகராக உயர்ந்தார்.[165]

**நடிகை கே.ஆர். விஜயா**

நடிகர் திலகத்துக்கு இருக்கின்ற தொழில் பக்திக்கு, உலகப் புகழ் பெற்ற ஆஸ்கார் அவார்டே அவருக்குக் கொடுக்கலாம். அவர் சம்பந்தப்பட்டக் காட்சியாக இருந்தாலும், இல்லாவிட்டாலும் “இப்படிப் பண்ணு நல்லா வரும்” என்று கைடு பண்ணுவார். அந்த மாதிரி அவர் சொல்லிக் கொடுத்து எனக்குப் பல படங்களில் நல்ல பெயர் கிடைத்திருக்கிறது. குறிப்பாக சரஸ்வதி சபதம், தங்கப்பதக்கம், திரிசூலம் படங்களைச் சொல்லலாம். அந்த மாதிரி மற்றவர்களுக்கு உதவும் மனப்பான்மை அவருக்கு நிறைய உண்டு. அவரைப் பார்த்துக் கொண்டு இருந்தாலே நமக்கு ஆட்டமேடிக்காக நடிப்பு வந்துவிடும். பங்சுவாலிட்டியில் அவர் மன்னர். ஏழு மணிக்கு கால்ஷீட் கொடுத்திருந்தால் ஏழு மணிக்கு மேக்கப்புடன் செட்டில் அவர் இருப்பார். ஐந்து நிமிடம் தாமதமாக வந்ததாக சரித்திரமேயில்லை. அவர்தான் மற்றவர்களுக்காகக் காத்திருப்பாரே தவிர, அவருக்காக மற்றவர்கள் காத்துக் கொண்டிருந்ததில்லை. இது என்னுடைய அனுபவத்தில் நான் பார்த்ததாகும்.[166]

**மாண்புமிகு தமிழக முதல்வர் செல்வி. ஜெ. ஜெயலலிதா**

நடிப்புக் கலையின் அத்தனை பரிமாணங்களையும் தனது ஒப்புயர்வற்ற நடிப்பாற்றலால் வெள்ளித் திரையில் கொண்டு வந்தவர் டாக்டர் சிவாஜிகணேசன் அவர்கள். அவர் கலைத்தாயின் மூத்தமகன். தமிழ்த்தாயின் தவப்புதல்வன். அவர் ஏற்று நடிக்காத பாத்திரங்களே இல்லை. அவர் நடிப்புத் துறையில் அட்சய பாத்திரம். கலையுலகின் பீஷ்மர். வரலாற்று நாயகர்கள் ஆனாலும் சம காலத்துக் கதாபாத்திரங்கள் ஆனாலும் அத்தகைய உயிர்த்துடிப்புள்ள கதாபாத்திரங்களாகவே மாறிவிடுகின்ற திறமை படைத்தவர் ஒருவர் உண்டு என்றால் அது நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அவர்களாகத்தான் இருக்க முடியும். புராண, சரித்திர காலத்துப் பாத்திரங்களை நாம் கற்பனை செய்து பார்க்கும்போது, நம் மனக்கண் முன் தோன்றுவது அப்பாத்திரங்களில் தோன்றி நடித்த நடிகர் திலகம் சிவாஜி அவர்களின் உருவம்தான். உலகப் பெரு நடிகர்களின் வரிசையில் வைத்து போற்றத்தக்க ஒரு தலைசிறந்த நடிகர்.

தமிழகத்திற்கு மட்டுமன்றி இந்தியாவிற்கே கிடைத்த ஓர் கலைப் பொக்கிஷம் அவர். இன்றைய, புதிய தலைமுறை நடிக நடிகையர் நடிப்பைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்றால் சிவாஜி அவர்கள் நடித்த படங்களைப் பார்த்தாலே போதும். ஒரு பல்கலைக் கழகத்தில் பயின்றது போன்ற ஒரு உணர்வு ஏற்படும்.[167]

பாடகர் எம்.எஸ். விஸ்வநாதன்

சாந்தி என்கின்ற படத்தில் கவிஞர் கண்ணதாசன் எழுதி, நான் ரொம்பக் கஷ்டப்பட்டு மெட்டுப்போட்ட பாடலை டி.எம்.எஸ். பாடினார். "யார் அந்த நிலவு" என்ற பாடல் அது. ரெக்கார்டு ஆகிவிட்டது. இரண்டு நாட்கள் படப்பிடிப்பை சிவாஜி கணேசன் தள்ளிப் போட்டார். இயக்குநர் பீம்சிங் நேரில் சென்று என்ன விஷயம் என்று கேட்டபோது சிவாஜி கணேசன், பாட்டை ரொம்ப பிரமாதமாகப் போட்டிருக்கிறார்கள். அனைவரையும் மீறி நான் நிற்க வேண்டும். அதைத்தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன் என்று கூறினார். பாடல் படப்பிடிப்பு முடிந்து படம் வெளிவந்த பிறகு போய் பார்க்கும்போது அந்த பாடல் காட்சியில் கவிஞர் இல்லை, நான் இல்லை, டி.எம்.எஸ். இல்லை, சிவாஜி மட்டும் இருந்தார். அப்பேர்ப்பட்ட மாபெரும் நடிகருடன் எனக்கு வேலை வாய்ப்புகள் கிடைத்ததை பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன்.[168]

பாடகர் டி.எம். சௌந்தர்ராஜன்

இமயமலை போன்று ஈடு இணையில்லாத நடிகர் சிவாஜி ஒருவர்தான். அவருடன் பணியாற்றியதை நான் பெரும் பாக்கியமாகக் கருதுகிறேன். அவருக்குப் பின்னணி பாடுவதே ஒரு மகிழ்ச்சியான அனுபவம்தான். தனது உணர்ச்சிகரமான, நேர்த்தியான நடிப்பால், பாடல் காட்சிகளில் தானே பாடுவது போன்ற தோற்றத்தை ஏற்படுத்தினார். கலைத்துறை அவரால் மிகுந்த பெருமையும், புகழும் அடைந்துள்ளது.[169]

வட இந்திய திரையுலக நடிகர்கள்

நடிகர் திலீப்குமார்

பல தரப்பட்டப் பாத்திரங்களை ஏற்று நடிப்பதில் சிவாஜி கணேசன் திறமைசாலி. அவர் நமது நாட்டின் சிறந்த நடிகர்களில் ஒருவர். தமிழ்ப் படவுலகுக்கு மட்டுமல்ல இந்த நாட்டுக்கே கிடைத்துள்ளக் கலைப் பொக்கிஷம் அவர்.[170]

**நடிகர் தேவ் ஆனந்த்**

இந்தி **'அமரதீபம்'** படத்தில் சிவாஜி கணேசனுக்காக நான் நடித்தேன். அன்று முதல் நானும் அவரும் நல்ல நண்பர்கள். சிவாஜி ஒரு சகாப்தம். நடிப்பில் ஈர்த்தவர், எல்லைகளைத் தொட்டவர்.[171]

**நடிகர் சசிகபூர்**

விண்ணுலகத் தேவதை ஏதாவது ஒன்று என்னிடம் வந்து, உங்களுக்கு என்ன வரம் வேண்டும் என்றுக் கேட்டால், சிவாஜி கணேசனைப் போல் பேசும் சக்தி வேண்டும் என்றுக் கேட்பேன். சிவாஜி அவர்கள் பக்கம், பக்கமாக வசனங்களைத் தெளிவான ஒலியோடு, உச்சரிப்போடு, இணைப்போடு ஒரே மூச்சில் ஒரே வீச்சில் பேசும் அபாரமானச் சக்தி கொண்டவர்.[172]

**நடிகர் ராஜேஷ்கண்ணா**

**கௌரவம்** திரைப்படத்தை ஹிந்தியில் எடுப்பதற்காக எனக்குப் போட்டுக் காட்டினார்கள். படத்தைப் பார்த்து நான் பிரமித்துப் போய்விட்டேன். என்னால் இந்த மாதிரி நடிக்க முடியாது என்று மனதார ஒப்புக் கொண்டேன். சிவாஜி செய்த பாரிஸ்டர் ரஜினிகாந்த் ரோலை உலகில் உள்ள வேறு எந்த நடிகராலும் செய்ய முடியாது என்பதையும் தயாரிப்பாளர்களிடம் கூறினேன்.[173]

**நடிகர் தர்மேந்திரா**

நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அவர்கள் நம் எல்லோரையும் கவர்ந்தத் தலைசிறந்த நடிகர்.[174]

**நடிகர் சஞ்சீவ்குமார்**

உலகப் பெருநடிகர் சிவாஜி. நான் அவர் வழியைப் பின்பற்றும் ஒரு சிறு நடிகன்.[175]

**தெலுங்கு நடிகர் நாகேஸ்வரராவ்**

என்னைப்போலவே என் நண்பர் சிவாஜியும் கஷ்டப்பட்டு வாழ்க்கையில் முன்னுக்கு வந்தவர். **நவராத்திரி** படத்தில் அவரது பலவித பரிமாணங்களைக் கண்டு வியந்திருக்கிறேன். நடிப்பில் அவரை மிஞ்சுவதற்கு உலகில் எவரும் இல்லை. அவரதுக் கம்பீரமான சிம்மக்குரலைக் கேட்டு பிரமித்துப் போயிருக்கிறேன். ஆனால் அப்பேர்ப்பட்ட சிம்மக்குரலோன் சிவாஜிதான் காதல் காட்சிகளில் மெல்லிய குரலில் நளினமாக, காதல் உணர்வுகளை

வெளிப்படுத்துவார். ஒரே திரைப்படத்தில் பல்வேறு வகைப்பட்ட நடிப்பை வெளிப்படுத்தும் ஆற்றல் அவர் ஒருவருக்குத்தான் உண்டு. அவருடைய நடிப்பைப் பற்றி நினைக்கும்பொழுது என் மனதில் எழும் சிந்தனை இதுதான். நம்முடைய ஐம்புலன்களும், நம்முடைய எண்ணம், செயல் மற்றும் நாம் அனுபவிக்கும் சுவைகள் அனைத்திற்கும் சாட்சிப் பொருளாக விளங்குகின்றன. நம்முடைய மனம், ஆத்மாவிற்கும், ஐம்புலன்களுக்கும் பாலமாயிருந்து செயல்படுகின்றது. மனம் வழிநின்று, ஐம்புலன்கள் மூலம் ஆத்மா அனுபவித்து ஆனந்தமடையும் பல்வேறு சுவைகளுள், நடிகர் திலகத்தின் ஒப்பற்ற நடிப்பும் ஒன்று என்றால் அது மிகையாகாது.[176]

**மலையாள நடிகர் பிரேம் நசீர்**

வீரபாண்டிய கட்டபொம்மன் என்கின்ற விடுதலை வீரனின் பாகத்தை ஏற்று நடித்து இந்த நாட்டு மக்கள் அனைவரின் உள்ளங்களையும் தொட்டு தன்பால் இழுக்கும் திறமை சிவாஜி ஒருவருக்குத்தான் உண்டு. இவர் கட்டபொம்மனாக நடித்ததை அன்றைய கட்டபொம்மன் இருந்து இன்று கண்டால் இதயத்துடிப்பால் இன்பப்பெருக்கால் இறுக அணைத்துத் தழுவியிருப்பான். அதற்குப் பதிலாகத்தான் நாமும் நாடாள்வோரும் இன்று போற்றிப் புகழ்கிறோம்.[177]

**கன்னட நடிகர் சாய்குமார் (தினந்தோறும் சிவாஜிகணேசன்படத்தை பூஜை அறையில் வைத்து வணங்குபவர்)**

உலகத்திலேயே மிகச்சிறந்த நடிகர், நடிகர் திலகம் சிவாஜிதான். அவருடைய நடிப்பாற்றலைக் கண்டு பிரமித்துப் போய், அவரது இன்ஸ்பிரேஷனால்தான் நான் நடிகனானேன் என்பது சத்தியமான உண்மை. "நடிப்பு என்றால் சிவாஜி ஒருவர் மட்டுமே". நடிப்பின் இலக்கணம் அவர். நடிப்பின் இமயம் அவர். அவரைத் தரிசித்து, நடிப்புலக மேதையான அவரது காலைத் தொட்டுக் கும்பிட்டு நடிப்புக் கடவுளான அவரிடம் ஆசி பெற்றது பிறவிப் பயனை அடைந்தது போலாகியது.[178]

**நிறைவுரை**

விஞ்ஞானத்தின் அரிய கண்டுபிடிப்பான சினிமா 1905ல் தமிழகத்துக்கு அறிமுகமானது. 1931ல் தயாரிக்கப்பட்ட 'காளிதாஸ்' என்ற தமிழ் சினிமாத் தமிழ்த் திரைப்பட உலகை ஒரு பெரிய வர்த்தக மையமாக உருவெடுக்க உதவியது. சினிமா பேசத் துவங்கியதும், பாடத் தெரிந்தவர்கள் பட உலகை நோக்கிப் படையெடுத்தார்கள். புராண இதிகாசக் கதைகளை வைத்து படங்களை

தயாரித்து வந்த காலத்தில் சமூகக் கதைகளை திரையுலகில் அறிமுகப்படுத்தி அவற்றில் சுய மரியாதைக் கருத்துக்களை மக்களிடையே அறிமுகப்படுத்தியதில் முதன்மையானவர் அறிஞர் அண்ணாத்துரை. இரண்டாமவர் கலைஞர் மு. கருணாநிதியாகும். கருணாநிதி திரைக்கதை அமைத்து வசனங்களை எழுதிய படங்களில் குறிப்பிடத்தக்க வெற்றியடைந்த படம் 'பராசக்தி' . இந்த வெற்றியை அடுத்து 1954ல் வெளிவந்த படம் 'மனோகரா' . இந்த இரண்டு படங்களிலும் தன் சிம்மக் குரலால், அருமையானத் தமிழ் உச்சரிப்பால் திறமையாக வசனம் பேசி நடித்த பெரும் வெற்றிக்கு வித்திட்டவர் சிவாஜி கணேசன். தன்னுடைய முதல் படத்தின் மூலம் சூப்பர் ஸ்டாராக உயர்ந்தார்.

கருணாநிதியின் வசனங்களை சிவாஜி கணேசனுக்கு முன் எந்த நடிகரும் அவ்வளவு சிறப்பாக பேசவில்லை. 'பராசக்தி' மற்றும் 'மனோகரா' ஒலித்தட்டுக்களாக வெளி வந்தன. 'மனோகரா' படம் ஒரே நேரத்தில் மூன்று மொழிகளில் எடுக்கப்பட்டபோது, மூன்று மொழிகளிலும் மாறி மாறி வசனங்கள் பேசித் தன்னுடைய நடிப்பாற்றலை முழுமையாக வெளிப்படுத்தினார். இந்த மாபெரும் வெற்றிகளுக்குப் பின் வில்லன்கள் வேடமேற்றுத் தன் நடிப்புத் திறமையை வெளிப்படுத்தினார். பல படங்களில் ஓரங்க நாடகங்களில் நடித்துப் புகழ் பெற்றார்.

ஒரே படத்தில் இரண்டு, மூன்று மற்றும் ஒன்பது வேடங்கள் ஏற்றுத் தன் திறமையை நிலைநாட்டினார். கடவுள்களையும், கடவுளின் அவதாரங்களையும் சங்ககால மற்றும் புராண, இதிகாச மன்னர்களையும், தேசபக்தர்களையும் நம் கண் முன்னே அபார நடிப்பினால் உயிரோடு நடமாட வைத்தார்.

இளவயதில் கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்றத் தனதுக் கனவை நிறைவேற்றும் முயற்சியில் இறங்கினார். சிவாஜி மன்றம் என்ற நாடகக் கம்பெனியை ஆரம்பித்து, அதில் தன்னுடன் நாடக உலகில் நடித்த நடிகர், நடிகைகளை உறுப்பினர்களாக்கி வீரபாண்டிய கட்டபொம்மன் நாடகத்தை 1957ல் அரங்கேற்றம் செய்தார். 1959ல் அந்த நாடகத்தை திரைப்படமாக தயாரித்தபோது அதில் கட்டபொம்மனாகக் கம்பீரமாக நடித்தார். ஆப்பிரிக்க - ஆசிய பட விழாவில் சிறந்த நடிகருக்கான விருதை பெற்றார். அதன் மூலம் சர்வதேச விருதைப் பெற்ற முதல் இந்திய நடிகர் என்ற பெருமையை அடைந்தார். தனது நாடக மன்றத்தின் உறுப்பினர்களின் நலனுக்காக நாடகங்களிலும், திரைப்படங்களிலும் நடித்து வந்தார்.

1962ல் அமெரிக்க ஐக்கிய நாட்டின் கலாச்சார தூதுவராக அழைக்கப்பட்டார். அங்கு நயாகரா நகரின் ஒருநாள் மேயராக பதவி அளிக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டார். 1995ல் பிரெஞ்சு நாட்டின் மிக உயர்ந்த விருதான செவாலியர் விருதினைப் பெற்றார். 1997ல் கலைத்துறையில் உயர்ந்த விருதான தாதா சாகேப் பால்கே விருது வழங்கப்பட்டது.

யாராலும் நினைத்துப் பார்க்க முடியாத கதாபாத்திரங்களில் நடித்தார். காவல்துறை அதிகாரியாகவும், பனையேறித் தொழிலாளியாகவும் நடித்த சிவாஜி கணேசன் அதற்கு நேர்மாறாக 'வியட்நாம் வீடு', 'கௌரவம்' போன்ற படங்களில் பிராமணர்களின் வேடங்களை ஏற்று பிராமணர்களின் பேச்சைத் திறம்பட பேசி நடித்துப் பெரும் புகழ் பெற்றார்.

ஆங்கில நாடக ஆசிரியர் ஷேக்ஸ்பியரின் நாடகங்களான 'ஒத்தல்லோ', 'ஹேம்லட்', 'ஜூலியஸ் சீசர்' போன்ற வேடங்களை ஏற்று ஆங்கில நடிகர்களுக்கு இணையாக தனது நடிப்புத் திறமையை வெளிப்படுத்தினார். கை, கால் ஊனமுற்றவராக, திராவக வீச்சினால் அவலட்சணம் ஆன முகத்தோடும், பிறவியிலேயே முகத்தின் ஒரு பக்கம் கருகிய தோற்றத்தோடும் நடித்துப் புகழ் பெற்றார்.

தமிழ் தவிர தெலுங்கு, கன்னடம், மலையாளம், இந்தி போன்ற பிற மொழிப் படங்களில் நடித்தார். தனது நடிப்பாற்றல் மூலம் இந்திய திரைப்பட உலகில் அனைவரின் கவனத்தை ஈர்த்தார். திரையுலகில் நேரந்தவறாதவராக, சக நடிகரின் திறமையை மதிப்பவராக, காட்சிகள் சிறப்புற அமைய முழு ஒத்துழைப்பு கொடுப்பவராக பல சிறப்பான பண்புகளுடன் இருந்தார். தொழிலில் நஷ்டம் அடைந்த தயாரிப்பாளர்களுக்கு ஆதரவு நல்கி மீண்டும் அவர்கள் வாழ்வை வளம்பெறச் செய்தார்.

இவ்வாறாக தன் நடிப்பு ஒன்றையே முழுமூச்சாகக் கொண்டு நடித்து உலகில் மிகச் சிறந்த நடிகர்களில் ஒருவராக சிவாஜிகணேசன் திகழ்ந்தார் என்பதை நம்மால் அறிய முடிந்தது.

## இறுதிக்குறிப்புகள்

---

1 Bordwel David and Thampson Kristan, **Film History An Introduction** Mc Graw Hill Company, Inc. Newyork, 2003, p.13.
2 **A Brief History of Indian Cinema**, Chapter 2, Sodhganga-infibnet.ac.in.
3 நாராயணன், அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை,** ப.9
4 நாராயணன், அறந்தை, ***ஆரம்ப கால தமிழ் சினிமா,*** விஜயா பப்ளிகேஷன்ஸ், சென்னை, பாகம் 1, 2008, ப.9.
5 Dhananjayan, G., **The Best of Tamil Cinema, 1931-2010**, Vol.1,Galata Media Private Ltd, Chennai, 2011 – p.111
6 **Ibid.,**
7 நாராயணன், அறந்தை, ***ஆரம்ப கால தமிழ் சினிமா,*** ப.11.
8 நாராயணன், அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை,** ப. 29
9 நாராயணன், அறந்தை, ***ஆரம்ப கால தமிழ் சினிமா,*** பப 34, 114.
10 நாராயணன், அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை,** ப.41
11 **மேலது,** ப. 45
12 நாராயணன், அறந்தை, ***ஆரம்ப கால தமிழ் சினிமா,*** ப.22.
13 நாராயணன், அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை,** ப.98
14 வந்தியத் தேவன், கா., **மு.கூ.நூ.,** ப.13.
15 Dhananjayan, G., **op.cit.,** p.9
16 மருதுமோகன், கே.வி.எஸ்., ***பராசக்தி - மனோகரா தமிழ்த்திரையுலகில் மறுமலர்ச்சி ஏற்படுத்திய படங்கள் - ஓர் ஆய்வு,*** உலகத்தமிழ்ச் செம்மொழி மாநாடு, 2010.
17 வந்தியத் தேவன், கா., மு.கூ.நூ. ப.14
18 Dhananjayan, G., **op.cit.,** p. 126
19 வந்தியத் தேவன், கா., **மு.கூ.நூ.,** ப.14
20 **பேசும் படம்,** நவம்பர் 1952
21 கருணாநிதி. மு., நெஞ்சுக்கு நீதி, திருமகள் நிலையம், சென்னை, 1975, பாகம் 1, ப.193
22 வந்தியத் தேவன், கா., **மு.கூ.நூ.,** ப.11
23 வேங்கடசாமி, ரா., ***ஆரம்ப கால தமிழ் சினிமா,*** பாகம் 3, விஜயா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2010, ப.11.
24 Dhananjayan, G., **op.cit.,** p. 126
25 சம்பந்த முதலியார், பம்மல், **மு.கூ.நூ.,** ப.69
26 Dhananjayan, G., **op.cit.,** p.134
27 ஆரூர்தாஸ், **மு.கூ.நூ.,** ப.41
28 வேங்கடசாமி, ரா., **மு.கூ.நூ.,** ப.35.
29 Dhananjayan, G., **op.cit.,** p.134
30 மருதுமோகன், மு.கூ. ஆய்வேடு.
31 வந்தியதேவன், **மு.கூ.நூ.,** பப.35-38.
32 மருதுமோகன், **மு.கூ. ஆய்வேடு.**
33 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** பப.104, 105, 130.
34 ஆரூர்தாஸ், மு.கூ.நூ. ப.65.
35 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** ப.87
36 **மேலது.,** பப.110-111.
37 நாராயணன், அறந்தை, தமிழ் சினிமாவின் கதை, ப.423
38 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** ப.109
39 **மேலது.,** ப.111
40 வந்தியதேவன், **மு.கூ.நூ.,** ப.234
41 Maruthumohan, K.V.S., Researcher,*Thespian Sivaji Ganesan and His Prominent Tamil Movies. A Bird's eye view,* **Indian Streams Research Journal**, 2015, P.4.
42 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** ப.222

43 நாராயணன், அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை,** ப.155.
44 நாராயணன், அறந்தை, ***ஆரம்ப கால தமிழ் சினிமா,*** ப.136
45 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** பப.142-143
46 **மேலது.,** ப.162.
47 Dhananjayan, G., **op.cit.,** pp.246-247
48 ***ஆனந்தவிகடன்,*** 21.9.1969
49 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** ப.43
50 Dhananjayan, G., **op.cit.,** p.227
51 ***ஆனந்தவிகடன்*** 22.11.1964
52 சண்முகம், டி.கே., ***எனது நாடக வாழ்க்கை,*** ப.351.
53 இராஜேந்திரன், எஸ்.எஸ்., ***நான் வந்த பாதை,*** அகநி வெளியீடு, வந்தவாசி, 2015, பப.42-43
54 Maruthumohan, K.V.S., **loc.cit.,** p.4.
55 சண்முகம், டி.கே., எனது நாடக வாழ்க்கை, ப.351
56 Dhananjayan, G., **op.cit.,** p.232
57 நாராயணன், அறந்தை., **ஆரம்பகால தமிழ் சினிமா,** பாகம் 2, 2008, ப.43.
58 வந்தியதேவன், கா., **மு.கூ.நூ.,** பாகம் 3, ப.117
59 காதர் ஷெரீப், பேட்டி (கவிஞர் கா.மு. ஷெரீபின் மகன்) ***தினமணி*** 14.12.2014. - ஞாயிறு கொண்டாட்டம் ப.1.
60 Maruthumohan, K.V.S., **loc.cit.,** P.5.
61 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** பப.141-142
62 மருதுமோகன்,கே.வி.எஸ்., கர்ணன் 150, **புதுகைத் தென்றல்** - அக்டோபர், 2012, ப.29
63 **மேலது.,** ப.30
64 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** ப.145
65 Dhananjayan, G., **op.cit.,** pp.186-187.
66 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** பப.145-146
67 வந்தியதேவன், கா., **மு.கூ.நூ.,** பாகம் 3, ப.81
68 ***தினகரன்*** - ஞாயிறு மலர், 31.05.1998,
69 ***ஆனந்தவிகடன்,*** 24.05.1959
70 வந்தியதேவன், கா., **மு.கூ.நூ.,** பாகம் 3, ப.70.
71 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** ப.153
72 **மேலது.,** ப. 154
73 ***The Hindu***, 17.03.2010: Afro-Asian Film Festival.
74 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** ப.155
75 **மேலது.,** ப.156
76 வந்தியதேவன், **மு.கூ.நூ.,** பாகம் 3, பப.61-64
77 **மேலது.,** ப.63
78 நேர்காணல், கிரிசண்முகம் சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2011.
79 சிவாஜி கணேசன், ***எனக்குப் பிடித்த பாத்திரம்*** - வசந்த மாளிகை, 2004, பப.45-46.
80 **பாவமன்னிப்பு - பாசமலர் - பாலும் பழமும் பொன்விழா மலர்,** 2011, பப.13-17
81 நாராயணன், அறந்தை, ***ஆரம்ப கால தமிழ் சினிமா,*** பாகம் 2, பப.120-121
82 சரவணன். ஏ.வி.எம்., பேட்டி, ***கல்கி*** - 16.01.2005
83 **பாவமன்னிப்பு - பாசமலர் - பாலும் பழமும் பொன்விழா மலர், 2011,** ப.31
84 இன்பா, மு.ஞா.செ. ***சாவித்திரி,*** தோழமை வெளியீடு, சென்னை, 2015, பப.96-100
85 **பாவமன்னிப்பு - பாசமலர் - பாலும் பழமும் பொன்விழா மலர், 2011,** பப.48-49
86 Dhananjayan, G., **op.cit.,** p.202
87 **பாவமன்னிப்பு - பாசமலர் - பாலும் பழமும் பொன்விழா மலர், 2011,** ப. 100
88 ***தினமணி,*** 4.6.1961
89 **பாவமன்னிப்பு - பாசமலர் - பாலும் பழமும் பொன்விழா மலர், 2011,** பாகம் 2 - பப.82-89
90 நாராயணன், அறந்தை, ***ஆரம்ப கால தமிழ் சினிமா,*** பாகம் 2, பப. 20-21

91 **மேலது.,** ப.70
92 வந்தியதேவன், கா., **மு.கூ.நூ.,** பாகம் 3, ப.87
93 வந்தியதேவன், கா., **மு.கூ.நூ.,** பாகம் 4, பப.188-191
94 Dhananjayan, G., **op.cit., pp**. 240-243
95 வந்தியதேவன், கா., **மு.கூ.நூ.,** ப.216
96 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** ப.225
97 மகேந்திரன்.ஒய்.ஜி. நான் சுவாசிக்கும் சிவாஜி, **தினமலர்,** 23.02.2014
98 Dhananjayan, G., **op.cit.,** pp. 254-255
99 **Ibid.,** PP 262-263
100 **Ibid.,** P.90
101 நேர்காணல் **இயக்குநர் பாரதிராஜா,** 05.09.2015
102 Dhananjayan, G., **op.cit.,** p.91
103 **Ibid.,** pp. 151/152
104 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** ப.103
105 **மேலது.,** பப. 103-148-150
106 **மேலது.,** ப.183
107 சண்முகம். வி.சி., **நாட்குறிப்பு.,** சிவாஜி கணேசனின் தம்பி., 1967
108 சந்திரசேகரன், கே., தொகுப்பு, **தென்திசை பதிப்பகம்,** சென்னை, 2008, ப.211
109 நேர்காணல் நடிகர் சிவக்குமார் - 27.11.2015
110 மோகன், பாசமலர் தயாரிப்பாளர், **சினிமா எக்ஸ்பிரஸ்,** ஜனவரி-பிப்ரவரி, 1998
111 **Chevalier Felicitation Souvenir**, Sivaji Prabhu Charities Pvt. Ltd.,22.04.1995
112 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** ப.287
113 **மேலது.,** ப.289
114 **மேலது.,** ப.290
115 சிவாஜி கணேசன், **மு.கூ.நூ.,** ப.30
116 நேர்காணல் ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன்., 1.10.2012
117 Dhananjayan, G., **op.cit.,** p.126
118 நேர்காணல் **நடிகை அஞ்சலி தேவி** 01.10.2012
119 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2012
120 ஆரூர்தாஸ்., சினிமாவின் மறுபக்கம், **தினத்தந்தி,** 22.03.2014,
121 முத்துச்சாமி. மு., ***சிவாஜி தரிசனம்,*** முருகாலயம், சென்னை, 2005, ப.32
122 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2015
123 நாராயணன், அறந்தை, தமிழ் சினிமாவின் கதை, ப. 121
124 கிரி சண்முகம் (சிவாஜி கணேசனின் தம்பி மகன்) நேர்காணல் - 1.10.12
125 ஆரூர்தாஸ், ***சினிமாவின் மறுபக்கம்,*** தினத்தந்தி, 10.05.2014
126 நேர் காணல் ராம்குமார், சிவாஜி கணேசன் மகன் - 1.10.12
127 முத்துச்சாமி. மு., **மு.கூ.நூ.** பப.49-51
128 ஆரூர்தாஸ், **மு.கூ.நூ.,** ப.114
129 **மேலது.,** பப.117-118
130 நேர்காணல் - கிரி சண்முகம் சிவாஜி கணேசனின் தம்பி மகன் 1.10.12
131 நேர்காணல், குமார். வி.ஆர்., சிவாஜி கணேசனின் மனைவி கமலாவின் தங்கை மகன் 1.10.2011
132 ஆரூர்தாஸ், **மு.கூ.நூ.,** பப.167-168.
133 வந்தியதேவன், கா., **மு.கூ.நூ.,** ப.12
134 நேர்காணல் இயக்குநர் எஸ்.பி. முத்துராமன், 01.10.2015
135 வந்தியதேவன், **மு.கூ.நூ.,** ப.59
136 **மேலது.,** ப.24
137 வந்தியதேவன், கா., **மு.கூ.நூ.,** ப.13
138 **மேலது.,** ப.25

139 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** ப.227

140 வந்தியதேவன், கா., **மு.கூ.நூ.,** ப.45

141 நடிகை சௌகார்ஜானகி - 1978 ஆம் ஆண்டு சென்னைத் தொலைக்காட்சியில் மலரும் நினைவுகளில் கூறியது

142 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** பப.233-234

143 **மேலது.,** ப.204

144 நேர் காணல் ராம்குமார், சிவாஜி கணேசன் மகன் - 1.10.15

145 கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன் நேர்காணல் - 1.10.14

146 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு), **மு.கூ.நூ.,** ப.306

147 சந்திரசேகரன், கே., தொகுப்பு, மு.கூ.நூ., ப.254

148 **நடிகன் குரல், நடிகர் திலகம் சிவாஜி கணேசன் உலக வெற்றி உலா மலர்,** 1962.

149 ***தினகரன்*** வசந்தம் ஞாயிறு மலர் 21.11.1999

150 ***போர்வாள்,*** பராசக்தி மலர், 1952

151 சந்திரசேகரன், கே., தொகுப்பு, மு.கூ.நூ., ப.123

152 **நடிகன் குரல், நடிகர் திலகம் சிவாஜி கணேசன் உலக வெற்றி உலா மலர்,** 1962.

153 ***தேவி,*** 7.10.1987

154 ***பொம்மை,*** ஜனவரி 1979

155 ***குமுதம்,*** 28.07.2003

156 ***வசந்தமாளிகை மலர்,*** ஜூலை & ஆகஸ்ட் 2004

157 **பத்மஸ்ரீ சிவாஜிகணேசன் 40வது பிறந்த நாள் சிறப்பு மலர்,** 1.10.1967

158 ***ராணி,*** 20.05.2007

159 **The Cinema**, April 2003

160 **நேர்காணல், நடிகை மனோரமா, 1.10.2013**

161 ***பொம்மை,*** நடிகர் திலகத்தின் நடிப்புலகப் பொன்விழா மலர், அக்டோபர் 1984

162 ***பேசும் படம்,*** மார்ச் 1966

163 ***சினிமா ஸ்டார்,*** நடிகர் திலகம் சிவாஜிகணேசன் 100வது படவிழா மலர், 1964

164 ***ஆனந்த விகடன்,*** 10.07.2005

165 ***தினகரன்,*** 5.7.1997

166 ***தினபூமி,*** தீபாவளி மலர் 1997

167 ***தினத்தந்தி,*** 23.04.1995

168 ***தினபூமி,*** தீபாவளி மலர் 1997

169 ***வாசுகி.*** 16-30, ஏப்ரல் 1995

170 ***பேசும்படம்*** 1968

171 ***குமுதம்*** 31.10.2007

172 ***The New Indian Express*** 21.02.2005

173 சந்திரசேகரன், கே., தொகுப்பு, மு.கூ.நூ., ப.251

174 சிவாஜி கணேசனின் 43வது பிறந்த நாள் விழாவில் (1.10.1970) கூறியது

175 ***கதிரவன்*** - 22.07.2001

176 நடிகர் திலகத்தின் 76வது பிறந்தநாள் விழா 1.10.2003, சென்னையில் பேசியது

177 ***கலைத்தோட்டம்,*** 15.6.1959

178 ***சினிமா எக்ஸ்பிரஸ்*** 1-15 நவம்பர் 1997

# இயல் - நான்கு

## சிவாஜி கணேசனின் நடிப்பாற்றல்

**முகவுரை:**

நாடக உலகில் ஏழு வயது முதல் பல்வேறு வேடங்களை ஏற்று தனித் தகுதி பெற்றுத் தனது 24வது வயதில் கதாநாயகனாக அறிமுகம் ஆனார் சிவாஜி கணேசன். அவர் ஒரே படத்தின் மூலம் தமிழ்த் திரையுலகின் சூப்பர் ஸ்டாராக ஆனார். கம்பீரமான குரல், சிறந்த நினைவாற்றல், தமிழ் உச்சரிப்பில் தனித்திறமை, வசனம் பேசும் முறையில் தனி ஆற்றல் பெற்று விளங்கினார். மேலும் அவர் பல திறமைகளைத் தனக்குத் தானே வளர்த்துக் கொண்டவராகத் திகழ்ந்தார்.

அந்தத் திறமைகளை அடிப்படையாக வைத்துச் சிறந்த நடிப்பாற்றலை வெளிப்படுத்தினார் சிவாஜி கணேசன். ஆரம்பக் கல்வியைப் பாதியில் நிறுத்தி நாடக உலகில் நுழைந்த சிவாஜி கணேசனுக்குத் தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தின் மெய்ப்பாட்டியலில் கூறப்பட்டுள்ள எட்டு வகைச் சுவைகள் பற்றி அறிந்திருக்க வாய்ப்பில்லை. அதுபோல் ருஷ்ய நாட்டு நடிகரும் இயக்குநருமாகிய கான்ஸ்தான்டின் ஸ்தானீஸ்லாவ்ஸ்கி (Constantin Stanislavsky) உருவாக்கிய நடிப்புக் கோட்பாடுகள் பற்றியும் தெரிந்திருக்க முடியாது. ஆனால் தன் நடிப்பில் இயல்பாகத் தொல்காப்பியத்தின் மெய்ப்பாட்டியல் சுவைகளை வெளிப்படுத்தியதும், ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் நடிப்புக் கோட்பாடுகளைக் கடைப்பிடித்து வெற்றி பெற்றதும் எங்ஙனம் சாத்தியமாயிற்று என்பதையும், மேற்கூறியவைகளைத் தாண்டித் தனக்குத் தானே ஒரு நடிப்புக் கோட்பாட்டை உருவாக்கியதை விளக்குவதாக அமைகிறது இந்த இயல்.

**நடிப்பு (Acting) விளக்கம்**

I always tell the truth; even when I lie- *Alfredo Pacino* - Actor

What is acting by lying and what is
good lying but convincing lying - *Laurence Olivier* - Actor

Acting is in everything but the words- *Stella Adler* - Actress

Acting happy agony – *Sir Alec Guinness* - Actor

**நடிகர் என்பவர் யார்**

The great actor should be full of feeling and especially he should feel the thing he is portraying – Constantin Stanislavsky

எந்த சூழ்நிலையிலும், உணச்சிவசப்படாமல், அந்தப் பாத்திரத்துக்குள் நுழைந்து சுலபமாக வெளியே வந்து நடிப்பவன்தான் நடிகன்.

- சிவாஜி கணேசன்

**நடிப்பின் இயல்பு**

Unconscious creativeness through concious technique.

– Constantin Stanislavsky.

நடிக்கின்ற பாத்திரத்திற்கேற்ப மனித உடலின் ஒவ்வொரு அங்கத்திலும் ஏற்படும் அசைவும், முகபாவமும் மொத்தமாகச் சேர்ந்ததுதான் நடிப்பு.

- சிவாஜி கணேசன்

நடிப்பின் இயல்புகள் முறையே உடம்பு, முகம், கண் இவற்றின் மூலம் பிரதிபலிக்கும் என்பதனைச்

"எண்ணம் வந்தால் தோற்றுமுடம்பில்
உடம்பில் மிகத் தோற்றம் முகத்து
முகத்தின் மிகத் தோற்றம் கண்ணில்"

என்று சிலப்பதிகார உரையில் அடியார்க்கு நல்லார் கூறியுள்ளார்.

**தொல்காப்பியமும் சிவாஜி கணேசனும்**

தொல்காப்பியம் என்பது தமிழின் தொன்மையையும் சிறப்பையும், பெருமையையும் தெரிந்திட உதவும் இலக்கண நூல். இதன் ஆசிரியர் தொல்காப்பியர் ஆவர். தொல்காப்பியம் முதல், இடை மற்றும் கடை என்ற மூன்று தமிழ்ச் சங்கங்களில் இடைச் சங்க கால நூலாகும். இதன் காலம் கி.மு. 1000-700 ஆண்டுகட்கிடைப்பட்ட காலம் ஆகும்.[1] இன்றைய மொழியியல் ஆய்வாளர்களுக்கு வியப்பைத் தருகிற மொழிசார் கூறுகளை நுட்பமாகக் கொண்டிருக்கிறது என்பதும், இலக்கியக் கொள்கைகளை உருவாக்கித்

தந்திருக்கிறது என்பதும், இனியும் வரும் கொள்கைகளுக்கு இடம் தருகிற வகைப்பாடுகளைக் கொண்டிருக்கிறது என்பதும் தொல்காப்பியத்தின் தனிப்பெருமைகளாகும்.[2]

### மெய்ப்பாட்டியல்

மெய்ப்பாடுகள் பற்றிக் கூறுவது மெய்ப்பாட்டியல் (Manifest Emotions) என்றழைக்கப்படுகின்றது. மெய் என்றால் உடல். இந்த உடலின் மூலம் வெளிப்படும் சுவைகள் மெய்ப்பாடுகள் எனப்படும். ஒரு பொருளை தான் உணர்ந்து அதை பிறர் உணரும் வகையில் வெளிப்படுத்துதல் மெய்ப்பாடு எனப்படும்.[3]

தொல்காப்பியம் மெய்ப்பாட்டியலில் எட்டு வகையான சுவைகள் (Principal Emotions) அல்லது உணர்வுகள் வகுக்கப்பட்டுள்ளன. அந்த எட்டு வகையான சுவைகள் அல்லது உணர்வுகள் ஒவ்வொன்றும் நான்கு நிலைக்களன்களைக் (Sources of Principal Emotions) கொண்டுள்ளன. எனவே மொத்தம் 32 வகையான சுவைகள் மெய்ப்பாட்டியலில் கூறப்பட்டுள்ளன. சிவாஜிகணேசன் தன்னுடைய நடிப்பாற்றலால் இவற்றை வெளிப்படுத்தியுள்ளார்.

### மெய்ப்பாடுகளின் வகைகள்

எட்டு வகைகள் ஆகும்.

"நகையே யழுகை யிளிவரல் மருட்கை
யச்சம் பெருமிதம் வெகுளி யுவகையென்
றப்பா லெட்டே மெய்ப்பா டென்ப"[4]

- சூத்திரம் 251

1. நகை (நகைச்சுவை) - laughter
2. அழுகை (அவலச்சுவை) - grief
3. இளிவரல் (இகழ்ச்சி) - disgust
4. மருட்கை (வியப்பு) - wonder
5. அச்சம் (பயம்) - fear
6. பெருமிதம் (பெருமை) - pride

7. வெகுளி (கோபம்) - anger

8. உவகை (மகிழ்ச்சி) - joy

மேற்கூறப்பட்டுள்ள எட்டு வகை மெய்ப்பாடுகள் எனப்படும் சுவைகள் ஒவ்வொன்றும் நான்கு நிலைக்களன்களைக் (Sources of the Principal Emotions) கொண்டதாகும்.

1. நகை - நகைச்சுவை (laughter)

"எள்ள லிளமை பேதமை மடனென்
றுள்ளப் பட்ட நகைநான் கென்ப"[5] - தொல்காப்பியம் சூ.252

அ. எள்ளல் (ridicule) என்றால் தான் பிறரை இகழ்ந்து சிரித்தலும் பிறரால் இகழப்பட்ட நிலையில் தான் சிரித்தலும் ஆகும்.



தேவர் மகன் (1992) படத்தில் பஞ்சாயத்துக் காட்சியில் பெரிய தேவரை (சிவாஜிகணேசன்) அவரது தம்பி (கா.கா. ராதாகிருஷ்ணன்) மகன் மாயன் (நாசர்) எதிர்த்துப் பேசும்போது, அவரது தம்பி ரசித்து சிரிப்பதும் அதைப் பார்த்து பெரியதேவர் ஏளனமாகச் சிரிப்பதும் இதற்கு எடுத்துக்காட்டாகும்.

ஆ. இளமை (childishness) - என்பது அறிவு முதிராப் பிள்ளைத் தனம் கொண்டு பிறரை நோக்கிச் சிரிப்பதும், பிறரது இளமை கண்டு தான் சிரிப்பதும் ஆகும்.



ராமன் எத்தனை ராமனடி (1970) படத்தில் சாப்பாட்டுராமன் (சிவாஜிகணேசன்) தன்னைவிட பணத்திலும், படிப்பிலும் உயர்ந்த நாயகியான தேவகி (கே.ஆர். விஜயா)யைக் கும்பிடும்போது நாயகியை பார்த்து சிரிப்பதும், பதிலுக்கு நாயகி ராமனின் வெகுளித்தனத்தைப் பார்த்து சிரிப்பதும் அறிவு முதிரா இளமைத்தனத்தால் எழும் நகைப்புக்கு நல்ல எடுத்துக்காட்டாகும்.

இ. பேதமை (stupidity) என்பது அறிவின்மை எனப்படும் தன் அறிவின்மை கண்டு பிறர் சிரிப்பதும், பிறர் அறிவின்மை கண்டு தான் சிரிப்பதும் ஆகும்.



அதே படத்தில் நாயகியை (கே.ஆர். விஜயா) மயக்கும் நோக்கத்தில் ராமன் (சிவாஜிகணேசன்) அளவுகள் சரியில்லாத உடை அணிந்து நாயகி தன் தோழிகளுடன் இருக்கும் இடம் வரும்போது எழும் சிரிப்பு, தன் அழகை உண்மையிலேயே ரசித்துச் சிரிக்கிறார்கள் என எண்ணி ராமன் மகிழ்ந்து சிரிப்பதும் பேதமையால் உருவாகும் நகைச்சுவைக்கு எடுத்துக்காட்டாகும்.

ஈ. மடன் credulity - என்பது மடமை. தன்னிடம் தோன்றிய மடமை காரணமாக பிறர் சிரிப்பதும், பிறரின் மடமை கண்டு தான் சிரிப்பதுமாகும்.



மகாகவி காளிதாஸ் (1966) சின்னையா (சிவாஜிகணேசன்) மரத்தின் மேல் அமர்ந்து கொண்டு கிளையை வெட்டுவதை அரண்மனை ஆட்கள் பார்த்து கீழிறங்க சொல்வதைக் கேட்டு, கேலி செய்து சின்னையா சிரிக்கும் சிரிப்பும், தன்

மடமை அறியாமல் சிரிப்பவர்கள் அறியாமல் இருக்கிறார்கள் என்று நினைத்து அப்பாவித்தனமாக பேசி நடிக்கும் காட்சியில் சிவாஜிகணேசன் மடமையின் காரணமாக எழும் முகபாவங்களைக் காட்டி நடித்திருப்பார்.

2. அழுகை - அவலச்சுவை (grief)

> "இளிவே, யிழவே யசைவே வறுமையென
> விளிவில் கொள்கை யழுகை நான்கே"[6]
>
> - சூத்திரம் 253

அ. இளிவு - (contempt) என்பது பிறரால் இகழப்படுதல்



பாகப்பிரிவினை (1959) படத்தில் ஒரு கையும் காலும் ஊனமுற்றவராகக் கன்னையா வேடத்தில் சிவாஜிகணேசன் நடித்திருப்பார். அதில் தனக்கும் வீட்டில் வேலை பார்க்கும் பொன்னிக்கும் (சரோஜாதேவி) திருமணம் நிகழவிருப்பதை தன் தம்பியிடம் (நம்பியார்) கூற வருவார். அந்த இடத்தில் சிங்காரம் (எம்.ஆர். ராதா) அவரது தங்கை (தாம்பரம் லலிதா) இருவரும் கேட்டு இகழ்ச்சியாகச் சிரிப்பார்கள். அப்போது கன்னையா (சிவாஜிகணேசன்) வேதனைப்பட்டு அழுவார். இது இளிவால் உண்டாகும் அவலச்சுவைக்கு நல்ல சான்று.

ஆ. இழவு (deprivation) என்பது தாய், தந்தை, சுற்றத்தார் மற்றும் இன்பம் பயக்கும் பொருள் முதலியவற்றை இழத்தலால் அடையும் சோகம். அதனால் வரும் அழுகை.



அன்னையின் ஆணை (1958) படத்தில் தந்தை இல்லாமல் தன்னை அல்லும்பகலும் பாடுபட்டு வளர்த்த தாய் இறந்தபோது கணேசாக நடிக்கும் சிவாஜிகணேசன், தாயின் உடல் அருகில் அமர்ந்து கண்ணீரை மட்டும் வடித்தபடி சோகமாக அமர்ந்திருக்கும் காட்சியை இழவால் உண்டாகும் அவலச்சுவைக்குச் சான்று.

இ. அசைவு (decline) என்பது தன்னிலையில் தாழ்தல் மற்றும் தளர்ச்சி அடைதலால் வரும் அழுகை.



நாம் பிறந்த மண் (1977) படத்தில் வெள்ளையரை எதிர்த்துப் போராடும் சந்தனத் தேவராக சிவாஜிகணேசன் நடித்தார். அதில் தன்னுடன் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட ஜோசப் (ஜெமினி கணேசன்) INA வீரரை பல ஆண்டுகளுக்குப்பின் சந்தித்து தன் வீட்டிற்கு அழைத்து வருவார். அப்போது ஜோசப் கேட்ட பல கேள்விகளுக்கு விடையளித்த தேவர், இறுதியாக அவர் வசதி பற்றி ஜோசப் கேட்டவுடன் தான் இப்போது ஏழையாகிவிட்டேன் என்று கூறி வெடித்து அழும் காட்சியை அசைவு என்ற அவலச் சுவைக்கு கூறலாம்.

ஈ. வறுமை (indigence) என்பது அனுபவிக்க முடியாத நிலைமை.



பராசக்தி (1952) படத்தில் பர்மாவில் இருந்து இந்தியா வந்த குணசேகரன் (சிவாஜிகணேசன்) பணப்பெட்டியைப் பறிகொடுத்து பல நாட்கள் பட்டினி

கிடந்து பசியைப் பொறுக்க முடியாமல் ஒரு பழக்காரியின் கூடையில் இருந்து பழத்தை எடுத்துத் தின்றுவிடுவார். அதற்கு அந்தப் பழக்காரி அடித்துவிடுவாள். வறுமையின் கோரப்பிடியைத் தன் முதல் படத்திலேயே அருமையாக நடித்துக் காட்டியிருப்பார் சிவாஜிகணேசன். இது வறுமையின் காரணமாக எழும் அவலச்சுவைக்கு நல்ல எடுத்துக்காட்டாகும்.

3. இளிவரல் - இகழ்ச்சி (disgust)

"மூப்பே பிணியே வருத்த மென்மையோ
டியாப்புற வந்த விளிவர னான்கே"[7]

- சூத்திரம் 254

அ. மூப்பு (decreptitude) என்பது முதுமையால் வரும் தளர்ச்சி.



கப்பலோட்டிய தமிழன் (1961) படத்தில் சிதம்பரம் பிள்ளையாகச் சிவாஜி கணேசன் நடித்தார். ஒரு காட்சியில் சிறையில் இருந்து விடுதலை ஆகிப் பின் சில ஆண்டுகள் கழிந்தபின் ஒருநாள் பாரதியாரின் மரணச் செய்தி வரும். அப்போது அந்தத் தந்தியை வாங்கும்போதே முதுமையால் ஏற்படும் தளர்ச்சியைக் காட்டி நடித்தார். பின்பு தந்தியில் இருக்கும் வாசகங்களை படித்துவிட்டு பாரதியின் பிரிவை எண்ணி அரற்றும் காட்சியில் துல்லியமாக முதுமையின் தளர்ச்சியைத் தன் நடிப்பில் சிவாஜிகணேசன் வெளிப்படுத்தினார். இது முதுமையின் காரணமாகத் தோன்றும் இளிவரல் என்னும் இகழ்ச்சிச் சுவையின் சான்றாகும்.

ஆ. பிணி (sickliness)என்பது நோய். நோயால் வரும் தளர்ச்சி



நவராத்திரி (1964) திரைப்படத்தில் குஷ்டரோகியாகத் தோன்றி நடித்த சிவாஜிகணேசன், அந்நோய் பீடிக்கப்பட்டவரின் உடல் அசைவுகள், முகபாவங்கள் இவற்றைத் தத்ரூபமாகக் காட்டி நடித்திருப்பார். இது பிணியில் தோன்றும் இளிவரல் எனும் இகழ்ச்சிச் சுவைக்கு எடுத்துக்காட்டு.

இ. வருத்தம் (vexation) என்பது பயன் தராத வீண் முயற்சியாகப் போனதால் ஏற்பட்ட வருத்தம்



வீரபாண்டியக் கட்டபொம்மன் (1969) படத்தில் பாஞ்சாலங் குறிச்சியிலிருந்து தப்பி வந்து புதுக்கோட்டைத் தொண்டைமான் எல்லைக்குள் ஒரு பாழடைந்த கோயிலில் கட்டபொம்மன் (சிவாஜி கணேசன்) உறங்கும்வேளையில் சுற்றி வளைத்துத் தொண்டைமான் வீரர்கள் நிற்கும்போது ஒரு கல்லைத் தூக்கி அவர்களைத் தாக்க ஊமத்துரை (ஓ.ஏ.கே. தேவர்) முயற்சி செய்வார். அப்போது கட்டபொம்மன் (சிவாஜிகணேசன்) "தம்பி, இதை விதி என்று சொல்வதைத் தவிர வேறு வழியில்லை" என்று தடுத்துவிடுவார். இந்தக் காட்சியில் கட்டபொம்மன் (சிவாஜிகணேசன்) தப்பித்து வெள்ளையர்களிடம் சிக்காமல் வந்தும் வேறு முயற்சியில் இறங்க முடியாமல் போனதை தனது வசனத்திலும், முகபாவத்திலும் காட்டி வருந்துவார். இந்த வருத்தம் இளிவரல் எனும் இகழ்ச்சிச் சுவையின் சான்றாகும்.

ஈ. மென்மை (incapacitation) என்பது ஒரு செயலைச் செய்ய முடியாத நிலையும், பொருளற்ற நிலையில் வரும் இகழ்ச்சியாகும்.



அவன்தான் மனிதன் (1975) படத்தில் தன் செல்வத்தையெல்லாம் வாரிக் கொடுத்துவிட்டுப் பொருளற்ற நிலையில் வாடும் ரவிக்குமார் (சிவாஜி கணேசன்) பாத்திரத்தில் நடித்தார். அவர் தயவால் நகர மேயராகும் சந்துரு (முத்துராமன்)விற்குப் பதவி ஏற்கும் நாளில் தன்னால் ஒரு மாலையோ, மலர்கொத்தோ கொடுக்க இயலாத நிலையை நினைத்து வருந்துவார். இக்காட்சி மென்மை எனும் இளிவரல் சுவைக்கு ஒரு பொருத்தமான காட்சியாகும்.

4. மருட்கை - வியப்பு (wonder)
"புதுமை பெருமை சிறுமை யாக்கமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே"[8]

- சூத்திரம் 255

அ. புதுமை (novelty) என்பது முன்னறியாத நூதனமான ஒன்றினால் வரும் வியப்பு.



மனோகரா (1954) படத்தில் மனோகரன் (சிவாஜி கணேசன்) இரவில் பாசறையில் தூங்கும் சமயம் ஒரு போர் வீரன் உள்ளே வந்து மனோகரனைக் கொல்ல முயற்சிப்பான். திடுக்கிட்டு எழுந்த மனோகரன் வாளெடுத்துச் சண்டையிடுவான். வந்த போர் வீரனின் தலைப்பாகை கீழே விழுந்து அங்கே ஒரு பெண் நிற்பாள். அவள் பாண்டிய நாட்டின் இளவரசி. வியப்பு மேலிட சிவாஜிகணேசன் விழிகளை அகலத் திறந்து "இளவரசி, அற்புதமான காட்சி! வளையல் ஏந்தும் கையில் வாள்!" என்று நூதனமான ஒன்றினால் வரும் வியப்பு மேலிடக் கூறுவார். இக்காட்சி புதுமையில் வரும் மருட்கைச் சுவையாகும்.

ஆ. பெருமை (hugeness) என்பது மிகப்பெரியதான வளர்ச்சி, பொருள்கள், யானை, செல்வம் மற்றும் காதல் முதலியவற்றால் முன்கண்ட அளவைக் காட்டிலும் அடைந்ததைக் காணும்போது வரும் உணர்ச்சி.



வசந்தமாளிகை (1972) படத்தில் தன் காதலை நாயகியிடம் (வாணிஸ்ரீ) மறைமுகமாக நாயகன் (சிவாஜி கணேசன்) வெளிப்படுத்தியும் சம்மதம் கிடைக்க தாமதமாகி வரும் வேளையில் தன் காதலிக்காக நாயகன் தான் கட்டிய வசந்தமாளிகையை காட்டியபின் ஓடிவந்து நாயகனைக் கட்டிப் பிடிக்கும் நாயகி தன் காதலை அந்த அணைப்பில் காட்டுவாள். அப்போது பெருமை பொங்க நாயகன் பேசாமல் பார்த்து நிற்கும் நிலை மதிமைசாலா மருட்கைக்கு எடுத்துக்காட்டாகும்.

இ. சிறுமை (minuteness) என்பது மிக நுண்ணியது கண்டு வியப்பு அடைதல்.



சுமதி என் சுந்தரி (1971) என்ற படத்தின் ஒரு காட்சியில் நடிகர் நாகேஷ், தன் கையில் மற்றும் தலையில் கட்டுக்கள் போட்டு, தன் குதிரையின் தலையிலும் ஒரு கட்டு கட்டி வருவார். அதைப் பார்த்த மதன் (சிவாஜிகணேசன்)வியப்பு மேலிட்டவராய் ஏன் இப்படி வருகிறாய் என்று கேட்க தான் ஒரு புலியைச் சுட்டுவிட்டதாகக் கூறுவார். அதனால் தனக்கும் குதிரைக்கும் காயங்கள் ஏற்பட்டதாகக் கூறுவார். அப்போது சிவாஜிகணேசன் நாகேஷ் கூறுவதைக் கேட்டு நம்ப முடியாமல் வியந்து பார்த்து நிற்பார். இது சிறுமையின் காரணமாகத் தோன்றும் மருட்கைச் (வியப்பு) சுவையாகும்.

ஈ. ஆக்கம் (transmutation) என்பது செயற்கையாகத் தோன்றும் அரும்பொருள் விளைக்கும் வியப்பாகும்.



சரஸ்வதி சபதம் படத்தில் (1966) பிறவி ஊமையாக இருந்த வித்யாபதி (சிவாஜி கணேசன்) சரஸ்வதி அருளால் தனக்குப் பேச்சு வந்து, உடலில் ஏற்பட்ட மாற்றங்களை உணர்ந்து தரும் வியப்புக்குரிய உணர்ச்சிகளை ஆக்கம் எனும் நிலைக்களனில் தோன்றக்கூடிய மதிமைசாலா மருட்கைச் சுவையாகும்.

5. அச்சம் -பயம் (fear)

'அணங்கே விலங்கே கள்வர்தம் மிறையெனப்
பிணங்கல் சாலா வச்ச நான்கே'[9]

- சூத்திரம் 256

அ. அணங்கு (demoniac beings) என்பது காண்பவரை பயமுறுத்தும் பேய், பூதம், பாம்பு போன்றவற்றால் வரும் பயம்.



தங்கமலை ரகசியம் (1957) படத்தின் ஒரு காட்சியில் ஓர் சத்திரத்தில் விக்ரமாதித்தன் படுக்கையில் அந்தக் கதையின் இளவரசன் (சிவாஜி கணேசன்) படுத்திருப்பார். அப்போது அந்தப் படுக்கையில் உள்ள சித்திரப் பூதங்கள் பேசும் பேச்சைப் பார்த்து பயத்தில் தன் முகத்தில் உணர்ச்சிகளைக் காட்டி நடித்திருப்பார் சிவாஜி கணேசன். இது அணங்கு எனப்படும் பூதத்தினால் ஏற்படும் அச்சம் தரும் சுவையாகும்.

ஆ. விலங்கு (wild animals) என்பது புலி, சிங்கம் போன்ற விலங்குகளால் அச்சம் ஏற்படுவது.



பாகப்பிரிவினை (1959) படத்தில் கண்ணையனுக்கு (சிவாஜி கணேசனுக்கு) ஒரு கை மற்றும் கால் ஊனமுற்று இருக்கும். ஒருநாள் அவர் வயலில் இருக்கும்போது சிறுத்தைப் புலி ஒன்று வர அதை ஒரு மரத்தில் அமர்ந்தபடி பயத்தில் வாய்விட்டுக் கத்தி அழுதுகொண்டே ஒரு செடிக்கிளையை வைத்து அடிப்பார். அது விலங்கினால் உண்டாகும் அச்சத்தின் சுவையாகும்.

இ. கள்வர் (thief) பிறர் பொருளைக் களவு செய்பவரால் வரும் அச்சம்.



தெய்வமகன் (1969) படத்தில் தான் அனாதையல்ல. தனக்கு தாய், தந்தை ஒரு தம்பி இருக்கிறார்கள் என்று தெரிந்ததும் கண்ணன் (சிவாஜிகணேசன்) அவர்களைப் பார்க்கச் செல்வான். கண்ணனின் முகம் அவன் தந்தை சங்கர் (சிவாஜிகணேசன்) போலவே ஒரு பக்கம் விகாரமாக இருக்கும். ஆனால் கண்ணனின் தம்பி விஜய் (சிவாஜிகணேசன்) மிக அழகாக இருப்பான். தன் தம்பி அறைக்குள் சென்று தம்பியைப் பார்ப்பான். ஆனால் விஜய் (சிவாஜி கணேசன்) கண்ணனைப் பார்த்தவுடன் திருடன் என்று நினைத்துப் பயந்து, தொண்டை அடைத்து வார்த்தைகளை மென்று விழுங்கி thief, thief என்று கத்தி பய உணர்ச்சியை வெளிப்படுத்துதல் கள்வரைக் கண்ட அச்சச் சுவையை வெளிப்படுத்தும் நடிப்பாகும்.

ஈ. **தம் இறை** (monarchs or father or teacher or deity) தாய், தந்தை, ஆசிரியர் மற்றும் வழிபடும் தெய்வம் போன்றவர்களால் வரும் அச்சம்.



தெய்வமகன் (1969) படத்தில் தந்தை இருமகன்கள் என்று மூன்று வேடங்களில் சிவாஜி கணேசன் நடித்திருப்பார். அதில் விஜய் என்ற மகன் தனது தந்தை என்றாலே நடுங்கிப் போவார். ஒரு காட்சியில் தனது தந்தையிடம் பணம் கேட்க வருவார் விஜய். அவரால் தந்தையின் முன் சரியாக நிற்க முடியாமல் நெளிந்து நடனமாடுவதுபோல் இருப்பார். இந்தக் காட்சி தம் தந்தை மீது கொண்ட பயத்தை வெளிப்படுத்தும விதமாக அற்புதமாக நடித்து இருப்பார் சிவாஜி கணேசன் இது தம் இறை என்ற நிலைக்களன் மூலமாக அச்சச் சுவை வெளிப்படுத்தும் காட்சியாகும்.

6. **பெருமிதம் - பெருமை** (pride)

"கல்வி தறுகண் ணிசைமை கொடையெனச்
சொல்லப் பட்ட பெருமித நான்கே"[10]

- சூத்திரம் 257

அ. கல்வி (Learning) என்பது, கற்றல், தவம் புரிதல் போன்றவற்றால் வரும் பெருமையாகும்.



சரஸ்வதி சபதம் (1966) என்ற படத்தில் ராணி (கே.ஆர். விஜயா) செல்வாம்பிகையாக கோவிலுக்கு வழிபட வரும் நேரத்தில் அங்கு புலவர் வித்யாபதி (சிவாஜிகணேசன்) இறைவன் மேல் பாடல் பாடிக் கொண்டிருப்பார். அதைக் கேட்ட ராணி தன் கழுத்தில் அணிந்திருந்த மாலையைப் பரிசாகத் தருவார். அதற்கு வித்யாபதி (சிவாஜி கணேசன்) பலர் முன்னிலையில் ஏற்க மறுத்து ராணியுடன் விவாதத்தில் ஈடுபட்டு பின் புறப்படுவார். அச்சமயத்தில் வித்யாபதியாக நடிக்கும் சிவாஜி கணேசன் முகத்தில் பெருமிதம் பொங்கும். அப்பெருமிதம் கல்வியினால் வந்ததை நடிப்பில் உணர்த்தினார்.

ஆ. தறுகண் (prowess) என்பது எதற்கும் அஞ்சாத வீரம் கொண்டதால் வரும் பெருமையாகும்.



நவராத்திரி (1964) படத்தில் காவல்துறை அதிகாரியாக சிவாஜி கணேசன் நடித்தார். ஒவ்வொரு நிமிடமும் தான் யாருக்கும் எதற்கும் அஞ்சாத வீரம் உடையவன் என்ற தறுகண் எனும் நிலைக்களனிலிருந்து வெளிப்படும் பெருமிதத்தை அருமையாக தன் நடிப்பில் காட்டினார்.

இ. புகழ்மை (unsullied fame) என்பது பழி பாவம் செய்யாமல் வரும் இடர்களை எதிர்கொண்டு பெறும் புகழால் வரும் பெருமையாகும்.



ராஜபார்ட் ரங்கதுரை (1973) படத்தில் திருப்பூர் குமரன் நாடகத்தில் நடிக்கப் போகும் ரங்கதுரையை (சிவாஜி கணேசன்) கொலை செய்ய சிலர் திட்டம் தீட்டியிருப்பதை ரங்கதுரையின் மாமனார் (எம்.என். நம்பியார்) எச்சரித்தும் என் உயிரே போனாலும் இந்த நாடகத்தை நடத்தியே தீருவேன் என்று ரங்கதுரை சொல்லும் காட்சி, எத்தனை இடர்பாடுகள் வந்தாலும் எதிர்கொண்டு பெரும் புகழ்மை எனும் நிலைக்களன் மூலமாகப் பெருமிதம் எனும் சுவையை சிவாஜிகணேசன் அருமையாக தன் நடிப்பில் வெளிப்படுத்தினார்.

ஈ. கொடை (munificence absolute) என்பது உயிர், பொருள், உறுப்பு செல்வம் போன்றவற்றை பிறருக்கு அளிப்பதால் வரும் பெருமையாகும்.



கர்ணன் (1964) படத்தில் தன் உடலில் இருக்கும் கவசத்தின் முக்கியத்துவத்தைக் கூறி அதை யாசகமாகப் பெற மாறுவேடத்தில் வந்திருப்பவன் இந்திரன், கொடுக்க வேண்டாம் என்று சூரியக் கடவுள் கர்ணனிடம் (சிவாஜி கணேசன்) எச்சரித்தும் தன் உடல் காக்கும் கவசத்தை கொடுத்துவிடுவார். இது கொடை எனும் நிலைக்களன் மூலமாக அடையும் பெருமிதச் சுவை என்பதை கர்ணனாக நடித்திருக்கும் சிவாஜி கணேசனின் நடிப்பாற்றல் உணர்த்தியது.

## 7. வெகுளி (கோபம்)

“உறுப்பறை குடிகோளலை கொலை யென்ற
வெறுப்பின் வந்த வெகுளி நான்கே[11]

- சூத்திரம் 258

அ. உறுப்பறை (cutting one's limbs) என்பது கை, கால் மற்றும் உறுப்புக்கள் சிதைத்தலால் வருவது கோபமாகும்.



தேவர் மகன் (1992) படத்தில் கோவில் பூட்டை உடைத்ததால் இசக்கி (வடிவேல்) எனும் தன் வேலைக்காரன் கையை வெட்டிவிட்டார்கள் என்பதை அறிந்த பெரிய தேவர் (சிவாஜி கணேசன்) மிகுந்த கோபத்துடன் தன் மகனை (கமல்ஹாசன்) கோவிலுக்குச் சென்ற காரணத்தை விசாரித்து கடிந்து கொள்ளும் காட்சியில் உறுப்பறை எனும் நிலைக்களனிடமிருந்து வெளிவரும் கோபத்தைக் காட்டுவதாக அமைகிறது.

ஆ. குடிகோள் (harming one's kin) என்பது மனைவி, சுற்றம், உறவு முதலியவர்களுக்குத் தீங்கு புரிவதால் வருவது கோபமாகும்.



காவல் தெய்வம் (1969) படத்தில் பனையேறும் தொழிலாளி சாமுண்டியாக நடித்தார் சிவாஜி கணேசன். அதில் தனியாக இருந்த தன் மகளைக் கற்பழித்தவர்களை தேடிக் கண்டுபிடித்து கொலை செய்வார். அக்காட்சியில் அவர் காட்டிய கோபம் குடிகோள் எனும் நிலைக்களனின் வெளிப்பாடு ஆகும்.

இ.	அலை (inflicting pain) என்பது துன்பம் உண்டாக்குவதால் வரும் கோபமாகும்.



ராமன் எத்தனை ராமனடி (1970) படத்தில் ஊர்ப் பெரிய மனிதர் ராஜாங்கத்தின் (எம்.என். நம்பியார்) தங்கையை (கே.ஆர். விஜயா)வை தன் தகுதியை மீறி பெண் கேட்டுச் சென்றபோது ராஜாங்கமும் அவரது நண்பர்களும் சேர்ந்து ராமனை (சிவாஜி கணேசனை) தாக்குவார்கள். அப்போது ராஜாங்கம் சவுக்கை எடுத்து ராமனை அடித்து காயங்கள் ஏற்படுத்துவார். அப்போது ராஜாங்கத்தையும் அவரது நண்பர்களையும் பார்த்து நிச்சயமாக பழிக்குப்பழி வாங்குவேன் என்று தன் காயங்களைத் தாங்கிக் கொண்டு ஆத்திரத்துடனும் அழுகையை அடக்கிக் கொண்டும் அலை எனும் நிலைக்களன் மூலமாகக் கோபம் எனும் சுவையை வெளிப்படுத்தி நடித்திருப்பார்.

ஈ.	கொலை (anguish and killing) என்பது உயிர்க்கொலை, அறிவு, புகழ் முதலியவற்றைப் பிறர் அழிப்பதால் வரும் கோபமாகும்.



கவரிமான் (1979) படத்தில் I.A.S. அதிகாரியாக நடிக்கும் (சிவாஜி கணேசன்) தன் வெளியூர் பயணம் ரத்தானதால் வீட்டுக்கு திரும்புகையில் தனது படுக்கை அறையிலிருந்து தன் மனைவி இன்னொரு ஆணுடன் சேர்ந்து சிரிக்கும் சத்தத்தைக் கேட்டவுடனே, மாடிப்படியேறும்போது கோப உணர்ச்சியை கொஞ்சம் கொஞ்சமாகக் காட்டியபடி அறையின் உள்ளே செல்வார். அங்கு இன்னொரு ஆணுடன் தன் மனைவி இருப்பதை பார்த்தவுடன் மிகுந்த கோபம்

கொண்டு தன் மனைவியை பூக்குடுவையால் தாக்கிக் கொல்வார். இது சமுதாயத்தில் தனக்கிருக்கும் புகழுக்கு தன் மனைவியால் பங்கம் வந்துவிட்டதே என்று ஆத்திரம் மேலிட தன் கோப உணர்ச்சிகளைக் காட்டி நடித்தார் சிவாஜி கணேசன். அது புகழ் அழிவதால் எழுந்த கோபச் சுவைக்கு எடுத்துக்காட்டாகும்.

8. **உவகை - மகிழ்ச்சி** (unmixed joy)

"செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்
றல்ல னீத்த வுவகை நான்கே"[12]

- சூத்திரம் 259.

அ. செல்வம் (richness) என்பது, பொருள் அதனால் அடையும் இன்பம் மகிழ்ச்சியைத் தரும்.



கள்வனின் காதலி (1955) படத்தில் ஏழையாக இருப்பதால் தன் காதலியை (பானுமதி) விட்டுப்பிரிய நேருகிறதே என்ற கவலையுடன் வேறு ஊருக்குத் தன் தங்கையுடன் வருவார் முத்தய்யன் (சிவாஜி கணேசன்). வந்த இடத்தில் சந்தர்ப்பவசத்தால் திருடனாகிவிடுவார். சில ஆண்டுகளுக்குப் பின் தன் காதலியை மீண்டும் சந்திப்பார். அந்த சமயத்தில் வசதியாக இருக்கும் முத்தைய்யனின் காதலி செலவுக்குப் பணம் தேவையா என்று கேட்பார். அதற்கு முத்தய்யன் வறுமையில் இருந்த நான் மிகப்பெரிய வசதியுடையவனாக இருக்கிறேன் என முகத்தில் மகிழ்ச்சி பொங்க கூறுவார். அக்காட்சி செல்வம் வந்ததனால் ஏற்படும் உவகைச் சுவையை வெளிப்படுத்தும் இடமாகும்.

ஆ. புலன் (minds might) என்பது அறிவுடைமையால் பெறுவது மகிழ்ச்சி.



மகாகவி காளிதாஸ் (1966) படத்தில் மடையனாக இருந்த சின்னையா (சிவாஜி கணேசன்) காளியின் அருளால் அறிவனைத்தையும் ஒருங்கே பெறுவார். அதன்பின் மகிழ்ச்சி பொங்க காளியின் மீது பாடல் பாட ஆரம்பிப்பார். அக்காட்சி புலன் எனும் நிலைக்களன் தரும் உவகைச் சுவையாகும். அச்சுவையை சிவாஜி கணேசன் அருமையாக வெளிப்படுத்தினார்.

இ. புணர்வு (sexual union) என்பது அன்போடு புணர்ந்த காம இன்பம் தரும் மகிழ்ச்சி



'பட்டிக்காடா பட்டணமா' என்ற படத்தில் (1972) கிராமத்தில் பெரிய மனிதராக வசிக்கும் மூக்கையன் (சிவாஜி கணேசன்) தன் தாய் மாமன் மகளைத் திருமணம் செய்து கொள்வார். முதல் இரவு அன்று மனைவியுடன் கிராமிய நடனம் ஆடி, பின் புணர்வுக்கு அழைத்துச் சென்று இன்பமாகப் பொழுதினைக் கழிப்பார். புணர்வு எனும் நிலைக்களன் தரும் உவகைச் சுவையை சிவாஜி கணேசன் நடிப்பில் காட்டினார்.

ஈ. விளையாட்டு (play) என்பது ஆறு, குளம், சோலை முதலிய இடங்களில் குடும்பத்தோடு பொழுதுபோக்குவது மகிழ்ச்சியைத் தரும்.



'படித்தால் மட்டும் போதுமா' (1962) என்ற படத்தில் நீச்சல் குளத்தில் தன் அண்ணனோடு திருமணத்திற்குப் பெண் பார்த்துவிட்டு வந்த ஆனந்தத்தில் நீந்தி பின் கரையில் ஆடிப்பாடி மகிழ்வார். அக்காட்சியின் விளையாட்டு எனும் சுவைக்குச் சான்றாக சிவாஜிகணேசன் நடித்தார்.

**கான்ஸ்தன்தீன் ஸ்தானிஸ்லாவ்ஸ்கியும் சிவாஜி கணேசனும்**

'ஸ்தானிஸ்லாவ்ஸ்கி முறை' என்பது நடிப்புக்கலைக்காக ஒரு முறையை அல்லது கோட்பாட்டினை ருஷ்ய நாட்டு இயக்குநராகவும் மற்றும் நடிகராகவும் விளங்கிய ஸ்தானிஸ்லாவ்ஸ்கி (1863-1938) உருவாக்கினார். அவர் உருவாக்கிய முறை அல்லது கோட்பாடுகள் மூலம் நடிக்கும் நுட்பங்களை ஒரு நடிகர் கற்றுக்கொள்ள முடியும் என்று தானே அனுபவித்து உருவாக்கினார். அவரும் விளாடிமிர் நேமிரோவிச் டான்சென்கோ என்பவரும் இணைந்து உருவாக்கிய மாஸ்கோ ஆர்ட் தியேட்டர்ஸ் (Moscow Art Theatre) அவரது நடிப்பு முறையைச் செயல்படுத்தியதால் கலைத்துறையில் ஸ்தானிஸ்லாவ்ஸ்கி முறை (Method Acting) உலகப் புகழ் பெற்றது.[13]

ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் நடிப்புக்கான முறையை அவரிடம் கற்றுத் தேர்ந்து பிறருக்கும் சில மாற்றங்களுடன் கற்றுக் கொடுத்தவர்கள் பலர். அவர்களில் குறிப்பிடத் தக்கவர்களாக ரிச்சர்ட் பிலஸ்லாவ்ஸ்கி (Richard Boleslavsky), ஸ்டெல்லா அட்லர் (Stella Adler) ராபர்ட் லூயிஸ் (Robert Lewis), லீஸ்ட்ராஸ்பெர்க் (Lee Strasberg) மற்றும் சான்போர்டு மெய்ஸ்னர் (Sanford Meisner) ஆகியோர் விளங்கினர்.[14]

ரிச்சர்ட் பிலஸ்லாவ்ஸ்கி (Richard Bleslavsky) (1889-1937) அவர் போலந்து நாட்டைச் சேர்ந்தவர்.[15] அவர் எழுதிய 'நடிப்பு - முதல் ஆறு பாடங்கள்' (Acting – The First Six Lessons) என்ற புத்தகத்தில் ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் நடிப்புப் பற்றிய கோட்பாடுகளில் முக்கியமானவறற்றைச் சுருக்கமாகக் கூறினார். அவைகள் :

கவனத்தை ஒருமுனைப்படுத்துதல் (concentration), உணர்ச்சிகளின் மீள் நினைவு (memory of emotion), அசைவு (dramatic action), கதாபாத்திரம் உருவாக்கம் (characterisation), கவனித்தல் (observation), உடலசைவில் ஒரு லயம் (Rhythm)[16]

**ஸ்டெல்லா அட்லர்** (Stella Adler) (1901-1992). அவரிடம் நடிப்புக் கலை பயின்றவர்களில் முக்கியமான நடிகர்கள் மார்லன் பிராண்டோ (Marlon Brando) மற்றும் ராபர்ட் டீ நீரோ (Robert De Nero) ஆவார்கள்.[17] ஸ்டெல்லா அட்லர், 'நடிப்பின் நுட்பங்கள்' - (The Techniques of Acting) என்ற புத்தகத்தில் நடிப்புக் கலையின் நுணுக்கங்கள் பற்றி எழுதியுள்ளார். அந்தப் புத்தகத்திற்கு முன்னுரை எழுதியவர் ஹாலிவுட்டின் பிரபல நடிகர் மார்லன் பிராண்டோவாகும். ஸ்டெல்லா அட்லர் தனது புத்தகத்தில் நடிப்புக்கலையின் நுட்பங்கள் பற்றி பன்னிரண்டு அத்தியாயங்களாகப் பிரித்து எழுதியுள்ளார். அவைகள் நுணுக்கத்தின் துவக்கம், கற்பனை வளம், சூழ்நிலைகள், அசைவுகள், நியாயப்படுத்துதல், மேடையில் நடிப்பது, கதாபாத்திரம், நடிப்பில் உச்சரிப்பின் பங்கு, நடிகரின் முதல் அணுகுமுறை, கதையமைப்பில் வேலை செய்வது மேலும் நடிகரின் பங்களிப்பு முதலியவை ஆகும்.[18]

**லீ ஸ்ட்ராஸ்பெர்க்** (Lee Strasberg) 1901-1982

ஸ்தானிஸ்லாவ்ஸ்கி முறையை கற்றுத் தேர்ந்த மற்றவர்களுக்கும் கற்றுத்தந்த ஆசிரியர் லீ ஸ்டராஸ்பெர்க் ஆவார். ஸ்ட்ராஸ்பெர்க்கிடம் கற்றுத் தேர்ந்த பிரபலமான ஹாலிவுட் நடிகர்கள் வரிசையில், டஸ்டின் ஹாஃப்மென் (Dustin Haffman), மர்லின் மன்றோ (Marilyn Manroe), பால் நியூமேன் (Paul Newman) அல்பாசினோ (Alpacino) போன்றவர்கள் விளங்கினர். அமெரிக்காவில் 'மெதட் ஆக்டிங்கின் தந்தை' என்ற பெயர் பெற்று விளங்கினார்.[19] ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் நடிப்பு முறையைச் சில மாற்றங்களுடன் மூன்று பாகங்களாகப் பிரித்து அவற்றை ஒன்பது இயல்களாக 'ஸ்ட்லாஸ்பெர்க் முறை' (Starsberg Method) என்ற புத்தகத்தில் எழுதினார்.[20]

**சான்போர்டு மெய்ஸனர் (Sanford Meisner) (1905 -1997)**

மெய்ஸனர் கான்ஸ்தான்தீன் ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் நடிப்பு முறையிலிருந்து சற்று மாறுபட்டு தனக்கென்று ஒரு நடிப்புக் கோட்பாட்டை உருவாக்கினார். அதற்கு 'மெய்ஸனர் முறை' என்று பெயரிடப்பட்டது.[21] நடிப்புப்பற்றி மெய்ஸனர் எழுதிய புத்தகத்தின் பெயர் ON ACTING.[22]

**ராபர்ட் லூயிஸ்** (Robert Lewis) 1909-1997

நியூயார்க் நகரத்தில் உள்ள Actors Studioவின் நிறுவனத் தலைவர். மேலும், நடிகராகவும், ஆசிரியராகவும் விளங்கினார்.[23] ஸ்தானிஸ்லாவ்ஸ்கி மெதட் முறையில் உள்ள நிறைகள் நடிப்புலகில் அதை தவறாகப் புரிந்துகொண்ட நிலைகள் பற்றி ராபர்ட் லூயிஸ் நிகழ்த்திய எட்டுச் சொற்பொழிவுகளை கீழ்கண்ட எட்டு இயல்களாகப் பிரித்து **Method or Madness** என்ற பெயரில் புத்தகமாக வெளியிடப்பட்டது.[24]

மேற்கூறப்பட்டுள்ள அறிஞர்களினால் போற்றி வளர்க்கப்பட்ட, பாதுகாக்கப்பட்ட "ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் முறை" என்ற மெதட் ஆக்டிங் இன்று வரை மேலைநாடுகளில் நடிப்புக் கலைக்கு ஒரு இன்றியமையாத கொள்கையாக விளங்குகிறது. உலகம் முழுவதும், குறிப்பாக அமெரிக்காவில் "ஸ்தானிஸ்லாவ்ஸ்கி முறை" என்ற மெதட் ஆக்டிங் என்பது திரைப்படக் கல்லூரிகளிலும், பல்கலைக் கழகங்களிலும் பாடமாக பின்பற்றப்படுகின்றது.

ஸ்தானிஸ்லாவ்ஸ்கி எழுதிய "My Life in Art" எனும் புத்தகம் நாடகத் தயாரிப்புக்குத் தேவையான விஷயங்கள் மற்றும் அவர் நடத்திய நடிப்புக் கலை வகுப்புகள், நவீன மேடை நாடகங்களுக்கு இன்றியமையாதவைகளாகும். மேலும் அவர் எழுதிய **ஒரு நடிகர் உருவாகிறார் (An Actor Prepares)**, **ஒரு கதாபாத்திரத்தை வடிவமைத்தல்** (Building A Character), **ஒரு பாத்திரத்தை உருவாக்குதல்** (Creating A Role) என்ற மூன்று புத்தகங்களும் நவீன நடிப்புப் பயிற்சிக்கு வேதங்கள் போன்றவையாகும்.

**ஒரு நடிகர் உருவாகிறார் (An Actor Prepares)**

அந்தப் புத்தகத்தில் ஒருவன் நடிகனாக தன்னை தயார்படுத்திக்கொள்ள வேண்டிய தகுதிகள் எவை என ஸ்தானிஸ்லாவ்ஸ்கி கீழ்க்கண்டவற்றைக் கூறினார். அத்தகுதிகளுக்கு சிவாஜி கணேசன் தன்னை இயல்பாக எவ்வாறு தன்னைத் தயார்படுத்தி நடித்தார் என்பதை பார்க்கலாம்.

1. முதல் சோதனை (The First Test)

ஒரு நடிகன் ஒரு போர் வீரனுக்குக் குறைந்தவன் அல்ல. இரும்பை ஒத்த ஒழுக்கக்கட்டுப்பாட்டை அவன் கடைப்பிடித்தாக வேண்டும்.[25] இங்கு குறிப்பிடப்படுவது காலந்தவறாமை எனும் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

**சிவாஜி கணேசன்**

1952ல் "பராசக்தி" மூலம் துவங்கிய தன் திரையுலக வாழ்வில் இறுதியாக 1999இல் நடித்த "பூப்பறிக்க வருகிறோம்" வரையில் ஒருநாள் கூட படப்பிடிப்புக்குத் தாமதமாக வந்ததாக வரலாறு இல்லை.

2. நடிப்பு என்பது ஒரு கலை (Acting is an Art)

மகத்தான நடிகர் உணர்ச்சியால் நிறைந்து இருக்க வேண்டும். குறிப்பாக தான் வெளிக்காட்டும் உணர்வை அவர் உணர வேண்டும். ஒரு உணர்ச்சியை தான் தனது கதாபாத்திரத்தைக் கற்றுக் கொள்ளும்போது கூடுதலாகவோ அல்லது குறைவாகவே உணர்ந்தாக வேண்டும். ஒரு நடிகன் ஒரு வாழ்க்கையை வெளிப்படுத்த வேண்டுமானால் அசாதாரணமான வகையில் நுண்ணர்வு கொண்டதும், மிகச் சிறப்பானவாறு தயார் நிலையில் உள்ளதுமான குரல் மற்றும் உடலசைவு மீது முழுமையான கட்டுப்பாட்டைக் கொண்டிருப்பது மிக மிக இன்றியமையாத ஒன்றாகும்.[26]

சிவாஜி கணேசன்



தான் ஏற்று நடித்த அனைத்து கதாபாத்திரங்களைப்பற்றி நன்றாக உணர்ந்து கற்றுக்கொண்டு நடித்தார். அதற்காகத் தயார் நிலையில் தன் குரலையும், உடலசைவையும் பல படங்களில் தன் கட்டுப்பாட்டில் வைத்து நடித்தார். உதாரணம் : வீரபாண்டிய கட்டபொம்மன் படத்தில் போருக்கு செல்லும் முன் மனைவியிடம் விடைபெறும் காட்சியைக் குறிப்பிடலாம்.

3. அசைவு (Action)

ஒரு நடிகன் எதையாவது செய்து கொண்டிருக்க வேண்டும். செயல் - அசைவு இதுதான் நடிகனால் பின்பற்றப்படும் கலையின் அடிப்படையாகும். அது வெளிப்புறமாகவோ அல்லது உட்புறமாகவோ நிகழ வேண்டும்.[27]

சிவாஜி கணேசன்



செயல் மற்றும் அசைவினை ஒரு நடிகன் வெளிப்புறமாகவோ அல்லது உட்புறமாகவோ நிகழ்த்திக் கொண்டேயிருக்க வேண்டும் என்ற இத்தகுதி அவர் பெற்றிருந்தார் என்பதை அவர் நடித்த புதிய பறவை படத்தில் இறந்துபோனதாக கருதப்படும் அவரது மனைவி (சௌகார்ஜானகி) மீண்டும் உயிரோடு வந்து

பழைய பாடலை பாடுவார். அப்போது உள்ளுக்குள் எழும் உணர்ச்சிகளை காட்டியபடி, அந்தப் பாடலுக்கு பியானோ வாசித்தபடி உணர்ச்சிகளைக் காட்டி நடிப்பார்.

4. கற்பனை (Imagination)

ஒரு கதாசிரியர் நடிகர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டிய அனைத்தையும் தர முடியாது. ஆகவே ஒரு நடிகனுக்கு கற்பனைத்திறன் வேண்டும். அந்தக் கற்பனை தரும் செயல் முதலில் நடிகனின் உள்ளே ஆரம்பித்து பின்பு வெளியே வெளிப்பட வேண்டும்.[28]

சிவாஜி கணேசன்



நடிப்பை ஒரு கலையாக மதித்து, ஏற்றுக்கொண்ட பாத்திரத்தின் தன்மையை உணர்ந்து கொண்டு, அதில் தன் கற்பனையை கலந்து சிறப்புறச் செய்தார். தன் முழு கவனத்தையும் தனது நடிப்பில் செலுத்தினார். எடுத்துக்காட்டாக சரித்திரக்கால கட்டபொம்மன் தூக்கிலிடப்படுவதற்கு தூக்குமேடையை நோக்கி, கொண்டு செல்லப்படும்போது எப்படி நடந்து கொண்டார் என்பதைப்பற்றிய ஆங்கிலேயர்களின் குறிப்பு ஒன்று உள்ளது.

Kattabomman frequently eyed the Ettiapuram who had been so active in attempting to secure his person and the Poligar of Sivagiri with an appearance of indnamnt scorn, and when he went out to be executed he walked with a firm and daring air and cast looks of sullan contempt on the poligars to his right and left on her passed.[29]

மேற்கூறப்பட்டுள்ள குறிப்பில் உள்ளதை சிவாஜி கணேசன் படிப்பதற்கு வாய்ப்பில்லை. ஆனால் அந்தக் குறிப்பில் உள்ளதைப் போலவே வீரபாண்டியக்

கட்டபொம்மன் படத்தில் நடந்து வந்தார். அது அவருடைய சிறப்பான கற்பனைத் திறனைக் காட்டுகிறது. மேலும் திருவிளையாடல் (1965) படத்தில் சிவன் வேடத்தில் நடித்தார். கடவுளை நேரில் பார்த்தவர் இல்லை. எனவே கடவுளாக நடிப்பதற்கு அபரிதமான கற்பனை ஆற்றல் இருந்தால் மட்டுமே சாத்தியம். அதை அற்புதமாக நிறைவேற்றினார்.

5. கவனத்தை ஒரு முனைப்படுத்துதல் (Concentration)

ஒரு நடிகன் நிஜவாழ்விலும் நன்கு கவனிப்பவனாக இருக்க வேண்டும். தனது கவனத்தைக் கவர்வது எதுவாயினும் அதன் மீது தனது முழுக்கவனத்தையும் ஒருமுனைப்படுத்த வேண்டும். வேறு எதையோ நினைத்துக் கொண்டு கடந்து செல்பவரைப் போல் அல்லாமல், ஒரு பொருளைத் தீவிரமாகத் துளைத்துவிடுவது போன்ற கண்களால் பார்க்க வேண்டும்.[30]

சிவாஜி கணேசன்



இத்தகுதியின் அடிப்படையில்தான் சிவாஜி கணேசன் காஞ்சிப் பெரியவரை சந்தித்தபொழுதெல்லாம் தன் முழுக்கவனத்தையும் ஒருமுனைப்படுத்தி அவரின் உடல்மொழிகளை நன்கு கவனித்து அவற்றை அப்படியே திருவருட்செல்வர் படத்தில் அப்பர் வேடத்தில் வெளிப்படுத்தி நடித்தார்.

6. தசைகளைத் தளர்த்தி வைத்தல் (Relaxation of Muscles)

எந்த கதாபாத்திரத்தையும் உருவாக்க முயற்சி செய்வதற்கு முன் உங்கள் தசைகளை நல்ல நிலையில் வைத்துக் கொள்வது மிகவும் அவசியம். இதனால் உங்கள் நடிப்பைத் தடை செய்யாமல் பார்த்துக் கொள்ள முடியும்.[31]

சிவாஜி கணேசன்



தன் உடலை அவரால் எந்த நேரத்திலும் எந்த பாத்திரத்துக்கும் ஏற்ற வண்ணம் தளர்ச்சியாக வைத்து இருந்தார். ஆகையால்தான் அவரால் பெண்ணின் நளினத்தையும் சிங்கத்தின் கம்பீரத்தையும் தன் நடிப்பில் கொண்டுவர முடிந்தது. உதாரணம்: தெய்வமகன் (1969) படத்தில் அவர் ஏற்று நடித்த விஜய் பாத்திரமும் அவரது தந்தை சங்கர் பாத்திரமும் இதற்குச் சான்றாகும்.

7. சிறிய கூறுகளும் குறிக்கோள்களும் (Units and Objectives)

ஒரு கதையின் கரு என்ன என்பதை உணர்ந்து அதை அடைய வேண்டிய குறிக்கோள்களை மூன்று விதமாக பிரிக்கலாம். புற அல்லது பொருள் சார்ந்தது, அக அல்லது உளவியல் சார்ந்தது மற்றும் ஆரம்ப அடிப்படையான உளவியல் சார்ந்தது. குறிக்கோள்கள் ஒரு நடிகனை சரியான பாதையில் செலுத்தி, போலியாக நடிப்பதிலிருந்து தடுக்கின்றன. நடிக்கும்போது நம்பிக்கையை அந்த குறிக்கோள்கள்தான் அவருக்குத் தருகிறது.[32] (An Actor Prepares, pp. 111-112).

சிவாஜி கணேசன்



சிவாஜிகணேசன் தான் ஏற்று நடித்த அனைத்துப் பாத்திரங்களிலும், அவைகளின் தன்மை இறுதியில் அடைய வேண்டிய குறிக்கோள்கள், அதற்கு அடிப்படையான சிறிய கூறுகள் போன்றவற்றை உணர்ந்து பிரித்துப் பிழை இல்லாமல் நடிக்கும் ஆற்றல் பெற்றிருந்தார்.

எடுத்துக்காட்டாக 'படிக்காத மேதை' (1960) படத்தில் தன்னை வளர்த்த அத்தை (கண்ணம்பா) உடல் நலம் இல்லாமல் இருப்பதை அறிந்து ஒரு சாமியாரைப் பார்க்க ஓடுவான் ரங்கன் (சிவாஜி கணேசன்) அப்போது வழியில் அத்தை மகள் ராஜம்மாளை (சுந்தரிபாய்) சந்திப்பான். ஓடிக்கொண்டே தன் வீட்டு விலாசத்தைக் கொடுப்பான். சாமியாரிடம் சென்று வந்த நோக்கத்தை அழுதுகொண்டே கூறுவான். அந்தச் சாமியார் எதிரில் உள்ள குளத்தில் குளித்து வா என்று சொல்வார். உடனே குளத்தில் விழுந்து குளித்துவிட்டு, சாமியாரிடம் தாயத்து ஒன்றை வாங்கி மீண்டும் ஓடி வருவான் ரங்கன். அத்தையின் வீட்டை அடைந்த ரங்கன் வாசற்படி ஏறாமல், குழாய் மூலம் ஏறி வீட்டுக்குள் இறங்குவான். ரங்கனது அத்தை மகன்கள் (அசோகன், முத்துராமன்) இருவரும் கம்பியால் தாக்குவார்கள். மண்டை உடைந்து இரத்தம் வழிந்த நிலையிலும் கொண்டுவந்த தாயத்தை தனது அத்தையிடம் சேர்ப்பான். இந்தக் காட்சியில் ராஜம்மாளை சந்தித்தது ஒரு கூறு (Unit), சாமியாரிடம் தாயத்து வாங்கி வருவது ஒரு கூறு (Unit), அத்தை வீட்டிற்கு வந்து குழாய் வழியாக ஏறுவது ஒரு கூறு(Unit) மற்றும் ரங்கன் மீது நடந்த தாக்குதல் ஒரு கூறு என நான்கு கூறுகளை இணைத்து தாயத்தை அத்தையிடம் சேர்க்கும் சிறிய குறிக்கோளை நிறைவேற்றுவான் ரங்கன் (சிவாஜி கணேசன்).

8. நம்பிக்கையும், உண்மைபற்றிய ஒரு உணர்வும் (Faith and a Sense of Truth)

உண்மை என்று இங்கு குறிப்பிடுவது என்னவென்றால் ஒரு நடிகர் தான் புதிதாக உருவாக்கும் தருணங்களில் காட்சியைப் பற்றியுள்ள உண்மை அம்சங்களில் அவர் பயன்படுத்த வேண்டியவையாகும். பின் உணர்வுகளின் உண்மை நிலை பற்றி ஒரு நம்பிக்கை உணர்வை நடிகருக்குள் விழித்தெழச் செய்யும் வரையிலும் அதைச் செய்ய வேண்டும். இந்தச் செயல்முறை தான் ஒரு கதாபாத்திரத்தை நியாயப்படுத்துதல் ஆகும்.[33]

சிவாஜி கணேசன்



சிவாஜி கணேசன் தான் ஏற்று நடித்த அத்தனை பாத்திரங்கள் மீது நம்பிக்கையும், உண்மை பற்றிய உணர்வும் கொண்டு நடித்தார். அதுபற்றி சிவாஜி கணேசன், நமக்கு நிஜமாகவே திறமை இருக்க வேண்டும், அதில் நாம் பூரண நம்பிக்கை வைக்க வேண்டும். அப்படியானால் நடிப்பில் எதையும் சாதிக்கலாம் என்று பதிவு செய்தார்.[34] எடுத்துக்காட்டாக 'கப்பலோட்டிய தமிழன்' (1961) படத்தில் தேசபக்தர் வ.உ.சிதம்பரம் பிள்ளையாக நடிப்பதற்கு முன் அவரைப்பற்றி நம்பிக்கையுடன் நினைத்து உண்மையான உணர்வுடன் நடித்தார். அதைப் பார்த்த வ.உ.சி.யின் மகன் 'என் தந்தையைப் பார்ப்பதுபோல் இருந்தது' எனக் கூறினார்.[35]

9. உணர்ச்சிகளின் மீள் நினைவு (Emotion Memory)

ஒரு நடிகர் இவராகவோ அல்லது அவராகவோ இருப்பதில்லை. தனக்குள்ளேயே மிகத் தெளிவாகவோ அல்லது தெளிவற்ற முறையிலோ உருவாக்கப்பட்டுள்ள அக மற்றும் புற குணாதிசயங்களை அவர் கொண்டுள்ளார். தனது இயல்பில், ஒரு பாத்திரத்தின் தீய குணங்களையோ, அல்லது மற்றொரு பாத்திரத்தின் மேன்மையான குணங்களையோ, கொண்டிராமல் இருக்கலாம். ஆனால் அந்த குணங்களின் விதைகள் அவருக்குள்ளே இருக்கும். ஏனெனில் எல்லா மனித குணாதிசயங்களின் மூலக்கூறுகளும், நல்லவை-தீயவை என நமக்குள்ளே ஒளிந்திருக்கின்றன. ஒரு நடிகன், தனது கலை மற்றும் செயல்நுட்பத்தைப் பயன்படுத்தி, இயற்கையான முறைகளிலே, தனது பாத்திரத்துக்குத் தேவையான மூலக் கூறுகளை உணர்ச்சிகளின் மீள் நினைவுகளின் மூலம் கண்டுகொள்ள வேண்டும். இவ்விதமாக அவர் பிரதிபலிக்கும் நபரின் ஆன்மாவானது அவரது சொந்த உயிருருவின், உயிருள்ள மூலக்கூறுகளின் ஒரு கட்டமைப்பாக இருக்கும்.[36]

சிவாஜி கணேசன்



இந்தத் தகுதி சிவாஜி கணேசனுக்கு மிகச் சிறப்பானதாகும். அவர் பல கதாபாத்திரங்களுக்குத் தேவையான தனக்குள் இருந்த மிகச் சிறந்த உணர்ச்சித் தொகுப்புகளை நடிப்பில் கொண்டு வந்து காட்டினார். ஒரு மனிதனுக்குள் இருக்கக்கூடிய நல்லது மற்றும் கெட்ட விஷயங்களின் தொகுப்பை சிவாஜிகணேசன் உத்தமபுத்திரன் (1958) படத்தில் மாறுபட்ட வேடங்களில் நடித்துக் காட்டினார்.

10. தோழமைத் தொடர்பு (Communion)

ஒரு நடிகனின் விழிகள், அவனது பார்வை, அவனது ஆன்மாவின் மிக ஆழமான உட்பொருளைப் பிரதிபலிக்க வேண்டும். எனவே, தனது பாத்திரத்தின் மனித ஆன்மாவின் வாழ்வை ஒத்ததான ஒரு மகத்தான அக ஆதாரங்களை அவன் வளர்த்தெடுக்க வேண்டும். அவன் எல்லாக் காலங்களிலும் இந்த அக ஆதாரங்களை பிற நடிகர்களுடன் பகிர்ந்து கொண்டவாறு இருக்க வேண்டும்.

ஒரு நடிகர் அடுத்த நடிகரிடம் பேசும்போது, உங்களது எண்ணங்கள் அவரது உணர்வு நிலைக்குள் புகுந்துவிட்டதை உறுதிப்படுத்திக் கொள்ளும் வரை அதைப்பற்றிசொல்ல கற்றுக்கொள்ள வேண்டும். உங்கள் சொற்களால் சொல்ல முடியாதவற்றைக் கண்களால் சொன்ன பின்பு மட்டுமே மீதியுள்ள வசனத்தை நீங்கள் தொடர்ந்து பேச வேண்டும்.[37]

சிவாஜி கணேசன்



சிவாஜிகணேசன் இந்தத் தகுதியை குறைவறப் பெற்றிருந்தார் என்றே கூற வேண்டும். அவரது விழிகள் மற்றும் பார்வை நடிக்கும் சமயத்தில் அவரது ஆன்மாவின் மிக ஆழமான உட்பொருளை பிரதிபலித்தன. அதை எல்லாக் காலங்களிலும் சக நடிகர்களுடன் பகிர்ந்து கொண்டார்.

11. சமயத்துக்கு ஏற்றவாறு மாற்றிக் கொள்ளல் (Adaptation)

சூழ்நிலைக்கு ஏற்ப மாற்றிக் கொள்ளல் என்ற திறனை பார்க்கும்போது மிகவும் சக்தி வாய்ந்தவையும், தெளிவானவையும் நம்பத் தகுந்தவையும் என்று எண்ணக்கூடியவை எல்லாமே அற்புதம் படைக்கும் கலைஞனாகிய இயற்கையின் கைவண்ணங்கள் என்றே கூறலாம். அவை அனைத்துமே முழுக்க முழுக்க ஆழ்மனதில் உருவாகியவை ஆகும். மகத்தான கலைஞர்கள் அவற்றைப் பயன்படுத்துவதை காணலாம்.[38]

சிவாஜி கணேசன்



சிவாஜிகணேசன் காட்சிகளில் சூழ்நிலைகளுக்கேற்றவாறு தன்னை மாற்றிக்கொள்ளும் திறமை பெற்றிருந்தார். எடுத்துக்காட்டு 'பாவமன்னிப்பு' படத்தில் தன் தாயை சந்தித்துவிட்டு வரும் காட்சியில் எடுக்கப்படவிருந்த 'சிலர்

சிரிப்பார் சிலர் அழுவார்' என்ற பாடல் காட்சியில், திரையில் ஒரு சிவாஜி அழுவதும், ஒருவர் சிரிப்பதும் போல் நடித்தது சிவாஜி கணேசனுக்கு அவரது ஆழ் மனதில் உருவான நடிப்பாகும்.[39]

12. உள்ளார்ந்த தூண்டுதல் சக்திகள் (Inner Motive Forces)

ஒரு நல்ல நிஜமான கலைஞன் ஹாம்லெட் வேடத்தில் நடிக்கும்போது "இருப்பதா அல்லது இறப்பதா" என்ற ஏக வசனத்தைப் பேசும்போது ஒரு நடிகர், கற்பனைப் பாத்திரமான ஹாம்லெட்டாக மட்டுமே நின்று பேசுவதில்லை. நாடகத்தில் உருவாக்கப்பட்ட சூழ்நிலைகளில் தானே உள்ளது போன்ற தனது சொந்த உரிமைப்பாட்டில் அவர் பேசுகிறார்.[40]

சிவாஜி கணேசன்



சிவாஜி கணேசன் உள்ளார்ந்த தூண்டுதல் சக்திகள் என்ற தகுதியை அடையக்கூடியவர் என்பதை 'ராஜபார்ட் தங்கதுரை' (1973) படத்தில் புராண கால நாடகங்கள் நடத்த முடியாத சூழ்நிலையில் நாடகக் குழுவினரோடு பட்டினி கிடந்து பின் நவீன நாடகங்கள் நடத்தலாம் என்ற முடிவுக்கு வருவார். ஷேக்ஸ்பியரின் "Hamlet" நாடகத்தை நடத்துவார். "இருப்பதா அல்லது இறப்பதா" என்ற வசனங்களை அவர் பேசி நடிக்கும்போது நாடகக் குழுவின் நிலைமையைப் பிரதிபலிக்கும் வகையில் வசனங்களைப் பேசி நடித்தார்.

13. உடையாத கோடு (The unbroken line)

ஒரு திரைப்படத்தின் கதையை மற்றும் திரைக்கதையை ஒரு நடிகர் மீண்டும் மீண்டும் படித்தோ அல்லது பிறர் படித்துச் சொல்லக் கேட்டோ

புரிந்துகொள்ள வேண்டும். ஒரு நடிகரால் புதிய பாத்திரம் ஒன்றின் அடிப்படை அம்சங்களை உடனடியாகப் புரிந்துகொள்ள முடியும். அப்போது அதனால் அவன் மிகவும் தீர்க்கமாகத் தாக்கப்பட்டு தன்னையே இழந்தவனாக வெடித்தெழும் உணர்ச்சிக் கொந்தளிப்பில் அதன் மூல அம்சத்தைச் சட்டென்று அவனால் உருவாக்க முடியும்.

மேலும் ஒரு நடிகருக்கு கதையின் உள்ளார்ந்த கோடு உடைபட்டுவிட்டால் அவரிடம் நடிப்பதற்குத் தேவையான ஆசைகளோ உணர்ச்சிகளோ அவரிடம் அதற்கு மேல் இருப்பதில்லை. நடிகரும் அவர் ஏற்றுக் கொண்டுள்ள பாத்திரமும், மனரீதியாகச் சொல்வதனால், இந்த உடையாத கோடுகளினால்தான் உயிர் வாழ்கின்றனர். அதுதான் நடிக்கப்படுகிற விஷயத்துக்கு உயிரோட்டமுள்ள அசைவைத் தருகிறது. ஒரு பாத்திரம் செம்மையாக நடிக்கப்படுவதற்கு அது தொடர்ச்சியாக நிலைபெற்று இருக்க வேண்டும்.[41]

சிவாஜி கணேசன்

தான் நடிக்கப்போகும் காட்சியின் வசனங்களை பிறரை படிக்கச் சொல்லிக் கண்ணை மூடி கேட்பார். பின்பு தன்மையை மனதிற்குள் வைத்து அதன் தொடர்நிலையை தன் நடிப்பில் கொண்டுவரும் திறன் பெற்றிருந்தார்.

14. உள்ளார்ந்த உருவாக்கும் நிலை (The Inner Creative State)

ஒரு நடிகன் தனது உயிர்சார்ந்த மற்றும் உடல் சார்ந்த படைப்புக் கருவிகளின்பால் திரும்பும்போது அவரது மனம், மனநிலை மற்றும் உணர்ச்சிகள் ஒன்றாக இணைந்து நடிகனது அகத்தின் 'மூலக் கூறுகள்' அனைத்தையும் ஊக்குவித்துச் செயல்படுத்த முனைகின்றன. இதனால் அந்த நடிகனால் பாத்திரத்தை நிஜமாக உணரமுடிகிறது. இந்த மூன்று சக்திகளும் நடத்திச் செல்லும் மூலக்கூறுகளின் தொனி, நிறம், சாயல்கள் மற்றும் மனோபாவங்களை எடுத்துக் கொண்டு செயல்படுகின்றன. பாத்திரத்தின் இந்த உயிர் துணுக்குகளை, மூலக்கூறுகளின் மீது பொருத்தி இணைக்கின்றன. இந்த மூலக்கூறுகளின் இணைப்பிலிருந்துதான் மிக முக்கியமான உள்ளார்ந்த நிலையானது எழுகிறது. ஒரு பாத்திரத்திற்கான அக உள்ளார்ந்த நிலைகளை தயார்ப்படுத்துதல் என்பது நடிப்பதற்கு குறித்த நேரத்திற்கு முன் சென்று, தன்னை முழுவதுமாகத் தயார்படுத்திக்கொள்ள துவங்க வேண்டும். ஒரு பாடகன் இசை நிகழ்ச்சிக்கு முன்னதாக குரலைப் பயிற்றுவித்து தயார் செய்வதுபோல், நடிகன் நடிப்புக்கருவியின் உட்புறத் தந்திகளை சுருதி சேர்த்து முடுக்கவும், பிற பகுதிகளை ஏற்றவாறு தயார் செய்ய வேண்டும். அதனால் ஒரு நடிகன்

புரிந்துகொள்ள வேண்டும். ஒரு நடிகரால் புதிய பாத்திரம் ஒன்றின் அடிப்படை அம்சங்களை உடனடியாகப் புரிந்துகொள்ள முடியும். அப்போது அதனால் அவன் மிகவும் தீர்க்கமாகத் தாக்கப்பட்டு தன்னையே இழந்தவனாக வெடித்தெழும் உணர்ச்சிக் கொந்தளிப்பில் அதன் மூல அம்சத்தைச் சட்டென்று அவனால் உருவாக்க முடியும்.

மேலும் ஒரு நடிகருக்கு கதையின் உள்ளார்ந்த கோடு உடைபட்டுவிட்டால் அவரிடம் நடிப்பதற்குத் தேவையான ஆசைகளோ உணர்ச்சிகளோ அவரிடம் அதற்கு மேல் இருப்பதில்லை. நடிகரும் அவர் ஏற்றுக் கொண்டுள்ள பாத்திரமும், மனரீதியாகச் சொல்வதனால், இந்த உடையாத கோடுகளினால்தான் உயிர் வாழ்கின்றனர். அதுதான் நடிக்கப்படுகிற விஷயத்துக்கு உயிரோட்டமுள்ள அசைவைத் தருகிறது. ஒரு பாத்திரம் செம்மையாக நடிக்கப்படுவதற்கு அது தொடர்ச்சியாக நிலைபெற்று இருக்க வேண்டும்.[41]

சிவாஜி கணேசன்

தான் நடிக்கப்போகும் காட்சியின் வசனங்களை பிறரை படிக்கச் சொல்லிக் கண்ணை மூடி கேட்பார். பின்பு தன்மையை மனதிற்குள் வைத்து அதன் தொடர்நிலையை தன் நடிப்பில் கொண்டுவரும் திறன் பெற்றிருந்தார்.

14. உள்ளார்ந்த உருவாக்கும் நிலை (The Inner Creative State)

ஒரு நடிகன் தனது உயிர்சார்ந்த மற்றும் உடல் சார்ந்த படைப்புக் கருவிகளின்பால் திரும்பும்போது அவரது மனம், மனநிலை மற்றும் உணர்ச்சிகள் ஒன்றாக இணைந்து நடிகனது அகத்தின் 'மூலக் கூறுகள்' அனைத்தையும் ஊக்குவித்துச் செயல்படுத்த முனைகின்றன. இதனால் அந்த நடிகனால் பாத்திரத்தை நிஜமாக உணரமுடிகிறது. இந்த மூன்று சக்திகளும் நடத்திச் செல்லும் மூலக்கூறுகளின் தொனி, நிறம், சாயல்கள் மற்றும் மனோபாவங்களை எடுத்துக் கொண்டு செயல்படுகின்றன. பாத்திரத்தின் இந்த உயிர் துணுக்குகளை, மூலக்கூறுகளின் மீது பொருத்தி இணைக்கின்றன. இந்த மூலக்கூறுகளின் இணைப்பிலிருந்துதான் மிக முக்கியமான உள்ளார்ந்த நிலையானது எழுகிறது. ஒரு பாத்திரத்திற்கான அக உள்ளார்ந்த நிலைகளை தயார்ப்படுத்துதல் என்பது நடிப்பதற்குக் குறித்த நேரத்திற்கு முன் சென்று, தன்னை முழுவதுமாகத் தயார்படுத்திக்கொள்ள துவங்க வேண்டும். ஒரு பாடகன் இசை நிகழ்ச்சிக்கு முன்னதாக குரலைப் பயிற்றுவித்து தயார் செய்வதுபோல், நடிகன் நடிப்புக்கருவியின் உட்புறத் தந்திகளை சுருதி சேர்த்து முடுக்கவும், பிற பகுதிகளை ஏற்றவாறு தயார் செய்ய வேண்டும். அதனால் ஒரு நடிகன்

மேடையில் வாழ்கிறான், அழுகிறான், சிரிக்கிறான். எல்லா நேரங்களிலும் தனது கண்ணீரையும், புன்னகைகளையும் அவன் கவனித்துக் கொண்டே இருக்கிறான். இந்த இருமுனைச் செயல்பாடு, வாழ்க்கை மற்றும் நடிப்பு இவற்றுக்கு இடையிலான சமநிலைதான் நடிகனது கலையை உருவாக்குகிறது.[42]

சிவாஜி கணேசன்



இத்தகுதியை அவர் முழுமையாய் பெற்றிருந்தார் என்பதற்கு மராட்டிய சிவாஜி வேடமேற்று திரையுலகிற்கு வருவதற்கு முன்னால் நாடகத்தில் நடித்து 'சிவாஜி' எனும் சிறப்புப் பட்டம் பெற்றதைக் குறிப்பிடலாம். உள்ளார்ந்த நிலையில் அவர் அப்பாத்திரத்தை உருவாக்கியதால்தான் அதை அவரால் சாதிக்க முடிந்தது.

15. முதன்மைக் குறிக்கோள் (The Super Objective)

ஒரு நடிகனின் தனிப்பட்ட, சிறிய குறிக்கோள்களும் கற்பனை சார்ந்த அவனது எண்ணங்கள், உணர்ச்சி மற்றும் செயல்கள் ஆகியன எல்லாமே கதைக் கருவின் முதன்மைக் குறிக்கோளை நிறைவேற்றுவதை நோக்கி மையம் கொண்டிருக்க வேண்டும். தவறினால், நடிக்கும்போது அது அனாவசியமானதாகவும் தவறானதாகவும்கூடத் தோற்றமளிக்கும். ஒரு நடிகன் நடிக்கின்ற காலம் முழுவதும் அதன் முக்கியக் கருத்தானது நடிகனின் மனதில் திடமாகப் பதிந்திருக்க வேண்டும். நடிகனின் கலைப் படைப்புக்கு அதுவேதான் ஊற்றாக அமைய வேண்டும்.[43]

சிவாஜி கணேசன்



ஒரு கதையைக் கேட்ட மாத்திரத்திலேயே அவர் அக்கதையின் முதன்மைக் குறிக்கோளை மனதில் வைத்து நடிப்பார். இத்தகுதியை அவர் அதிகமாக பெற்றிருந்த காரணத்தால் பல படங்களில் ஒரே காலத்தில் அவை வெற்றி பெற்றதற்கு அடையாளமாகக் கூறலாம். பாசமலர், பாவமன்னிப்பு மற்றும் பாலும் பழமும் இந்த மூன்று படங்களும் 1961 ஆம் ஆண்டு வெளிவந்து மூன்றுமே வெள்ளிவிழா கண்டன. அதற்கு முழு காரணம் சிவாஜி கணேசன் மூன்று படங்களின் கதைகளின் முதன்மைக் குறிக்கோள்களையும் நன்கு உணர்ந்து நடித்ததுதான் காரணம்.

16. ஆழ் மனதின் வாயிற்படியில் (On the Threshold Subconcious)

ஒரு பாத்திரத்தை ஏற்றுப் பணி செய்கிற மேல்மனமட்டத்தில் தெரிநிலையில் உள்ள சமயத்தில் ஒரு நடிகன் தனது பாத்திரத்தின் வாழ்வினுள் நுழைகிறான். இதைச் செய்யும்போது அந்தப் பாத்திரத்தினுள் என்ன நிகழ்கிறது, தனக்குள்ளே என்ன நிகழ்கிறது, தன்னைச் சுற்றிலும் என்ன நிகழ்கிறது என்றெல்லாம் முழுமையாகப் புரிந்து கொள்ளாமலே அவன் இதைச் செய்கிறான். ஆழ்மனதின் பகுதியை அவன் எட்டும்போது அவனது ஆன்மாவின் கண்கள் திறக்கின்றன. அதன் பின், அவன் ஒவ்வொரு நுண்ணிய விவரத்தையும் உணர்ந்து கொள்கிறான். அவை எல்லாமே முற்றிலும் புதிய முக்கியத்துவத்தைப் பெற்று விடுகின்றன. புதிய உணர்ச்சிகள், கருத்தாக்கங்கள், பார்வைகள் மற்றும் கண்ணோட்டங்கள் ஆகியவற்றை, தன்னிலும் தனது பாத்திரத்திலும் உணர்ந்து கொள்கிறான். இவ்வாறு தெரிநிலைக்கு அப்பாற்பட்ட, ஆழ்மனதின் பகுதியை எட்டும்போது ஒருவரது உள்ளார்ந்த வாழ்வு தானாகவே ஒரு எளிமையான முழுமையான வடிவத்தைப் பெறுகிறது. ஏனெனில் அப்போது அதன் இயற்கையான தன்மை, அவன் உருவாக்கும் கருவியின் முக்கியமான மையங்கள், அனைத்தையும் இயக்கத் தொடங்கிவிடுகிறது.[44]

சிவாஜி கணேசன்

இந்தத் தகுதியை அவர் அதிகமாக பெற்றிருந்த காரணத்தால்தான் அவரால் ‘வீரபாண்டிய கட்டபொம்மன்’, ‘கப்பலோட்டிய தமிழன்’ பாத்திரங்களையும் நடித்தார் என்று கூறுவதற்கு மாறாக அந்தப் பாத்திரங்களாகவே வாழ்ந்தார் என்று கூறலாம். அவரது ஆழ்மனதின் செயல்பாடுகள்தான் அதற்கு முழுக்காரணமாகும். கட்டபொம்மன் படப்பிடிப்பு முடிந்தவுடன் ஒவ்வொரு நாளும் அவர் உடலில் போட்டிருக்கும் நகைகளை உடனே கழற்ற முடியாது. அவைகள் அவரது உடலில் ஏற்பட்ட முறுக்கேறிய தன்மையால் இறுக்கமாக இருக்கும். அவர் தன் மனதை சாதாரண நிலைக்கு கொண்டுவந்த பின்தான் உடலின் மாற்றங்கள் மாறி இறுக்க நிலை குறையும்.[45]

**ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் ஒரு கதாபாத்திரத்தை வடிவமைக்கும் முறை (Building a Character)**

ஒரு கதாபாத்திரத்தை எவ்வாறு வடிவாக்கம் செய்ய வேண்டும் என்பது பற்றி ஸ்தானிஸ்லாவ்ஸ்கி கூறியதையும் அவற்றை சிவாஜி கணேசன் எவ்விதம் இயற்கையாகவே கற்று தன் நடிப்பாற்றலில் காட்டினார் என்பதையும் காணலாம்:

1. **உடல் ரீதியான வடிவாக்கம் (Toward a Physical Characterization)**

உடல், குரல், பேசுகின்ற, நடக்கின்ற மற்றும் அசைகின்ற விதம் இவற்றைப் பயன்படுத்தாவிட்டால், பாத்திரத்தின் வடிவமைப்புக்கு ஏற்ற ஒரு உருவத்தை கண்டுபிடிக்காவிட்டால், அப்பாத்திரத்தின் உள்ளார்ந்த உயிர்த்துடிப்புடன் கூடிய உயிருருவை மற்றும் ஆன்மாவை ஒரு நடிகரால் பிறருக்குப் புரியுமாறு கொண்டு சேர்க்க முடியாது.

மேலும் புறத்தோற்றத்தால் ஒரு நடிகரால் தன்னைத்தானே முழுமையாக மாற்றிக் காட்ட இயலும். ஆனால் குரலை மாற்றிக்காட்ட குரல் வளமானதாகவும் பயிற்றுவிக்கப்பட்டதாகவும் இருக்க வேண்டும். இல்லாவிடில் மிகவும் உச்சஸ்தாயியிலோ அல்லது தாழ்ந்த ஸ்தாயியிலோ வெகுநேரம் பேச முடியாது.[46]

சிவாஜிகணேசன்



ஒரு பாத்திரத்திற்கேற்ற உடல் அசைவு, அதனால் உருவான நடை இவற்றோடு தன் குரலை நல்ல பயிற்சி கொடுத்து (Voice Culture) வளமிக்கதாக வைத்திருந்தார். ஆண்களுக்கு ‘மகரக்கட்டு’ என்பது பத்து அல்லது பதினைந்து வயதில் வருவது இயற்கை. அச்சமயத்தில் குரல் வளம் மாறும். சிவாஜிகணேசன் குரல் பயிற்சியை அந்தப் பருவத்தில் ஒரு யோகா மாதிரி செய்து பழகினார். அதனால் அவர் நல்ல குரல்வளம் பெற்றிருந்தார். அவருக்கு ‘சிம்மக் குரலோன்’ என்ற பெயர் வந்தமைக்கு அவர் செய்து வந்த பயிற்சிதான் காரணம்.[47]

எந்த முறையிலும் குரல் மாற்றி பேசும் வல்லமை பெற்றிருந்தார். ‘பலே பாண்டியா’ (1962) எனும் திரைப்படத்தில் மூன்று வேடங்களில் மூன்று விதமாக குரல் மாற்றிப் பேசி நடித்தார். மேலும் ‘தெனாலிராமன்’ (1956) படத்தில் கம்பீரமான குரலிலும், இடையில் மலையாள மந்திரவாதியாக மாறுவேடத்தில் வரும் சமயம் வேறு குரலிலும் பேசி நடித்தார்.

## 2. ஒரு பாத்திரத்தின் ஆடை அணிகலன்கள் (Dressing a Character)

ஒரு கதாபாத்திரத்தின் ஆடை அணிகலன்கள் அந்தப் பாத்திரத்தின் தன்மைக்கேற்ப சரியாக அணியப்பட வேண்டும்.[48]

சிவாஜிகணேசன்



நாடக உலகத்திலிருந்தே நடிப்போடு தான் ஏற்றுக்கொண்ட கதாபாத்திரத்தின் குலம் கோத்திரம், அவன் சார்ந்த நாடு போன்றவற்றை விசாரித்து அதற்கேற்ற ஆடை அணிகலன்களை அணிவதற்கு கற்றுத் தேறியிருந்தார். சிவாஜிகணேசன் தன்னுடைய ஒப்பனையை 80 சதவிகிதம் தானே செய்துகொள்வார். 'கர்ணன்' (1964) திரைப்படத்தில் ஆரம்பக்காட்சியில் நெற்றியில் சாதாரண பொட்டு வைத்திருப்பார். ஆனால் பாத்திரத்தின் பிறப்புப் பற்றிய ரகசியம் அறிந்தது முதல் சூரியன் கதிர்கள் ஒளிவிடுவதுபோல் பொட்டு வைத்திருப்பார். வஞ்சகத்தால் இந்திரனிடம் தன் காதுக் குண்டலங்களையும் உடற்கவசத்தையும் தானமாகக் கொடுத்தபின்பு தன் உடலில் சக்தி இழந்ததைக் காட்டும் வண்ணம் பழுப்பு நிறத்தில் முத்துமாலையும், வெண்பட்டு மேலாடையும் அணிந்து வருவார்.[49]

## 3. பாத்திரங்களும் வகைகளும் (Characters and Types)

பாத்திரங்களுக்காகத் தயார் செய்தல் அல்லது தம்மைத்தாமே பிற பாத்திரங்களாக மாற்றிக்கொள்ளல் அவசியம் ஏற்படும் சமயம் ஒரு நடிகர் ஏற்றுக் கொண்ட பாத்திரத்துடன் தொடர்புள்ள உணர்ச்சிகளை, நம்முள் தேடிக் கண்டுபிடித்து அவற்றைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். உதாரணமாக ஒரு முதியவனாக நடிக்க விரும்பினால் அந்த முதியவனைச் சுற்றியுள்ள சுற்றுச்சூழலின் பின்னணிக்குள் தன்னைப் பொருத்திக்கொண்டு நடித்தால் அவன் வெற்றி பெறுவான்.[50]

சிவாஜிகணேசன்



தன் அடையாளத்தையே இழந்து காணக்கூடிய அளவிற்கு பல பாத்திரங்களைச் செய்துள்ளார். குறிப்பாக வயோதிகத் தோற்றத்தை உடைய சாக்ரடீஸ் வேடத்தில் அவர் சிரிக்கும்போது அந்த வயதிற்குரிய சிரிப்பு, உடல்மொழி காட்டி நடித்தார்.

முதியவர் வேடங்களில் அவர்களின் செயல்பாடுகளை உணர்ந்து பல படங்களில் சிறப்பாக நடித்து வெற்றி பெற்றார். 'முதல் தேதி' (1955) படத்தில் வயதான வேடத்தில் நடிக்கும்போது சிவாஜிகணேசனுக்கு 27 வயது. 'தங்கமலை ரகசியம்' (1957) படத்தில் இளமை முழுவதும் போன முதியவராக நடித்தார். 'திருவருட்செல்வர்' (1967) படத்தில் காஞ்சிப் பெரியவரின் உருவத்தை மனதில் வைத்து நடித்தார். அப்பராக அப்படத்தில் சிவாஜி கணேசன் நடக்கும்போதும், உட்காரும்போதும், கண்களைச் சுருக்கிப் பார்க்கும்போதும் வயோதிகத் தன்மையைச் சிறப்புற வெளிப்படுத்தினார். அந்தப் படத்தின் சுவரொட்டிகளைப் பார்த்து காஞ்சிப் பெரியவர் தன் படத்தை போட்டிருக்கிறார்களே என்று வேதனைப்பட்டார். அந்த அளவுக்கு அப்பாத்திரத்தின் முதுமைத் தன்மையை நடிப்பில் காட்டினார்.[51]

4. உடல் உணர்ச்சிகளை வெளிப்படுத்தல் **(Making the Body Expressive)**

ஒரு நடிகன் கூர்ந்து கவனிக்கப்படுகிறான். உடல் ஊனமுற்ற கதாபாத்திரத்தைச் சித்தரித்துக் காட்டுவது அவனது குறிக்கோளாக இருந்தால் அதைச் சரியாக செய்து காட்ட வேண்டும். அதற்கு அவன் மிகவும் நன்றாகவும், இலகுவாகவும் அசைந்து நடந்து பழக வேண்டும். இதைச் செய்ய வேண்டுமானால், நல்ல நிலையில் உள்ள ஒரு ஆரோக்கியமான உடலை, அசாதாரணமாகக் கட்டுப்படுத்தக்கூடிய உடலை அவன் பெற்றிருக்க வேண்டும்.[52]

**சிவாஜி கணேசன்**



'பார்த்தால் பசி தீரும்' (1962) படத்தில் குண்டு வீச்சால் கால் ஊனமுற்ற இராணுவ அதிகாரியாக அருமையாக நடித்தார். 'பாகப்பிரிவினை' (1969) படத்தில் ஒரு கை, ஒரு கால் ஊனமுற்றவராக நடித்தார்.

5. உடல் அசைவின் நெகிழும் இலகுத் தன்மை (Plasticity of Motion)

உடல் அசைவு மற்றும் செயல் ஒருவரது ஆன்மாவின் உள்ளறைகளில் தொடங்கி ஒரு அகவடிவத்தைப் பின்பற்றி வருவன ஆகும். அவை நடனம் மற்றும் பிற நடிப்பு நெகிழ்வுக் கலைகளில் ஈடுபட்டுள்ள உண்மையான கலைஞர்களுக்கு அத்தியாவசியமானவை ஆகும். நாம் உடல்ரீதியான பாத்திரப்படைப்பை உருவாக்கும்போது நமக்குப் பயனுள்ளவை இந்த அசைவுகள் மட்டுமே. அந்த அசைவுகள் தருவது சிறப்பான நடையாகும். ஒருவரது நடையானது ஊர்ந்து செல்வதுபோல் அல்லாமல் பறந்து செல்வதுபோல இருக்க வேண்டும். புற ரீதியிலான நெகிழ்வு என்பது அகரீதியிலான சக்தியின் அசைவு பற்றிய ஒரு உள்ளுணர்வின் அடிப்படையில் இருக்கும்.[53]

சிவாஜிகணேசன்



இயற்கையிலேயே நடையழகின் முக்கியத்துவத்தை உணர்ந்த நடிகர். அதற்கேற்ற வண்ணம் உடல் அசைவுகள் நல்ல நெகிழும் தன்மையைப் பெற்றிருந்தது. அவரின் உடல் அசைவுகள் ஆன்மாவின் உள்ளிருந்து துவங்கி வெளிப்பட்டன. அதை அவர் நடனக் காட்சிகளிலும், அழகிய நடைகளிலும் காட்டி நடித்தார். அந்த உடல் அசைவுகள் அவர் பெண் வேடமிட்டு நாடகங்களில் நடித்த பழக்கத்திலிருந்து வந்ததாக நடிகை எம்.என். ராஜம் குறிப்பிட்டார். மேலும் அவர், "பொதுவாக நாடக உலகில் பெண் வேடம் போடும் நடிகர்கள், பகல் நேரத்தில் திருநங்கைகளைப் போலவே நடந்து கொள்வார்கள். ஆனால் சிவாஜி கணேசன், மேடையில் மட்டும் பெண்களைப்போல் ஒயிலாக நடந்து சிறப்பாக நடிப்பார். நாடக உலகில் தன் நடை மற்றும் நடிப்பில் பெண்களின் நளினத்தை சிறப்பாக காட்டி நடித்த அவர் திரையில் நடிக்க ஆரம்பித்தபின், அந்த நளினத்தை தனி ஸ்டைலாக மாற்றி நடந்து நடித்தார்".[54]

## 6. அடக்கிக்கொள்ளல் மற்றும் கட்டுப்பாடு (Restraint and Control)

ஒரு நடிகன் தேவையற்ற சைகைகளை அடக்கிக்கொள்ளல் என்பது மிக முக்கியமான அம்சமாகும். ஒரு கதாபாத்திரத்திற்குரிய சரியான சைகை தன்னை மேலும் நெருக்கமாகக் கொண்டு வரும் என்பதையும், சொந்த அசைவுகளின் குறுக்கீடானது அதனிடமிருந்து தன்னைப் பிரித்துவிடும் என்பதையும் நடிகர் புரிந்துகொள்ள வேண்டும். உடலசைவுச் சைகைகளைக் குறைத்துக் கொள்வதன் வாயிலாக குரல் வளம், முகபாவங்கள் ஆகியன வளம் பெறுவதையும் காணலாம். ஒரு கதாபாத்திரத்தின் அகவாழ்வின் மென்மையான உணர்வுகளைச் சரிவர சித்தரிப்பதற்கு இவை மிக முக்கியமானவை ஆகும்.[55]

சிவாஜிகணேசன்



தேவையற்ற சைகைகளை அடக்கி தேவையான சைகைகளை மட்டும் நடிப்பில் கொண்டு வந்து பெரும்புகழ் பெற்றார். 'சம்பூர்ண இராமாயணம்'

(1958) படத்தில் சிவாஜிகணேசன் பரதன் வேடத்தில் நடித்தார். அதில் கோசலை நாட்டிற்கு தேரில் வரும் காட்சியில், நடந்த விஷயங்களை ஏதும் அறியாமல் வந்து கொண்டிருப்பார். ஒவ்வொரு இடத்திலும் இருக்கும் சூழ்நிலைகளைப் பார்த்து வெறும் கையை மட்டும் சைகை செய்து தேரைப் போகச் சொல்லுவார். அந்த நடிப்பைப் பார்த்து ராஜாஜி "பரதனைப் பார்த்தேன்" என்று கூறினார். 'உயர்ந்த மனிதன்' (1968) படத்தில் சத்யனாக நடிக்கும் சிவகுமார் திருடன் என்று குற்றம் சாட்டப்பட்ட சமயத்தில் மிகவும் அமைதியாக, "ஏன்டா இப்படி செய்தாய் என்று கேட்டுவிட்டு திடீரென்று கைப்பிரம்பால் அடிப்பார். மேற்குறிப்பிட்ட படங்களில் அவர் தேவையற்ற சைகைகளை கட்டுப்படுத்திக்கொண்டு கட்டுப்பாட்டுடன் நடித்தார்.

## 7. உச்சரிப்புத் தெளிவும் இசை பாடுதலும் (diction and singing)

இத்தாலிய நடிகர் தாமஸோ சால்வினியின் கருத்துப்படி, ஒரு நடிகருக்கு மிக அத்தியாவசியமானது குரல், குரல், வளமையான குரல் மட்டுமே என்பதாகும். ஒரு நடிகன் தனது நடிப்புத் தொழிலில் படைக்கும் வேலையில் இறங்குவதற்கு முழுமையான வல்லமை பெற்றிருக்க வேண்டும். அவனது படைப்புக் கருவிகளில் மிக முக்கியமான ஒன்று அவனது குரல் ஆகும். ஒரு நடிகர் தன் உடலசைவுகளைக் கட்டுப்படுத்தி அவற்றிற்குச் சொற்களையும் குரலையும் சேர்க்கும்போது அது இனிமையான பாடலுடன் இசையும் இணைந்து ஒலிப்பது போலத் தோன்றுகிறது. பேச்சு என்பது நல்ல இசைக்குச் சமம்.[56]

**சிவாஜிகணேசன்**



நாடக உலகிலேயே சிவாஜிகணேசன் தனது குரலை பழக்கி நல்ல வளத்துடன் வைத்து இருந்தார். 'பராசக்தி' படம் வெளிவருவதற்கு முன் அவர் 'நிரபராதி' என்ற தெலுங்குப் படத்தில் நடித்த முக்காமாலா கிருஷ்ணமூர்த்தி எனும் தெலுங்கு நடிகருக்கு குரல் கொடுத்தார். அந்தக் குரல் கேட்டு தமிழ்த் திரையுலகில் அனைவரும் அதிசயித்தனர்.[57]

‘திருவிளையாடல்’ படத்தில் தமிழ்ச் சங்கத்தில் நக்கீரருடன் (இயக்குநர் ஏ.பி. நாகராஜன்) வாக்குவாதம் புரியும் காட்சியில் சங்க இலக்கியமான குறுந்தொகை பாடலான,

“கொங்கு தேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயில் இயல்
செறி எயிற்று, அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ, நீ அறியும் பூவே”

என்ற பாடலை அவர் உச்சரித்த விதம், குரலில் இருந்த இனிமை, கவர்ச்சி அந்தப் பாடலை அவர் பாடுவதுபோல் இருந்தது. அது ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் கருத்துக்கு இணைந்திருந்தது எனலாம்.

8. நாடக மேடையில் பேசுவது ஒரு கலை **(intonations and pauses)**

ஒரு பாத்திரத்தின் வசனமானது தானாகவே தனித்து நின்று எந்த மதிப்பையும் பெறுவதல்ல. மாறாக அதன் உட்கருத்தினாலும் அதனுள் இருக்கும் பொருளினாலும் மட்டுமே அது மதிப்பைப் பெறுகிறது. நடிக்கத் தொடங்கும்போது இந்த உண்மையை ஒரு நடிகன் மறந்து விடுகிறான்.

தனது பாத்திரத்துக்கான வசனத்தோடு ஏற்ற உணர்ச்சி இசையை நடிகன்தான் உருவாக்கிக் கொள்ள வேண்டும். அந்த உணர்வுகளைச் சொற்களால் எவ்வாறு பேசி வெளிப்படுத்துவது என்று ஒரு நடிகன் கற்றுக்கொள்ள வேண்டும். ஒரு நடிகனுக்கு சொல் என்பது வெறும் ஒலி மட்டுமல்ல, மாறாக அது உருவங்களை உருவாக்குதல் ஆகும். வசனம் பேசுவது என்பது காட்சிகளை உருவாக்குவது ஆகும். கேட்பது என்பது, பேசப்படுகிற விஷயத்தைக் காண்பதாகும்.

சொற்களுடன் தொடர்புள்ள எண்ணங்கள், பதிவுகள், உருவங்கள் ஆகியவற்றால் மட்டுமே கேட்பவர் பாதிக்கப்படுவதில்லை. ஆனால், சொற்களின் தொனி, அவற்றை முடிவு செய்யும் மௌனங்கள் ஆகியவையும் கூட அவரைப் பாதிக்கின்றன. கேட்பவர் மீது ஒரு வலிமையான உணர்ச்சி ரீதியான தாக்கத்தைத் தொனிகளாலும், நிறுத்தங்களாலும் மட்டுமேகூட ஏற்படுத்த முடியும்.

ஒரு வசனத்தின் வலிமை அதன் பொருளில்தான் உள்ளது என்றாலும் பேசுவதன் தெளிவில் அது வலிமை பெறுகிறது. எனவே வசனத்தைப் பேசும்போது ஒலியின் அளவு மற்றும் அதன் பல்வேறு அம்சங்கள் பற்றிய

தீர்மானம் தேவை. தொனிகளை ஏற்றி இறக்கிப் பயன்படுத்த வேண்டும். வசனம் பேசும்போது தாழ்ந்த குரல் அளவிலிருந்து உயர்ந்த குரல் அளவுக்குப் படிப்படியாக மாற்றிக் கொண்டு செல்லும் முறையாக மட்டுமே, ஒன்றுக்கொன்று பரஸ்பர உறவுள்ள வகையில் மட்டுமே ஒலியின் அளவானது கையாளப்பட வேண்டும்.[58]

**சிவாஜி கணேசன்**



ஸ்தானிஸ்லாவ்ஸ்கி வகுத்துள்ள வசனம் பேசுகின்ற முறையிலும், தொனிகளையும் நிறுத்தங்களையும் சிவாஜி கணேசன் பல படங்களில் கடைபிடித்து வெற்றி பெற்றார். எடுத்துக்காட்டாக 'வீரபாண்டிய கட்டபொம்மன்' (1969) படத்தில் நெற்களஞ்சியத்தைக் கொள்ளையடித்து வெள்ளையர்களின் பகையைத் தேடித் தந்த தனது மந்திரி தானாதிபதி பிள்ளையை (நடிகர் எம்.ஆர். சந்தானம்) கட்டபொம்மனாக நடிக்கும் சிவாஜி கணேசன் கண்டிப்பார். அப்போது அவர் வசனம் பேசும்முறை, வார்த்தைகளில் ஏற்ற இறக்கம், பேச்சின் தொனி முதலியவை ஸ்தான்ஸ்லாவ்ஸ்கியின் நடிப்புக் கோட்பாட்டிற்கு உட்பட்டிருக்கும்.

மற்றுமொரு எடுத்துக்காட்டாக, மீண்டும் வெள்ளையர்கள் படையெடுத்து வரும் செய்தி கிடைத்ததும் இறைவழிபாட்டில் இருக்கும் கட்டபொம்மன் (சிவாஜிகணேசன்) பேசும் வசனங்களை தாழ்ந்த குரலில் துவங்கி படிப்படியாக உயர்ந்த குரலுக்கு மாற்றிக்கொண்டு செல்லும் விதியை கடைபிடித்து இருப்பார்.

9. உச்சரிப்பு - தெளிவாக வெளிப்படுத்தும் சொல் (Accentuation: The Expressive Word)

வசன உச்சரிப்பில் ஒரு ஒழுங்குமுறையை ஏற்படுத்த வேண்டும். உச்சரிப்பானது சுட்டிக்காட்டும் ஒரு விரலைப் போன்றது. ஒரு சொற்றொடரில் உள்ள முக்கிய சொல்லை அது தனித்துக் காட்டுகிறது. அந்த சொல்லுக்குள் அந்த வசனத்தின் அடிஆழக் கருத்தான ஆன்மாவை, உட்சாரத்தை, உச்சப்புள்ளியை கண்டுகொள்ள முடியும்.

சொல்லும் சொல்லுக்கு இயற்கை என்ன அர்த்தத்தைக் கொடுத்துள்ளதோ - அந்த எண்ணம், உணர்வு, கருத்து, உருவம் ஆகியவற்றை அதற்குத் தர வேண்டும். உச்சரிப்பைத் தனித்துக் காட்டும் மற்றொரு அம்சம் சொற்களின் தொனி, இராகம் ஆகும். இதனால் ஒரு சொல்லுக்கு மகத்தான வெளிப்படுத்தும் திறனும், தாக்கமும் கிடைக்கின்றன. தொனியுடன் கூடவே பல்வேறு வழிமுறைகளால் ஒரு சொல்லைத் தனித்து நிற்குமாறு செய்ய முடியும். பிற சொற்களின் உச்சரிப்பைச் சுத்தமாக நீக்கிவிடுவதன் மூலமாகவும் முக்கிய சொல்லைத் தனித்துக் காட்டலாம்.

“உச்சரித்தல் மற்றும் அழுத்தம் தரப்பட்டுள்ள சொற்களின் ஒருங்கிணைப்புச் செயல்முறைகளை மேம்படுத்திக் கொண்டும் தமது தாய்மொழியின்பால் ஈடுபாடு மற்றும் காதலைக் கொண்டுள்ள நடிகர்கள் வசனம் பேசுவதை ஒரு நுண்கலையாக உயர்த்திக் கொள்வார்கள்” என்றார் ஸ்தானிஸ்லாவ்ஸ்கி.

“ஒரு நடிகனிடம் தாய்மொழியில் எவ்வளவு அதிகமான திறன் உள்ளதோ அவ்வளவு உயிர்த்துடிப்புடன், சக்தியுடன் உணர்ச்சிகளை வெளிப்படுத்த வல்லதாகவும், அபாரக் கவர்ச்சியுடனும் அவரது வசனப் பேச்சு அமையும்.[59]

சிவாஜி கணேசன்



வசன உச்சரிப்பில் ஒரு ஒழுங்குமுறையைக் கடைப்பிடித்தவர் சிவாஜி கணேசன். அதன் மூலம் எழுதப்பட்ட வசனங்களில் உள்ள ஆழக்கருத்தான ஆன்மாவை, அதன் உட்சாரத்தை மற்றும் உச்சத்தைக் கேட்பவர்கள் மத்தியில் கொண்டு சென்றார். இதற்குப் பல படங்களில் அவர் பேசிய வசனங்களைக் குறிப்பிடலாம். ஒரு சொல்லுக்கு இயற்கை என்ன அர்த்தம் கொடுத்துள்ளதோ அதைத் தன் உச்சரிப்பில் கொண்டு வந்தார்.

ஒரு வசனத்தில் பிற சொற்களின் உச்சரிப்பைச் சுத்தமாக நீக்கி விடுவதன் மூலம் ஒரு சொல்லுக்கு மகத்தான வெளிப்படுத்தும் திறன் உள்ளது என்பதையும் சிவாஜி கணேசன் பல படங்களில் தன் வசனங்கள் பேசும் முறையில் வெளிப்படுத்தியுள்ளார். எடுத்துக்காட்டாக:

'பாசமலர்' (1961) படத்தில் மில்லில் வேலை நிறுத்தம் செய்யப்பட்ட தொழிலாளர்களின் சார்பாக ஆனந்தன் (ஜெமினிகணேசன்) மில் முதலாளி ராஜசேகரனிடம் (சிவாஜிகணேசன்) பேச வருவார். இருவருக்கும் விவாதம் ஏற்படும். இறுதியாக ராஜசேகரனாக நடிக்கும் சிவாஜி கணேசன் ஆனந்தனாக நடிக்கும் ஜெமினிகணேசனைப் பார்த்து 'getout' என்று கூறுவார். ஆனால் Get Out என்ற வார்த்தையின் உச்சரிப்பு வெளியில் கேட்காமல் உச்சரிப்பார். அது அந்த வார்த்தைகளின் வலிமையைக் கூட்டிக் காட்டும்.

தாய்மொழியின் திறன் எனும் இந்தக் கருத்து சிவாஜி கணேசனுக்கு நூறு சதவிகிதம் பொருந்தும். தமிழ்மொழியின் மீது மிகுந்த பற்றுக்கொண்ட சிவாஜி கணேசன் தன் உச்சரிப்பு மற்றும் அழுத்தம் தரும் சொற்களை வெளிப்படுத்தி வசனம் பேசுதலை ஒரு நுண்கலையாக உயர்த்திக் கொண்டார். அவர் நடித்த அனைத்துப் படங்களிலும் அவர் தமிழை உச்சரித்த விதம் அவருடைய தமிழ் உச்சரிப்பிற்குச் சிறப்பான சான்றுகளாகும்.

### 10. பாத்திரப் படைப்பில் தோற்றம் (Perspective in Character Building)

ஒரு நடிகன் நடிக்கும்போது இரு பாகங்களாக உடைகிறான். ஒன்று நிஜவாழ்வு மற்றொன்று நடிப்பு வாழ்வு. இந்த இரண்டுக்கும் இடையிலான சமநிலைதான் கலையை உருவாக்குகிறது. ஒன்று பாத்திரத்தின் காட்சித் தோற்றம். மற்றொன்று நடிகனின் காட்சித் தோற்றம்.

பாத்திரத்தின் காட்சித் தோற்றம் என்பது ஒரு நடிகன் தனது கதாபாத்திரத்தினுள் தான் உயிருள்ள நபராக இருப்பதை உணர்ந்து நன்கு சிந்தித்து அதை அலசி ஆராய்ந்து பார்த்த பின்னரே அவனது கதாபாத்திரம் அவன் முன்னால் விரிந்து பரந்து அவனை வரவேற்கத் தொடங்குகிறது. இதனால் அவனது வசனம், தொடக்கத்தில் இருந்ததுபோலக் குறுகிய நோக்குடையதாக இல்லாமல் தொலைநோக்குடன் மிளிரத் தொடங்குகிறது. இத்தகைய ஒரு ஆழமான பின்புலத்தின் முன்னால் அவனால் முழுமையாக நடிக்கவும், எண்ணங்களைத் தெளிவாக வெளிப்படுத்தவும் முடியும்.[60]

சிவாஜி கணேசன்



தான் ஏற்று நடித்த அனைத்து பாத்திரங்களின் உள்ளே ஊடுருவி அதன் தன்மைகளை அறிந்து புரிந்த பின்னர் நடித்தார். அதனால்தான் பார்ப்பவர் கண்களுக்கு சிவாஜிகணேசனாகத் தெரியாமல் அவர் ஏற்றுக்கொண்ட பாத்திரமாகவே தோற்றமளித்தார். இதற்கு பல படங்கள் எடுத்துக்காட்டாகக் கூறலாம். குறிப்பாக 'வீரபாண்டிய கட்டபொம்மன்', 'கப்பலோட்டிய தமிழன்', 'கர்ணன்', 'இராஜராஜசோழன்' முதலிய படங்களைக் கூறலாம்.

## 11. உடல் அசைவில் வேக லயம் Tempo Rhythm in Movement

நடிப்புச் செயல்பாடு மற்றும் வசனம் பேசுதல் ஆகியவற்றின் ஒன்று சேர்ந்த இணைப்பில் பொதுவாகக் குழப்பம் தோன்றினாலும் வேக-லயம் என்பதன் ஒழுங்கமைப்பைக் காணலாம்.

ஒரு நடிகரைச் சுற்றிலும், நிகழ்ந்து கொண்டுள்ள வேகம், மெதுவான வேகம் இவற்றின் குழப்பத்துக்கு இடையில் நடிகரது சொந்த லயத்தைத் தேடிக் கண்டுபிடித்து தனியாகப் பிரித்து எடுத்துக்கொள்ளவும் பழகிக் கொள்ள வேண்டும்.[61]

சிவாஜி கணேசன்



உடல் அசைவில் வேக லயத்துக்கு அவர் நடித்த படங்களில் சிறப்பான எடுத்துக்காட்டாக, 'தங்கப்பதக்கம்' (1974) படத்தில் மகன் ஜெகன் (நடிகர் ஸ்ரீகாந்த்) தான் வேலை பார்த்த வங்கியில் கொள்ளை அடித்திருப்பார். அதைத் தெரிந்துகொண்ட எஸ்.பி. சௌத்ரி (சிவாஜி கணேசன்) ஆதாரப் பூர்வமாக நிரூபிக்க ஏற்பாடு செய்து இருப்பார். தன் மகன் பிறந்த நாளன்று அந்த ஆதாரத்தையும், அந்த ஆதாரம் கிடைத்தவுடன் தன் மகனை கைது செய்யவும் திட்டத்துடன் இருப்பார். பிறந்த நாளன்று நடைபெறும் ஆடல், பாடல்களில் கலந்துகொண்டு பாடியும், நடனம் ஆடியபடியும் இருப்பார். ஆதாரத்தை காவல்துறை ஆய்வாளர் அப்போது கொண்டு வந்து சௌத்ரியிடம் தருவார். ஆடியபடியே அதைப் பார்த்துவிட்டு மாடிக்குச் சென்று கண நேரத்தில் காவல்துறை உடுப்புடன் இறங்கி வந்து, மகனைக் கைது செய்ய உத்தரவிடுவார். இந்தக் காட்சி முழுவதும் அவர் உடலில் ஒரு வேக லயம் இருந்து கொண்டே இருக்கும்.

12. பேசுதலில் வேக லயம் (Speech Tempo-Rhythm)

ஒரு நடிகர் வசனம் பேசும்போது சில சொற்களின் ஒலிகள் குறுகியவையாகவும், மற்றும் பிற நீண்டு ஒலிக்கின்றன. சில ஒலிகளும், அசைவுகளும் வலிமையானதாகவோ, லேசானதாகவோ உச்சரிப்பு அழுத்தம் பெற்று ஒலிக்கின்றன. மூன்றாவதாக அமையும் சில. எந்த அழுத்தம் அல்லது உச்சரிப்போ இல்லாமல் இருக்கின்றன.

இவ்வாறு பேசப்படும் ஒலிகள், தமக்கு இடையே அமையும் நிறுத்தங்கள் சுவாசிப்பதற்கான ஓய்வுகள் ஆகியவற்றை வெவ்வேறு நீள அளவுகளில் விளங்குகின்றன. பேசுதலின் வேக லயத்தின் எண்ணற்ற பல்வேறு வகைகளை வடிவமைப்பதற்கான ஒலியமைப்புச் சாத்தியப்பாடுகளாக இவை விளங்குகின்றன. இவற்றைப் பயன்படுத்தி ஒரு நடிகன் தனக்கென ஒரு பேச்சுப் பாணியை உருவாக்கிக் கொள்கிறான். நடிக்கும்போது இது அவனுக்குத் தேவைப்படுகிறது. சோகத்தின் தீவிரமான மன நிலையையும், நகைச்சுவையின் களிப்பான மனநிலையையும் சொற்களைப் பயன்படுத்தி வெளிப்படுத்த இது உதவுகிறது. பேசுதலின் வேக-லயத்தை உருவாக்குவதற்கு நேரத்தை ஒலியின் துண்டுகளாகப் பிரிப்பது மட்டும் போதாது. பேசுதலை அளப்பதற்கு ஒரு தாளமும் அங்கு தேவைப்படுகிறது. நல்ல அதிர்வுடனும் வீச்சுடனும் பேசப்படும் சொற்கள் கேட்போரைப் பிணிக்கும் திறன் கொண்டவை.[62]

**சிவாஜி கணேசன்**

தான் பேசும் வசனங்களில் அனைத்திலும் ஒரு வேக லயத்தைக் கடைப்பிடிப்பவர் சிவாஜி கணேசன். குறிப்பாக, 'ராஜாராணி' (1956) படத்தில் சேரன் செங்குட்டுவன் ஓரங்க நாடகத்தில், "சொல்லட்டுமா.... இப்பூவுலகில்" என்று அவர் பேசிய வசனம், வசனங்களிலேயே மிக நீண்ட வசனமாகும். அந்த வசனம் முழுவதிலும் ஒருவேக லயத்தைக் கடைப்பிடித்திருப்பார்.

### 13. மேடைக் கவர்ச்சி (Stage Charm)

கலையானது எழிலையும், மேன்மைப் பண்பையும் உருவாக்குகிறது. மேலும், எந்த ஒன்று அழகாகவும் மேன்மையானதாகவும் இருக்கிறதோ அதற்குக் கவர்கிற சக்தி நிச்சயமாக உண்டு.[63]

**சிவாஜி கணேசன்**



சிவாஜி கணேசன் தமது நடிப்புத் திறமையால், வசனம் பேசும் ஆற்றலினால், உச்சரிப்புத் திறனால் ஒரு எழிலையும், மேன்மைப் பண்பையும் ஒருசேரப் பெற்றவர். அவர் மேடையிலும், நிஜ வாழ்விலும் நல்ல கவர்ச்சியோடு விளங்கினார். அதற்கு இயற்கையிலேயே சிவாஜி கணேசனுக்கு உருவத் தோற்றம் ஒரு இலக்கணப்படி அமைந்திருந்தது என்று ஓவியர் என்ற முறையில் நடிகர் சிவகுமார் வர்ணித்தார்:

அழகான கண்கள், நீரோட்டமுள்ள பெரிய கண்கள் அமைந்திருக்க வேண்டும். இரண்டு கண்களுக்கு இடையேயுள்ள இடைவெளி ஒரு கண் அளவே இருகக வேண்டும். கூர்மையான எடுப்பான மூக்கு அமைந்திருக்க வேண்டும். நேராக நிற்கும்போது நாசித்துவாரம் தெரியாமல் மூக்கின் நுனி சற்றே கவிழ்ந்திருக்க வேண்டும். புருவத்திலிருந்து மூக்கின் நீளம் எந்த அளவுக்கு இருக்கிறதோ, அதே அளவு, புருவத்தின்மேல் நெற்றியின் அளவும், மூக்கின் கீழே தாடை வரை உள்ள அளவும் இருக்க வேண்டும். தலைக்கும் மார்புக்கும்

இடையே உள்ள கழுத்துப் பகுதியின் நீளம், கோடு விழாத கழுத்துச் சதை முக்கியம். ராமர், லட்சுமணர் ஓவியங்களில் இருப்பதுபோல அளவான மார்பும், திரண்ட புஜங்களும், குறுகிய வயிறும் இருத்தல் வேண்டும்.

ஒட்டுமொத்தமாக 75% ஆண்மையும், 25% பெண்மையும் கலந்து இருக்கின்ற ஆண்மகனே, அதிக மக்களைக் கவர்வான் என்பது இலக்கணம்.

மேலே சொன்ன தகுதிகளை சிவாஜியின் ஆரம்பப் படங்களில் நாம் காண முடியும். அதுவே அவரது கவர்ச்சிக்கும் திரையுலகில் பெற்ற புகழுக்கும் பின்புலமாக விளங்கியது எனலாம் என்று சிவகுமார் கூறினார்.[64]

## 14. ஒழுக்க நெறி (Toward on Ethics for the Theatre)

"ஒரு நடிகனின் வேலை அல்லது தொழில் என்பது, கலையின்பால் தம்மை அர்ப்பணம் செய்து கொண்டு, அதைப் புரிந்து கொண்டு நடிப்பது. இதுவே மிகச் சிறப்பான ஒழுக்கநெறி ஆகும்.[65]

சிவாஜி கணேசன்

தான் செய்த தொழிலில் சில ஒழுக்க நெறிகளைக் கடைப்பிடித்தவர் சிவாஜி கணேசன். நேரம் தவறாமல் படப்பிடிப்புக்கு வருதல், தயாரிப்பாளர்களுக்கு எந்த வகையிலும் இடையூறு தராமல் இருத்தல். படப்பிடிப்புகள் நல்லவிதமாகவும் விரைவாகவும் முடிப்பதற்கு ஒத்துழைத்தல் போன்ற ஒழுக்க நெறிகளையும், கட்டுப்பாட்டையும் தான் மேற்கொண்டிருந்த நடிப்புத் தொழிலில் கடைப்பிடித்தார்.

## 15. மனம், மன உறுதி .. உணர்ச்சி (Pattern of Accomplishment)

ஒரு நடிகனுக்கு எண்ணம், மன உறுதி, உணர்ச்சி மூன்றும் இணையும்போது, அகம் மற்றும் புற ரீதியிலான படைக்கும்நிலை செயல்படத் தொடங்கும்.[66]

சிவாஜி கணேசன்

ஸ்தானிஸ்லாவ்ஸ்கி கூறிய மனம் (எண்ணம்) அதை நிறைவேற்றும் உறுதி (நம்பிக்கை), உணர்ச்சி மூன்றையும் நேர்கோட்டில் வைத்து நடிப்புலகில் அகம் மற்றும் புற ரீதியில் நல்ல கலைப் படைப்புக்களை அளித்தார்.

**ஒரு கதாபாத்திரத்தின் உருவாக்கம் (Creating A Role)**

ஸ்தானிஸ்லாவ்ஸ்கி ஒரு கதாபாத்திரம் உருவாக்கம் பெறுவதற்குக் கடந்து வரவேண்டிய நிலைகளை மூன்றாகப் பிரித்தார்.

1. கதாபாத்திரம் பற்றி அறியும் காலம்
2. கதாபாத்திரத்தின் உணர்ச்சிப் பூர்வமான அனுபவம்
3. கதாபாத்திரத்தின் முழுமை பெற்ற நிலை

**1. கதாபாத்திரம் பற்றி அறியும் காலம் (Period of Study)**

இந்த நிலையில் முதன் முதலாகக் கதாபாத்திரம் பற்றி அறிவது ஆகும். ஒரு கதாபாத்திரத்தின் தன்மை, ஆழம், அதன் வீச்சு போன்றவற்றை ஒரு நடிகர் கவனத்துடன் அணுக வேண்டும் என்று ஸ்தானிவ்லாவ்ஸ்கி கூறியுள்ளார். அந்தக் கவனம் உணர்வு பூர்வமாகவும் ஒரு நடிகனின் ஆன்மாவைத் திறப்பதற்கு ஏற்றதாகவும் இருக்க வேண்டும்.

ஒரு கதாபாத்திரத்தின் படைப்பாளி எந்தக் கோணத்தில் அந்தப் பாத்திரத்தைப் படைத்திருக்கிறார், எதை நோக்கி அந்தப் பாத்திரம் பயணிக்கிறது என்பதை அந்தப் பாத்திரத்தை ஏற்று இருக்கும் நடிகர் உணர்ந்து அணுக வேண்டும். அவசியமானால் ஒரு இலக்கியவாதியின் உதவியை அந்த நடிகர் பெற்றுக் கொள்ள வேண்டும். இக்காரியம் ஒரு நடிகருக்கு அந்தப் பாத்திரத்தின் படைப்பாளியின் நோக்கம், அவரது சிந்தனை, உணர்ச்சி போன்றவற்றை அறிய உதவும்.

அடுத்து கதாபாத்திரத்தைப் பற்றிய பகுப்பாய்வினை நடிகர் மேற்கொள்ள வேண்டும். அந்தப் பகுப்பாய்வு பாத்திரத்தின் படைப்பாளியின் உழைப்புப் பற்றி அறிந்துகொள்ள உதவும். அந்தப் பாத்திரத்தில் உள்ள தன்மைகள் சிலவற்றைத் தனக்குள் ஒரு தேடலை மேற்கொள்ள நடிகருக்கு உதவும். மேலும், பகுப்பாய்வு நடிகரின் ஆன்மாவில் உள்ளே புதிய உண்மையான உணர்ச்சிகளை உருவாக்கம் பெறுவதற்கு உதவும்.[67]

**2. கதாபாத்திரத்தின உணர்ச்சிகளின் அனுபவக் காலம் (Period of Emotional Experience)**

ஒரு கதாபாத்திரத்தின் உணர்ச்சிகளின் அனுபவம் என்பது அந்தக் கதாபாத்திரம் உருவாக்கம் பெறுவதற்கு மிக முக்கியமானதும் அடிப்படையானதும் ஆகும். அந்த அனுபவத்தில் பெறுவது உள் தூண்டுணர்வுகளும் அதனால்

வெளிப்படும் அசைவுகளும் ஆகும். உள் தூண்டுணர்வுகளுக்கான தேவை உள் அசைவுகளையும் அதன் மூலம் வெளி அசைவுகளை உருவாக்கம் பெறுவதற்கு உதவும். அதற்கு உருவாக்கக் குறிக்கோள்கள் தேவை.[68]

### 3. கதாபாத்திரத்தின் உடல்ரீதியான தயார்நிலைக் காலம் (The Period of Physical Embodiment)

முதலில் வருவது நடிகரை அச்சுறுத்தும் ஒத்திகை என்பது. ஒரு நடிகர் உணர்ச்சிகளை திடீரென்று உடல்ரீதியாக வெளிப்படுத்துவது என்பது இயலாத ஒன்று. அது மெதுவாகவும், படிப்படியாகவும்தான் நடைபெறும். கதாபாத்திரத்தை முதலில் மனரீதியாக ஏற்று, பின்பு தூக்கமில்லாத இரவுகளில் கற்பனையான தோற்றத்தில் ஏற்றி, பின்பு சுயநினைவுடன் பிறருடன் நெருக்கமாக ஒத்திகை பார்த்து, பின் சில பார்வையாளர்களின் முன்னிலையில் ஆடை அணிகலன்கள் அணிந்து ஒத்திகைப் பார்த்து இறுதியாக பலமுறை நடித்துப் பார்க்க வேண்டும்.

ஆரம்பத்தில் ஒரு நடிகன் கதாபாத்திரத்தை உடல்ரீதியாக உணர்ச்சிப்பூர்வமாக தயார்படுத்தும்போது, வார்த்தைகள், குரல், உடல்மொழி, அசைவு, நடிப்பு மற்றும் முகபாவங்களை அதிவேகத்திலும் வீணடிப்பதிலும் காலத்தை விரயமாக்குவார். அதற்குச் சரியான முறையில் ஒத்திகை பார்த்துக்கொள்ள வேண்டும்.

மேலும் ஒரு நடிகர் கதாபாத்திரத்தின் தோற்றத்தைச் சிறப்பிக்க ஒப்பனைப் பொருட்களை தேட வேண்டும். அதற்கு உதவியாக கதை நடக்கும் காலத்தை மனதில் கொண்டு, அதற்கான படங்கள், ஓவியங்கள், வித்தியாசமான முகங்கள் இவற்றை இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளதைப் பார்த்துச் சேர்க்க வேண்டும்.

அப்படி உருவ அமைப்புக்குத் தேவையான ஒப்பனைப் பொருட்கள், ஓவியங்கள், படங்கள் கிடைக்கவில்லையென்றால் தன் கற்பனை வளத்தில் நடிகர் வேறு புதிய முகத்தை வாய் மற்றும் உருவங்களை வரைந்து பாத்திரத்தின் வெளிப்புறத் தோற்றத்தைச் சிறப்புற அமைத்துக்கொள்ள வேண்டும்.

இவ்வாறு பல்வேறு வழிகளில் தான் ஏற்கப்போகும் பாத்திரத்துக்குத் தேவையான முடி, வித்தியாசமான புருவங்கள், முகத்தில் சுருங்கிய தசைகள் போன்றவற்றைத் தயார் செய்து பின், நடப்பது, கை குலுக்குவது, வணங்குவது, அசைவது, உடல்மொழி போன்றவற்றில் உறுதி ஏற்பட்டால், அதற்கேற்ற உணர்ச்சிகள், நடிப்புத்திறன் இவை கைகூடிவிடும் என்கிறார் ஸ்டானிஸ்லாவ்ஸ்கி.[69]

ஸ்தானிஸ்லாவ்ஸ்கி ஒரு கதாபாத்திரத்தை உருவாக்கிடக் கூறிய மூன்று நிலைகள் பற்றி எதுவும் படித்து அறியாதவர் சிவாஜி கணேசன் ஆனால் ஸ்தானிஸ்லாவ்ஸ்கி கூறியுள்ள மூன்று நிலைகளையும் சுயமாகக் கடைபிடித்து எவ்வாறு வெற்றி பெற்றார் என்பதற்கு எடுத்துக்காட்டாக வீரபாண்டியக் கட்டபொம்மன் பாத்திரத்தை அவர் உருவாக்கிய வரலாற்றைக் குறிப்பிடலாம்.

**வீரபாண்டியக் கட்டபொம்மன்**

ஆரம்பக் காலத்தில் தமிழ்நாட்டில் கம்பளத்தார் கூத்து என்று கம்பளத்தார் இனத்தவர்கள் கட்டபொம்மனின் வீரவரலாற்றை இசைக்கூத்தாக நடத்தினார்கள். இளம் வயதில் 'கம்பளத்தார் கூத்து' பார்த்துவிட்டுக் கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்று மனதில் உறுதி கொண்டவர் சிவாஜி கணேசன். அந்த உறுதியுடன் நாடக நடிகராகி பின் திரைப்பட உலகில் அறிமுகமாகி பல வெற்றிப் படங்களைக் கொடுத்து தமிழ்த் திரையுலகின் தனிப்பெரும் நடிகரானார். 1952ல் பராசக்தி தொடங்கி 1957 வரை நாற்பத்து ஐந்து படங்களை முடித்த நிலையில் வீரபாண்டியக் கட்டபொம்மன் வாழ்க்கை வரலாற்றை முதலில் நாடகமாகத் தயாரிக்க முடிவெடுத்தார். 1955இல் சிவாஜி நாடக மன்றம் என்ற பெயரில் ஒரு நாடகக் குழுவை ஆரம்பித்தார். சிவாஜி நாடக மன்றத்தில் அறுபது கலைத் தொழிலாளர்கள் இருந்தனர். அதற்குத் தனது தம்பி சண்முகத்தை நிர்வாகியாக நியமித்தார்.[70]

மா.பொ. சிவஞானம் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. அக்குழுவில் சிவாஜிகணேசன், பி.ஆர். பந்துலு, சக்தி கிருஷ்ணசாமி, சித்ரா கிருஷ்ணசாமி மற்றும் பி.ஏ. குமார் முதலியோர் இடம் பெற்றனர். வசனங்களை சக்தி கிருஷ்ணசாமி எழுதினார்.

வீரபாண்டிய கட்டபொம்மன் நாடகத்தைத் தயாரிக்க ஏறக்குறைய இருபது மாதங்கள் ஆயின. காட்சி அலங்காரம் மற்றும் உடைகளுக்கு ஐம்பதினாயிரம் ரூபாய் செலவு செய்யப்பட்டது. நாடகப் பாடல் ஒத்திகை ஓரிரு நாட்கள் நடைபெற்றது. தொடர்ந்து பத்து நாட்கள் சென்னை அண்ணாமலை மன்றத்தில் மேடை ஒத்திகையும், இறுதி நாளன்று முழு ஒத்திகையும் நடைபெற்றது. 1957 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 28ந் தேதி புதன்கிழமையன்று 'வீரபாண்டிய கட்டபொம்மன்' நாடகம் முதன்முதலாக சேலம் கண்காட்சிக் கலை அரங்கத்தில் அரங்கேற்றப்பட்டது. தமிழ் அறிஞர் மு. வரதராசனார் தலைமை தாங்கி, நாடகத்தைப் பாராட்டிப் பேசினார்.[71]

வீரபாண்டியக் கட்டபொம்மன் நாடகம் பெற்ற வெற்றி பற்றிய விமர்சனங்கள் பல பத்திரிகைகளில் வெளிவந்தன.

“நடிகர் திலகம் சிவாஜிகணேசனின் உருவில் வீரன் கட்டபொம்மு மறுவாழ்வு பெற்று விட்டானோ என்று மக்கள் வியப்படையும் வண்ணம் நாடகம் அமைந்துள்ளது” - **நவஇந்தியா** பத்திரிகை எழுதியது.

“......நாட்டு மக்கள் எல்லோரும் வீரத்தமிழன் கட்ட பொம்மனின் வரலாற்றைப் படித்தால் மட்டும் போதாது கண்ணாரக் கண்டும் செவியாரக் கேட்டும் அந்த வீரனின் வீரச் செயல்களையும் பெருமித மொழிகளையும் உளங்கொண்டு போற்றும்படி செய்கிறார் சிவாஜி கணேசன் - என்று **சுதேசமித்திரன்** பத்திரிக்கையில் விமர்சனம் வந்தது.

ஏராளமான பொருட்செலவில் அற்புதமான காட்சி ஜோடனைகளுடன் கட்டபொம்மன் நாடகத்தை சிவாஜி நாடகமன்றத்தார் தயாரித்திருக்கின்றனர். கட்டபொம்மனாகத் தோன்றி வீராவேசத்துடன் பேசி நடித்தார் சிவாஜிகணேசன் என்று தினமணி பத்திரிக்கையில் எழுதினார்கள்.[72]

அரங்கேற்றம் ஆன நாள் தொடங்கி ரசிகர்களின் ஆதரவு பெருகியதால் ஒன்பது நாள் தொடர்ந்து நடத்த வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. அதன் பின் சென்னையில் நடத்தினார்கள். இருபத்து ஐந்து நாட்களுக்குள் பதினாறு முறை நாடகம் நடத்தப்பட்டது.[73] 1957 ஆகஸ்டு 28 ஆம் தேதியிலிருந்து 1959 மார்ச் திங்கள் முப்பது தேதிக்குள் 100முறை வீரபாண்டிய கட்டபொம்மன் நாடகம் மதுரை, திருநெல்வேலி, சென்னை, பம்பாய், கோயம்புத்தூர் முதலிய ஊர்களில் நடத்தப்பட்டது.[74] அச்சமயத்தில் தொடர்ந்து 23 திரைப்படங்களில் சிவாஜி கணேசன் நடித்துக் கொண்டிருந்தார் என்பது கவனத்தில் கொள்ள வேண்டியதாகும்.[75]

கட்டபொம்மன் நாடகம் பற்றி மா.பெ. சிவஞானம் “சிவாஜி கணேசன் கட்டபொம்மன் வேடந்தாங்கி நடிப்பது தமிழர் ஒவ்வொருவரும் பெருமைப்படத் தக்கதாகும்” என்றார். மேலும் கட்டபொம்மன் வேடத்தில் கணேசனைப் பார்க்கும்போது, அந்த வேடம் தாங்கி நடிப்பதற்கென்றே பிறந்தாரோ என்று தோன்றுகிறது என மா.பொ. சிவஞானம் குறிப்பிட்டார்.[76]

1958 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் நான்கு ஐந்து தேதிகள் சென்னை பாரத் பைன் ஆர்ட்ஸ் சார்பில் ‘வீரபாண்டிய கட்டபொம்மன்’ நாடகம் நடைபெற்றது. அது வசூலில் அனைத்து நாடகங்களிலும் மேலாய் நின்றது.

முத்தையா செட்டியாரும், அண்ணாத்துரையும் முறையே நாடகத்திற்குத் தலைமை வசித்துப் பேசினார்கள்.

"கட்டபொம்மனே நேரில் தோன்றியது போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. அவ்வளவு அபாரமான நடிப்பு" என்றார் முத்தையா செட்டியார். "உலகில் மிகச் சிறந்த நடிகனாக சிவாஜியைக் கருதலாம். மேல் நாட்டு நடிகர்களில், மார்லின் பிராண்டே ஒருவர் மட்டும் முயன்றால் கணேசனைப் போல் நடிக்க முடியும்" என்றார் அண்ணாத்துரை.[77]

பின்னர் இந்த நாடகம் திரைப்படமாகத் தயாரிக்கப்பட்டு பெரிய வெற்றியைப் பெற்றது.

வீரபாண்டியக் கட்டபொம்மன் கதாபாத்திரத்தை உருவாக்க ஸ்தானிஸ்லாவ்ஸ்கி முதல் நிலையில் கூறியபடி ஒரு இலக்கியவாதியின் தலைமையில் இயங்கிய ஆய்வுக்குழுவின் துணையுடன் கதாபாத்திரத்தைப் பற்றி அறிந்துகொண்டார் சிவாஜி கணேசன்.

ஸ்தானிஸ்லாவ்ஸ்கி இரண்டாம் நிலையில் கூறியபடி கதாபாத்திரத்தின் உணர்ச்சிகளின் அனுபவக் காலம் என்பதன் அடிப்படையில் இரண்டு மாதங்கள் நாடகப் பாட ஒத்திகையை நடத்தி இறுதியாக பத்து நாட்கள் மேடையில் ஒத்திகையை நடத்தி, இறுதி நாளன்று முழு அமைப்போடு நாடக ஒத்திகை நடத்தினார் சிவாஜி கணேசன்.

ஸ்தானிஸ்லாவ்ஸ்கி கூறிய உடல்ரீதியான தயார்நிலைக் காலம் என்பதன் அடிப்படையில் பாத்திரத்திற்கான ஆடை அணிகலன்களை ஆய்வுக்குழுவின் பரிந்துரைப்படி தயாரிக்க ஒரு வருடம் கால அவகாசம் எடுத்துக்கொண்டு தயாரித்தார். அப்படி அவர் தயாரித்த ஆடை அணிகலன்கள் அணிந்து நின்றதினால் அவருடைய உள்ளார்ந்த நடிப்பாற்றல் வெளிப்பட்டு அவருக்கு ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் சிறந்த நடிகருக்கான விருதினைப் பெற்றுத் தந்தது எனலாம்.

**சிவாஜி கணேசன் தானே உருவாக்கிய தனித் தகுதிகள்**

**நினைவாற்றல்**

1945 ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 15 ஆம் நாள் சென்னையில் நடைபெற்ற ஏழாவது சுயமரியாதை மாநாட்டில் அண்ணாத்துரை எழுதி, நடைபெற்ற 'சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்' நாடகத்தின் தொண்ணூறு பக்க வசனங்களை சில மணி நேரங்களில் மனப்பாடம் செய்து சிறப்பாகப் பேசி நடித்தார்.[78]

1954 ஆம் ஆண்டில் வெளிவந்த ‘மனோகரா’ படம் ஒரே நேரத்தில் தமிழ், தெலுங்கு மற்றும் இந்தி என மூன்று மொழிகளிலும் காட்சியாக்கப்பட்டிருக்கிறது. கொலு மண்டபக் காட்சி மற்றும் இறுதிக் காட்சி இரண்டிலும் ஒரே தடவையாக தமிழில் நீண்ட வசனங்களைப் பேசி முடித்து, உடனடியாக அதே வசனங்களைத் தெலுங்கு மொழியில் ஒரே தடவையாகப் பேசி நடித்தார். பின்பு அதே வசனங்களை உடனடியாக இந்தியில் பேசி நடித்திருக்கிறார். சிவாஜி கணேசனின் இந்த சிறப்புமிக்க தகுதி மனோகரா படத்தின் தயாரிப்பாளருக்கு ஒரே செலவில் மூன்று படங்களை எடுத்து அதிக செலவை தவிர்க்க வழி வகுத்திருக்கிறது.

சிவாஜி கணேசனின் இந்த திறமையைப் பற்றி ‘மனோகரா’ படத்தின் இயக்குநர் எல்.வி. பிரசாத் கூறுகையில், “ஜெர்மனியில் வசனம் எழுதி கொடுத்தாலும் அடுத்த சில நிமிடங்களிலேயே மனப்பாடம் செய்து ஜெர்மனியில் ஒருவர் பேசுவதுபோல் பேசும் ஆற்றல் கணேசனிடம் இருக்கிறது”. இது ‘இவருக்கு இறைவன் கொடுத்த வரம்’ என்று கூறினார்.[79]

1963 ஆம் ஆண்டில் சிவாஜி கணேசன் நடித்த ‘இருவர் உள்ளம்’ படப்பிடிப்பின் இடையில் இயக்குநர் எல்.வி. பிரசாத்திடம் ஒன்பது ஆண்டுகளுக்கு முன் ‘மனோகரா’ படத்தில் பேசிய தெலுங்கு வசனங்களை மீண்டும் பேசிக் காட்டியிருக்கிறார்.[80] இது அவரது நினைவாற்றல் திறனுக்கு சிறந்த எடுத்துக்காட்டாகும்.

**வசனம் பேசும் ஆற்றல்**

சிவாஜி கணேசன் ‘பராசக்தி’ மூலம் தமிழ்த் திரையுலகில் வசனம் பேசும் முறையில் ஒரு புதிய சகாப்தத்தை உருவாக்கினார்.

சிவாஜி கணேசனின் வசனம் பேசும் ஆற்றலுக்கு மிகப்பெரிய சான்றாக ‘ராஜாராணி’ படத்தினைக் கூறலாம். அப்படத்தில் ‘சேரன் செங்குட்டுவன்’ ஓரங்க நாடகத்தின் வசனங்களை 810 அடி பேசி அவர் நடித்து முடித்தார். (ஒரு படச்சுருளின் நீளம் 830 அடி) வசனங்களை பதிவு செய்யும் கருவி வேலை செய்யாமல் சிவாஜிகணேசன் பேசிய வசனங்கள் பதிவாகவில்லை. அன்றைய கால கட்டத்தில் இருந்த தொழில் நுட்பங்களில் தனியாக வசனத்தைப் பேசி படச்சுருளில் சேர்க்க முடியாத சூழ்நிலையில் இரண்டாவது முறையாகத் தனியாக அந்த நீண்ட வசனத்தை முதல்முறை பேசியதுபோல் அதே ஏற்ற இறக்கத்துடன் பேசி அந்தக் காட்சியை நிறைவு செய்தார். இது ஒரு உலக சாதனையாகும்.[81]

'பராசக்தி' யின் வெற்றிக்கு கருணாநிதியின் கருத்தாழமிக்க வசனங்களும் காரணம் என்று திரைப்பட மற்றும் அரசியல் பார்வையாளர்களின் கருத்துக்கள் அன்றைய காலக் கட்டத்தில் நிலவின. திரையுலகில் திராவிடக் கருத்துக்களை வசனங்களில் முதலில் அறிமுகப்படுத்தினார் அண்ணாத்துரை. 'நல்லதம்பி' (1949) திரைப்படத்தில் அவர் வசனங்களைப் பேசி என்.எஸ். கிருஷ்ணன் நடித்தார். அதற்குப்பின் அண்ணாத்துரையின் வசனங்களைப் பேசி கே.ஆர். ராமசாமி நடித்தார். இவர் நடித்த 'வேலைக்காரி' (1949), 'ஓர் இரவு' (1951) போன்ற படங்கள் சான்றுகளாக விளங்குகின்றன. அண்ணாத்துரைக்குப் பின் திராவிட இயக்கக் கருத்துக்களைத் திரையுலகில் எழுதத் துவங்கிய மற்றொருவர் கருணாநிதி ஆவார். இவர் வசனம் எழுதிய ராஜகுமாரி (1947), மருதநாட்டு இளவரசி (1950), மந்திரிகுமாரி (1950) போன்ற படங்களில் வசனம் பேசி எம்.ஜி. ராமச்சந்திரன் நடித்தார். ஆனால் 'பராசக்தி' பெற்ற வெற்றியைப் போல் அண்ணாத்துரை வசனம் எழுதிய படங்களும், பராசக்திக்கு முன்னால் கருணாநிதி வசனம் எழுதிய படங்களும் வெற்றியை எட்டவில்லை.[82]

எனவே 'பராசக்தி' அடைந்த வெற்றியின் முழுக் காரணமாக விளங்கியது சிவாஜி கணேசனின் வசனம் பேசும் ஆற்றல்தான் என்பது உறுதியாகிறது. பராசக்தி, மனோகரா படங்களின் வசனங்கள்தான் தமிழ்த் திரையுலகில் முதன் முறையாக நீள் ஒலித் தட்டுக்களாக வெளிவந்தன.

'வீரபாண்டிய கட்டபொம்மன்', 'சிவகங்கைச் சீமை' 1959ல் வெளிவந்த படங்கள் ஆகும். இந்த இரண்டு படங்களும் அரசியல் பிரச்சனையில் சிக்கி ஒரே கால கட்டத்தில் வெளியீடு செய்யப்பட்டன. கண்ணதாசன் தயாரித்து, திரைக்கதை, வசனம், எழுதி வெளிவந்த 'சிவகங்கைச் சீமை' படத்தின் வசனங்கள் கட்டபொம்மன் படத்தைக் காட்டிலும் சிறப்பாக இலக்கிய வளமையுடன் அமைந்திருந்தன. இருப்பினும் 'வீரபாண்டிய கட்டபொம்மன்' அடைந்த வெற்றிக்கு முன்னால் 'சிவகங்கைச் சீமை' தோல்வி அடைந்தது. இதற்கு ஒரே காரணமாக விளங்கியது சிவாஜி கணேசனின் வசனம் பேசும் ஆற்றல்தான்.[83]

**தமிழ் உச்சரிப்பு**

சிவாஜி கணேசனின் தமிழ் உச்சரிப்பு மிகச் சிறப்பாக விளங்கியிருக்கின்றது. தமிழ் மொழியின் சிறப்புக்கு அணிகலனாக விளங்குவது 'ழ'கரமாகும். இந்த 'ழ'கரத்தை உணர்ச்சி பெருக்கோடு உச்சரிக்கும் திறன்

பெற்று விளங்கினார். அத்துடன் நீண்ட வசனங்கள் பேசி நடிக்கும் சந்தர்ப்பத்தில்கூட வல்லினம், மெல்லினம், இடையினம் கலந்த வார்த்தைகளை காட்சிக்குத் தக்கவாறு உணர்ச்சிப் பெருக்குடன் பேசி நடித்தார். எடுத்துக்காட்டாக 'மனோகரா' படத்தின் கொலுமண்டபக் காட்சியில்

"நெஞ்சிலே துணிவிருந்தால்
தோளிலே வலுவிருந்தால் எடுத்துக் கொள்ளும்
உமது வாளை, தடுத்துக் கொள்ளும் உமது சாவை
இந்தத் தளுக்குக்காரியின், குலுக்குச் சிரிப்பிலே
நீர் கோழையாகி விட்டிருந்தால்..... என்று

இடையின 'ள'கரம், மெல்லின 'ல' கரம், வல்லின 'ழ'கரத்தை தொடர்ச்சியாக பேசினார்.[84] இரண்டு வார்த்தைகளில் தொனிக்கும் அர்த்தத்தின் ஆழத்தை தெளிவாக புரிந்து கொள்ளும் விதத்தில் பேசினார். எடுத்துக்காட்டாக, 'மனோகரா' படத்தில் மனோகரனின் தாய் பத்மாவதியிடத்தில் தவறான தகவைச் சொன்ன கதாபாத்திரத்தைப் பார்த்து,

"தேளின் கொடுக்கே யாருடைய திட்டமடா இது". இதில் 'தேளின் கொடுக்கே" என்ற வார்த்தைகளை உச்சரிக்கும் தொனியில்,தேள் ஒரு விஷம் உள்ள உயிரினம் என்பதையும், அதன் வாலில் உள்ள கொடுக்கில் விஷம் இருக்கிறது என்பதையும் தன் உச்சரிப்பில் தெளிவுப்படுத்தினார்.

அடுத்து திருவிளையாடல் படத்தில் நக்கீரருடன் வாதம் புரியும் காட்சி.

"அங்கம் பழுதுபட அறுவாளில் நெய்பூசி
பங்கம் படபடக்க கால் பரப்பி
சங்கதனைக் கீர் கீரென்று அறுக்கும் நக்கீரனோ
எனது செய்யுளை ஆராய்ந்து சொல்லத் தக்கவன்

என்ற கடினமான தமிழ்ச் சொற்கள் அடங்கிய வசனங்களை உச்சரிக்கும் திறன் இவற்றை எல்லாம் எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம்.

வட்டார வழக்குத் தமிழைப் பேசுவதில் மிகுந்த திறமையுடன் விளங்கினார்.

முதன்முறையாக தமிழ்த் திரையுலகில் கொங்கு தமிழ் வசனங்களை 'மக்களைப் பெற்ற மகராசி' (1957) எனும் படத்தில் மகிழ்ச்சியான காட்சிகளிலும், துயரக் காட்சிகளிலும் கொங்கு தமிழைப் பிறழாமல் சரியாக உச்சரித்துப் பேசி நடித்தார்.[85]

பொதுவாகத் தமிழ்த் திரைப்படங்களில் பிராமணர்களின் தமிழ்ப் பேச்சு வழக்கினை நகைச்சுவைக் காட்சிகளில் பயன்படுத்தும் வழக்கம் இருந்தது. அதை மாற்றி "பிராமணர்களின் தமிழ் பேசும் முறையில் பேசி கண்ணீரை வரவழைக்கிறேன்" என்ற சவாலுடன் நடித்த படம் "வியட்நாம் வீடு" (1970) ஆகும். நாடகம், திரைப்படம் இரண்டிலும் ரசிகர்களை அழ வைத்தார் சிவாஜி கணேசன். அதே முறையில் பிராமண பேச்சு வழக்கோடு மேற்கத்திய பாணியில் மது அருந்தும் பிராமண பாரிஸ்டராக ஆங்கிலம் கலந்து பேசி நடித்தார்.[86]

மதுரை மாவட்ட வட்டார வழக்குத் தமிழ் பேசி "பட்டிக்காடா பட்டணமா" (1972) என்ற படத்தில் நடித்தார். உசிலம்பட்டி, தேனி வட்டார பிறமலைக் கள்ளர்களின் தமிழை "முதல் மரியாதை" படத்தில் பேசி நடித்தார். இராமநாதபுரம் மாவட்ட முதுகுளத்தூர் வட்டார மறவர் இனத்தவர் பேசும் வழக்குத் தமிழை 'தேவர் மகன்' படத்தில் பேசி நடித்தார்.

சிவாஜி கணேசன் தமிழ் போன்று, தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஹிந்தி என பல மொழிகள் இப்படி திறம்பட மொழியை உச்சரிக்கும் விதம் பற்றி "மொழி என்பது பள்ளிப்படிப்பினால் மட்டும் வருவதல்ல அனுபவத்தால் வருவது" எனக் கூறினார்.[87]

**உடல்மொழித்திறன்**

உடல்மொழி (Body Language) என்பது பேசாமல் பிறருடன் தொடர்பு கொள்ளுதல் (Non Verbal Communication) ஆகும். இது எண்ணம், நோக்கம், உணர்ச்சி இம்மூன்றும் கலந்து, உடல்ரீதியாக முகபாவங்களில் (Facial expressions), உடல் நிலை (Body Postures) (நிற்பது, நடப்பது, அமர்வது மற்றும் எழுவது), அங்க அசைவுகள் (Gostures) (கால், கைகள், விரல்கள், தலை) கண் (Eye movement) அசைவு மற்றும் தொடுதல் (touch) மூலமாகத் தன் நிலையை வெளிப்படுத்தும் உணர்வு நிலை ஆகும்.

‘பராசக்தி’ (1952) தனது முதல் படத்திலேயே கதையின் போக்குக்கு ஏற்றபடி தனது உடல்மொழியைச் சிறப்பாகக் காட்டி நடித்தார். இப்படத்தில் முதலில் பர்மாவில் இருந்து சென்னைக்கு வந்தபோது நவநாகரீகமான முறையில் பேச்சு, நடை, உடையில் ‘குணசேகரன்’ என்ற பாத்திரத்தில் தோற்றமளித்தார். பின்னர் ஏமாற்றப்பட்டு தெருக்களில் பைத்தியக்காரன் போல் நடிக்கும் சமயத்தில் பாமரனைப்போல் உடல்மொழி வேறுபடுத்திக் காட்டி நடித்தார். கோயில் பூசாரியைத் தண்டிக்கும்போதும், பின்பு நீதிமன்றத்தில் நீதி கேட்டு நீண்ட வசனம் பேசும்போதும் வேறுவிதமாக உடல்மொழியைக் காட்டி நடித்தார். பின்பு இறுதிக் காட்சியில் மீண்டும் செல்வந்தராக அதற்குரிய மிடுக்கோடு உடல்மொழி காட்டி நடித்தார்.[88]

‘உத்தமபுத்திரன்’ (1958) எனும் திரைப்படத்தில் இரண்டு வேடங்களில் ஒப்பனை வேறுபாடில்லாமல் கண்களில் மட்டும் வேறுபாடு காட்டி வெவ்வேறு குணாதிசயங்கள் கொண்ட பாத்திரங்களாக நடித்தார். ஷேக்ஸ்பியரின் “ஒத்தல்லோ” எனும் அரங்க நாடகத்தில் ‘அன்பு” (1953) என்ற திரைப்படத்தில் ஆங்கிலேயர்களின் உடல் மொழி காட்டி நடித்தார். ஆனால் தமிழில் வசனம் பேசினார். மீண்டும் “ஒத்தல்லோ” பாத்திரத்தை “இரத்தத் திலகம்” (1963) எனும் திரைப்படத்தில் உத்பல்த் என்ற வங்காள நடிகர் பேசிய ஆங்கில வசனங்களுக்கு வாயசைத்து ஆங்கில நடிகர்களைப் போல் உடல்மொழி காட்டி நடித்தார்.

‘ராஜபார்ட் ரங்கதுரை’ (1973) எனும் திரைப்படத்தில் “ஹெம்லட்” எனும் ஷேக்ஸ்பியரின் நாடகப் பாத்திரத்தில் ஆங்கிலேயர்களைப்போல் உடல் மொழி காட்டி நடித்தார்.[89]

‘ராஜாராணி’ (1956) எனும் திரைப்படத்தில் ‘சாக்ரடீஸ்’ என்ற கிரேக்க நாட்டுத் தத்துவமேதையின் பாத்திரமேற்று, உடல்மொழியில் வயோதிகத் தோற்றம், குரல் இரண்டையும் கலந்து சிறப்புடன் நடித்தார்.[90]

தமிழ்த் திரையுலகில் லாரன்ஸ் ஒலிவியர், ராபர்ட்டோ ரோஸ்லலினி போன்ற மேலை நாட்டு நடிகர்கள் ஏற்று நடித்த ‘ஒத்தல்லோ’, ‘ஹேம்லட்’, ‘சாக்ரடீஸ்’ எனும் ஷேக்ஸ்பியரின் நாடகப் பாத்திரங்களைத் திறம்பட தன் உடல்மொழியில் ஹாலிவுட் நடிகர்களைப்போல் காட்டி நடித்த பெருமை சிவாஜி கணேசனை மட்டுமே சேரும்.

ஒன்றுக்கு மேற்பட்ட கதாபாத்திரங்களில் சிவாஜி கணேசன் நடிக்கும்போது வேறுபட்ட உடல்மொழித்திறன் காட்டி நடித்தார் எடுத்துக்காட்டுகளாக கீழ்க்கண்டப் படங்களைக் குறிப்பிடலாம்.

'உத்தமபுத்திரன்' (1950) திரைப்படத்தில் இரண்டு வேடங்களில் நடித்திருக்கிறார். பார்த்திபன், விக்கிரமன் எனும் இரண்டு பாத்திரங்களை ஏற்று நடித்தார். இதில் பார்த்திபன் பாத்திரத்தில் திரையில் தோன்றும்போது இனிய முகம், கனிவான பார்வை, இனிமையாக பேசும் சுபாவம் போன்ற குணாதிசயங்களைக் காட்டினார். 'விக்கிரமன்' வேடத்தில் திரையில் தோன்றும் சமயங்களில் குரூரமான கண்கள், சதா மது மயக்கத்தில் இருந்தபடி நடக்கும் நடை, பேச்சு என உடல்மொழியை வேறுபடுத்திக் காட்டி நடித்தார்.

'தெய்வமகன்' (1969) இத்திரைப்படத்தில் தந்தை, இரண்டு மகன்கள் என மூன்று வேடங்களில் நடித்தார். இந்த வேடங்களில் தந்தையும், இளைய மகனும் கோடீசுவரர்கள், மற்றொரு மகன் முரட்டுச் சுபாவம் உடையவன். அநாதைபோல் வேறு இடத்தில் வளர்ந்தவன். இளைய மகன் மிக்க அழகான தோற்றமுடையவன், செல்வச் செழிப்பு இளைய மகனின் நடையிலும் உடையிலும் பிரதிபலிக்கும். தந்தையும் மற்றுமொரு மகனும் கோரமான முக வடு ஒன்றைக் கொண்டவர்கள். இந்த மூவரும் சந்திக்கும் காட்சியில் ஒவ்வொரு பாத்திரத்திற்கும் ஏற்றவகையில், குரல், நடை, முகபாவங்கள், அங்க அசைவுகள், கண் அசைவு, தொடுதல் போன்ற உடல்மொழிக்கான கூறுகளைக் காட்டி நடித்தார்.

'நவராத்திரி' (1964) இப்படத்தில் அற்புதம், பயம், கருணை, கோபம், சாந்தம், அருவருப்பு, சிங்காரம், வீரம், ஆனந்தம் எனும் ஒன்பது சுவைகளுக்குரிய குணாதிசயங்கள் அமையப் பெற்ற கதாபாத்திரங்களில் நடித்தார். ஒவ்வொரு பாத்திரத்திற்கும் வேறு வேறு உடல்மொழி, குரல், முகபாவம் காட்டி நடித்தார். இறுதிக் காட்சியில் திருமணத்திற்கு வரும் இக்கதாபாத்திரங்கள், வரவேற்பில் அளிக்கப்படும் வரவேற்பை ஏற்று சந்தனத்தை தொட்டுச் செல்லும் காட்சியில் சிவாஜி கணேசன் ஒவ்வொரு பாத்திரத்திற்கும் வித்தியாசமான உடல்மொழி காட்டி நடித்தார்.[91]

'ராஜபார்ட் ரங்கதுரை' (1973) எனும் திரைப்படத்தில் தன் தங்கையை ஒதுக்கிவிட்டு வேறொரு பெண்ணைத் திருமணம் செய்ய மணவறையில் அமர்ந்திருக்கும் தன் தங்கையின் கணவரை நாற்காலியில் அமர்ந்துகொண்டு

(அங்கநிலை) கண்ணால் அசைவில்லாமல் சிவாஜி கணேசன் பார்க்கும் பார்வையில் தங்கையின் கணவர் எழுந்து வந்து சிவாஜி கணேசனின் காலில் விழுந்து மன்னிப்பு கேட்பார். இது சிவாஜி கணேசனின் உடல்மொழித் திறனுக்குச் சிறப்பான எடுத்துக்காட்டாகும்.

**கால்களை உபயோகித்தல்**

மன்னர், வீரர், வேட்டைக்காரர் பாத்திரமேற்று நடிக்கும்போது, வீரத்தின் அடையாளமாக அவர் இடதுகாலை முன் வைத்து அமர்வதும், இடது காலை முன் வைத்து எழுவதும் பின் இடது காலை முன் வைத்து நடக்கத் துவங்கும் முறையைக் கடைப்பிடித்து நடித்தார்.



**பக்த துக்காராம்** படத்தில் வீர சிவாஜி வேடத்தில்
இடது காலை முன்வைத்து நிற்கும் சிவாஜி கணேசன்

‘மனோகரா’ (1954), ‘உத்தமபுத்திரன்’ (1958), ‘வீரபாண்டியக் கட்டபொம்மன்’ (1959), ‘நவராத்திரி’ (1964), ‘ராஜராஜசோழன்’ (1973), ‘பக்த துக்காராம்’ (1973), ‘கர்ணன்’ போன்ற திரைப்படங்களில் வரும் காட்சிகளை எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம்.



**சரஸ்வதி சபதம்** படத்தில் புலவர் வித்யாபதியாக நடிக்கும் சிவாஜி கணேசன் வலது காலை முன்வைத்து நிற்கும் காட்சி

மருத்துவர்கள், செல்வந்தர்கள், கவிஞர்கள் இதுபோன்ற பாத்திரங்களில் வலது காலை முன் வைத்து அமர்தல், எழுதல், நடக்கத் துவங்குதல் என நடித்திருக்கிறார். ‘மகாகவிகாளிதாஸ்’ (1966), ‘சரஸ்வதி சபதம்’ (1966), ‘நவராத்திரி’ (1964), ‘திருவிளையாடல்’ (புலவர்) (1965), ‘உயர்ந்த மனிதன்’ (1968) ஆகிய படங்களைக் குறிப்பிடலாம். சிவாஜி கணேசனின் இந்த முறையை ஹாலிவுட்டில் மன்னர்களாகவும், வீரர்களாகவும் நடித்த நடிகர்களில் ஒருவரும் இதைக் கடைப்பிடிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### பாடலுக்கு வாய் அசைப்பது

சிவாஜி கணேசன் திரையுலகில் வருவதற்கு முன்பு பாடல்களைத் தன் குரலில் பாடி நடித்த நடிகர்களின் படங்களுக்கு மிகுந்த வரவேற்பு கிடைத்தது. சிவாஜி கணேசன் வசனம் பேசி பெரு வெற்றி அடைந்த பராசக்தி மற்றும்

மனோகரா படங்களுக்குப் பின்பு மக்கள் சிறப்பான வசனங்கள் உடைய படங்களைப் பெரிதும் விரும்பிப் பார்க்கத் தொடங்கினர். இருப்பினும் பாடல்களின் முக்கியத்துவம் மறையாத நிலையில் சிவாஜி கணேசன் அதையும் நிவர்த்தி செய்து நடித்தார். தான் பாடாமல் பிறர் பாடும் பின்னணி குரல்களுக்குத் தானே பாடுவதுபோல் திறமையாக வாயசைத்து நடிப்பதிலும் பெரு வெற்றி அடைந்தார். சிவாஜி கணேசன் சாஸ்திரப் பூர்வமாக பாடல் பாடும் திறமையை நாடக உலகிலேயே கற்றுத் தேறி இருந்தார்.[92]

ஆகையால் படத்தில் பிறர் பாடும் பாடல் அடிகளை அதே சுருதியில் இவரும் பாடினார். ஆகையால் சிவாஜி கணேசன் பாடுவது போல் மக்களுக்குத் தோன்றியது. முதல் படத்திலும் தொடர்ந்து பல படங்களிலும் சிவாஜி கணேசனுக்குப் பாடலைப் பாடியவர் சி.எஸ். ஜெயராமன். 1954ல் இவர் நடித்து வெளிவந்த 'தூக்குத் தூக்கி'யில் முதன்முதலாக டி.எம்.சௌந்திரராஜன் பின்னணிப் பாடினார். சிவாஜி கணேசனைப்போல் சௌந்திரராஜனும் தமிழைச் சரியாக உச்சரிக்கும் திறமை பெற்றிருந்ததால் சிவாஜி கணேசனுக்கு மிகப் பொருத்தமாக இருந்தது. மேலும் சௌந்திரராஜன் சிவாஜிகணேசனின் குரலுக்கு இணையும் வண்ணம் பாடும் திறமை பெற்றிருந்ததால் சௌந்திரராஜன் பாடும்போது சிவாஜிகணேசன் பாடுவதுபோல் இருந்தது. 'பலேபாண்டியா' (1962) எனும் திரைப்படத்தில் "நீயே எனக்கு என்றும் நிகரானவன்" பாடலுக்கு இவர் வாயசைத்திருப்பதும் இடையில் நடிகர் ராதா ஜதி சொல்லும் முறையைத் தாங்க முடியாத முகபாவத்துடன் நடித்தார். 'சாரங்கதாரா' (1958) எனும் திரைப்படத்தில் "மேகத்திரை கிழித்து மின்னலைப் போல் எழுந்து" என்ற வேகமான பாடலுக்கு, பாடலின் இடையில் பக்கத்தில் இருப்பவர்களைப் பார்த்தும், பின்பு மேலே பார்த்துக் கொண்டும் பாடுவதுபோல் பாடி அற்புதமாக நடித்தார்.

'அம்பிகாபதி' (1957) எனும் திரைப்படத்தில் பாடலின் துவக்கத்தில் இறைவணக்கம் பாடும்போது முகத்தில் காட்டும் அமைதியான பாவமும், கதாநாயகி திரையைவிட்டு வந்தவுடன் எழுந்து நின்று பாடுவதுபோல் அபிநயிப்பதும் மிகச் சிறந்த நடிப்பாற்றலை எடுத்துக்காட்டும் வண்ணம் நடித்தார்.

'வணங்காமுடி' (1957) திரைப்படத்தில் நாயகனின் (சிவாஜி கணேசன்) நண்பரான நடிகர் தங்கவேலுவைப் பாடும்படி நிர்பந்தித்து நம்பியார் அவரது கன்னத்தில் அறையும்போது, உடனடியாக அச்செயலை கண்டிப்பதுபோல் முகபாவனை காட்டிக்கொண்டு "ஓங்காரமாய் விளங்கும் நாதம்" எனும் பாடலுக்கு அருமையாக வாயசைத்து நடித்தார்.

‘கௌரவம்’ (1978) எனும் திரைப்படத்தில் “நீயும் நானுமா” எனும் பாடல் பதிவு செய்யப்பட்டுப் படமாக்கும் வேளையில் சிவாஜிகணேசன் பலமுறை இப்பாடலைக் கேட்டு பின்பு நடித்தார். இதுபற்றி அப்படத்தின் இயக்குநர் சுந்தரம் சிவாஜி கணேசனிடம் கேட்டபோது பாடலின் ஒவ்வொரு வரிக்கும் வேறு வேறு தொனியில் சௌந்திரராஜன் பாடியிருக்கிறார். எனவே அதற்குக் குறைவில்லாமல் நான் பாடுவதுபோல் நடிக்க வேண்டும் என்று கூறி நடித்தார்.[93]

சிவாஜி கணேசனின் பாடலுக்கு வாயசைக்கும் திறமைக்கு மற்றுமொரு சான்றாக விளங்குவது, பாடகர் சௌந்திரராஜன், ‘கல்லும் கனியாகும்’, ‘பட்டினத்தார்’ படங்களைத் தயாரித்து தானே அதில் நடித்தபோது அப்படத்தில் அவர் பாடிய பாடல்களை திரையில் பார்க்கும்போது சிவாஜி கணேசன் பின்னணி பாடுவதுபோல் தோற்றமளித்தது.

**வாத்யக் கருவிகளை வாசிப்பதுபோல் நடிக்கும் திறன்**

சிவாஜிகணேசன் தான் நடிக்கும் படங்களில் வாத்யக் கருவிகள் வாசிப்பதுபோல் வரும் காட்சிகளில் தானே அவற்றை வாசிப்பதுபோல் நடிக்கும் திறமை பெற்றிருந்தார்.

புல்லாங்குழல் வாசிப்பதுபோல் ‘இரும்புத்திரை’ (1960), ‘கௌரவம்’ (1973) போன்ற படங்களில் நடித்தார். சிதார் வாசிப்பதுபோல் ‘தெய்வமகன்’ (1969) படத்திலும், டிரம்பட் (Trumpet) வாசிப்பதுபோல் ‘புதிய பறவை’ (1964) படத்திலும் நடித்தார்.

‘தில்லானா மோகனாம்பாள்’ (1968) திரைப்படத்தில் நாதஸ்வர வித்துவானாக நடித்தார். இதற்காக இத்திரைப்படத்தில் உண்மையாக வாசித்த மதுரை சேதுராமன், பொன்னுசாமி சகோதரர்களை வாசிக்கச்சொல்லி கவனித்துப் பார்த்து பின்பு தானே வாசிப்பதுபோல் நடித்தார்.



இக்காட்சியில் "நலம்தானா நலம்தானா, உடலும் உள்ளமும் நலம்தானா" என்ற பல்லவிக்கு வாசிப்பதுபோல் அபிநயித்துக் கொண்டு கதாநாயகியைப் பார்த்து புருவங்களை அசைத்து, கண்ணால் பதில் கூறுவார். இடையில் தன் தொடையைத் தாளத்திற்கும் ராகத்திற்கும் ஏற்றபடி அசைப்பார். மற்றுமொரு வரியில் "கண்பட்டதால் உந்தன் மேனியிலே புண்பட்டதோ அதை நான் அறியேன்" என்று நாயகி பாடும்போது கண்களிரண்டிலும் கண்ணீரை வரவழைத்து, கண்ணீர் கன்னங்களில் சிறிதாக வழிந்து பின் நிறுத்திக் கொண்டு வாசிப்பதுபோல் நடித்தார். 'தில்லானா மோகனாம்பாள்' படம் வெளிவந்த பின்பு, ஒருமுறை சிவாஜிகணேசனைப் பார்ப்பதற்காக சேதுராமன், பொன்னுசாமி சகோதரர்கள் வருகை தந்தார்கள். சிவாஜிகணேசன் என்ன இப்படி வருகை தந்திருக்கின்றீர்கள் என்று கேட்டபோது, அவர்கள் இருவரும் "தில்லானா மோகனாம்பாள்" படம் வெளிவந்தபின் எந்த நிகழ்ச்சியில் நாங்கள் வாசித்தாலும், உங்களைப்போல் வாசிக்கச் சொல்லி எங்களுக்குப் பலரும் வேண்டுகோள் விடுக்கிறார்கள் என்று கூறினார்கள். இது சிவாஜிகணேசனின் வாத்யக் கருவிகளை வாசிப்பதுபோல் நடிக்கும் நடிப்பாற்றலுக்கு மிகப்பெரிய சான்றாக விளங்கியது.[94]



'மிருதங்கச் சக்கரவர்த்தி' (1983) திரைப்படத்தில் மிருதங்க வித்வானாக நடிக்கும்போது முகபாவத்திலும், முகத்திலுள்ள தசைகளின் அசைவிலும், கண்களின் அசைவினாலும் தானே வாசிப்பதுபோல் நடித்தார். அப்படத்தில் மிருதங்கம் வாசித்தவர் உமையாள்புரம் சிவராமன். அவர் சிவாஜிகணேசன் மிருதங்கம் வாசிப்பதில் உள்ள நுணுக்கங்களை என்னிடம் கேட்டு அறிந்துகொண்டார்.[95]

‘திருவிளையாடல்’ (1965) திரைப்படத்தில் ‘கௌரி மனோகரி’ ராகத்தில் அமைந்திருந்த ‘பாட்டும் நானே பாவமும் நானே’ என்ற பாடலில், வாய்பாட்டு, மிருதங்கம், வீணை, புல்லாங்குழல், ஜதி சொல்வது போன்று, பாடுவதுபோல், மிருதங்கம் வாசிப்பதுபோல், வீணை வாசிப்பதுபோல், புல்லாங்குழல் வாசிப்பதுபோல், ஜதி சொல்வதுபோல் நடித்தார். பாடலின் இடையில் ஒருவர் வீணை வாசிப்பதை ரசிப்பதும், அந்த ராகத்தின் தாளத்தினை கணக்கிட்டு மிருதங்கம் வாசிப்பதும், மிருதங்கம் வாசிப்பதை வீணை வாசிப்பவர் ரசிப்பதும் என அத்தனை வகையான இசை நுணுக்கங்களை அறிந்த மேதைபோல், அறிந்ததைத் தானே செய்வது போல் நடித்துக் காட்டினார். இவையனைத்தும் இவரது சிறப்பான நடிப்பாற்றலுக்கு எடுத்துக்காட்டுகளாக இருந்தன.

வாத்தியக் கருவிகள் வாசிப்பதுபோல் நடிக்கும் முன் அந்தந்த வாத்தியக் கருவிகளின் நியதிக்கேற்ப செய்ய வேண்டியதைக் கேட்டுத் தெரிந்துகொண்டு அதன்படி வாத்தியங்களை வாசிப்பதுபோல் நடித்தார்.[96]

**நடனம் ஆடுவது**

“நாட்டியமும் நடனமும் ஒரு வகையில் நடிப்பின் ஒரு முக்கியமான பகுதிதான். நடனமாடுகிறவர்களுக்குக்கூட நல்ல நடிப்புத் திறமை இருந்தால்தான் ஆடும்போது சரியான முகபாவத்தைக் காட்ட முடியும். அப்போதுதான் நடனமும் நன்றாக இருக்கும்” என்று தன் சுயசரிதையில் கூறினார் சிவாஜி கணேசன்.[97]

‘பராசக்தி’யில் “தேசம், ஞானம், ஈசன், பூசை” என்ற பாடலில் மனநோயாளிபோல் நடனம் ஆடி நடித்தார்.

இளம்வயதில் நாடகக் கம்பெனிகளில் பெண் வேஷம் போடுகிறவர்களுக்கு நாட்டியப் பயிற்சியும் உண்டு. அவருக்கு இசைக்கேற்ப உடல் அசைவுகளைக் காட்டும் நாட்டிய பாவங்கள் நன்றாகத் தெரிந்திருந்தாலும் ஒரு படத்தின் நடன இயக்குநர் கூறுவதுபோல் நடன பாவங்களையும், உடல் அசைவுகளையும் கற்றுக்கொண்டு நடனமாடி நடித்தார். ‘ராணி லலிதாங்கி’ (1957) என்ற படத்திலும், ‘திருவிளையாடல்’ (1965) படத்திலும் சிவதாண்டவம் சிறப்பாக ஆடினார்.



'உத்தமபுத்திரன்' (1958) திரைப்படத்தில் "யாரடி நீ மோகினி" என்ற பாடலுக்கு இந்தி நடிகை ஹெலனுடன் அருமையான நடனம் ஆடினார். இப்பாடல் காட்சி படமாக்கும் சமயம் வேஷ்டி, சட்டை அணிந்து நெற்றியில் திருநீரு பூசிக்கொண்டு படப்பிடிப்புத் தளத்திற்கு வந்த சிவாஜி கணேசனை சற்றும் மதிக்காமல் பார்த்துவிட்டு, பின்பு கால்மேல் கால் போட்டு அமர்ந்து புகைபிடித்தார். ஹெலன், பாடல் காட்சிக்கு நடனமாடி முடித்தவுடன் சிவாஜி கணேசனிடம் உங்களுக்கு நடனம் தெரியுமா என்று ஹெலன் கேட்டு இருக்கிறார். ஓரளவு தெரியும் என்று பதிலுரைத்த சிவாஜிகணேசனின் கால்களைத் தொட்டு வணங்கினார் நடிகை ஹெலன்.[98]

'தங்கப்பதக்கம்' (1974) படத்தில் "நல்லதொரு குடும்பம்" என்ற பாடல் காட்சியில் மேற்கத்திய நடனத்தை ஒரு காவல்துறை அதிகாரி எப்படி கண்ணியத்துடனும், மிடுக்குடனும் ஆடவேண்டும் என்பதை ஆடிக்காட்டினார்.

'கௌரவம்' (1973) படத்தில் "அதிசய உலகம்" என்ற பாடல் காட்சியில் மேற்கத்திய இசைக்கேற்ப நாற்காலியில் அமர்ந்தபடி வாயில் பைப் வைத்துக்கொண்டு நடன அசைவுகளைக் காட்டி நடித்தார்.

பாகப்பிரிவினை (1959) படத்தில் "தேரோடும் எங்க சீரான மதுரையிலே' என்ற பாடலின் குழு நடனக் காட்சியில் படத்தின் கதையின்படி செயலிழந்த ஒரு காலையும், கையையும் வைத்துக்கொண்டு அருமையாக ஆடினார்.

'நவராத்திரி' (1964) படத்தில் தெருக்கூத்து நடனத்தைப் பேசும் முறை, பாடும் முறை, மேடையில் தோன்றும் விதம் என அனைத்திலும் ஒரு வித்தியாசமான முறையில் நடிகை சாவித்திரியுடன் இணைந்து ஆடினார்.[99]

‘கள்வனின் காதலி’ என்ற படத்திலும் மற்றும் ‘என் தம்பி’ (1960) படத்திலும், ‘கள்ள பார்ட்’ நடனத்தை, கழுத்தை மட்டும் அசைத்து தன் உடல்மொழியை முற்றிலும் வேறுவிதமாகக் காட்டி ஆடினார்.

‘என் ஆச ராசாவே’ (1998) என்ற அவரது 284வது படத்தில் முழுக்க கிராமியக் கலையான கரகாட்டத்தை ஆடி நடித்தார். அச்சமயத்தில் அவருக்கு உடல் பாதிக்கப்பட்டு இருதய அறுவை சிகிச்சை நடந்து பேஸ்மேக்கர் (Pace Maker) பொருத்தியிருந்த காரணத்தால் சிவாஜி கணேசனின் ராமாவரம் தோட்டத்தில் படப்பிடிப்பு நடத்தப்பட்டது. படப்பிடிப்பின்போது இடையில் தனது வீட்டிற்குள் வந்து கண்கலங்கி அமர்ந்து இருந்தபோது, அவரது மருமகள் புனிதா பிரபு களைப்பாக இருக்கிறதா என்று கேட்டு இருக்கிறார். அதற்கு சிவாஜி கணேசன், இல்லை எப்படி ஆட வேண்டும் என்பது தனது மனதில் இருப்பதாகவும், ஆனால் கால்கள் ஒத்துழைக்க மறுக்கின்றன என்று கூறி, சிறிது நேரத்திற்குப்பின் சென்று மனதில் இருந்த நடன அசைவுகளை வைத்து ஆடி நடித்தார்.[100]

**நடை**

சிவாஜி கணேசன் தன் நடையில் ஒவ்வொரு படத்திற்கும் வேறுபாடு காட்டி நடித்தார்.

தான் ஏற்றுக்கொண்ட பாத்திரத்திற்கு ஏற்றவாறு தன் நடையை மாற்றி நடிக்கும் திறமையைப் பெற்றிருந்தார். செல்வந்தர், ஏழை,நோயாளி, மருத்துவர், காவல் அதிகாரி, பாமர விவசாயி, மன்னர்கள், கவியரசர்கள், அப்பாவிகள், பல பாத்திரங்களுக்கு ஏற்ற வண்ணம் நடையை மாற்றி நடிக்கும் திறமை பெற்றுத் திகழ்ந்தார்.

‘மனோகரா’ (1954) படத்தில் கொலு மண்டபத்தில் சங்கிலியால் பிணைத்தபின், தன் தாய்க்கு ஏற்பட்ட அவமானத்திற்கு நீதி கேட்பதற்கு ஆவேசத்துடன் வரும் காட்சியில். சங்கிலியால் பிணைத்து இரு பக்கமும் வீரர்கள் பிடித்திருந்த நிலையில் கோபம் கொப்பளிக்க வேகத்துடனும், கம்பீரத்துடனும் நடந்து வந்தார்.

‘வீரபாண்டிய கட்டபொம்மன்’ (1959) படத்தில் தூக்குமேடையை நோக்கி நடந்து செல்லும் காட்சியில் கூப்பிய கரங்களுடன் இருபக்கமும் நிற்கின்ற குடிமக்களை நோக்கி வணக்கங்களை ஏற்றுக்கொண்டபடி, தனக்கு விதிக்கப்பட்டிருக்கும் தண்டனையை ஏற்பதில் தனக்குச் சிறிதும் அச்சமில்லை என்ற எண்ணத்தை முகத்தில் காட்டிய வண்ணம் நடித்தார்.

'கர்ணன்' (1964) படத்தில் மாமனார் வீட்டில் இருக்கும் தன் மனைவியைக் காண வரும்பொழுது, அவள் அந்தப்புரத்திலிருந்து முகத்தைக் காட்டாமல் கர்ணனின் பிறப்பைப்பற்றி கூறி தனக்கு வர விருப்பமில்லை என்று கூறுகிறாள். இதைக் கேட்டவுடன் கோபம் கொண்ட கர்ணனை (சிவாஜி கணேசன்) அவரது மாமனார் கேவலமாகப் பேசி வீட்டைவிட்டு வெளியேற உத்தரவிடுகிறார். அப்பொழுது கர்ணன், மிகுந்த கோபத்துடன் அரண்மனைக்கு வரும் காட்சியில் நடந்து வரும் நடையைக் குறிப்பிடலாம்.

'திருவிளையாடல்' (1965) படத்தில் தருமியிடம் தான் கொடுத்தனுப்பிய பாடலில் பிழை இருப்பதாக நக்கீரன் கூறக்கேட்டு, மிகுந்த கோபத்துடன், தருமியை அழைத்துக்கொண்டு கைகளை இருபுறமும் பின்பக்கம் கட்டிக்கொண்டு அதிவேக நடையில் கோபம் கொப்பளிக்கும் பாவனையைக் காட்டி நடித்தார். 'சரஸ்வதி சபதம்' (1966) படத்தில் அரச சபையில் தான் கொண்ட கல்விச் செருக்கை நடையில் காட்டி நடித்தார்.

'திருவருட்செல்வர்' (1967) படத்தில் அரசு நர்த்தகி (பத்மினி) ஆடும் நடனத்தின் துவக்கத்தில் (மன்னவன் வந்தானடி) என்ற அடிகளுக்கு மன்னவராக (சிவாஜி) கம்பீரத்துடனும், பாடுகின்ற பாட்டின் தாளத்திற்கேற்ப வேகத்துடனும் நடந்து நடித்தார்.

'வியட்நாம் வீடு' (1970) படத்தில் ஒரு அறுவை சிகிச்சைக்கு செல்லும் பிரஸ்டீஜ் பத்மநாபன் (சிவாஜி) தான் மீண்டும் உயிரோடு திரும்புகிறோமோ இல்லையோ என்ற அவநம்பிக்கையோடு, பொறுப்பற்ற தன் பிள்ளைகள், மனைவி, தன் அத்தை முதலியோர் நின்றிருக்க, ஒரு வயதான பிராமணர் தன் மனைவியை நிர்க்கதியாக நிற்கும் நிலை வருமோ என்ற பயத்தில் கால்கள் தள்ளாடியபடி மாடிப்படிகளில் இறங்கி மனைவியை நோக்கி நடந்து வரும் காட்சியில் வித்தியாசமான நடை நடந்து நடித்தார்.

'தெய்வமகன்' (1969) படத்தில் கோயிலிருந்து வீடு திரும்பும் தன் மனைவி (பண்டரிபாய்) காரிலிருந்து தள்ளாடியபடி வீட்டிற்குள் நடந்து வருவதை மாடியிலிருந்து பார்த்துவிட்டு வேகமாகத் தன் கோட்டு பொத்தான்களை மாட்டிய வண்ணம், கோடீஸ்வரருக்குரிய (சிவாஜிகணேசன்) மிடுக்குடனும், மனைவியைக் கீழே விழாமல் பிடிப்பதற்கு படிக்கட்டுகள் எண்ணிக்கை சரியாக மனதிற்குள் கணக்குப் போட்டு அதே நேரத்தில் அவசரப்பட்டு ஓடி வராமல் வேகமாக நடந்து வந்து வரவேற்பறையில் தாங்கி பிடிக்கும் காட்சி. அதில் நடந்த நடை மிக அற்புதமானதாகும்.

‘கௌரவம்’ (1973) படத்தில் பிறப்பால் பிராமணர், பாரிஸ்டர், மது அருந்தும் பழக்கம் உடையவர், தன் வளர்ப்பு மகன் நீதிமன்றத்தில் ஒரு வழக்கில் எதிராக வாதம் செய்ய இருக்கிறார் என்ற மனநிலையில், வாயில் பைப் வைத்தபடி ஒரு அடிபட்ட புலிபோல நடந்து திரியும் காட்சியில் மிக மிடுக்குடன் நடந்து நடித்தார்.

‘தங்கப்பதக்கம்’ (1974). படத்தில் கடமை தவறாத காவல் துறை அதிகாரி எஸ்.பி.சௌத்ரியை மேலதிகாரி முன்னாள் பொய்யுரைத்து விசாரணைக்கு ஆட்படுத்தியிருப்பார். அதிகாரியின் மகன் கோபிநாத் (நடிகர் ஸ்ரீகாந்த்) விசாரணை முடிந்தபின் சௌத்ரியிடம் மன்னிப்பு கேட்பார் அந்த மேலதிகாரி. சந்தோஷமாக இருக்கும் அந்த நேரத்தில் சௌத்ரியின் மனைவி இறந்த செய்தி மேலதிகாரிக்கு வரும். அந்தச் செய்தியை அவர் சௌத்ரியிடம் கூற, அவர் தன் வீட்டிற்குச் செல்ல அனுமதி கேட்பார் சௌத்ரி. மேலதிகாரி அனுமதி அளித்தவுடன், அந்த அறையிலிருந்து கம்பீரமாக விடைபெற்று கிளம்பும் சௌத்ரி, திடீரென்று நடை தடைபட்டு, சில விநாடிகள் தன்னைச் சரி செய்து கொண்டு நெஞ்சை நிமிர்த்தி நடக்கும் நடை அற்புதமான நடையாகும்.

**சிரிப்பாற்றல்**

பொதுவாகப் படங்களில் வில்லன் வேடங்கள் ஏற்றிருக்கும் நடிகர்கள், தான் தோன்றும் காட்சிகளில் பலவிதமாகச் சிரித்து பாத்திரத்தின் தன்மையைக் காட்டுவார்கள். ஆனால் சிவாஜி கணேசன் மட்டும் தான் கதாநாயகன் பாத்திரமேற்ற பல படங்களில் காட்சியின் தன்மைக்கு ஏற்றவாறு தன் கம்பீரமான சிரிப்பாற்றலைக் காட்டி பாத்திரத்தை மெருகேற்றினார்.

எடுத்துக்காட்டாக

‘வீரபாண்டிய கட்டபொம்மன்’ (1959) படத்தில் கட்டபொம்மன் (சிவாஜி கணேசன்) விலங்கிட்டு விசாரணைக்கு அழைத்து வரும் காட்சியில் கம்பீரமாகச் சிரித்தபடி உள்ளே நுழைவார்.

‘திருவிளையாடல்’ (1965) படத்தில் விறகுவெட்டியாக (சிவாஜி கணேசன்) வந்து ஏமநாத பாகவதரின் (நடிகர் பாலையா) செருக்கை அடக்கிய கதையை கோவிலுக்கு வந்து பாணபத்திரரிடம் தெரிவித்துவிட்டு சிவலிங்கத்தோடு மறையும் காட்சியில் மிகப் பலமாக சிரித்தபடி செல்வார். ‘நவராத்திரி’ (1964) படத்தில் காவல்துறை அதிகாரி வீரப்பனாக வரும் சிவாஜி கணேசன் பலமுறை சிரிக்கும் சிரிப்பு மிக கம்பீரமாக இருக்கும்.

‘தங்கப்பதக்கம்’ (1974) படத்தில் எஸ்.பி. சௌத்திரி (சிவாஜி கணேசன்) தனது மகனை (நடிகர் ஸ்ரீகாந்த்) காலில் சுட்டு ஐ.ஜி.யின் முன் நிறுத்தி இருப்பார். அப்போது பழைய கைதி (நடிகர் மேஜர் சுந்தரராஜன்) மாயாண்டி ஐ.ஜி.யிடத்தில் வங்கிக்கொள்ளை, பிள்ளைக் கடத்தல் போன்ற குற்றங்களுக்குப் பொறுப்பேற்றுக்கொள்வார். அதனால் சௌத்ரி மகன் விடுவிக்கப்படுவார். கைதியாகச் செல்லும் மாயாண்டியின் அருகில் வந்து சௌத்ரியாக நடிக்கும் சிவாஜி கணேசன் பல்லைக் கடித்துக்கொண்டு வாயைச் சிறிதாகத் திறந்து கொண்டு ஸ்ஸ்ஸ்..... என்று சிரிக்கும் பாணியில், மாயாண்டி தானாக வந்து குற்றத்தை ஒப்புக்கொண்ட காரணத்தைத் தெரிந்து கொண்ட விதத்தில் சிரிப்பார்.

### புகைபிடிக்கும் தொனி (Smoking Style)

‘பலே பாண்டியா’ (1962) படத்தில் மருது என்னும் சென்னைப் போக்கிரிப் பாத்திரமேற்று நடிக்கும் சிவாஜி கணேசன் வாயின் ஒரு பக்கத்திலிருந்து பீடியைப் புகைத்துக் கொண்டே மறுபக்கத்திற்குக் கொண்டு வரும் பாணி மிகவும் கவர்ச்சியாக இருக்கும்.

‘சாந்தி’ (1965) படத்தில் ‘பார் அந்த நிலவு’ என்ற பாடலுக்கு நடிக்கும் காட்சியில் வாயில் சிகரெட் புகைத்தபடி பாடலுக்கு வாயசைத்துக் கொண்டு மிகவும் ஒய்யாரமாக நடந்து வரும் காட்சியைக் குறிப்பிடலாம்.

‘புதிய பறவை’ (1964) படத்தில் இரவு விடுதியில் நடிகை சௌகார் ஜானகி “பார்த்த ஞாபகம் இல்லையோ” என்ற பாடலைப்பாடி நடனம் ஆடுவார். அக்காட்சியை ரசித்தபடி சிவாஜி கணேசன் புகை பிடிப்பது மிகவும் நளினமாக இருப்பதை இங்கு குறிப்பிடலாம்.

‘பார் மகளே பார்’ (163) மற்றும் ‘கௌரவம்’ (1973) படங்களில் சிகரெட்டைப் பிடிப்பது மிகவும் உயர்ந்த தொனியாக இருந்தன.

### ஒப்பனைத் திறன்

நாடக உலகில் நடிக்கும்போது சிவாஜி கணேசன் தனக்குத் தானே ஒப்பனையிடும் திறனை வளர்த்து வந்தார். ஒப்பனைக் கலைஞர்கள் 20% வேலையை முடித்தபின் 80% ஒப்பனையைச் சிவாஜி கணேசன் தனக்குத் தானே போட்டுக் கொண்டார். முக ஒப்பனை மட்டுமன்றி ஆடை, அணிகலன்களையும் ஏற்று நடிக்கும் பாத்திரத்திற்கேற்ற வகையில் அணிந்து கொண்டார்.

'வீரபாண்டியக் கட்டபொம்மன்' (1959) படத்தில் கட்டபொம்மன் கம்பளத்தார் இனத்தைச் சேர்ந்தவர் என்பதால், காது மடல்களில் மேல் பகுதியில் கொப்பூழ் அணிந்திருந்தார். ஏற்று நடிக்கும் பாத்திரம் வாழ்ந்த காலம், வாழ்ந்த நாடு, அந்தப் பாத்திரத்தின் இனம், பழக்கவழக்கங்கள், நாகரீகம், மொழி போன்றவற்றிற்கு ஏற்ற வகையில் தன்னைத் தயார்படுத்திக் கொண்டார்.[101]

'பாவமன்னிப்பு' (1961) படத்தில் இசுலாமிய இளைஞனாக நடிக்கும் சிவாஜி கணேசன், இசுலாமியர் ஐந்து வேளை இறைவனைத் தொழும் வழக்கமிருப்பதால், அவர்களின் முன்நெற்றி தரையில் ஒவ்வொரு முறையும் தொடுவதால் ஏற்படும் தழும்பை தானே ஒப்பனையில் இட்டு நடித்தார்.[102]

**மிகைப்படுத்தப்பட்ட நடிப்பு**

எந்த நடிகரிடத்திலும் இல்லாத நடிப்பாற்றலைக் கொண்டவர் நடிகர் திலகம் என்றாலும் அவரது நடிப்பையும் பலர், மிகைப்படுத்தப்பட்ட நடிப்பு என்றும் குறை கூறினார்கள்.

சிவாஜி கணேசனை வைத்து 'தீபம்', 'அண்ணன் ஒரு கோயில்', 'தியாகம்', மற்றும் 'திரிசூலம்' போன்ற வெற்றிப்படங்களை இயக்கிய இயக்குநர் விஜயன், 'சிவாஜி வயதுக்குத் தகுந்த வேடம் போட வேண்டும். மிகைப்படுத்தப்பட்ட நடிப்பு செய்வதைக் குறைத்துக்கொள்ள வேண்டும்' என்று 'கல்கி'யில் விமர்சனம் செய்தார்.

'பிலிமாலயா' 1980 வருட தீபாவளி மலரில் நீங்கள் இயக்கிய படங்களில் நீங்கள் ஏன் சிவாஜி கணேசனிடம் உள்ள குறையை நிவர்த்தி செய்யவில்லை என்ற கேள்வி கேட்கப்பட்டது. அதற்குப் பதில் அளித்த விஜயன் 1968-69லேயே அறந்தை நாராயணன் சிவாஜி over acting செய்கிறார் என்று விமர்சித்து இருந்தார். அந்த விமர்சனம் அன்று ஏற்றுக் கொள்ளப்படவில்லை. இலக்கியவாதி ஜெயகாந்தனும், "சிவாஜி நல்ல நடிகர், ரொம்ப நல்ல நடிகர், ஆனால் ரொம்பவும் நடிக்கிறார்" என்று குறிப்பிட்டார்.

ஆரம்ப காலத்திலிருந்தே சிவாஜியிடம் கூறியிருக்கிறேன். அதற்கு "ரசிகர்கள் நான் இப்படி நடிப்பதைத்தான் ஏற்றுக் கொள்கிறார்கள். மாற்றினால் விரும்பமாட்டார்கள்" என்று கூறினார். என்னுடைய படங்களான 'தீபம்', 'அண்ணன் ஒரு கோயில்', 'தியாகம்', மற்றும் 'திரிசூலம்' போன்ற படங்களில்

அவரை underacting செய்ய வைத்தேன். பாத்திரத்தை உணர்ந்து soft ஆக நடிக்க வைத்து ஒரு திருப்பத்தை உண்டாக்கினேன்' என்று கூறினார் இயக்குநர் விஜயன்.[103] 'ரத்தபாசம்' (1980) படத்திலிருந்து விஜயன் நீக்கப்பட்ட பின்தான் இயக்குநர் விஜயன் சிவாஜியைப் பற்றி இந்த விமர்சனத்தை வைத்தார் என்பது உண்மை.[104]

பத்திரிக்கையாளர் சோ. இராமசாமி சிவாஜிகணேசனிடம் அவரது மிகைப்படுத்தப்பட்ட நடிப்பு என்பது பற்றி ஒருபடத்தில் இருவரும் நடித்தபோது இடைவெளியில் செய்த சிறிய விவாதம் இங்கு காண்போம்.

சிவாஜி (சோவிடம்): ஏண்டா, எல்லோரும் கை தட்டினாங்களே, நீ மாத்திரம் ஏன் சும்மா நின்றுக்கிட்டு இருந்தே?

சோ: எனக்குப் பிடிக்கலை சார், ரொம்ப overacting. பண்றீங்க .. நேச்சுரலா இல்லை.

சிவாஜி: சோ, நீ என்ன சொல்ல வர்றேங்கறது எனக்கும் புரியுது. இந்த சீன் இப்படிப் பண்ணா நல்லா இருக்குமா பார் என்று வேறு விதமாக கட்டபொம்மன் வசனங்களைப் பேசி அமைதியாக, மிக உயர்வாக நடித்துக் காட்டினார். அதை சோ மிகவும் ரசித்துப் பாராட்டினார்.

சிவாஜி கணேசன், சோவைப் பார்த்து,

"இப்படியும் பண்ணலாம்னு எனக்கும் தெரியும், ஆனா இப்படிப் பண்ணா உனக்கு மட்டும்தான் பிடிக்கும். என்னோட ரசிகர்களுக்கு பிடிக்காது. அதனாலே, அவர்களுக்கு என்ன பிடிக்குமோ, அதைத்தான் நாம் கொடுக்கனும். நம்பளை நம்பி காசு போட்டு படம் எடுக்கிற முதலாளிக்கும் அதுதான் பிடிக்கும்" என்று கூறினார். சோ பேச்சு வராமல் நின்றார்.[105]

அதன் பின் ஒரு சமயத்தில் நடிகர் சோ குமுதம் இதழுக்கு அளித்த பேட்டியில் :

"சிவாஜியினுடைய நடிப்பை நவரசத்திற்குள் அடக்கிவிட முடியாது. நான் நல்ல ஆங்கிலப் படங்கள் பலவற்றைப் பார்த்திருக்கிறேன். அதில் நடித்த

மிகச் சிறந்த நடிகர்களின் நடிப்பை ஒருசேர சிவாஜியிடம் பார்க்க முடியும். அப்படியொரு மகத்தான நடிகர் அவர். லாரன்ஸ் ஒலிவியர், ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் எல்லாம் நடிக்கக்கூடிய மிகச்சிறந்த நடிகர். அவரிடம் காணப்படும் அழுத்தம் சிவாஜியின் நடிப்பில் இருக்கும். சார்லஸ் லாப்டன் என்கிற குணச்சித்திர நடிகரின் பண்பட்ட நடிப்பை இவரிடம் காண முடியும். டேவிட் நிவன் என்கிற நடிகரின் நாசூக்கும் தளுக்கும் இவரிடம் உண்டு.

சர்ஜான் கில்கிட்டின் நடிப்பில் இருக்கும் தோரணை சிவாஜியிடம் இருக்கும். டேனி கே என்கிற காமெடியனின் குழந்தைத்தனமான நடிப்பை இவரிடம் பார்க்க முடியும். கிளார்க் கேபிளின் மிடுக்கு, ஹம்ப்ரி போகர்ட்டின் நடிப்புத் திறனில் தென்படும் ஆழம், நார்மன் விஸ்டம் என்கிற நகைச்சுவை நடிகரின் மென்மை, சார்லஸ் ஹேஸ்டன் என்ற நடிகரின் கனமான நடிப்பு - என்று எல்லாவற்றையும் சிவாஜியின் நடிப்பில் காண முடியும் என்று கூறினார்.[106]

சிவாஜி கணேசனின் நடிப்பிலக்கணம் என்ற புத்தகத்தில் எழுத்தாளர் ஜீவன், “ஒரே ஒரு குறை உள்ள கற்பனைப் பாத்திரம் ‘வீரபாகு’ என்பதுதான். ‘கந்தன் கருணை’ படத்தில் தமிழ்க் கடவுளான முருகன் கதைப்பாத்திரத்தை விட நடிகர் திலகத்தின் பாத்திரம் அதிக தூக்கலாக இருந்தது என்று கூறினார்.[107]

இக்காட்சியில் சிவாஜி கணேசன் நடித்த விதம் குறித்து அவருடன் அக்காட்சியில் முருகன் வேடத்தில் நடித்த சிவக்குமார் குறிப்பிடுகையில், அக்காட்சியில் நடிகர் திலகம் நடித்தது சிவாஜி கணேசனின் தவறல்ல, அவர் முழுமையாகத் தன் நடிப்பை வெளிப்படுத்தினார். ஆனால் அவரிடம் பாத்திரத்தின் தன்மை பற்றி விளக்கத் தவறியது இயக்குநரின் தவறு” என்று கூறினார்.[108]

சிவாஜியின் மிகைப்படுத்திய நடிப்பு என்ற கருத்தினை மறுத்து நடிகர் எம்.என். நம்பியார், ‘நடிப்பதற்காகவே பிறந்தவர் நடிகர் திலகம். நடிகர் திலகத்தின் நடிப்பை ஒரு சிலர் ஓவர் ஆக்டிங் என்று சொல்வார்கள். அவர் தெரிந்தேதான் செய்கிறார். வசனங்களைப் பேசாமல் நடிப்பின் மூலம் தாம் நினைப்பதை வெளிப்படுத்தக்கூடிய ஆற்றல் பெற்ற நடிகர் அவர் ஒருவர்தான். நடிப்புக்கு எல்லையில்லை என்பது சிவாஜியின் கருத்து’.[109]

சிவாஜிகணேசனின் நடிப்பு மிகைப்படுத்திய நடிப்பு என்பது ஏற்புடையதல்ல. சிவாஜிகணேசனை முதலில் 'பராசக்தி' படத்தில் அறிமுகப்படுத்திய இயக்குநர்கள் கிருஷ்ணன் பஞ்சு,இயக்குநர் எல்.வி. பிரசாத் இவர்களைத் தவிர மற்ற இயக்குநர்கள் அனைவரும் சிவாஜி கணேசனின் நடிப்பாற்றலைச் சீர்படுத்தியவர்கள் என்றோ, சிவாஜிகணேசனுக்கு வசனங்களை எப்படிப் பேச வேண்டும் என்றோ கற்றுக் கொடுத்தவர்கள் கிடையாது. சிவாஜி கணேசனின் ஒப்பற்ற நடிப்புத்திறமை அவர்கள் இயக்கிய படங்களில் இடம் பெற்றதால் மட்டுமே புகழ் அடைந்தவர்கள் என்பது நிதர்சனமான உண்மை.

சிவாஜி கணேசனை வைத்து அதிகப் படங்களை இயக்கிய பெருமை இயக்குநர் ஏ.சி. திருலோகசந்தருக்கு உண்டு. அவர் சிவாஜி கணேசனை வைத்து இயக்கிய முதல் படம் 'தங்கை' (1967). அது குறித்து ஏ.சி. திரிலோக சுந்தர் "ஏவி.எம். நிறுவனத்தை விட்டு வெளியே வந்து நான் இயக்கிய முதல் படத்திலேயே சிவாஜி நடிக்கிறார் என்று கேள்விப்பட்டதும் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தேன். சிவாஜியின் ரசிகன் என்ற முறையில் அவரது படங்களையும் பார்த்திருக்கிறேன் என்று கூறினார்.[110] மேலும் 'தெய்வமகன்' படத்தில் மூன்று பாத்திரங்களையும் நானே ஏற்று நடிக்கிறேன் என்று சிவாஜி கூறியபோது, அது சாத்தியமல்ல என்று இயக்குநர் ஏ.சி. திரிலோகசந்தர் மறுக்க, அதை சவாலாக ஏற்று சிவாஜிகணேசன் தந்தை மற்றும் இரு மகன்களாக நடித்து 'தெய்வமகன்' பெரிய வெற்றியை அடைந்தது. அதிலிருந்து அப்படத்தில் சிவாஜி கணேசன் நடிப்புத்திறமை இயக்குநரின் திறமையைவிட மேலோங்கி நின்றது என்பது புரிகிறது.[111]

அதுபோல் இயக்குநர் கே.எஸ். கோபாலகிருஷ்ணன், "'குலமா குணமா' படத்தில் கதைப்படி பாகப்பிரிவினைக் காட்சி வரும். அந்தக் காட்சியில் நீங்கள் வசனம் பேசாமல் நடிக்க வேண்டும் என்றேன். என் எதிர்பார்ப்புகளையும் மீறி, அவரது உதடுகள், வாய், கண்கள், புருவம், கன்னங்கள் நடித்தன. ஓராயிரம் வசனங்கள் பேச வேண்டியதை அவரது முகபாவம் பேசியது" என்று சிவாஜிகணேசனின் அடக்கமான நடிப்பாற்றலைப் பற்றிக் கூறினார்.[112]

மேலும் திரையில் அறிமுகமாகி இரண்டு ஆண்டுகளுக்குள் அவர் நடித்த 'அந்த நாள்' (1954) படத்தில் அவர் நடிப்பு ஹாலிவுட் நடிகர்களுக்கு இணையாக இருந்தது.

இயக்குநர் பீம்சிங்கின் இயக்கத்தில் சிவாஜி கணேசன் நடித்து வெளிவந்த 'பா' வரிசைப் படங்களில் உணர்ச்சிப் பூர்வமான குடும்ப உறவுகளின் பாத்திரத் தன்மையை தன் பண்பட்ட நடிப்பால் வெளிப்படுத்தினார்.

'சம்பூர்ண ராமாயணம்' (1958) படத்தில் பரதன் வேடமேற்று நடித்த சிவாஜி கணேசன் வட அயோத்திக்குத் தேரில் வரும் காட்சியில் வசனங்கள் இல்லாமல் வெறும் உடல்மொழியால் உயர்ந்த நடிப்பினை வெளிப்படுத்தினார்.

'முதல் மரியாதை' (1985) படம் வெளிவருவதற்கு முன் சிவாஜி கணேசனின் திரையுலக வாழ்க்கை முடிவுக்கு வந்துவிட்டது என்று பலரும் கருதிய வேளையில் பாரதிராஜாவின் இயக்கத்தில் மிக உயர்ந்த நடிப்பை வெளிப்படுத்தினார். அதன் மூலம் சிவாஜி கணேசனின் நடிப்பாற்றலை வெளிக்கொண்டு வருவதற்கும் திறமையான இயக்குநர்கள் தேவை என்பதைக் காலம் உணர்த்தியது. சிவாஜி கணேசனின் நடிப்புப் பற்றி இயக்குநர் பாரதிராஜா, "சிவாஜி கணேசனின் நடிப்பு என்பது மிகைப்படுத்தப்பட்ட நடிப்பு அல்ல என்பது நான் இயக்கிய "முதல் மரியாதை" மூலம் அனைவரும் அறிந்தனர். அவரால் எப்படி வேண்டுமானாலும் நடிக்க முடியும். ஹாலிவுட் நடிகர்களைப்போல் சிவாஜிகணேசனால் நடிக்க முடியும். ஆனால் அவர்களால் சிவாஜி கணேசனைப்போல் நடிக்கவே முடியாது" என்று கூறினார்.[113]

1992இல் வெளிவந்த 'தேவர் மகன்' சிவாஜி கணேசனின் அடக்கமான நடிப்புக்கு அருமையான உதாரணமாகும்.

தன்னுடைய நடிப்பு மிகைப்படுத்தப்பட்ட நடிப்பு (Over Acting) என்ற விமர்சனம் குறித்து சிவாஜி கணேசன் தனது சுயசரிதையில், "Acting என்ற வார்த்தைக்கு Exaggeration of expression என்றுதான் பொருள். An actor is a dramatic performer. நடிப்பே ஒரு தோரணைதான். இதில் Natural என்றும் Unnatural என்றும் எப்படி நடிக்க முடியும். முகத்தில் அரிதாரம் பூசினாலே unnaturalதானே. கட்டபொம்மன், ஜாக்சன் துரையிடம், கிஸ்தி, வரி, வட்டி, வானம் பொழிகிறது, பூமி விளைகிறது உனக்கேன் கொடுப்பது கிஸ்தி.. என்ற தோரணையோடு பேசினால்தானே அது வசனம். அதுதானே நாடகம். அப்போதுதானே மக்கள் எழுந்து உட்கார்ந்து கை தட்டுவார்கள். அதை விட்டுவிட்டு ஜாக்சன் துரை அவர்களே, உங்களுக்கு ஏங்க கொடுக்கணும் கிஸ்தி? எங்களோடு வயலுக்கு வந்தீங்களா, ஏத்தம் இறைச்சீங்களா" என்று கீழ்

ஸ்தாயில் இழுத்து இழுத்துப் பேசினால் எப்படி இருக்கும். To be or not to be (வாழ்வதா சாவதா) என்று ஹேம்லட் கேரக்டர் மனதுக்குள் பேசினால், ரசிகர்களுக்கு எப்படி தெரியும், அதுபோல் ‘ஒத்தல்லோ’ கேரக்டரில் It is the cause it is the cause என்று தனக்குள்ளே பேசினால் ஜனங்களுக்குத் தெரியுமா? அதை அழுத்தமாகப் பேசினால்தான் நாடகம் நன்றாக இருக்கும். Over Acting என்பதெல்லாம் நடிப்பைப் பற்றிச் சரியாகத் தெரியாத ஒரு சிலர் பேசியிருப்பார்கள் என்று பதிவு செய்தார்.[114]

சிவாஜிகணேசன், மேலும் குறிப்பிடுகையில் ஒருவர் சிறிய ஆடை மட்டும் போட்டு மேடையில் நின்று, கட்டபொம்மன், கர்ணன், வ.உ.சி. மற்றும் நவராத்திரி படத்தில் வரும் பாத்திரங்கள் முழுவதும் முகபாவத்துடனும், உடல் மொழியுடனும் நடித்து அந்தந்தப் பாத்திரத்தைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்தினால் அவரை நான் நடிகராக ஏற்றுக் கொள்கிறேன்.

“நடிக்கின்ற பாத்திரத்திற்கேற்ப மனித உடலின் ஒவ்வொரு அங்கத்திலும் ஏற்படும் அசைவும், முகபாவமும் மொத்தமாகச் சேர்ந்ததுதான் நடிப்பு. அதில் கால்கள் நடிக்க வேண்டும். கைகள் நடிக்க வேண்டும். கண்கள் நடிக்க வேண்டும். உடலின் தசைகள் நடிக்க வேண்டும். அப்பொழுதுதான் முழுமையான நடிப்பைக் காண முடியும். அப்போதுதான் ஏற்றுக்கொண்ட பாத்திரத்தைச் சிறப்பாக உருவாக்கிக் காட்ட முடியும்” என்று நடிப்புப்பற்றி சிவாஜி கணேசன் கூறினார்.[115]

இறுதியாக சிவாஜிகணேசன் தான் நடித்ததுபற்றி, நமக்கு நமது வாத்தியார் என்ன சொல்லி கொடுத்திருக்கிறாரோ, நம்முடைய கற்பனைக்கும், திறமைக்கும் என்ன வருகிறதோ, மக்கள் நம்மிடம் எதை எதிர்பார்க்கிறார்களோ, அதுபோல் நடிக்க வேண்டும். அதுதான் எனக்குத் தெரியும். அதுதான் எல்லோருக்கும் பிடிக்கும் என்று கூறினார்.[116]

**இயக்குநர்களின் பார்வையில் சிவாஜிகணேசனின் நடிப்பாற்றல்**

**இயக்குநர்கள் கிருஷ்ணன் - பஞ்சு**

1968 ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் பதினைந்தாம் நாள் ‘உயர்ந்த மனிதன்’ பட விழாவில், “எங்கள் உள்ளம் பெருமிதத்தால் விம்முகிறது. கணேசன் நடித்த ‘பராசக்தி’யை டைரக்ட் செய்த நாங்கள் அவரது நூற்று இருபத்தைந்தாவது படமான ‘உயர்ந்த மனிதன்’ திரைப்படத்தையும் இயக்கியிருப்பது எங்களுக்குக்

கிடைத்த அபூர்வமான வாய்ப்பு. பராசக்தியில் அவர் ஒரு புதுமுகம். ஆரம்பப்பள்ளி மாணவன் நிலையில் அப்போது இருந்தார். கணேசனிடம் உள்ள ஒரு அற்புதமான குணம் இதுதான். 'பராசக்தி' படத்திற்காக அவர் நடிக்கச் சென்னைக்கு வந்தபோது ஸ்டுடியோ சூழ்நிலையைப் பற்றி ஒன்றுமே தெரியாது. காமிரா என்றால் என்ன, ஒளிப்பதிவு இயந்திரத்தின் தன்மை என்ன, இவையெல்லாம் அவர் அறிந்திருக்கவில்லை. ஆயினும் சோதனைப்படம் எடுத்தபோது, ஒரு அனுபவம் வாய்ந்த சினிமா நடிகரைப் போலவே எவ்வித சஞ்சலமின்றி நடித்தார். 'பராசக்தி' காலத்தில் வசனங்களை முன்பே அவரிடம் கொடுத்து காட்சியின் தன்மைகளை விளக்கிக் கூறி எப்படி நடிக்க வேண்டும். நாங்கள் என்ன விரும்புகிறோம் என்பதையும் எடுத்துச் சொல்வோம். ஆனால் 'உயர்ந்த மனிதன்' படத்தில் பாடம் பல பயின்ற பட்டதாரியின் அனுபவத்தோடு விளங்கினார். மேக்கப் போட்டுக் கொண்டிருக்கும்போதே, அவர் என்ன வசனம் பேச வேண்டும் என்பதைப் படித்துக் காட்டச் சொல்வார். உடனே காட்சியின் தன்மை, எப்படி நடிக்க வேண்டும், எப்படி நடித்தால் நன்றாக இருக்கும் என்பதை அவரே உருவகப்படுத்திக் கொண்டு செட்டுக்குள் தயாராக வந்து விடுவார். இன்று உலகப் பெரு நடிகர்களுடன் ஒப்பிட்டு சொல்லக்கூடிய அளவுக்கு பெரும் புகழ் பெற்று இருக்கிறார். சிவாஜிகணேசனை நாங்கள்தான் ஆளாக்கிவிட்டோம் என்று சொன்னால் அதைவிட சிரிப்பிற்கு இடமான வேறு விஷயம் இருக்க முடியாது. காரணம் அவருக்குப் பின் பல நடிகர், நடிகைகளை புதுமுகங்களாக அறிமுகப்படுத்தினோம். ஆனால் அவர்களில் கணேசனைப் போல் யாரால் வர முடிந்தது" என்று பேசினார்கள்.[117]

**இயக்குநர் எல்.வி. பிரசாத்**

"பூங்கோதை" படத்தை டைரக்ட் செய்து கொண்டிருக்கும் காலத்தில், அஞ்சலி பிக்சர்ஸ் அலுவலகத்தில் நடுத்தரமான உடற்கட்டும், பிரகாசம் பொருந்திய கண்களும், எடுப்பான மூக்கும், ஒட்டிய கன்னங்களுமுடைய வாலிபனாக சிவாஜி கணேசனைக் கண்டேன். அந்த நேரத்தில் அவருடைய கண்களில் ஒளியைக் கண்டேன். அவர் தன்னம்பிக்கை உடையவராகக் காணப்பட்டார். நான் அவருக்கு வசனம் கொடுத்தேன். அவர் திருப்திகரமாகப் பேசிக் காட்டினார். பிறகு 'பரதேசி' என்ற படத்தின் தெலுங்கு வசனத்தைக் கொடுத்தேன். அதையும் அவர் சுலபமாகப் பேசியதைக் கண்டு வியந்தேன். அப்போதே அவர் பிற்காலத்தில் ஒரு பெரிய நடிகராவதற்கு வேண்டிய திறன் இருக்கிறது என்பதைக் கண்டேன். பின்பு அவரை 'மனோகரா' படத்தின்போது சந்தித்தேன். அவருடைய மிடுக்கான நடையும், பாவனையும் அவர் விரைவில்

நடிப்பில் வெற்றியின் சிகரத்தை அடைந்து விடுவார் என்று எனக்குப் புலப்படுத்தின. 'மனோகரா'வை மூன்று மொழிகளிலும் அவரே கதாநாயகனாக நடிக்க வேண்டுமென்று வற்புறுத்தினேன். அவருடைய நடிப்பு அவருக்கு உரிய வெற்றி மாலைகளைத் தேடித் தந்தது. படப்பிடிப்பு நடிக்கும்போது எப்படி அவர் இந்தி, தெலுங்கு, தமிழ் வசனங்களை மாறி மாறிச் சரியாக சொல்லமுடியும் என்று ஆச்சரியப்படுவேன். இது ஓர் வரப்பிரசாதமாக இருக்க வேண்டும். அவர் நடித்த படங்களை ஒன்றுவிடாமல் பார்த்தேன். ஒவ்வொன்றிலும் அவர் முன்னேற்றப் பாதையில் சென்று கொண்டிருப்பதைக் கண்டு மகிழ்ந்தேன். அவரிடம் இருக்கும் திறமைக்கும், பண்பிற்கும், அவரடைந்த பெருமையும் கௌரவமும் சிறிதளவே. இந்நாட்டு திரைக்கலையை மென்மேலும் முன்னேற்றப் பாதையில் கொண்டு செல்லப் போகும் கலையுலக மேதையான சிவாஜிகணேசனை என் மனப்பூர்வமாக வாழ்த்துகின்றேன்.[118]

**இயக்குநர் பீம்சிங்**

நான் இயக்கிய படங்களில் சிவாஜி கணேசன் கதையைப் பற்றியோ, தன் வேலையைப் பற்றியோ அதிகமாக விவாதம் செய்யமாட்டார். அவரது பாத்திரத்தின் படைப்பு அறுபது சதவீதம் படப்பிடிப்பு நடக்கும் சமயத்தில்தான் உருவாகும், மெருகேறும். அவர் நடித்து நான் இயக்கிய படங்களில் சிறப்பான கட்டங்கள் என்று சொல்லக்கூடியவை எல்லாம் இயல்பாகவே படப்பிடிப்பின்போது தேர்ந்தவைதான். இம்மாதிரி அடிக்கடி காட்சியமைப்பில் புதுமையான யோசனைகளைத் தெரிவித்துச் செயலாற்ற அவரது மனம் துடிதுடித்துக் கொண்டிருக்கும். 'பாவமன்னிப்பு' படத்தில் நடிக்கும்போது அவர் முஸ்லீம்களின் நடை, உடை, பாவனைகளைப் பற்றிப் பல முஸ்லீம் அறிஞர்களிடம் கேட்டுத் தெரிந்துகொண்டார். நெற்றியின் முனையில் கொஞ்சம் கருப்பாக மேக்-அப் செய்து கொண்டார். முஸ்லீம்கள் தொழும்போது வணங்கி வணங்கி தரையில் தட்டி, அந்த இடமம் கருப்பாகிவிடும். இதற்காக அங்கே கருப்பாக மேக்கப் செய்து கொண்டார்.

படத்திற்குப் படம் பாத்திரத்திற்குப் பாத்திரம் எப்படி குணாதிசயங்கள் மாறுகின்றனவோ, அதேபோல் மேக்-அப்பும் மாற வேண்டும். அப்படிச் செய்தால்தான் எக்ஸ்பிரஷனில் கலர் இருக்கும் என்பார் அவர். சில சமயங்களில் நம்மால் செய்ய முடியுமா, சாத்தியமாகுமா என்பதை எல்லாம்கூட நினையாமல் பல அபூர்வ யோசனைகளைச் சொல்வார். நடக்குமா, நடக்காதா என்பதைப் பற்றியே அவர் யோசிக்கமாட்டார். தொழிலின் மீது உள்ள ஈடுபாடும் அதில் புதுமையைப் புகுத்த வேண்டும் என்ற ஆர்வமும்தான் இதற்குக் காரணம்.[119]

**இயக்குநர் பி.ஆர். பந்துலு**

வரலாற்று நாயகர்களாகிய வீரபாண்டிய கட்டபொம்மனையும், கப்பலோட்டிய தமிழனையும், சிவாஜி மூலம் மறுபிறவி எடுக்க வைத்து, அந்தக் காவியங்களைத் தயாரித்து இயக்கியது நான்தான் என்பது எனக்கு இரட்டிப்பு மகிழ்ச்சியும் கர்வமும் ஏற்படுத்தியது. ஒரு இயக்குநராக மட்டுமல்லாமல், என்னை மறந்து ஒரு ரசிகராகவும் அவரை நான் வியந்து போற்றுகிறேன். 'கப்பலோட்டிய தமிழன்' படத்தில் பாரதியார் இறந்துவிட்ட செய்தியறிந்து, வ.உ.சி. புலம்பும் காட்சியில் சிவாஜி நடித்தபோது கட் சொல்ல மறந்து துக்கம் தொண்டையை அடைக்க, நான் விக்கித்து நின்றபோது சுற்றியிருந்தவர்களும், கண்ணீரைத் துடைத்துக்கொண்ட காட்சியை என்னால் மறக்க இயலாது.

11 நாட்கள் 20 மணி நேரம் உழைத்து, அதிலும் கடைசி 2 நாட்கள், அதிகாலை முதல் நள்ளிரவு வரை தொடர்ந்து நடித்து, 3 வேடங்களிலும் அற்புதமான நடிப்பை வெளிப்படுத்தி, 'பலே பாண்டியா' திரைப்படத்தை முடித்துக் கொடுத்துவிட்டே அமெரிக்கப் பயணத்திற்கு வேண்டிய அலுவல்களைக் கவனிக்கச் சென்றார்.

மகாத்மா காந்தியால் இந்தியாவிற்குப் பெருமை. சிவாஜியால் தமிழ்த் திரைப்பட உலகிற்குப் பெருமை என்றார்.[120]

**இயக்குநர் ஏ.பி. நாகராஜன்**

25 வருடங்களில் 175 படங்களில் நடித்து, தனக்கு நிகர் யாரும் இல்லை என்ற பெயர் வாங்கியும்கூட படப்பிடிப்பிற்குச் சொன்ன நேரத்தில் வருகிற ஒரே நடிகர் சிவாஜி கணேசன்தான். சமூகப்படமானாலும், சரித்திரப் படமானாலும், இதிகாசப் படமானாலும், ஒப்பனையில் உடையலங்காரத்தில் எவ்வளவு சிரமங்கள் இருந்தாலும் ஏற்றுக்கொள்வார். முதல்நாள் படப்பிடிப்பு முடிந்து வீட்டிற்குச் செல்லும்போது, நாளைக்கு நான் எப்போது வரணும் என்று கேட்பார். அந்த நேரத்தைச் சொல்லிவிட்டால் மறுநாள் கண்களை மூடிக்கொண்டு காமிராவை முடுக்கிவிடலாம். நாம் கண் திறந்து பார்த்தால் அங்கே சிவாஜி கணேசன் நடித்துக் கொண்டிருப்பார். அவர் அந்த அளவுக்குத் தொழிலுக்கு மதிப்புக் கொடுப்பவர். நான் இயக்கி, அவர் நடித்துள்ள படங்களின் படப்பிடிப்பின்போது ஏற்பட்ட பல அனுபவங்கள், சம்பவங்கள் பல. அவற்றில் ஒன்றை மட்டும் இங்கே கூறுகின்றேன். 'சரஸ்வதி சபதம்' படத்தில் கவிஞனை மேடை ஒன்றில் சங்கிலியால் பிணைத்துப் படுக்க வைத்து யானை மிதிக்க வரவேண்டும். கவிஞன் நில் என்றதும் யானை நிற்க வேண்டும். கவிஞனாக

நடிப்பவர் சிவாஜிகணேசன். ஒத்திகை பார்த்தபோது யானை நடந்து வந்தது. நில் என்றவுடன் நிற்காமல் மேடையை மிதித்து நொறுக்கிவிட்டது. நடந்ததைச் சொல்லி டம்மியாக ஒருவரைப் போட்டு எடுத்துவிடுவதாக எவ்வளவோ கூறினோம். நடிகர் திலகம் ஏற்கவில்லை. இந்தக் காட்சி தத்ரூபமாக இருந்தால்தான் நன்றாக இருக்கும் என்று எனக்கு ஒரு பக்கம் ஆர்வம் இருந்தது. ஆனால் அதற்காக உலகப் பெரு நடிகரின் உயிருக்கே ஆபத்து ஏற்படுமோ என்று அஞ்சியபடி, அந்தக் காட்சியை எடுக்க மனம் ஒப்பவில்லை. நடிகர் திலகம் கொடுத்த தைரியத்தில் அந்தக் காட்சியை எடுக்கத் துணிந்தோம். அன்று காலையில் கோவில்களிலெல்லாம் நான் அர்ச்சனை செய்தேன். படப்பிடிப்பு துவங்கியது. சங்கிலியால் பிணைத்து சிவாஜியைப் படுக்க வைத்தோம். யானை நடந்து வந்தது. அருகில் வந்ததும் நில் என்றார். யானை அப்படியே நின்றது. ஒரு வழியாக நல்ல முறையில் அக்காட்சியைப் படமாக்கிவிட்டோம். இப்படி நடிப்புத் தொழிலுக்காகவே தன்னை ஒப்படைத்துக் கொண்டு அனுபவித்து நடிப்பவர் நடிகர் திலகம்.[121]

**இயக்குநர் ஏ.சி. திரிலோகசந்தர்**

நடிகர் திலகம் நடித்த அதிகப் படங்களை இயக்கியவன் என்கின்ற பெருமை எனக்குண்டு. நான் சிவாஜியுடன் இணைந்து எத்தனையோ படங்களில் பணியாற்றினாலும் 'தெய்வமகன்' படத்தை மறக்க முடியாது. அடேயப்பா எப்பேர்ப்பட்ட நடிப்புச் சாதனை அந்தப்படம். தான் கஷ்டப்பட்டால்தான் படம் நன்றாக வரும் என்பதை உணர்ந்தவர்.[122]

**இயக்குநர் கே. சங்கர்**

சிவாஜிகணேசன் நடித்த 'ஆலயமணி' படத்தை ஒரு மகாகாவியம் என்றே கூறலாம். அந்தப் படத்தின் வெற்றிக்கு அந்தக் காவிய நாயகன்தான் காரணம். அந்தப் படத்தில் நடித்த நடிகர் எஸ்.எஸ். இராஜேந்திரன் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறையிலிருந்தார். மிகவும் கஷ்டப்பட்டு அவரை ஒரு வாரம் ஜாமீனில் எடுத்தோம். அந்த ஒரு வாரத்தில் அவர் சம்பந்தப்பட்ட காட்சிகள் அனைத்தையும் எடுத்தாக வேண்டும். அந்த காட்சிகள் அனைத்திலும் சிவாஜி இருந்தார். அந்த ஏழு நாட்களிலும் இரவு பகல் பாராமல் படப்பிடிப்பில் கலந்துகொண்டார். அந்த நாட்கள் என் வாழ்க்கையில் மறக்க முடியாது. ஆலமரம் அவர். உழைப்பிற்கு மதிப்புக் கொடுக்கும் உத்தமர். அத்தகைய காவிய நாயகன் வாழும் சகாப்தத்தில் அவருடன் இணைந்து கலையுலகில் பணிபுரிந்ததை பெரும் பேறாகக் கருதுகிறேன்.[123]

**இயக்குநர் வியட்நாம் வீடு சுந்தரம்**

"வியட்நாம் வீடு, நாடகக் கதையை முதலில் சிவாஜியின் தம்பி சண்முகம் கேட்டார். எனக்குப் பிடிச்சிருக்கு அண்ணனிடம் கதையைக் கூறுங்கள். அவருக்குப் பிடித்தால் சிவாஜி நாடக மன்றத்தின் மூலமாகவே இதை அரங்கேற்றலாம் என்றார். சிவாஜி கணேசன் ஒருமுறை நாடகக் கதையை முழுவதுமாகக் கேட்டார். நாடகத்தில் ஆங்கில வசனங்கள் அதிகமாக இடம் பெற்றிருந்தன.

"Young bull tries to kill the old bull"
You must stand on your own legs
Many a slip between the cup and the lip"

மிக அநாயசமாகப் பேசினார். 1968இல் நாடகம் அரங்கேற்றம் ஆனது. மிகக்குறைந்த காலத்தில் நூறு தடவைக்கு மேல் நடந்தது. அது சிவாஜி புரொடக்ஷன்ஸ் சார்பில் வியட்நாம் வீடு திரைப்படமாகியது. அதன்பின் 'கௌரவம்' திரைப்படம் வந்தது. அந்தப் படத்தின் மூலம் நான் இயக்குநராக வெற்றி அடைந்தேன்".[124]

**நிறைவுரை**

சிவாஜி கணேசன் நாடக உலகில் ஏழு வயதில் அறிமுகம் ஆகித் தனது தனிப்பட்ட திறமையினால் அடிப்படை நடிப்புப் பாடங்களை நாடக உலகில் கற்றுக்கொண்டார். நடிப்பில் வெற்றி பெற வேண்டுமெனில் நல்ல குரல்வளம் அவசியம் என்பதை நாடக உலகில் தானே உணர்ந்து சுயமாகப் பயிற்சி எடுத்துத் தன் குரல் வளத்தை வளர்த்துப் பிற்காலத்தில் சிம்மக் குரலோன் என்ற பெயர் பெற்றார். நல்ல குரல் வளம் ஒரு நடிகனுக்கு முதல் தகுதி என்பதை நடிப்புக் கொள்கையை உருவாக்கிய ஸ்தானிஸ்லாவ்ஸ்கி கூறிய எதையும் அறியாதவர் சிவாஜி கணேசன்.

ஆரம்பக் கல்வி மட்டும் பயின்ற சிவாஜிகணேசன் தமிழ் இலக்கண இலக்கியமாகிய தொல்காப்பியம் பற்றி அறியாதவர். தொல்காப்பியத்தின் மெய்ப்பாட்டியலில் கூறப்பட்டுள்ள எட்டுவகையான சுவைகளையும், அச்சுவைகளுக்கு நிலைக்களன்களாக விளங்கும் நான்கு வகை சுவைகளையும் சேர்த்து ஒரு மனிதன் வெளிப்படுத்தக்கூடிய முப்பத்திரண்டு சுவைகளையும் தானே இயல்பாகத் தன் நடிப்பாற்றலில் வெளிப்படுத்திய அதிசய நடிகர் சிவாஜி கணேசன் ஆவார்.

Method Acting என்ற நடிப்புக் கோட்பாடுகளை உருவாக்கிய ஸ்தானிஸ்லாவ்ஸ்கி வகுத்தபடி, ஒரு நடிகனுக்குரிய பதினாறு தகுதிகளையும் இயற்கையாகப் பெற்றிருந்தார் சிவாஜிகணேசன். மேலும் ஸ்தானிஸ்லாவ்ஸ்கி கூறிய, ஒரு கதாபாத்திரத்தை வடிவமைக்கத் தேவையான பதினைந்து வழிகளையும் தானே தனக்குள் உருவாக்கிக்கொண்டார். ஸ்தானிஸ்லாவ்ஸ்கி தனது நடிப்பு முறையில் ஒரு கதாபாத்திரம் உருவாக்கம் பெறுவதற்கு மூன்று நிலைகள் தேவைப்படுகிறது என்று கூறினார். அந்த மூன்று நிலைகளையும் தானே அறிந்து உணர்ந்தவர் சிவாஜி கணேசன் என்பதை 'வீரபாண்டியக் கட்டபொம்மன்' கதாபாத்திரம் மூலம் நிரூபித்தார்.

தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் சுவைகள், ஸ்தானிஸ்லாவ்ஸ்கியின் நடிப்பு முறைகள் தவிர்த்து, தனக்குத் தானே சில சிறப்புத் தகுதிகளை சிவாஜி கணேசன் உருவாக்கிக் கொண்டார். அவை பலவிதமான நடை, பலவிதமான சிரிப்பு, பிறர் பாடலுக்கு வாயசைக்கும் திறன், வாத்யக் கருவிகளை வாசிப்பதுபோல் நடிக்கும் திறன், வசனம் பேசும் முறை, தமிழ் உச்சரிப்பு, பலவிதமான உடல்மொழிகள் போன்றவை இவரது சிறப்பான நடிப்பாற்றலுக்குப் பின்புலமாக விளங்கின என்பதையும் அதனால் அவர் உலகின் தலைசிறந்த நடிகர்களில் ஒருவராகப் புகழ்பெற்றார் என்பதையும் அறிய முடிகிறது.

## இறுதிக்குறிப்புகள்

1 விக்டர், ம.சோ., **தொல்காப்பியச் சிந்தனைகள்** - நல்லேர் பதிப்பகம், சென்னை, 2007, ப.72.
2 பொன்னையா, நா., **தொல்காப்பியம் - பொருளதிகாரம்,** திருமகள் அழுத்தகம், ஈழம் 1943, ப. VII.
3 **மேலது.,** பப.1-2.
4 **மேலது.,** ப.8
5 **மேலது.,** ப.10
6 **மேலது.,** ப.13
7 **மேலது.,** ப.16
8 **மேலது.,** ப.19
9 **மேலது.,** ப.22
10 **மேலது.,** ப.24
11 **மேலது.,** ப.26
12 **மேலது.,** ப.28
13 Constantin Stanislavsky, **My Life in Art,** p.327.
14 en.m.wikipedia.org/wikie/Stanislavski system
15 en.m.wikipedia.org/wikie/Richard Boleslavsky
16 Richard Bleslavsky, **Acting – The first six lessons,** Theatre Arts Book, New York, 1933, pp. 15-103.
17 en.m.wikipedia.org/wikie/Stella Adler
18 Stella Adler, **The Techniques of Acting**, Bantam Books, New York, 1988, pp.8-117.
19 en.m.wikipedia.org/wikie/Lee Strasberg
20 Lorains Hull,S., **Strasberg's Method,** Bow Publishing Inc, Connecticut, 1985, pp. 11-207
21 en.m.wikipedia.org/wikie/Sanford Meisner
22 Sanford Meisner, **On Acting**., Vintage Books, New York, 1987, pp. 3-193
23 en.m.wikipedia.org/wikie/Robert Lewis
24 Robert Louis, **Method or Madness**, Samuel French Inc., New York, 1958, pp. 3-139
25 Constantin Stanislavsky, **An Actor Prepares**, Theatre Arts Books, New York, 1936, p.3.
26 Ibid., pp.13-15.
27 Ibid., pp. 34-35
28 Ibid., pp.52-55
29 Bishop Caldwel, **A History of Tinnelvely**, Asian Educational Services, New Delhi 1982, p.188
30 Constantin Stanislavsky, **op.cit**, p. 86
31 Ibid., p.92
32 Ibid., pp.111-112.
33 Ibid., p.122.
34 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.,** ப.128
35 **மேலது.,** ப.184
36 Constantin Stanislavsky, **op.cit**, p.168
37 Ibid., pp.185-190
38 Ibid., p.220
39 இயக்குநர் பீம்சிங், **பேசும் படம்,** ஜனவரி 1962
40 Constantin Stanislavsky, **op.cit**, p.233
41 **Ibid.,** pp.237-239.
42 **Ibid., pp.246-250.**
43 **Ibid., pp.256-258.**
44 **Ibid., pp.266-267.**
45 நேர்காணல் ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2012.
46 Constantin Stanislavsky, **Building A Character**, Routledge, New York, 1936, pp.1-4.

47 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.21
48 Constantin Stanislavsky, **Building A Character**, p.7
49 ஆய்வாளர் உரை, **கர்ணன் 150 நாள் வெற்றி விழா** நாள் 04.08.2012.
50 Constantin Stanislavsky, **Building A Character**, p.33
51 சிதம்பரம் செட்டியார், வி.என்., **கர்ணன் டிரைலர் வெளியீட்டு விழா**, நாள் 20.02.2012
52 Constantin Stanislavsky, **Building A Character**, p.37
53 **Ibid.**, pp.59, 74
54 kvivekshankar.wordpress.com.
55 Constantin Stanislavsky, **Building A Character**, pp.78-79
56 **Ibid., pp.155, 176**
57 நாராயணன், அறந்தை., **தமிழ் சினிமாவின் கதை**, ப.375
58 Constantin Stanislavsky, **Building A Character**, pp.155, 160
59 **Ibid.**, pp.177-179
60 **Ibid.**, pp.189-193
61 **Ibid.**, p.206
62 **Ibid.**, pp.248-249
63 **Ibid.**, p.274
64 சிவகுமார், **இது ராஜபாட்டை அல்ல**, அல்லயன்ஸ், சென்னை, 2004, ப.484
65 Constantin Stanislavsky, **Building A Character**, p.276
66 **Ibid.**, p.313
67 Constantin Stanislasky, **Creating a Role**, Routledge, Newyork, 1961, pp. 3-34
68 **Ibid.**, pp.44-81.
69 **Ibid.**, pp.85-106
70 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, பப.143-144
71 சிவாஜி கணேசன், **மு.கூ.நூ**, பப,110-112.
72 வந்தியத்தேவன், கா., **மு.கூ.நூ.**, ப.76.
73 **மேலது.**, ப.66
74 சிவாஜி கணேசன், **மு.கூ.நூ**, பப,116-119.
75 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.149
76 **வீரபாண்டியக் கட்டபொம்மன் நாடக திரைப்பட மலர்**, ஆகஸ்ட் 2004, ப.8
77 **மேலது.**, ப.11
78 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.68
79 வந்தியத்தேவன், கா., **மு.கூ.நூ.**, பப.38-39.
80 **மேலது.**, ப.41
81 தொலைப்பேசிப் பேட்டி, லெனின், படத் தொகுப்பாளர், நாள் 12.10.2015
82 சிவக்குமார், **தமிழ் சினிமாவில் தமிழ்**, அல்லயன்ஸ், சென்னை, 2011, பப.10-11.
83 Dhananjayan, op.cit., p.183.
84 ஆய்வாளர் பேசியது, **கர்ணன் 150வது நாள் வெற்றி விழா**, நாள்: 04.08.2012.
85 Maruthumohan, K.V.S., loc.cit.,
86 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, பப.225-226
87 **மேலது.**, ப.201
88 **மேலது.**, ப.110
89 **மேலது.**, ப.206
90 **மேலது.**, ப.111
91 **மேலது.**, ப.186
92 **மேலது.**, பப.124-125
93 நேர்காணல், வியட்நாம்வீடு சுந்தரம், நாள் 12.10.2014.
94 கிரி சண்முகம், சிவாஜி கணேசன் தம்பி மகன், நாள் 12.10.2013
95 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.** ப.89.

96 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.192

97 **மேலது.**, ப.193

98 நேர்காணல் ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2013

99 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.186

100 நேர்காணல், புனிதா பிரபு, சிவாஜி கணேசனின் மருமகள், 1.10.2012

101 நேர்காணல் ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2011

102 இயக்குநர் பீம்சிங், **பேசும் படம்**, ஜனவரி 1962

103 நாராயணன், அறந்தை., **தமிழ் சினிமாவின் கதை**, ப.693

104 **மேலது.**, ப.692

105 www.qwora.com/tamilcinema-kollywood

106 நடிகர் சோ, **குமுதம்**, பப.90-96, 20.03.2011

107 ஜீவன், **சிவாஜியின் நடிப்பிலக்கணம்**, மணிமேகலைப் பிரசுரம், சென்னை, 1997, ப.309.

108 நேர்காணல், நடிகர் சிவகுமார், நாள் 29.11.2015

109 நடிகர் எம்.என். நம்பியார், **பொம்மை**, 1986

110 **சினிமா எக்ஸ்பிரஸ்**, நாள் 15.11.1984

111 Dhananjayan, op.cit., p.247.

112 **தினத்தந்தி**, நாள் 30.09.2001

113 நேர்காணல், இயக்குநர் பாரதிராஜா, நாள் 05.09.2015

114 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, பப.205-206

115 **மேலது.**, ப.202

116 **மேலது.**, ப.114

117 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.** பப.201-203.

118 **நடிகன் குரல், நடிகர் திலகம் சிவாஜி கணேசன் உலக வெற்றி உலா மலர்**, ஆகஸ்ட் 1962

119 **பேசும் படம்**, ஜனவரி 1962

120 **நடிகன் குரல், சிவாஜி கணேசன் உலக வெற்றி உலா மலர்**, ஆகஸ்ட் 1962

121 **பேசும் படம்**, ஜூன் 1975

122 **சினிமா எக்ஸ்பிரஸ்**, 15.11.1984

123 **சினிமா எக்ஸ்பிரஸ்**, 15.10.1984

124 நேர்காணல், வியட்நாம்வீடு சுந்தரம், நாள் 12.10.2014.

# இயல் - ஐந்து

## அரசியலில் சிவாஜிகணேசனின் நிலைப்பாடு

முன்னுரை

தமிழ்நாட்டு அரசியலில் நாடகம் மற்றும் திரைப்படங்களின் பங்கு மிக முக்கியமானதாகும். தமிழ்த் திரையுலகிலிருந்து முதல்வராக பதவியேற்றவர்களான சி.என். அண்ணாத்துரை, மு.கருணாநிதி, எம்.ஜி. இராமச்சந்திரன், திருமதி. ஜானகி இராமச்சந்திரன் மற்றும் செல்வி. ஜெயலலிதா போன்றவர்களின் அரசியல் வரலாறே அதற்கு சாட்சியாகும்.

காந்திஜியின் கொள்கைகள் மற்றும் கருத்துக்கள் மக்களிடையே மிக விரைவாக சென்றடைய தமிழ்நாட்டு நாடக மற்றும் திரைப்பட நடிகர்கள் பெரும் பணியாற்றினார்கள்.

அதுபோல் இந்திய நாட்டின் சுதந்திரத்திற்கு முன் திரைப்படத் துறையில் நுழைந்து சமூக மறுமலர்ச்சிக்கான கருத்துக்களையும் கொள்கைகளையும் மிக வேகமாக மக்களிடையே பரப்பியவர்கள் திராவிடக் கழகத்தினர் ஆவர்.

1947ல் இந்திய நாட்டின் அதிகாரத்தில் இருந்த காங்கிரஸ் கட்சியை திராவிடர் கழகத்திலிருந்து பிரிந்து 1949ல் துவக்கப்பட்ட திராவிட முன்னேற்றக் கழகத்தினர் 19 ஆண்டுகளுக்குள் திரைப்பட நடிகர்களை ஈடுபடுத்திக்கொண்டு தேர்தலில் தோற்கடித்தனர்.

திராவிட கழகத்தின் புகழுக்கும், திராவிட முன்னேற்றக் கழகத்தின் வெற்றிக்கும் அடிப்படைக் காரண கர்த்தாக்களாக விளங்கியவர்கள் சி.என். அண்ணாத்துரையும், மு. கருணாநிதியும் ஆவர்.

மிகச்சிறந்த பேச்சாளர்களாகவும் எழுத்தாளர்களாகவும் விளங்கிய அவர்களது கதை, திரைக்கதை மற்றும் வசனங்கள் தமிழ்த் திரையுலகில் பெரும் மாற்றத்தை உருவாக்கின. ஆரம்பக் காலத்தில் அவர்களது தமிழ் வசனங்களை என்.எஸ். கிருஷ்ணன், கே.ஆர். இராமசாமி, எம்.ஜி. இராமச்சந்திரன் போன்ற நடிகர்கள் பேசி நடித்துத் தங்களையும் தங்கள் சார்ந்த இயக்கத்தையும் புகழ் பெறச் செய்தனர்.

அந்த வரிசையில் நடிகராக அறிமுகமாகி தனது அற்புதமான நடிப்பாற்றலால், வசனம் பேசும் முறையால், தமிழ் உச்சரிப்பால் திராவிட முன்னேற்றக் கழகம் தமிழக அரசியல் உலகில் பெரும் இயக்கமாக காலூன்றச் செய்த பெருமைக்குரியவர் சிவாஜி கணேசன் ஆகும்.

அரசியலும் திரைப்படத்துறையும் பிரிக்க முடியாத சக்திகளாக விளங்கி வந்தக் காலத்தில் சிவாஜி கணேசன் மேற்கொண்ட நிலைப்பாட்டினை விளக்குவதாக அமைகிறது இந்த இயல்.

கலைஞர்களும் காங்கிரஸ் கட்சியும் (1922 - 1947)

இந்திய தேசியக் காங்கிரஸ் கட்சி 1885ல் பம்பாயில் ஆரம்பிக்கப்பட்டது. ஆசியாவில் தோன்றிய மிகப் பழமையானக் கட்சிகளுள் கம்யூனிச கொள்கைகளுக்கு மாறானக் கட்சி அதுவாகும்.[1]

1920ல் மோகன்தாஸ் காந்தி தென்னாப்பிரிக்காவில் நிறவெறியை எதிர்த்தும் இந்திய சமுதாயத்தினரின் உரிமைகளுக்காகவும் போராடிய பின் இந்தியா திரும்பினார். 1921ல் இந்திய தேசிய காங்கிரஸ் கட்சியின் தலைமைப் பொறுப்பேற்றார். இந்தியாவின் சுதந்திரம் என்பது சமூக மாற்றங்களில்தான் உள்ளது. வறுமை, பெண்ணுரிமை, மத நல்லிணக்கம், தீண்டாமை இவற்றை ஒழித்தால்தான் சுயராஜ்யத்தை நிறுவ முடியும் என்று முடிவெடுத்தார். அதற்குத் தடையாக உள்ள ஆங்கிலேயர் ஆட்சிக்கு எதிராக 'ஒத்துழையாமை' மற்றும் 'அகிம்சை' என்ற ஆயுதங்களை கையில் ஏந்தினார்.

காந்தியின் கொள்கைகள் பத்திரிக்கைகள் மூலம் மிக வேகமாக மக்களிடையே பரவின. வயது வித்தியாசம் இல்லாமல் ஏழை, பணக்காரர் வேறுபாடின்றி அனைவரும் சகலவிதமானத் தியாகங்களை செய்வதற்கு தயாராக இருந்தனர். ஆனால் கல்வியறிவு அற்ற கிராமப்புற மக்களிடையே காந்தியின் கொள்கைகளை பரவவிடக் காங்கிரஸ் கட்சி நாட்டுப்புறக் கலைகளான பாடல், ஆடல், கூத்து முதலானவைகளைப் பயன்படுத்தியது.

திரைப்படங்கள் அறிமுகமாவதற்கு முன்பும், அறிமுகமான சில ஆண்டுகளிலும் நாடக உலகில் இருந்த கலைஞர்கள் காந்தியின் கொள்கைகளினால் கவரப்பட்டுத் தங்களுடைய நாடகங்களின் மூலமாகத் தேசீய உணர்வினை மக்களிடையே பரப்பினார்கள்.[2] டி.கே. சண்முகம் குழுவினர் 1922ல் நடித்த "கதரின் வெற்றி' தமிழ்நாட்டில் முதன்முதலாக நடைபெற்றத் தேசீய சமூக நாடகம் ஆகும்.

"சீரான இந்தியாவில் பேர்போன
தொழில் களெல்லாம்
செத்துக் கிடக்கும் இந்த
சீர்குலைந்த நாளையிலே

சேர்ந்த நாட்டின் பெருமை

செப்புவேன் கேளருமை

தீருமே நம் வறுமை[3]

இந்தியாவில் மட்டுமன்றி, ஆங்கிலேயர்களின் தலைநகரான லண்டனில் 1923 ஆம் ஆண்டில் நடைபெற்ற "வெம்பிலி கண்காட்சி"யில் இந்தியாவில் ஆங்கிலேயர்களால் நடத்தப்படும் ஆட்சியில் மக்கள் அடையும் தொல்லைகளை விளக்கும் "கதரின் வெற்றி", "தேசியக் கொடி" ஆகிய நாடகங்களை எழுதி நடத்தித் தன் தேசபக்திக் கடமையைச் செய்தவர் கிருஷ்ணசாமிப் பாவலர்.[4] மதுரை ஸ்ரீ பாலகானசபாவில் சிவாஜி கணேசன் இளம் வயதில் நாடக நடிகராக நடித்தக் காலத்தில் பரமக்குடியில் "கதரின் வெற்றி" நாடகத்தில் நடித்ததையும், அந்த நாடகத்தை அக்காலத்தில் தேசபக்தர்களாக விளங்கிய காமராஜர் மற்றும் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் பார்த்து ரசித்ததையும் தனது சுயசரிதையில் கூறினார்.[5]

ஆரிய கான சபையினரால் "சதிசுலோசனா" நாடகம் நடத்தப்பட்டது. அதில் நடித்த மன்னார்குடி எம்.ஜி. நடராஜபிள்ளை காந்தி அறிவித்த உப்புச் சத்தியாகிரகத்தில் கலந்துகொண்டு ஓராண்டு சிறைத்தண்டனை பெற்றார். அந்த நாடகத்தில் பெண் வேடத்தில் நடித்த கே.எஸ். அனந்தராமய்யர் என்ற நடிகர் நாடகத் துவக்க காட்சியில் "காப்பி ரப்பர் தேயிலை கரும்புத் தோட்டக் காட்டினிலே கூப்பிட்டு நம் இந்தியரைக் கூலியென்று பேர் கொடுத்து ஐயையோ செய்யுகின்றார் கொடுமைதன்னை" என்ற பாடலைப் பாடியதற்காகச் சிறைத்தண்டனைப் பெற்றார்.[6]

நாடக உலகில் புகழ் பெற்ற எஸ்.ஜி. கிட்டப்பா, கே.பி. சுந்தராம்பாள் தாங்கள் நடிக்கின்ற ஒவ்வொரு நாடகங்களின் முடிவிலும் "ரகுபதி ராகவ ராஜாராம்" என்ற பாடலை பாடி முடிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்.[7]

திரைப்படங்கள் இந்தியாவில் 1930களில் மக்களைக் கவர்ந்திழுக்கும் சக்திமிக்க ஊடகமாக வளர்ந்தது. பொழுதுபோக்கும் ஊடகம் மட்டுமின்றி திரைப்படங்கள் சமுதாயத்தின் இழி நிலைகளையும் படம் பிடித்து காட்டுவதற்குப் பயன்பட்டது. தமிழ் சினிமா பெற்ற அசுர வளர்ச்சியும் அதன் மூலம் மக்களிடையே பிரபலமடைந்த நடிகர்களும் தேசிய உணர்வுகளால் உந்தப்பட்டு தேசிய அரசியலில் பங்கேற்றனர்.[8]

1931ல் நடிகைகள் எம்.ஆர். சந்தானலட்சுமி மற்றும் எம்.கே. கமலவேணி ஒத்துழையாமை இயக்கப் போராட்டங்களில் பங்கேற்று சிறைத்தண்டனை பெற்றனர்.[9] 'சதிலீலாவதி' (1936) என்ற படத்தில் நடிகர் எம்.வி. மணி ராஜகோபாலாச்சாரியருடன் பல மேடைகளில் தோன்றி காந்திய கொள்கைகளைப் பற்றி உரையாற்றினார். அவர் திரைப்பட நடிகர்களை ஒருங்கிணைத்து, சங்கம் அமைத்து காங்கிரஸ் கட்சியின் அலுவலகத்தில் முதல் கூட்டத்தை 1938இல் நடத்தினார்.[10]

மேலும் நாடக மற்றும் திரைப்பட நடிகர்களை காங்கிரஸ் கட்சியின் நடவடிக்கைகளில் ஈடுபட வைத்தவர் எஸ். சத்தியமூர்த்தி ஆவார். அவரே பம்மல் சம்பந்த முதலியாரின் 'மனோகரா' நாடகத்தில் நடித்தார்.[11]

அவர் நாடக மற்றும் திரைப்பட விழாக்களில் அனைத்திலும் தவறாமல் கலந்து கொள்ளும் பழக்கம் கொண்டிருந்தார். கலைஞர்களின் பிரச்சனைகளைச் சட்டமன்றத்தில் எதிரொலித்தார். நடிகர் நாகையாவை தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியின் பிரதிநிதியாக கௌஹாத்தி காங்கிரஸ் மாநாட்டில் கலந்துகொள்ளச் செய்தார்.[12]

கலைத்துறையை இந்திய விடுதலைப் போராட்டத்தில் காங்கிரஸ் கட்சியின் ஒரு அங்கமாக உருவாக்கிட விரும்பினார். தென்னிந்திய திரைப்பட வர்த்தகச் சம்மேளனத்தின் தலைவராகவும் மெட்ராஸ் மாநகரத்தின் மேயராகவும் பதவி வகித்த அவர் சமுதாய மாற்றங்களைத் திரைப்படங்கள் கொண்டு வர வேண்டும் என வலியுறுத்தினார்.[13]

நடிகர் எம்.ஜி. இராமச்சந்திரன் முதன்முதலாக நடித்த 'சதிலீலாவதி'யில் (1936) காந்தியின் கைராட்டினத்திற்கும், கதர் ஆடைக்கும் விளம்பரம் பெறும் வகையில் ஒரு பாடல் இடம் பெற்றது.[14]

அக்காலத்தில் பெரிய வெற்றி நடிகராக விளங்கிய பி.யு. சின்னப்பா நடித்த 'உத்தமபுத்திரன்' (1940) படத்தில் பாரதியாரின்

"செந்தமிழ் நாடெனும் போதினிலே
இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே" என்ற பாடல் இடம் பெற்றது.[15]

இவ்வாறு நாடக, நடிகர்களின் பங்கினை இந்திய விடுதலைக்கு மற்றும் காங்கிரஸ் கட்சியின் செயல்பாடுகளுக்கு வேண்டிய ஆதரவினைப் பெற்றுத் தந்த சத்தியமூர்த்தி 1943இல் இறந்தார். அது காங்கிரஸ் கட்சிக்கும் கலைத்துறைக்கும் இருந்த உறவை வெகுவாகப் பாதித்தது. அடுத்த நான்கு ஆண்டுகளில் இந்தியா சுதந்திரம் பெற்றது.[16]

அக்காலத்தில் காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரை ஆங்கிலேயரிடம் இருந்து விடுதலை பெற வேண்டும் என்ற எண்ணம் மக்களிடையே வெகுவாகப் பரவி இருந்தது. அத்துடன் காந்தியின் 'ஒத்துழையாமை' மற்றும் 'அகிம்சை' ஆகிய இரண்டு கொள்கைகள் மக்களின் மனதில் இடம் பெற்றன. மேலும் தங்களுக்குப் பிடித்த நாடக, திரைப்பட நடிகர்கள் தேசபக்தியை வளர்க்கும் வண்ணம் கதாபாத்திரங்களையும், தேசிய பாடல்களையும் ஏற்று நடித்துப் பாடியதைக் கேட்ட மக்களின் மத்தியில் காங்கிரஸ் கட்சி பெரும் செல்வாக்குப் பெற்றது. அந்த நிலை சுதந்திரம் பெற்ற 1947 வரை நீடித்திருந்தது. ஆனால் பெரும் சக்தியோடு ஆட்சியில் அமர்ந்த காங்கிரஸ் கட்சி சுதந்திரம் அடைந்தபின் நாடக, திரைப்பட கலைஞர்களை ஆதரிக்கத் தவறியது.[17] அதனால் பிற்காலத்தில் அக்கட்சி ஆட்சியை இழக்க நேரிட்டது. கலைஞர்களை ஆதரிக்கத் தவறியக் காங்கிரஸ் கட்சியின் தவறை தங்களுக்குச் சாதகமாக தமிழக அரசியலில் பயன்படுத்தி வெற்றி கண்ட இயக்கம் திராவிட இயக்கம் ஆகும்.

**கலைஞர்களும் திராவிட இயக்கமும்**

1925இல் ஈ.வெ. இராமசாமியால் துவக்கப்பட்டச் சுயமரியாதை இயக்கம் 1935இல் அண்ணாத்துரையின் வரவால் மக்களின் மத்தியில் செல்வாக்கு பெறத் துவங்கியது.[18] 1944 ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 27 ஆம் நாள் சேலத்தில் நடைபெற்ற நீதிக்கட்சி மாநாட்டில், அண்ணாத்துரையால் கொண்டுவரப்பட்டத் தீர்மானத்தால், நீதிக்கட்சி திராவிடர் கழகம் எனப் பெயர் மாற்றம் பெற்றது.[19] திராவிட இயக்கத்தின் முக்கிய தலைவரான சி.என். அண்ணாத்துரை மேடைப்பேச்சில் புதிய முறையைக் கையாண்டு வந்தார். அவருக்கு அடுத்த நிலையில் இருந்த மு. கருணாநிதியும் பேச்சாற்றல் மிக்கவராக விளங்கினார். இருவரும் பேச்சாற்றல் மட்டுமல்லாது மிகச் சிறந்த எழுத்தாளர்களாகவும் விளங்கினர். அவர்களது பேச்சுக்களையும், எழுத்துக்களையும் **'புரட்சி', 'விடுதலை', 'குடியரசு'** போன்ற திராவிட இயக்கத்தின் ஏடுகள் பெரிய அளவில் வெளியிட்டு வந்தன.

அண்ணாத்துரை மற்றும் கருணாநிதியின் ஆற்றல் மிக்க மேடைப் பேச்சுக்கள் மக்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றன. அவர்களின் எழுத்துக்களில் இருந்தக் கருத்துக்கள் மக்களின் மத்தியில் பிரபலமடைந்தன. இந்திய விடுதலைப் போராட்டத்தில் காந்தியின் கொள்கைகள் நாடகம் மற்றும் திரைப்படங்களின் மூலம் பரவிய வேகத்தை அறிந்திருந்த அண்ணாத்துரை திராவிடக் கழகத்தின் நிதிக்காக நாடகம் மற்றும் திரைப்படங்களை நோக்கித் தன் கவனத்தை திருப்பினார். அதை செயல்படுத்தும் விதத்தில் **'சந்திரோதயம்'**

‘வேலைக்காரி’, ‘ஓர் இரவு’ போன்ற நாடகங்களை ‘திராவிடர் நடிகர் கழகம்’ என்ற அமைப்பின் மூலம் மக்கள் மத்தியில் அரங்கேற்றினார். 1943 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 11 ஆம் நாள் ‘சந்திரோதயம்’ என்ற முதல் நாடகம் ஈரோட்டில் அரங்கேற்றமானது.[20] 1945இல் சிவாஜி கண்ட இந்து ராஜ்ஜியம் என்ற நாடகத்தை எழுதினார். அதில் நடித்த கணேசன் ‘சிவாஜி’ கணேசன் ஆனார்.[21]

அண்ணாத்துரையின் ‘ஓர் இரவு’ என்ற நாடகத்தைப் பார்த்த கல்கி பத்திரிகை ஆசிரியர் கிருஷ்ணமூர்த்தி அண்ணாத்துரையை பெர்னாட்ஷா என்றும், தென்னகத்தின் இஸ்பன் என்றும் மற்றும் கால்ஸ் வொர்த்தி எனத் தனது விமர்சனத்தை எழுதினார்[22] அண்ணாத்துரை எழுதிய நாடகங்கள் அடைந்த வெற்றி அவரை அந்த நாடகங்களைத் திரைப்படங்களாக உருவாக்கும் அடுத்த நிலைக்கு தூண்டியது எனலாம். ஆயிரம் பொதுக் கூட்டங்களை ஒரு நாடகத்திற்கு இணையானதாகக் கூறிய அவர் இயக்கத்தின் கொள்கைகள் அந்த நாடகங்களைக் காட்டிலும் பன்மடங்கு வேகத்தில் லட்சக்கணக்கான மக்களைச் சென்றடையச் செய்யும் சக்தி வாய்ந்த ஊடகம் திரைப்படம் என்பதைப் புரிந்து கொண்டார்.

‘ஆண்டான் அடிமை’ மற்றும் ‘சமத்துவ சமுதாயம்’ போன்றக் கருத்துக்களை உள்ளடக்கிய “நல்லதம்பி” என்ற படத்தை நடிகர் என்.எஸ். கிருஷ்ணன் உமா பிக்சர்ஸ் என்ற நிறுவனத்துடன் இணைந்து தயாரித்தார். அப்படத்திற்கு அண்ணாத்துரை திரைக்கதை, வசனம் எழுதினார். அவரின் எழுத்துக்கள் மக்களிடையே நல்ல வரவேற்பைப் பெற்றன. “நல்லதம்பி” 1949 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் இரண்டாம் தேதி வெளிவந்தது.[23] 1949 ஆம் ஆண்டில் பிப்ரவரித் திங்கள் இருபத்தி ஐந்தாம் நாள் அண்ணாத்துரையின் சக்தி மிக்க வசனங்களோடு வெளிவந்த படம் ‘வேலைக்காரி’ ஆகும். கதாநாயகனாக கே.ஆர். இராமசாமி நடித்தார். உழைப்பாளரின் உழைப்பால் சமூகம் உயரவேண்டும், சாதி, மதம் ஒழிய வேண்டும், நீதித்துறை செயல்பாட்டில் இருக்கும் குறைபாடுகள் நீங்க வேண்டும் போன்ற கருத்துக்களை தன் வசனங்களால் கூர்மை தீட்டினார்.

“சட்டம் என்பது ஒரு இருட்டறை,
அதில் வக்கீலின் வாதம் ஒரு விளக்கு,
ஏழைகள் பெற முடியாத விளக்கு’,

போன்ற வசனங்கள் அப்படத்தில் இடம் பெற்றிருந்தன. தமிழ்த் திரையுலகில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்திய படமாக அது அமைந்தது.[24]

1949 ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 17 ஆம் நாள் திராவிட இயக்கத்திலிருந்து பிரிந்து, திராவிட முன்னேற்றக் கழகம் எனும் புதிய அரசியல் கட்சியை அண்ணாத்துரை தனது ஆதரவாளர்களுடன் துவக்கினார். தமிழ்த் திரையுலகிலிருந்து, என்.எஸ். கிருஷ்ணன், கே.ஆர். ராமசாமி போன்ற நடிகர்கள் அண்ணாத்துரையின் புதிய கட்சியில் இணைந்தனர். அவ்வமயம் சிவாஜி கணேசன் திராவிட முன்னேற்றக் கழகத்தில் அனுதாபியாக இருந்தார். நடிகவேள் எம்.ஆர். ராதா மட்டும் தன் இறுதிக் காலம் வரை ஈ.வெ. இராமசாமி தோற்றுவித்த திராவிடக் கட்சியில் நிலையாக இருந்தார். திராவிட முன்னேற்றக் கழகத்தின் முக்கியக் கொள்கைகளாக தமிழ் இனம் மற்றும் தமிழ் மொழி காக்கப்பட வேண்டும் என அறிவிக்கப்பட்டன. 1947 அக்டோபர் 14 ஆம் நாள் கடலூரில் நடைபெற்றத் திராவிடர் கழகத்தின் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட "திராவிட நாடு தனி நாடாக வேண்டும்" என்ற தீர்மானத்தின் அடிப்படையில் திராவிட நாடு திராவிடர்க்கே என்ற முழக்கம் இங்கும் எழுந்தது.[25]

1951 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் ஏ.வி.எம். நிறுவனம் தயாரித்து நடிகர் கே.ஆர். ராமசாமி நடித்து, அண்ணாத்துரை திரைக்கதை, வசனம் எழுதி வெளிவந்த 'ஓர் இரவு' திரைப்படம் வெற்றிப் பெற்றது.[26]

1954 ஆம் ஆண்டு அண்ணாத்துரை கதை மற்றும் திரைக்கதை, வசனம் எழுதி வெளிவந்த படம் 'சொர்க்கவாசல்' ஆகும் அதில் நடித்தவர் நடிகர் கே.ஆர். ராமசாமி ஆவார். அந்தப் படத்தின் டைட்டிலில் 'அறிஞர்' என்ற பட்டத்துடன் அவர் பெயர் வந்தது. முன் குறிப்புகள் ஏதுமின்றி உலக விஷயங்களைப் பற்றி மணிக்கணக்காக பேசும் ஆற்றல் பெற்றிருந்த அவருக்கு 'கல்கி' பத்திரிகையின் ஆசிரியர் 'அறிஞர்' பட்டம் அளித்தார்.[27] அந்தப் படத்தில் தமிழ் மொழியின் சிறப்பினையும், தமிழ் நாட்டின் பெருமையையும் தன் எழுத்தாற்றலில் அழகுபடக் கூறியிருந்தார். அண்ணாத்துரையின் புகழ் பன்மடங்காக உயர்ந்தது.

"Pride and Passion" என்ற ஆங்கிலப் படத்தை பார்த்த அண்ணாத்துரை, "இதுபோன்று நான்கு படங்களைத் தணிக்கை செய்யாமல் வெளியிட அனுமதித்தால் 'திராவிட நாட்டை' என்னால் அடைய முடியும்" என்று கூறினார்.[28] சினிமா என்ற ஊடகத்தின் வலிமையை நன்கு உணர்ந்த அவரும் அவருடைய அடுத்த நிலைத் தலைவர்களும் சேர்ந்து திராவிட முன்னேற்றக் கழகத்தை அக்கட்சி ஆரம்பித்து 18 வருடங்களில் ஆட்சியில் அமரச் செய்தார்கள்.

1947ல் வெளிவந்த ஜுபிடர் பிக்சர்ஸின் 'ராஜகுமாரி' படத்தில் மு.கருணாநிதி துணை வசனகர்த்தாவாக அறிமுகம் ஆனார்.[29] அதில் எம்.ஜி. இராமச்சந்திரன் கதாநாயகனாக நடித்தார். தமிழ் இலக்கியங்களில் ஒன்றான 'குண்டலகேசி'யைத் தழுவி அவர் எழுதிய 'மந்திரிகுமாரி' நாடகத்தை சேலம் மாடர்ன் தியேட்டர்ஸ் 1950இல் படமாக எடுத்தார்கள். திராவிட இயக்கத்தின் பிராமண எதிர்ப்புக்கு வளமானக் களமாக 'ராஜகுரு' பாத்திரத்தை உருவாக்கினார்.

'பூனை எலியைக் கவ்வாமலிருந்தால், பாம்பு
தவளையை பிடிக்காமல் இருந்தால் நானும்
கொலை செய்வதை நிறுத்துவேன்
கொலை ஒரு கலை' என்ற வசனங்கள் பிரபலமடைந்தன.[30]

**திராவிட இயக்கமும் சிவாஜி கணேசனும்**

1940இல் நடிகவேள் எம்.ஆர். ராதாவின் "சரஸ்வதி கான சபா" வில் சிவாஜி கணேசன் நடிகராக இருந்தார். அந்த சபாவின் நாடகங்கள் ஈரோட்டில் நடத்தப்பட்டபோது, திராவிட இயக்க நிறுவனத் தலைவரான ஈ.வெ. இராமசாமி நாயக்கர் மற்றும் அண்ணாத்துரை, ஈ.வெ.கி. சம்பத், மு.கருணாநிதி, என்.எஸ். கிருஷ்ணன், கே.ஆர். ராமசாமி போன்றவர்களின் அறிமுகம் சிவாஜி கணேசனுக்கு கிடைத்தது.[31]

திராவிட இயக்கத்தலைவர் மற்றும் அந்த இயக்கத்தின் முக்கியமானவர்களின் அறிமுகம் கிடைத்தும் அந்த இயக்கத்தின் கொள்கைகளுக்கு ஆதரவாகவோ, அந்தக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டவராகவோ சிவாஜி கணேசன் இருக்கவில்லை. அவர் தன் பணி நடிப்பது ஒன்றுதான் என்று ஈரோட்டிலிருந்து ராதாவின் கம்பெனி கலைக்கப்பட்டப் பின் கேரளாவுக்கு சென்று நடிக்க ஆரம்பித்தார். சில ஆண்டுகளுக்குப் பின் 'மங்கள கான சபா'வில் சேர்ந்து சென்னை வந்தார். அந்த நாடகக் கம்பெனி நஷ்டமடைந்து போகவே என்.எஸ்.கிருஷ்ணன் அதனை வாங்கி நடத்தினார். அந்த நாடகக் கம்பெனியில் நடிகர் கே.ஆர். ராமசாமி, நடிகர் டி.வி. நாராயணஸ்வாமி போன்ற திராவிட இயக்க நடிகர்களோடு நடித்தார்.[32] என்.எஸ்.கிருஷ்ணன் கொலை வழக்கில் தண்டனை பெற்று சிறைத் தண்டனை பெற்றபின் அங்கிருந்து காஞ்சிபுரம் சென்று 'திராவிட நாடு' பத்திரிக்கை அலுவலகத்தில் தங்கினார். அப்பொழுதும் திராவிட இயக்கத்தின் கொள்கைகளை ஏற்றுக் கொள்ளவில்லை.

அந்தக் காலக்கட்டத்தில் 1945 டிசம்பர்த் திங்கள் 15 ஆம் நாள் சென்னையில் நடைபெற்ற ஏழாவது சுயமரியாதை மாநாட்டில் அண்ணாத்துரை எழுதிய ‘சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்’ நாடகத்தில் நடிப்பதாக இருந்த எம்.ஜி. இராமச்சந்திரன் விலகிக் கொண்ட காரணத்தால் சிவாஜி கணேசன் நடித்தார். அவரின் சிறப்பான நடிப்பைப் பார்த்து ஈ.வெ. இராமசாமி ‘சிவாஜி’ எனும் பட்டத்தை அளித்தார். அந்த நாடகத்தில் நடித்துப் பின் சில காலம் அண்ணாத்துரையோடு காஞ்சிபுரத்தில் தங்கியிருந்தார். தனக்கு கிடைத்த பெருமைக்கு காரணம் அண்ணாத்துரைதான் என்ற நன்றியுணர்ச்சி மேலோங்கி இருந்த காரணத்தால் அவரோடு பொதுக்கூட்டங்களில் கலந்துகொண்டு திராவிடக் கழகத்தின் கருத்துக்களை மக்கள் மத்தியில் பேசி வந்தார். அப்போதுகூட திராவிடக் கழகத்தின் உறுப்பினராகவில்லை. ஒருமுறை காரில் சென்று கொண்டு இருந்தபோது, அண்ணாத்துரை “கணேசா நீ நடிப்புலகில் பல சாதனைகள் செய்யப்போகிறாய், உனக்கு அரசியல் பொருத்தமில்லை வேண்டாம்” என்று தீர்க்கதரிசனமாகக் கூறினார்.[33]

1952இல் ‘பராசக்தி’ படத்தில் கருணாநிதி எழுதிய வசனங்களும் அதை சிவாஜிகணேசன் பேசிய விதமும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு தமிழக அரசியலில் ஒரு முக்கிய தகுதியைப் பெற்றுத் தந்தது. திராவிட முன்னேற்றக் கழகத்தின் அடிப்படைத் தளமான தமிழ்ப் பண்பாட்டு விஷயங்களை தனது வசனங்களில் திறமையாக எடுத்துக் காட்டியிருந்தார் கருணாநிதி. அத்துடன் பகுத்தறிவுக் கொள்கை, கடவுள் மறுப்பு, கற்பு நெறி, பிச்சைக்காரர் மறுவாழ்வு போன்ற கருத்துக்களும் பராசக்தியில் இடம் பெற்றிருந்தன. அந்தப் படத்தின் வசனங்கள் தமிழ்த் திரையுலகில் முதன்முறையாக புத்தகமாகவும், ஒலித் தட்டுக்களாகவும் வெளியிடப்பட்டது. அதன் மூலம் தமிழ்நாட்டு மூலைமுடுக்களிலெல்லாம் திராவிடக் கொள்கைகள் பரவி தொண்டர்களின் மத்தியில் சிவாஜிகணேசன் தனி மதிப்பைப் பெற்றார். அவரை தமது கட்சியைச் சேர்ந்தவர் என்றே கழகத்தினர் கருதினர். ஆனால் சிவாஜி கணேசன் திராவிட முன்னேற்றக் கழகத்தின் அனுதாபியாக மட்டும் இருந்தார்.

1954இல் கருணாநிதியின் வசனங்களை சிவாஜி கணேசன் பேசி நடித்த ‘மனோகரா’வின் வெற்றி அவரை புகழின் உச்சிக்கு கொண்டு சென்றது. ஆரியர் வருகை, இந்தி திணிப்பு, தமிழ் மொழியின் சிறப்பு பெருமைகள் போன்ற கருத்துக்கள் அடங்கிய வசனங்களும் அவற்றை சிவாஜி கணேசன் பேசிய விதமும் திராவிட முன்னேற்றக் கழகத்தை எதிர்கால வெற்றியை நோக்கி நடை போட வைத்தது. சிவாஜிகணேசனும் திராவிட முன்னேற்றக் கழகமும் பிரிக்க முடியாத சக்திகள் என கட்சியின் அடிமட்டத் தொண்டர்கள் எண்ணினார்கள்.

அந்தச் சமயத்தில்கூட திராவிட முன்னேற்றக் கழகத்தின் உறுப்பினராகவில்லை. இது பற்றி அவர் தனது சுயசரிதையில் 'நான் திராவிடக் கழகத்திலோ, முன்னேற்றக் கழகத்திலோ எந்தக் காலத்திலும் சந்தா கட்டி உறுப்பினராக இருந்ததில்லை என பதிவு செய்தார்.[34] 'பராசக்தி', 'மனோகரா' படங்களுக்கு உயிரோட்டமான வசனங்களை எழுதித் தன் திரையுலக வாழ்விற்கு வழிகாட்டியவர் என்று கருணாநிதியிடம் இறுதி வரை நன்றி விசுவாசத்துடன் இருந்தார். பிற்காலத்தில் சிவாஜிகணேசன் முழுவதுமாக அரசியலை விட்டு விலகியிருந்த காலத்தில்கூட பெரியார், அண்ணாத்துரை, கருணாநிதி போன்ற தலைவர்களிடத்தில் மிகவும் மரியாதையுடன் இருந்து வந்தார். கலைஞர் கருணாநிதி முதலமைச்சராக இருந்த காலத்தில் அவருக்கு திரையுலகின் சார்பாக பவளவிழா கொண்டாடியபோது வாழ்த்துப் பேசினார் சிவாஜி கணேசன். அப்போது 'என் வயதில் இரண்டை நான் உனக்குத் தருகிறேன் நீ நீடூழி வாழ வேண்டும்' என வாழ்த்தினார்.[35]

1956இல் தமிழகத்தை தாக்கிய புயலால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக நிதி திரட்ட முடிவெடுக்கப்பட்டது. சிவாஜிகணேசன், விருதுநகர், சிவகாசி, தூத்துககுடி போன்ற நகரங்களில் சென்று தெருமுனைகளில் நின்று 'பராசக்தி' மற்றும் 'மனோகரா' பட வசனங்களை மக்கள் மத்தியில் பேசி நிதி திரட்டினார். அப்படித் திரட்டப்பட்ட நிதி திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த தலைவர்கள் மற்றும் நடிகர்கள் திரட்டிய நிதியைக் காட்டிலும் அதிகமாக சேர்ந்தது. நிவாரண நிதி திரட்டியவர்களுக்கு அண்ணாதுரை சென்னையில் ஒரு பாராட்டுக் கூட்டம் நடத்தினார். சிவாஜிகணேசன் அப்போது சேலத்தில் படப்பிடிப்பில் இருந்தார். தனக்கு ஓரிரு நாட்களுக்கு முன் அழைப்பு வரும் என்று காத்து இருந்தார். வரவில்லை. எனவே தொலைபேசியில் தனது தாயாரைத் தொடர்புகொண்டு விசாரித்தார். அவரது தாயாரும் தகவல் இல்லை என்று கூறியதும் விழா நாளன்று சேலத்திலிருந்து புறப்பட்டு மாலை நான்கு மணியளவில் சென்னை வந்து சேர்ந்தார். தன்னை யாராவது நேரில் அழைக்க வருவார்கள் என்று காத்திருந்தார். இறுதிவரை யாரும் வரவில்லை. அந்த நிகழ்வு தனக்கு பைத்தியம் பிடித்தது போன்ற நிலையை உருவாக்கிவிட்டதாக தனது சுயசரிதையில் பதிவு செய்தார்.[36]

மேலும் சிவாஜிகணேசன் ஏன் வரவில்லை என்று அண்ணாத்துரை கட்சி நிர்வாகிகளிடம் கேட்டபோது, "கணேசனால் வரமுடியவில்லை என்று கூறிவிட்டார்கள் என்றும், அப்பொழுது அருகிலிருந்த கருணாநிதி கூட மௌனம் காத்துவிட்டார் என்றும் தனது சுயசரிதையில் பதிவு செய்தார்.[37]

மனதால் மிகவும் பாதிக்கப்பட்டு இருந்த சிவாஜிகணேசனை இயக்குநர் பீம்சிங் திருப்பதி வழிபாட்டிற்கு வற்புறுத்தி அழைத்துச் சென்றார். **"தினத்தந்தி"** பத்திரிக்கையில் தலைப்புச் செய்தியாக "நாத்திக கணேசன் ஆத்திகனாக மாறினார்" என வந்தது. அதைத் தொடர்ந்து சென்னையில் எங்கு பார்த்தாலும், "திருப்பதி கணேசா, கோவிந்தா" என்று எழுதினார்கள். அதன்பின் அவர் நடித்த படங்களின் சுவரொட்டிகள் மீது சாணி அடித்தார்கள்.[38]

இளவயதிலிருந்து திராவிட கழகம், திராவிட முன்னேற்றக் கழகத்தின் இயக்க நடவடிக்கைகளில் ஒரு அனுதாபியாக இருந்த சிவாஜிகணேசன் தன்னை ஒதுக்கிவிட்டார்கள் என்றும் தூக்கியெறியப்பட்டேன் என்றும் கூறினார். "என்னால் அவர்களை பின்பற்ற முடியவில்லை. அதனால் ஒதுங்கிக் கொள்கிறேன் என்று அறிக்கை கொடுத்தார்.[39] சிவாஜிகணேசனை அந்த விழாவுக்கு அழைக்காமல் அல்லது வரவிடாமல் தடுத்தவர்கள் யார் என்பது அவருக்குத் தெரிந்திருந்தும் இறுதிவரை அதை அவர் வெளியிடவில்லை.

தமிழ் சினிமாவின் வரலாற்றை ஆய்வு செய்த அறந்தை நாராயணன் சிவாஜிகணேசன் கழக பிரச்சார நடிகன் என்ற பந்தத்திலிருந்து, தான் விடுபட்டால்தான் பல்வேறு பட அதிபர்களின் படங்களில் நடிக்கிற வாய்ப்பு தனக்கு கிடைக்கும் என்று கருதியே திருப்பதி பயணத்தை மேற்கொண்டார் என்று திமுகவினர் குற்றஞ்சாட்டியதாக பதிவு செய்தார்.[40]

அறந்தை நாராயணனின் இந்தப் பதிவு ஏற்புடையதல்ல. திரைப்படம் தயாரிப்பது என்பது ஒரு பெரிய வர்த்தகமாக 1930களிலிருந்து இன்றுவரை வளர்ந்து வருகிறது. ஆங்கிலேயர்கள் ஆட்சியில் அவர்களுக்கு எதிரான காந்தியக் கொள்கைகள் அடங்கியத் திரைப்படங்களை ஜெமினி, ஏ.வி.எம். போன்ற நிறுவனங்கள் தயாரித்தன.

அதற்குக் காரணம் காந்தியக் கொள்கைகளை அப்பொழுது மக்கள் தங்களுக்குப் பிடித்த நடிகர்கள் பாடி நடித்ததை விரும்பிப் பார்த்தார்கள். அப்படங்கள் தயாரித்து வெளியிடப்பட்டன என்பது கொள்கை ரீதியானக் காரணங்களின் அடிப்படையில் அல்லாமல் லாபம் நோக்கம் கருதியே என்பதுதான் சரி.

1943லிருந்து திராவிட இயக்கத் தலைவர்களில் முக்கியமானவராக விளங்கினார் அண்ணாத்துரை. 1947லிருந்து 1967 வரை தமிழகத்தில் ஆட்சி செய்த கட்சி காங்கிரஸ். 1947க்கு பிறகு அவர் கதை வசனம் எழுதிய படங்களை மக்கள் விரும்பிப் பார்த்தார்கள். தயாரிப்பாளர்களுக்கு அதனால் பெரிய லாபம்

கிடைத்தது. ஏ.வி.எம். போன்ற நிறுவனங்கள், அண்ணாத்துரை எழுதிய 'ஓர் இரவு' நாடகத்தை திரைப்படமாக எடுத்தது லாபம் கருதித்தான் கொள்கை ரீதியாக அல்ல.

1952இல் திராவிட முன்னேற்றக் கழகத்தில் மற்றுமொரு முக்கியத் தலைவரான கருணாநிதி திரைக்கதை, வசனம் எழுதி சிவாஜிகணேசன் நடித்து வெளிவந்த 'பராசக்தி'யை ஏ.வி.எம். நிறுவனம் நேஷனல் பிக்சர்ஸுடன் இணைந்து எடுத்தது லாப நோக்கில்தான். அன்றைய சென்னை மாகாணத்தின் முதல்வராக இருந்த ராஜகோபாலாச்சாரியார் ஒரு பிராமணர். இருப்பினும் பிராமணீயத்தை கடுமையாகச் சாடிய வசனங்கள் அதிகமாக இருந்த படமான பராசக்தியை தயாரித்தார்கள். கருணாநிதியின் வசனங்களின் தன்மை தெரிந்தும் ஏ.வி. மெய்யப்ப செட்டியார் பராசக்தி தயாரிப்பிற்குப் பண முதலீடு செய்தார். அந்த முதலீட்டுக்கு லாபம் பெற்றார்.

ஏ.வி.எம். போல் பெரிய நிறுவனமாக விளங்கிய ஜூபிடர் பிக்சர்ஸின் பாகஸ்தர் சோமசுந்தரம், பராசக்தி வெற்றியைக் கண்டபின் சிவாஜிகணேசனை கதாநாயகனாக வைத்து 'மனோகரா' படம் எடுத்து வெளியிட்டு அதிக லாபம் கண்டார். அப்படத்தில் நடுவண் அரசின் கொள்கைகளை சாடிய வசனங்களும், ஆரிய, திராவிடக் கொள்கைகள் அடங்கிய வசனங்களும் இருந்தன.

திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்ட சிவாஜிகணேசனை வைத்து 1956இல் கருணாநிதி தனது மேகலா பிக்சர்ஸ் சார்பாக தயாரித்த 'ரங்கோன் ராதா' திரைப்படத்திற்கு அண்ணாத்துரை வசனம் எழுதினார். அந்தப்படத்தில் அவரே சிவாஜிகணேசனை நடிக்க வைக்கும்படி கேட்டுக் கொண்டார்.[41] அடுத்து 1958இல் திராவிட முன்னேற்றக் கழகத்தின் அடுத்த கட்ட தலைவர்களில் ஒருவரான முரசொலிமாறன் எழுதிய "அன்னையின் ஆணை" திரைப்படத்தில் சிவாஜி கணேசன் நடித்தார்.[42]

1960 ஆம் ஆண்டு சிவாஜி பிலிம்ஸ் அலுவலகத்திற்கு வந்து சிவாஜி கணேசனைச் சந்தித்த கருணாநிதி தான் எடுத்துக் கொண்டிருந்த 'குறவஞ்சி' படத்தில் நடித்துத் தருமாறு கேட்டுக் கொண்டார். அந்தப்படம் ஏற்கனவே நடிகர் ராஜேந்திரனை கதாநாயகனாக வைத்து எடுக்க ஆரம்பித்து இருவருக்கும் ஏதோ பிரச்சனை காரணமாக சிவாஜிகணேசனை சந்தித்துக் கேட்டார். சிவாஜிகணேசன், ராஜேந்திரன் உங்கள் கட்சிக்காரர், நான் பாதியில் இதில் நடித்தால் அவர் தவறாக நினைக்கமாட்டாரா என்று கேட்டார். அதற்கு கருணாநிதி அதைப்பற்றிக் கவலையில்லை, என் நண்பன் என்ற முறையில் நீதான் நடிக்க

வேண்டும் என்று வற்புறுத்தி சிவாஜிகணேசனை 'குறவஞ்சி'யில் நடிக்க வைத்தார். சிவாஜிகணேசனின் அந்தப்படம் 1960இல் வெளி வந்தது. கழகப் பிரச்சார நடிகர் என்று முத்திரை குத்தப்பட்டால் தன்னை பிற படத் தயாரிப்பாளர்கள் அணுகமாட்டார்களோ என்று அவர் நினைத்து விலகிக் கொண்டது உண்மையென்றால் மீண்டும் கருணாநிதியின் திரைக்கதை வசனத்தில் நடித்திருக்க மாட்டார். அந்த இடத்திலும் தன் திரையுலக வாழ்வின் வெற்றிக்கு கருணாநிதியின் வசனங்கள்தானே காரணம் என்று மீண்டும் தன் நன்றி விசுவாசத்தைக் காட்டினார். அந்த வருடத்தில் பல படத் தயாரிப்பாளர்கள் தயாரித்த 7 படங்களில் நடித்துக் கொண்டிருந்தார்.[43]

சிவாஜிகணேசன் எந்தக் கட்சிக்கு எதிராக 1967 பொதுத் தேர்தலில் பிரச்சாரத்தில் ஈடுபட்டாரோ அந்த திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சிக்கு வந்து 1968ல் முதலமைச்சராக அண்ணாத்துரை அமர்ந்தார். அப்போது ஏ.வி.எம். நிறுவனம் தயாரித்த 'உயர்ந்த மனிதன்' பட நூறாவது நாள் விழாவில் அண்ணாத்துரை வருகை தந்து

> "உங்களுக்கெல்லாம் தெரியுமோ என்னவோ, நூர்ஜஹான் வேடம் போட்டு சிவாஜிகணேசன் நாடகங்களில் நடித்தார். நடிகைகளெல்லாம் மிஞ்சும் விதத்தில் அவர் நடித்திருப்பதை நான் பார்த்திருக்கிறேன். 'இழந்த காதல்' நாடகத்தில் வேணி என்ற பெண் வேடம். பெண் என்பதால் ஏற்படக்கூடிய நாணம் ஒரு பக்கம். சற்று வயதான பெண் என்பதால் நாணத்தைச் சற்று மறந்துவிட்ட நிலை. இரண்டையும் இணைத்து வேணியாக வந்து மேடையில் சிவாஜிகணேசன் நடந்த நடை எனக்கு இன்னமும் பசுமையாக நினைவு இருக்கிறது. இந்த மலர் மலர்ந்த பிறகுதான் நீங்கள் பார்க்கிறீர்கள். இது மொட்டு விடும்போதே இது நன்றாக அரும்பி வாசனை கொடுக்கும் என்று எனக்குத் தெரியும். பெருமாள் முதலியார் கூட்டிக் கொண்டு வந்ததினால் திரையுலகிற்கு சீக்கிரம் வந்துவிட்டான். இல்லையென்றாலும் இரண்டு ஆண்டுகள் கழித்து சினிமாவுக்கு வந்திருப்பான். அவனுடைய வரவை யாராலும் தடுத்திருக்க முடியாது. மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணம் உண்டு. கணேசா என் அருமைத் தம்பி நீ எங்கிருந்தாலும் வாழ்க! "

என்று வாழ்த்திப் பேசினார்.[44]

ஏ.வி.எம். அந்தப் படத்தை தயாரித்த காரணம் மறுபடியும் வர்த்தக ரீதியானது தான். எக்காலத்திலும் சிவாஜிகணேசனின் நடிப்பாற்றல் என்பது நல்ல விலைக்குப் போன பொருள் ஆகும்.

எனவே சிவாஜிகணேசன் தன்னைக் கழகப் பிரச்சார நடிகர் என்ற பிடியிலிருந்து விலக்கிக் கொள்ள வேண்டும். அதன் மூலம் பல தயாரிப்பாளர்கள் படத்தில் நடிக்கலாம் என்று எண்ணி விலகினார் என்ற அறந்தை நாராயணனின் கருத்துப் பதிவு தவறானது.

**காங்கிரஸ் கட்சியும் சிவாஜிகணேசனும்**

திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து சம்பத், கண்ணதாசன், பழ. நெடுமாறன், எம்.பி. சுப்பிரமணியம் போன்றோர் 1961 ஏப்ரல், 9இல் விலகினார்கள்.

1961 ஏப்ரல் 19இல் 'தமிழ்த் தேசிய கட்சி' எனும் புதிய கட்சியை சம்பத் துவக்கினார். இந்த விழாவில் சிவாஜிகணேசன் கலந்துகொண்டு சம்பத்துக்கு ஆதரவு தெரிவித்தார். இது சம்பத்தின் பெரிய தந்தை ஈ.வெ. இராமசாமி, தனக்கு சிவாஜி பட்டம் அளித்தார் என்ற நன்றி பாராட்டத்தான் கலந்துகொண்டார் என்பது சரி ஆகும்.[45] பின்பு 1964இல் 'தமிழ்த் தேசிய கட்சி' காங்கிரசில் இணைந்தபோது சிவாஜிகணேசன் காங்கிரஸ் கட்சியின் உறுப்பினரானார்.

1944இல் ஈ.வெ. இராமசாமியால் துவக்கப்பட்ட திராவிடர் கழகம், மிக வேகமாக மக்களின் ஆதரவைப் பெற்றது. அதன்பின் 1949இல் அண்ணாத்துரையால் உருவாக்கப்பட்ட திராவிட முன்னேற்றக் கழகம் திரைப்படங்களின் மூலம் வேகமாக காங்கிரஸ் கட்சிக்கு அசுர பலம் பொருந்திய மாற்றுக் கட்சியாக படிப்படியாக வளர்ச்சி அடைந்து 1967 பொதுத் தேர்தலில் காங்கிரஸ் கட்சியை உறுதியாக தோற்கடிக்கப் போகும் கட்சியாகத் திகழ்ந்தது. அந்தத் தோல்வியைச் சந்திக்கும் காலக் கட்டத்தில் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்தார் சிவாஜிகணேசன். அதற்கு முக்கிய காரணமாக சிவாஜி கணேசன் தனது சுயசரிதையில் "நான் ஒரு தேசியவாதி, காமராஜருடைய கருத்துக்களும் சேவைகளும் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. எனவே அவருடைய கொள்கைகளை ஒவ்வொரு ஊராகச் சென்று பேசினேன்' என்று பதிவு செய்தார்.[46]

மேலும் காமராஜர் மூலமாக அவர் அன்றைய பாரதப் பிரதமர் நேருவுடன் அறிமுகம் ஆனார். அந்த அறிமுகம் தனக்கு கிடைத்த மிகப்பெரிய பெருமையாகக் கருதினார். அந்த அறிமுகத்தை வைத்துத்தான் பிரதமர் நேருவுக்கு கடிதம் எழுதி எகிப்து அதிபர் நாசரை தன்னுடைய விருந்தாளியாக அழைத்துக்கொள்ள அனுமதி கேட்டுப் பெற்றார்.[47] 1967 பொதுத் தேர்தலில் தன் சொந்தப் பணத்தை செலவழித்து, காங்கிரஸ் கட்சிக்காக பிரச்சாரத்தில் ஈடுபட்டார்.

தன் மிகச் சிறந்த நடிப்பாற்றலால் லட்சக் கணக்கான ரசிகர்களை உருவாக்கி இருந்த சிவாஜி கணேசனை தேர்தல் பிரச்சாரத்தில் காமராஜர் ஈடுபடுத்தினார். காங்கிரஸ் கட்சி சட்டமன்ற மற்றும் நாடாளுமன்ற தேர்தல்களில் தோல்வியைத் தழுவியது. காமராஜர் தோல்வி அடைந்தார். கழகப் பேச்சாளர்கள் மேடைதோறும் சிவாஜிகணேசன் காங்கிரஸில் இணைந்து அந்தக் கட்சியை தோற்கடித்துவிட்டார். அவர் ராசி இல்லாதவர் எனும் அவப்பெயரை சூட்டினார்கள். அதை சிவாஜி கணேசன் பொருட்படுத்தவில்லை.[48]

1969ல் அண்ணாதுரை இறந்தார். அந்த வருடம் நடைபெற்ற நாடாளுமன்ற இடைத் தேர்தலில் காமராஜர் நாகர்கோவில் தொகுதியில் வெற்றி பெற்றார். இந்த வெற்றியை தனது வெற்றி என்றும் சிவாஜி கணேசன் கூறவில்லை.[49]

அகில இந்திய காங்கிரசில் பிளவு ஏற்பட்டது. இந்திராகாந்திக்கும் காமராஜருக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. தமிழ்நாட்டில் காங்கிரஸ் இரண்டு அணியாகப் பிரிந்தது. பழைய காங்கிரஸ் என்ற பிரிவு காமராஜர் தலைமையில் செயல்பட்டது. 1971ல் நடைபெற்ற சட்டமன்ற, நாடாளுமன்ற தேர்தல்களில் இந்திராகாந்தி தலைமையில் இயங்கிய அணி திராவிட முன்னேற்றக் கழகத்துடன் கூட்டணி அமைத்துப் போட்டியிட்டது. காமராஜரைத் தவிர அவரது அணியில் போட்டியிட்ட அனைவரும் தோற்றனர். தன் வாழ்வில் நன்றி பாராட்டுவதை ஒரு கொள்கைப் பிடிப்பாக வைத்திருந்த சிவாஜிகணேசன் காமராஜரின் அணியிலிருந்து அதன் வெற்றிக்காக தேர்தல் பிரச்சாரம் செய்தார். காமராஜர் அணியின் தோல்வி சிவாஜிகணேசனுக்கு பெரிய அவமானத்தை பெற்றுத் தந்தது. எனவே மீண்டும் அமைதி காத்தார்.[50]

1971ல் கருணாநிதிக்கும், எம்.ஜி. இராமச்சந்திரனுக்கும் ஏற்பட்ட கருத்து வேறுபாட்டால் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் என்ற புதிய கட்சியை எம்.ஜி. இராமச்சந்திரன் 1972இல் துவக்கினார்.

**திண்டுக்கல் பாராளுமன்ற இடைத்தேர்தல்**

1973ல் நடைபெற்ற திண்டுக்கல் பாராளுமன்ற இடைத் தேர்தலில் காங்கிரஸ் கட்சியின் வேட்பாளராக போட்டியிட்ட என்.எஸ்.வி. சித்தனை ஆதரித்து சிவாஜிகணேசன் பிரச்சாரம் செய்தார். திராவிடக் கட்சிகளுக்குத்தான் தமிழ்நாட்டின் அரசியலில் என்றைக்கும் இடமுண்டு என்ற நிலை உருவாகி காங்கிரஸ் கட்சி இரண்டாம் இடத்திற்கு தள்ளப்பட்டது. காங்கிரஸ் வேட்பாளர் தோற்றார். இடைத்தேர்தல் விவரம் கீழே வழங்கப்பட்டுள்ளது.

திண்டுக்கல் இடைத்தேர்தல் - 20.5.1973 ஓட்டுக்கள் விவரம்

| | | | |
|---|---|---|---|
| 1. | அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் | - | 2,60,824 |
| 2. | காங்கிரஸ் - சிண்டிகேட் | - | 1,19,032 |
| 3. | திராவிட முன்னேற்றக் கழகம் | - | 93,496 |
| 4. | காங்கிரஸ் - இந்திரா | - | 11,423[51] |

1967ல் நடைபெற்ற நான்காவது பாராளுமன்றத் தேர்தலில் திண்டுக்கல் தொகுதியில் திராவிட முன்னேற்றக் கழக வேட்பாளர் ந. அன்புசெழியன் வெற்றி பெற்றார். அவரை எதிர்த்து காங்கிரஸில் போட்டியிட்டவர் திருமதி. சௌந்திரம் இராமச்சந்திரன் ஆவார்.

1971ல் நடைபெற்ற ஐந்தாவது பாராளுமன்றத் தேர்தலில் சுதந்திரா கட்சி காங்கிரஸ் கட்சியுடன் கூட்டணி அமைத்து போட்டியிட்டது. காங்கிரஸ் கட்சி திண்டுக்கல் பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிடாமல் தன்னுடைய தோழமைக் கட்சியான சுதந்திரா கட்சிக்கு விட்டுக் கொடுத்தது. சுதந்திரக் கட்சியின் வேட்பாளர் எம். சீமைச்சாமி தோல்வியடைந்தார்.

1973ல் நடைபெற்ற இடைத்தேர்தலில் திண்டுக்கல் பாராளுமன்றத் தேர்தலில் காங்கிரஸ் இரண்டாவது இடத்தை பிடித்தது என்பது சிவாஜி கணேசனின் செல்வாக்கால்தான் ஏற்பட்டது என்பது உண்மை.

1975 ஜுன் திங்கள் 25 ஆம் நாள் இந்தியாவில் நெருக்கடி நிலை அமல்படுத்தப்பட்டது. 1975 அக்டோபர் 2ம் நாள் காமராஜர் மரணம் அடைந்தார். 1976 ஜனவரி 31ம் நாள் ஆட்சியில் இருந்த திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஆட்சி நீக்கப்பட்டது. காமராஜரின் மரணத்திற்குப் பின் சிவாஜிகணேசன் அரசியலில் இருந்து சிறிது காலம் முற்றிலும் விலகி இருந்தார்.[52]

## ஆறாவது இந்தியப் பாராளுமன்றத் தேர்தல்

1977ல் நடந்த ஆறாவது பாராளுமன்றத் தேர்தலில் இந்திராகாந்தி தலைமையில் இருந்த காங்கிரஸ் கட்சி தோற்றது. ஜனதா கட்சி வென்றது. மொரார்ஜி தேசாயின் தலைமையில் ஜனதா கட்சியின் ஆட்சி மத்தியில் அமைந்தது. 1977 ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 24 ஆம் நாள் அந்த ஆட்சி கவிழ்ந்தது.[53]

நெருக்கடி நிலையின்போது இந்திரா காங்கிரசுக்கு ஆதரவாக இருந்த அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்துடன் கூட்டணி அமைத்து பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டு இந்திரா காங்கிரஸ் 14 இடங்களையும் அதிமுக 17 இடங்களையும் இவர்களுடன் கூட்டணி வைத்திருந்த இந்திய

கம்யூனிஸ்ட் கட்சி 3 இடங்களையும் வென்றது.[54] இந்த தேர்தலில் சிவாஜிகணேசன் எம்.ஜி. இராமச்சந்திரனுடன் இணைந்து இந்திராகாந்திக்கு ஆதரவாக பிரச்சாரம் செய்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

**இந்திராகாந்திக்கு பாதுகாப்பு**

1979ல் தமிழ்நாட்டிற்கு இந்திராகாந்தி வருகை தந்தபோது மதுரையில் திமுகவினரும், மார்க்சிஸ்ட் கட்சியினரும் நடத்திய கறுப்புக் கொடி ஆர்ப்பாட்டத்தின்போது அவர் தாக்கப்பட்டார் என்ற செய்தி சிவாஜி கணேசனுக்கு கிடைத்ததும் மிகவும் வருத்தமடைந்தார். மதுரை நண்பர்கள் மூலம் இந்திராகாந்தி சென்னைக்கு இரயிலில் வருவதை அறிந்தார். தன் கைத்துப்பாக்கியை எடுத்து அதில் இரவைகளை நிரப்பிக் கொண்டு மறுநாள் காலை எழும்பூர் இரயில் நிலையம் சென்றார். அங்கு திமுக தொண்டர்கள் சிலர் கொடியுடன் நிற்பதையும், பாதுகாப்புக்காக காவல் துறையினர் நிற்பதையும் பார்த்தார்.

இரயில் பெட்டியில் இருந்து இறங்கிய இந்திராகாந்தியின் கையை பிடித்துக்கொண்டு, தன் கைத்துப்பாக்கியை காட்டி, யாராவது அருகில் வந்தால் சுட்டுவிடுவேன் என்று கூறினார். ஒரு காரில் ஏற்றிக் கொண்டு அடையாறில் உள்ள ‘மல்லிகை’ என்ற இல்லத்திற்கு அழைத்து வந்தார். மறுநாள் பத்திரிக்கையாளர்களிடம் நடந்த விபரங்கள் அனைத்தையும் இந்திராகாந்தி கூறினார்கள். நேரு குடும்பத்தின் மீது இருந்த பக்தியால் அதைச் செய்து மன நிறைவுற்றதாக தனது சுயசரிதையில் சிவாஜி கணேசன் பதிவு செய்தார்.[55]

1980ல் நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் திமுகவோடு கூட்டணி வைத்து போட்டியிட்டது. இந்தக் கூட்டணி உருவாக பெரும் பங்காற்றியவர் சிவாஜிகணேசன். செப்டம்பர் 30 ஆம் தேதி கடற்கரையில் நடந்த பொதுக் கூட்டத்தில் உரையாற்றும்போது “நான் பிறந்த வீடும், புகுந்த வீடும் ஒன்று சேர்ந்திருக்கிறது” என்று பேசினார். கூட்டத்தினரின் ஆரவாரத்தைக் கவனித்த இந்திராகாந்தி, சிவாஜிகணேசன் திமுகவில் இருந்தார் என்று அறிந்து மிகவும் ஆச்சரியப்பட்டார்.[56]

1980ல் நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலில் 39 இடங்களில் திமுக இந்திரா காங்கிரஸ் கூட்டணி 37 இடங்களைப் பிடித்தது. இந்தத் தேர்தலின் வெற்றிக்குப் பின்னால் சிவாஜிகணேசனைப் பற்றிய விமர்சனங்கள் வெகுவாக குறைந்தன. 1980ல் ஒருமுறை இந்திரா காந்தியை சந்தித்தார். அப்போது அவர் சிவாஜி கணேசனை தனது கட்சியில் சேரும்படி வலியுறுத்தினார். அதன்படி

இந்திராகாந்தி தலைமையில் இருந்த காங்கிரஸ் கட்சியில் சேர்ந்தார். அந்த நிகழ்வை "காமராஜர் இறந்துவிட்டார், நீங்கள் தனியாக இருக்க வேண்டாம், நான் பிரதமராக இருக்கிறேன், அவர் விட்டுச் சென்ற பணிகளை சொல்லுங்கள் நான் செய்து கொடுக்கிறேன்" என்று இந்திராகாந்தி கூறியதை ஏற்று அவர் கட்சியில் சேர்ந்ததாக தன் சுயசரிதையில் பதிவு செய்தார் சிவாஜி கணேசன்.[57]

மேலும் தான் இந்திராகாந்தியின் கட்சியில் சேர்ந்தது ஜவஹர்லால் மீது தான் கொண்டிருந்த மரியாதைதான் என்றார். இந்தியாவிற்காக வாழ்ந்த ஒரு உயர்ந்த அரசியல்வாதி நேரு என்றும் பதிவு செய்தார். இந்திரா காங்கிரசில் சேர்ந்த சிவாஜி கணேசனுக்கு ராஜ்யசபா உறுப்பினர் பதவி கிடைத்தது.[58]

1984ல் அக்டோபர் 31ந் தேதி பிரதம மந்திரியாக இருந்த இந்திராகாந்தி அவரது காவலர்களால் சுட்டுக் கொல்லப்பட்டார்.[59] இந்திராகாந்தியின் மரணத்திற்குப் பின் சென்னைக்கு வருகைதந்த பிரதமர் ராஜிவ்காந்தியைச் சந்தித்து காங்கிரஸ் கட்சிக்குள் இருக்கும் சில பிரச்சனைகள் பற்றி அவரிடம் சிவாஜி பேசினார். அவர் அதை விரும்பவில்லை.[60] 1984இல் நடக்கவிருந்த பாராளுமன்ற மற்றும் சட்டசபைத் தேர்தலில் சிவாஜி மன்றத்தைச் சேர்ந்தவர்களுக்கு ஐந்து பாராளுமன்ற இடங்களும், பதினான்கு சட்டமன்றத் தொகுதிகளையும் சிவாஜி கணேசன் கேட்டு பிரதமருக்கு கோரிக்கை வைத்து இருந்தார். எந்த பதிலும் கிடைக்காத காரணத்தால் தனது ராஜினாமா கடிதத்தை சிவாஜி கணேசன் அனுப்பி வைத்தார். இரு நாட்களுக்குப் பின் கர்நாடகக் காங்கிரஸ் தலைவர்களில் ஒருவரான குண்டுராவை, ஹைதராபாத்தில் இருந்த சிவாஜி கணேசனை சந்தித்து அவர் கேட்டுக்கொண்டபடி சிவாஜி மன்றத்துககு ஐந்து பாராளுமன்றத் தொகுதிகளையும், பதினான்கு சட்டமன்றத் தொகுதிகளையும் தருவதாக ராஜிவ்காந்தி வாக்களித்தார். 1984 டிசம்பரில் நடந்து முடிந்த நாடாளுமன்ற மற்றும் சட்டமன்றத் தேர்தல்களில் சிவாஜி கணேசனின் ரசிகர் மன்றங்களின் சார்பாக ஐந்து பாராளுமன்ற வேட்பாளர்களும், பதினொன்று சட்டமன்ற வேட்பாளர்களும் வென்றனர்.[61] இந்த தேர்தலில் தமிழகத்தில் இந்திரா காங்கிரஸ் அ.இ.அ.தி.மு.க.வுடன் கூட்டணி வைத்து போட்டியிட்டது. அதன்பின் டெல்லிக்குச் சென்று பிரதமர் ராஜிவ்காந்தியை சந்திக்கச் சென்றார் சிவாஜிகணேசன். சிவாஜி கணேசனை சந்திக்க ஒப்புக்கொண்ட நேரம் கடந்து வேறொருவருடன் பேசிக்கொண்டு அவரைக் காக்க வைத்துவிட்டார் ராஜிவ்காந்தி. அதனால் கோபம் அடைந்த சிவாஜி கணேசன் பிரதமரின் அறைக்கதவை திறந்துகொண்டு உள்ளே சென்று பிரதமர் ராஜிவ்காந்தியிடம் மிகவும் கோபமாக "என்னை காக்க வைத்து அவமானப்படுத்திவிட்டீர்கள் நான் உங்கள் தாத்தாவின் நண்பர். அந்த மரியாதை தெரியவில்லை உங்களுக்கு என்று கூறிவிட்டு வேகமாக வெளியே வந்துவிட்டார். சிவாஜிகணேசனைப்

பின்தொடர்ந்து விரைந்து வந்த ராஜிவ்காந்தி பலமுறை "சிவாஜிஜீ" என்று அழைத்தார். சிவாஜிகணேசன் திரும்பிப் பார்க்காமல் வந்துவிட்டார். அதன்பின் சென்னை வந்த சிவாஜிகணேசனை தொலைபேசி மூலம் தொடர்புகொள்ள முயன்றார் பிரதமர். ஆனால் உடன் இருந்தவர்கள் அத்தகவலை தெரிவிக்காமல் இருந்துவிட்டனர். தாமதமாக அறிந்த சிவாஜிகணேசன் மிகவும் வருத்தப்பட்டார்.[62]

அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தில் எம்.ஜி. இராமச்சந்திரனின் மறைவுக்குப் பின் பிளவு ஏற்பட்டது. அண்ணாதிராவிட முன்னேற்றக் கழகம் - ஜெயலலிதா அணி. அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் - ஜானகி அணி என இரண்டாகப் பிரிந்து நின்றன. சட்டமன்றத்தில் எம்.ஜி. இராமச்சந்திரன் அமெரிக்காவில் இருந்தபோது நடந்த தேர்தலில் வெற்றி பெற்ற இடங்களின் எண்ணிக்கை 132. இரண்டாக அக்கட்சி பிரிந்தபின் ஜெயலலிதா அணியில் 33 பேரும், ஜானகி அணியில் சபாநாயகருடன் சேர்த்து 97 பேரும் இருந்தனர். சட்டமன்றத்தில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் ஜானகி அரசின் மீது கொண்டு வரப்பட்டது. சபாநாயகராக இருந்த பி.ஹெச். பாண்டியன் தன் அதிகாரத்தைப் பயன்படுத்தி சட்டசபையை புறக்கணித்த ஜெயலலிதா அணியைச் சேர்ந்த 33 பேரையும் தகுதி இழப்புக்கு உத்தரவிட்டார். மேலும் திமுகவைச் சேர்ந்த 10 சட்டமன்ற உறுப்பினர்களை தற்காலிக நீக்கம் செய்தார். அதனால் சட்டமன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கை 234லிலிருந்து 191 ஆக குறைந்தது. மற்ற எதிர்கட்சியினர் சட்டமன்றத்தை புறக்கணித்ததால் ஜானகி அணி நம்பிக்கையில்லாத் தீர்மானத்தில் வென்றனர். ஆனால் ராஜிவ் காந்தி சட்டமன்றச் செயல்பாடுகளில் அதிருப்தி ஏற்பட்டு ஜானகி அரசைக் கலைத்தார். தமிழ்நாட்டில் ஜனாதிபதி ஆட்சி ஏற்பட்டது. மீண்டும் பொதுத் தேர்தல் 1989 ஜனவரியில் நடந்தது.[63]

**தமிழக முன்னேற்ற முன்னணி** :

ராஜிவ் காந்தியுடன் தனக்கு ஏற்பட்ட கசப்பான அனுபவங்கள் சிவாஜிகணேசனை காங்கிரசில் இருந்து வெளியேறச் செய்தது. தன்னுடன் இருப்பவர்கள் பலருக்கு அரசியலே தொழிலாக இருந்த காரணத்தால் ஒரு கட்சி ஆரம்பிக்க வேண்டிய கட்டாயம் சிவாஜிக்கு ஏற்பட்டது.[64]

1988 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 10 ஆம் நாள் 'தமிழக முன்னேற்ற முன்னணி' என்ற கட்சியின் துவக்க விழாவை நடத்தினார். சிவாஜிகணேசனின் ரசிகர் மன்றத்தினர் மட்டும் அந்தக் கட்சியின் உறுப்பினர்கள் ஆனார்கள்.

தான் ஆரம்பித்த கட்சியை பிரபலப்படுத்த **"என் தமிழ் என் மக்கள்"** என்ற திரைப்படத்தை தானே தயாரித்து வெளியிட்டார். இலங்கை விடுதலைப் புலிகளுக்கு ஆதரவான கட்சி என்று பரவலாகப் பேசப்பட்டது. இலங்கைக்கு அமைதிப்படை அனுப்பியது தவறு என்று சிவாஜிகணேசனின் தமிழக முன்னேற்ற முன்னணியின் கருத்தாக இருந்தது.[65] மத்திய அரசால் அனுப்பப்பட்ட அமைதிப்படை புலிப்படையினரையும் அந்த அமைப்பின் தலைவர் பிரபாகரனையும் அழிக்க எண்ணுகிறது என்று தமிழக முன்னேற்ற முன்னணி கடுமையாகச் சாடியது.

ஜனாதிபதி ஆட்சி ஏற்பட்டு ஒரு வருடத்தில் தமிழ்நாடு சட்டமன்றத்திற்கு தேர்தல் வந்தது. 1989 ஜனவரித் திங்களில் தேர்தல் நடந்தது. அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் இரண்டு அணிகளும் இரட்டை இலை சின்னத்தை உரிமை கோரினார்கள். தேர்தல் ஆணையம் இரண்டு அணியின் கோரிக்கையையும் ஏற்காமல் இரட்டை இலை சின்னத்தை தற்காலிகமாக முடக்கி வைத்தது. ஜெயலலிதா அணிக்கு சேவல் சின்னத்தையும், ஜானகி அணிக்கு இரட்டை புறாக்கள் சின்னத்தையும் ஒதுக்கியது.[66]

தேர்தலில் காங்கிரஸ், ஜெயலலிதா அணி மற்றும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியோடு கூட்டணி ஏற்படுத்திக் கொண்டது. திமுக, ஜனதா தள தேசிய முன்னணி மற்றும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியுடன் கூட்டணி வைத்து போட்டியிட்டது. அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் ஜானகி அணி தமிழக முன்னேற்ற முன்னணியுடன் கூட்டணி ஏற்படுத்திக் கொண்டது. தேர்தலில் தொகுதி உடன்பாட்டில் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் ஜானகி அணி - 175 இடங்கள், தமிழக முன்னேற்ற முன்னணி - 49 இடங்கள் பகிர்ந்து கையெழுத்திட்டு போட்டியிட்டது. சிவாஜிகணேசன் திருவையாறு தொகுதியில் போட்டியிட்டார்.[67]

தேர்தல் முடிவுகள் திமுகவுக்கு பெரிய வெற்றியை தந்தது. அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம், ஜெயலலிதா அணி, காங்கிரஸ் கூட்டணியோடு எதிர்க்கட்சியாக அமர்ந்தது. ஜானகி அணி மற்றும் தமிழக முன்னேற்ற முன்னணி படுதோல்வியைச் சந்தித்தன. சிவாஜிகணேசன் தோல்வி அடைந்தார்.[68]

தொகுதி எண். 184

தேர்தல் நடந்த தேதி 21.01.1989

திருவையாறு தொகுதியில் மொத்த வாக்குகள் - 1,27,844

ஆண்கள் - 65114

பெண்கள் - 62730

பதிவான வாக்குகள் - ஆண்கள் - 50702

பெண்கள் - 47725

------

மொத்தம் - 98427

செல்லாத வாக்குகள் 1810

-------

செல்லுபடியான வாக்குகள் 96617

-------

**வேட்பாளர்கள் 12 பேர் - ஆண்கள் பெண்கள் - 0**

| முக்கியப் போட்டியாளர்கள் | | பெற்ற வாக்குகள் |
|---|---|---|
| 1. | தி.மு.க. துரை சந்திரசேகரன் | 36981 |
| 2. | சிவாஜி கணேசன் (எ) V.C. கணேசன் | 26338 |
| | **வித்தியாசம்** | **10643** |

பெற்ற சதவிகிதம் 11.00% (of total votes valid)[69]

**தேர்தல் தோல்வி பற்றி**

"எனக்குத் தேர்தலில் நிற்பதற்கு தயக்கம் இருந்தது. ஏனென்றால் கட்சி ஆரம்பித்து மிகக் குறைந்த நாட்கள்தான் ஆகியிருந்தன. கட்சியானது முழுமையாக வளர்ச்சி அடைந்து மக்களின் நம்பிக்கையைப் பெற கால அவகாசம் இல்லை ..... ஆண்டவன் தீர்ப்பு சொல்லட்டும் என்று போட்டியிட்டேன் - - காமராஜர் பிறந்த விருதுநகர் மண் அவரைத் தோற்கடித்தது. நான் வளர்ந்த தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவையாறு மண் என்னைத் தோற்கடித்தது. --- தோல்வி என்பது ஏமாற்றம்தான் கஷ்டம்தான் என்ன செய்வது. தவறான முடிவுகள் எடுத்தால் ஏமாற்றங்களை சந்திக்க வேண்டியதுதானே"

என்று தனது சுயசரிதையில் பதிவு செய்தார்.[70]

வித்தியாசமான அரசியல்வாதி சிவாஜி கணேசன்

தமிழக முன்னேற்ற முன்னணி சார்பில் 1989 ஆம் ஆண்டு தேர்தலில் போட்டியிட்ட வேட்பாளர்களுக்கு தேர்தல் செலவிற்காக பல லட்சங்களைக் கொடுத்தார். தேர்தல் முடிந்த பிறகு தன் கட்சியின் வேட்பாளர்களை அழைத்து, அவர்களுடைய சொந்த செலவில் அவர்கள் செய்த சுவர் விளம்பரங்களை அழித்து பொதுமக்களுக்கு இடையூறு இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என அறிவுறுத்தினார்.[71]

அரசியல் பற்றி சிவாஜி கணேசன்

அரசியலை ஒரு காமதேனு என்றுதான் எல்லோரும் நினைக்கிறார்கள். தாம் விரும்பியதை அடைய அரசியலை ஒரு மார்க்கமாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், நான் அரசியலை ஒரு தெய்வீகப் பசுவாக நினைத்து, பேணி வளர்க்க ஆசைப்படுகிறேன். அரசியல் என்பது ஒரு பணி, ஒரு தொண்டு, அதை பிழைப்பாக எடுத்துக் கொள்ளக்கூடாது. தமிழ்நாட்டைப் பொறுத்தவரை, கலையும், அரசியலும் அன்றும் சரி, இன்றும் சரி, கைகோர்த்துக் கொண்டுதான் செல்கின்றன. இந்த இரண்டையும் யாராலும் பிரிக்க முடியாது. ஒன்றோடு ஒன்று இரண்டறக் கலந்துவிட்டன.[72]

“அரசியலில் யார் முந்திக் கொள்கிறார்கள் என்பதைக் கொண்டுதான் முக்கிய இடம் கிடைக்கும். அரசியலில் நடிக்கத் தெரிய வேண்டும். என்னால் முடியவில்லை என்றார்.[73]

ஜனதா தளம் கட்சியில் சிவாஜி கணேசன்

1989 தேர்தலில் தோல்வியுற்று அரசியலே இனி வேண்டாம் என்று ஒதுங்கியிருந்த காலத்தில், வி.பி.சிங் மற்றும் ஜார்ஜ்பெர்னாண்டஸ் இருவரும் வற்புறுத்தி தமிழகத்தின் ஜனதா தளம் கட்சியின் தலைவர் பதவியை சிவாஜி கணேசனை ஏற்க வைத்தார்கள். ஜனதா தள தலைவராக பணியாற்றிய காலத்தில் கட்சி அலுவலகத்திற்கு ரூ.1.50 லட்சம் முன்பணம் கொடுத்து, மாதம் ரூ.5000 வாடகையாக செலுத்தி வந்தார். கட்சி மேலிடத் தலைவர்கள் சென்னை வரும்போது, விமானம், ஹோட்டலில் தங்குவது போன்ற செலவுகளை தனது சொந்தப் பணத்திலிருந்து செலவழித்தார். தலைவராக பொறுப்பேற்று பின் விலகும் காலம் வரை ரூ.50 லட்சம் வரை செலவழித்தார்.[74] சிவாஜி கணேசனின் ரசிகர் மன்றத்தினர் ஜனதா தளத்தில் சேர்ந்தனர். பிரதமர் பதவி வகித்திருந்த வி.பி. சிங் 1990 ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 7 ஆம் தேதியில் தன்னுடைய பதவியை ராஜினாமா செய்தார். சிவாஜி கணேசன் ஜனதா தளத்திலிருந்து விலகி இறுதிக் காலம் வரை அரசியலை விட்டு ஒதுங்கியிருந்தார்.[75]

**கலையுணர்வு இல்லாத காங்கிரஸ்**

1947இல் தமிழ்நாட்டின் ஆட்சி அதிகாரம் காங்கிரஸ் கைக்கு வந்தபின், அக்கட்சியின் செயல்பாடுகள் மாறத் தொடங்கின. 1946இல் அண்ணாத்துரை மற்றும் கருணாநிதி இவர்களின் தமிழ்த் திரைப்பட பிரவேசம் பெரும் மாற்றத்தை உண்டாக்கியது. என்.எஸ்.கிருஷ்ணன், கே.ஆர்.இராமசாமி, எம்.ஜி. இராமச்சந்திரன், சிவாஜி கணேசன், எஸ்.எஸ்.இராஜேந்திரன் முதலிய நடிகர்கள் எதிரணியில் இருந்ததால் சினிமாவை காங்கிரஸ் வெறுத்தது.

கழக அணியில் இருந்த நடிகர்கள் தமிழை திறம்படி பேசியதால், காங்கிரஸ்காரர்கள் மத்தியில் தமிழ் மற்றும் தமிழ்நாடு என்பது கேலிக்குரியதாகியது.[76]

1949இல் சிறந்த படங்களுக்குப் பரிசளிப்பதென எடுத்த முடிவு காலப்போக்கில் கைவிடப்பட்டது. சுதந்திரப் போராட்டக் காலத்தில் போலிஸ் அடக்குமுறைகளையும், தடியடிகளையும் பெற்றுத் தேசிய பிரச்சார நாடகங்களை நடத்திய கலைஞர்கள் சுதந்திரத்துக்குப் பின் சிறப்பிக்கப்படவில்லை. 1922இல் ‘கதரின் வெற்றி’ என்ற காங்கிரஸ் இயக்கப் பிரச்சார நாடகத்தை நடத்திய நடிகர் டி.கே. சண்முகம் புறக்கணிக்கப்பட்டார்.[77]

1952இல் நடிகர் என்.எஸ். கிருஷ்ணன் சட்டமன்ற உறுப்பினர் வேட்பாளராக அறிவிக்க இருந்த சமயத்தில், “கோமாளிகளும் கூத்தாடிகளும் சட்டசபைக்குள் புகுந்துவிட்டால், கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்” என்று காங்கிரஸ் தலைவர்கள் மத்தியில் பேச்சு எழுந்தது.[78]

நிலச்சீர்திருத்தம், ஜமீன் ஒழிப்பு ஆகிய கொள்கைகளையும், காந்திய நெறிகளையும் அடிப்படையாகக் கொண்டு “நவஜீவனம்”, “ஏழை உழவன்” போன்ற படங்களைத் தயாரித்த நடிகை பி. கண்ணாம்பா ஜீவனம் நடத்த முடியாமல் ஏழையாகப் போனார்.

தி.மு. கழகத்தினர் தங்கள் கொள்கைகளை விளக்கிக் கதைகளையும், காட்சிகளையும், வசனங்களையும் பாடல்களையும் உருவாக்கியதுபோல, காங்கிரஸ் தரப்பிலிருந்து படைப்புகள் உருவாகவில்லை.

அதுபோன்ற படைப்புகளை உருவாக்கும் வல்லமை பெற்றிருந்த ஏ.பி.நாகராஜனை காங்கிரஸ் ஆதரிக்கவில்லை. அவர், மா.பொ. சிவஞானம் ஆரம்பித்த “தமிழரசுக் கழகத்தில்” சேர்ந்துவிட்டார்.[79]

சுதந்திரம் பெற்ற இந்தியாவில் சுதந்திரப் போராட்டத்தை மையமாகக் கொண்ட திரைப்படங்கள் 1959 வரை உருவாக்கம் பெறவில்லை. அதை நிறைவேற்றியவர்தான் நடிகர் சிவாஜிகணேசன். அவரும் மற்றுமொரு காங்கிரஸ்வாதியான பி.ஆர். பந்துலு இணைந்து உருவாக்கிய படைப்புதான் வீரபாண்டிய கட்டபொம்மன் திரைப்படம் ஆகும்.[80]

1956க்குப் பின் திரையுலகில் திராவிட இயக்கத்தினருக்கு மாற்றாக பக்தி, புராணப் படங்களை இயக்கிய ஏ.பி. நாகராஜன் மற்றும் குடும்ப உறவுகள் மற்றும் உணர்வுகளை துல்லியமாக படமாக்கிய இயக்குநர் பீம்சிங் போன்றவர்களின் படங்களில் சிவாஜி நடிக்க ஆரம்பித்தார். அந்த இயக்குநர்கள் இயக்கிய எந்தப் படங்களிலும் அரசியல் இல்லை. ஏ.பி. நாகராஜன் திரைக்கதை, வசனம் எழுதிய படங்கள் மொத்தம் 10. பீம்சிங் இயக்கத்தில் சிவாஜிகணேசன் நடித்த படங்கள் 16. அந்தப் படங்களில் அதிகமான பாடல்களை எழுதியவர் கண்ணதாசன். அந்தப் பாடல்கள் எதிலும் அரசியல் இல்லாமல் கதைக்கும், காட்சிக்கும் தேவையான ஏற்ற வகையில் கருத்துக்கள் அமைந்திருந்தன. பாடல்கள் எப்படி இருக்க வேண்டும் என சிவாஜிகணேசன் வலியுறுத்தியது கிடையாது. பாடல்கள் அரசியல் வெற்றிக்கு இன்றியமையாதவை என்பதை சிவாஜிகணேசன் உணரத் தவறிவிட்டார் என்பதைக் காட்டிலும் அவர் அரசியலைவிட நடிப்பில் மட்டுமே அதிக ஆர்வத்துடன் இருந்தார் என்பது வெளிப்பட்டது.

சிவாஜிகணேசனின் மிகச் சிறந்த நடிப்பாற்றலையும், திராவிட இயக்கத்தினர் தமிழ் மொழியை திறம்பட பேசக் கூடியவர்கள் என்ற பெருமையில் பெரும் பங்களிப்பை தந்த சிவாஜி கணேசன் தங்கள் பக்கம் வந்துவிட்டார் என்பதை காங்கிரஸ் கட்சி உணரத் தவறிவிட்டது. கலை உலகில் சத்தியமூர்த்திக்கு இருந்த ஈடுபாடு அவருடைய சீடரான காமராஜருக்கு இல்லை.[81] இந்த சூழ்நிலை சிவாஜிகணேசனின் அரசியல் முன்னேற்றத்திற்கு பெரும் தடையாக இருந்தது.

1959ல் அவர் நடித்த வீரபாண்டிய கட்டபொம்மன் படத்தையும், சிவாஜி கணேசனையும் இந்திய அளவில் பெருமைப்பட வைக்க காங்கிரஸ் தவறிவிட்டது. இந்தியாவின் முதல் சுதந்திரப் போர் சிப்பாய் கலகம் என்று அதன் நூற்றாண்டு விழாவை 1957ல் அறிவித்தது நடுவண் அரசு. அந்த சமயத்தில்கூட கட்டபொம்மன் வரலாற்றையும், அதில் நடித்த சிவாஜிகணேசன் பற்றியும் நடுவண் அரசுக்கு எடுத்துக் கூற மாநிலத்தில் அதிகாரத்தில் இருந்த காங்கிரஸ் கட்சியின் முதல்வர் காமராஜர் எந்த முயற்சியும் எடுக்கவில்லை.[82]

1961ல் வெளிவந்த “கப்பலோட்டிய தமிழன்”இல் நாட்டு சுதந்திரத்திற்காக செக்கிழுத்த ஒரு தியாகியின் கதாபாத்திரத்தை ஏற்று அற்புதமாக நடித்திருந்தார் சிவாஜிகணேசன். அந்தப்படத்தை தயாரித்து இயக்கிய பந்துலு ஒரு தேசீயவாதி. அதில் நடித்த சிவாஜிகணேசன் தேசீயவாதி. பாடல்கள் அனைத்தும் பாரதியார் எழுதியது. காங்கிரஸ் கட்சியின் கொள்கைகள் அனைத்தும் படத்தில் இடம் பெற்றிருந்தது. இருப்பினும் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் அந்தப் படத்திற்கு கேளிக்கை வரி நீக்கம் செய்து மக்கள் அனைவரும் பார்க்கும்படி செய்யவில்லை. 1967ல் திராவிட முன்னேற்றக்கழகம் ஆட்சிக்கு வந்தபின் அண்ணாத்துரை அதனை செய்தார்.[83] மேலும், சிவாஜி கணேசன் இந்திய விடுதலைப் போராட்ட வீரர்களான பகத்சிங், கொடிகாத்த குமரன், சுப்ரமணியபாரதி, வாஞ்சிநாதன் போன்ற விடுதலைப் போராட்டக் கதாபாத்திரங்களையும் ஏற்று நடித்தார்.

1967 தேர்தலில் காங்கிரஸ் கட்சிக்கு ஆதரவாக சிவாஜிகணேசன் நடிகை பத்மினியோடு கட்சி மேடைகளில் ஏறி பிரச்சாரம் செய்தார். இருப்பினும் கட்சி தோல்வியைச் சந்தித்தது. அதன்பின் அனைத்திந்திய சிவாஜிகணேசன் ரசிகர் மன்றம் என்ற பெயரில் காங்கிரஸ்காரர்களைக் கொண்ட அமைப்பு தொடங்கப்பட்ட்து. சின்ன அண்ணாமலை அதன் தலைவரானார். மாவட்ட மாநாடுகள், சிறப்பு மாநாடுகள், மாநில மாநாடுகள் நடத்தப்பட்டன. சிவாஜி கணேசனின் பிறந்த நாள் விழாக்கள் கொண்டாடப்பட்டன.[84]

கட்சி செய்ய வேண்டிய பணிகளை ரசிகர் மன்றம் செய்தது.[85] 26.02.2006இல் சென்னையில் நடைபெற்ற ‘சிவாஜி தரிசனம்’ எனும் நூல் வெளியீட்டு விழாவில் பேசிய எழுத்தாளர் ஜெயகாந்தன் தமது உரையில் “ஒரு தேசிய கட்சியை தனி மனிதனாக தனது தோள்களில் தூக்கிக் கொண்டிருந்தவர் சிவாஜிகணேசன்” என்று உரையாற்றினார்.

காங்கிரஸ் தலைமைக்கும் கலைஞர்களுக்கும் இருந்த உறவு என்பது தேர்தல் பிரச்சாரத்துக்குப் பயன்படுவது என்ற அளவிலேயே உருவாகி இருந்தது. விடுதலைக்குப் பிறகு தான் மேற்கொண்ட ஜனநாயகம், சோஷலிஸம், மதச்சார்பின்மை, தீண்டாமை ஒழிப்பு போன்ற லட்சிய படைப்புக்களை உருவாக்கவோ,சிவாஜிகணேசன் போன்ற நடிகர்களை போற்றவோ காங்கிரஸ் கட்சி முயற்சி எடுக்கவில்லை.[86]

அரசியலில் தனக்கு ஏற்பட்ட தோல்வியை பற்றி சிவாஜி கணேசன் குறிப்பிடுகையில்

“அரசியலில் நான் தோற்றதாக நினைக்கவில்லை, ஆனால் ஏமாற்றப்பட்டேன். ஒருமுறையல்ல, பலமுறைகள். ஒருமுறை

ஏமாற்றியவர்களே மீண்டும் ஏமாற்றினார்கள். In politics I was not defeated but disappointed and cheated”

என்று தனது சுயசரிதையில் குறிப்பிட்டார்.[87]

சிவாஜிகணேசன் கூறியதிலிருந்து அவர் அரசியலுக்குரிய சாணக்கியத்தனம் பெற்றிருக்கவில்லை என்பதும், வெள்ளை உள்ளம் கொண்டவராக இருந்தார் என்பதும் புலனாகிறது.

திரைப்படத் துறையில் உள்ள கலைஞர்களுக்கு அறிவுரையாக சிவாஜி கணேசன் “கலைஞர்களே, நீங்கள் அரசியலில் அனுதாபியாக இருங்கள் அதனுள் நுழையாதீர்கள். அரசியல்வாதியின் நண்பனாய் இருங்கள், அரசியல்வாதியாகி விடாதீர்கள். உறுப்பினராகி அந்த வலையில் மாட்டிக் கொள்ளாதீர்கள். உங்கள் நண்பர் அரசியல்வாதியா, உதவி செய்யுங்கள். கட்சியின் கொள்கைகளை ஆதரியுங்கள். பாடகனாக இருங்கள், பாட்டாக ஆகிவிட வேண்டாம். “Be a singer, Don’t become the song” என்றார்.

இறுதியாக அவர் அரசியல்வாதியாக தன்னை மக்கள் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதையும் “நீ நடிகன், நடிகனாகவே வாழ்க்கையை ஆரம்பித்தாய், நடிகனாகவே இருக்கப் போகிறாய், நடிகனாகவே சாகப் போகிறாய். ஆகையால் மற்ற வேலைகள் எல்லாம் உனக்கு வேண்டாம். நீ எப்போதும் கலையுலகின் நிரந்தரமான நடிகனே’ என்று தனது சுயசரிதையில் பதிவு செய்தார்.[88]

**நிறைவுரை**

தமிழ்த் திரையுலகில் 1946ல் காலடிவைத்து மிக வேகமாக அதை ஆக்கிரமித்து கொண்ட திராவிட இயக்கத்தின் அனுதாபியாக மிக இளவயதிலேயே இருந்தவர் சிவாஜி கணேசன். 1949ல் ஆரம்பிக்கப்பட்ட திராவிட முன்னேற்றக் கழகத்தின் அனுதாபியாக ஆரம்ப முதலே இருந்தவர் சிவாஜி கணேசன். 1952இல் ‘பராசக்தி’ படத்தில் அவரின் நடிப்பாற்றல், வசனங்களைப் பேசிய விதம், தமிழ் மொழியின் உச்சரிப்பு இவற்றால் திராவிட முன்னேற்றக்கழகம் தமிழக அரசியல் அரங்கில் ஒரு வலிமையான அடித்தளம் பெறக் காரணமாக இருந்தார். 1954இல் ‘மனோகரா’ படத்தின் வெற்றி திராவிட முன்னேற்றக்கழகத்தை அது 1967இல் அடைந்த மாபெரும் வெற்றிக்கு அழைத்துச் சென்றது. எனினும் மேற்கூறப்பட்டுள்ள இரண்டு இயக்கத்திலும் தன்னை உறுப்பினராக பதிவு செய்து கொள்ளவில்லை. ஆனால் இரு

இயக்கத்தின் கொள்கைகள் மீதும் அவர் கொண்டிருந்த அனுதாபம் என்பது, நன்றி மற்றும் நட்பு என்ற பண்புகளின் அடிப்படையில் இருந்தது. நாடக உலகில் தனக்கு 'சிவாஜி' என்ற பட்டத்தை பெறுவதற்கு உதவியாக இருந்த அண்ணாத்துரை மீதும், அப்பட்டத்தை தனக்கு வழங்கிய ஈ.வெ. இராமசாமி நாயக்கர் மீதும்அவர் நன்றியோடு இறுதிக் காலம் வரை இருந்து வந்தார். அதன்பின் திரைப்பட உலகில் கதாநாயகனாக அறிமுகம் ஆன 'பராசக்தி' படத்திலும், தன்னை புகழ்மிக்க நடிகராக திரையுலகம் ஏற்றுக் கொள்ள காரணமாக இருந்த 'மனோகரா' படத்தின் திரைக்கதை வசனங்களையும் எழுதியவர் கருணாநிதி என்பதால் அவரிடம் நன்றி மற்றும் நட்பு எனும் இரு பண்புகளை இறுதிவரை பேணிக் காத்தார்.

ஒரு விடுதலை போராட்ட வீரரின் மகனாக பிறந்த காரணத்தால் சிவாஜி கணேசன் இயற்கையிலேயே தேசியத்தின் மீது பற்றுக் கொண்டவராக இருந்தார். அத்துடன் இளம் வயதிலிருந்தே வீரபாண்டிய கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்ற இலட்சியத்தை மனதில் வைத்து இருந்தார். அந்தக் கனவை நனவாக்கும் வகையில் கட்டபொம்மனாக நாடகத்திலும், திரைப்படத்திலும் நடித்து பெரும் புகழ் பெற்றார். அதனைத் தொடர்ந்து கப்பலோட்டிய தமிழன், பகத்சிங், கொடிகாத்த குமரன் போன்ற தேசிய விடுதலை வீரர்களின் வேடங்களை ஏற்று நடித்தார். இதனால் தேசிய உணர்வு மேலோங்கிட அவர் காங்கிரஸ் கட்சியில் முதன்முதலாக உறுப்பினராகி தேசியத்தில் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டார்.

1967இல் காங்கிரஸ் தோல்வியை சந்தித்த பின்னும் அக்கட்சியை தனி மனிதனாகத் தன் தோள்களில் சுமந்து, தான் சம்பாதித்த பெரும் பணத்தையும், புகழையும் இழந்து காத்து நின்றார். அது காமராஜரின் மீதும் அவரின் கொள்கைகள் மீதும் கொண்டிருந்த ஈடுபாடும் மரியாதையால்தான் என்பது தான் உண்மை.

அரசியலில் காமராஜருடன் மிக நெருக்கமாக இருந்த காலத்தில் அவருக்கு எதிரணியில் இருந்தவரும் தேசிய விடுதலைப் போராட்டத்தில் பெரும் தியாகங்களைச் செய்தவருமான பசும்பொன் முத்துராமலிங்கத் தேவருடன் நல்ல உறவு வைத்திருந்தார்.

இவ்வாறு தமிழக அரசியலில் பெரும் இயக்கங்களாக விளங்கிய திராவிட இயக்கம், திராவிட முன்னேற்றக் கழகம் மற்றும் காங்கிரஸ் கட்சி என்ற இந்த மூன்று கட்சிகளின் வளர்ச்சியில் பெரும்பங்காற்றியவர் என்னும் பெருமையை அடைந்தார் சிவாஜிகணேசன்.

இயக்கத்தின் கொள்கைகள் மீதும் அவர் கொண்டிருந்த அனுதாபம் என்பது, நன்றி மற்றும் நட்பு என்ற பண்புகளின் அடிப்படையில் இருந்தது. நாடக உலகில் தனக்கு 'சிவாஜி' என்ற பட்டத்தை பெறுவதற்கு உதவியாக இருந்த அண்ணாத்துரை மீதும், அப்பட்டத்தை தனக்கு வழங்கிய ஈ.வெ. இராமசாமி நாயக்கர் மீதும்அவர் நன்றியோடு இறுதிக் காலம் வரை இருந்து வந்தார். அதன்பின் திரைப்பட உலகில் கதாநாயகனாக அறிமுகம் ஆன 'பராசக்தி' படத்திலும், தன்னை புகழ்மிக்க நடிகராக திரையுலகம் ஏற்றுக் கொள்ள காரணமாக இருந்த 'மனோகரா' படத்தின் திரைக்கதை வசனங்களையும் எழுதியவர் கருணாநிதி என்பதால் அவரிடம் நன்றி மற்றும் நட்பு எனும் இரு பண்புகளை இறுதிவரை பேணிக் காத்தார்.

ஒரு விடுதலை போராட்ட வீரரின் மகனாக பிறந்த காரணத்தால் சிவாஜி கணேசன் இயற்கையிலேயே தேசியத்தின் மீது பற்றுக் கொண்டவராக இருந்தார். அத்துடன் இளம் வயதிலிருந்தே வீரபாண்டியக் கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்ற இலட்சியத்தை மனதில் வைத்து இருந்தார். அந்தக் கனவை நனவாக்கும் வகையில் கட்டபொம்மனாக நாடகத்திலும், திரைப்படத்திலும் நடித்து பெரும் புகழ் பெற்றார். அதனைத் தொடர்ந்து கப்பலோட்டிய தமிழன், பகத்சிங், கொடிகாத்த குமரன் போன்ற தேசிய விடுதலை வீரர்களின் வேடங்களை ஏற்று நடித்தார். இதனால் தேசிய உணர்வு மேலோங்கிட அவர் காங்கிரஸ் கட்சியில் முதன்முதலாக உறுப்பினராகி தேசீயத்தில் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டார்.

1967இல் காங்கிரஸ் தோல்வியை சந்தித்த பின்னும் அக்கட்சியை தனி மனிதனாகத் தன் தோள்களில் சுமந்து, தான் சம்பாதித்த பெரும் பணத்தையும், புகழையும் இழந்து காத்து நின்றார். அது காமராஜரின் மீதும் அவரின் கொள்கைகள் மீதும் கொண்டிருந்த ஈடுபாடும் மரியாதையால்தான் என்பது தான் உண்மை.

அரசியலில் காமராஜருடன் மிக நெருக்கமாக இருந்த காலத்தில் அவருக்கு எதிரணியில் இருந்தவரும் தேசிய விடுதலைப் போராட்டத்தில் பெரும் தியாகங்களைச் செய்தவருமான பசும்பொன் முத்துராமலிங்கத் தேவருடன் நல்ல உறவு வைத்திருந்தார்.

இவ்வாறு தமிழக அரசியலில் பெரும் இயக்கங்களாக விளங்கிய திராவிட இயக்கம், திராவிட முன்னேற்றக் கழகம் மற்றும் காங்கிரஸ் கட்சி என்ற இந்த மூன்று கட்சிகளின் வளர்ச்சியில் பெரும்பங்காற்றியவர் என்னும் பெருமையை அடைந்தார் சிவாஜிகணேசன்.

ஜவஹர்லால் நேரு, இந்திராகாந்தி, ராஜிவ்காந்தி, வி.பி. சிங் போன்றவர்கள் பிரதமர்களாக இருந்த காலத்தில் அவர்களிடம் மிக நெருக்கமாக இருந்தாலும் அவர்களிடத்தில் எந்த உதவியையும் அவர் பெற்றதில்லை. காமராஜர் முதலமைச்சராக இருந்த காலத்தில் எந்த சலுகையும், உதவியையும் சிவாஜி கணேசன் பெற்றதில்லை. அண்ணாத்துரை, கருணாநிதி, எம்.ஜி. இராமச்சந்திரன் மற்றும் ஜெயலலிதா முதல்வர்களாக இருந்தபோது அவர்களிடத்தில் மிக நெருக்கமாக நட்பு கொண்டிருந்தபோதும் சிவாஜிகணேசன் தனக்கோ அல்லது தன்னைச் சார்ந்தவர்களுக்கே எந்த ஆதாயமும் அடைந்ததில்லை. ராஜ்யசபை உறுப்பினராக பதவி வகித்த காலத்தில் அப்பதவிக்குரிய எந்தவிதமான, விசேஷ சலுகைகளையும் சிவாஜிகணேசன் பெறவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

எனவே சிவாஜிகணேசன் அரசியலில் கொண்டிருந்த நிலைப்பாடு என்பது திராவிடர் கழகம் மற்றும் திராவிட முன்னேற்ற கழகம் போன்ற இயக்கங்களின் தலைவர்களுடன் இளவயதிலிருந்தே நெருக்கமான நட்புடனும் அவர்கள் எழுதிய நாடகம் மற்றும் திரைப்படங்களில் அவ்வியக்கங்களின் கொள்கைகளை வசனங்களாக பேசி நடித்திருந்தாலும் அவ்வியக்கங்களில் உறுப்பினராகத் தம்மை பதிவு செய்து கொள்ளாமல் இருந்தார் சிவாஜிகணேசன். பின்பு காமராஜரின் கொள்கைகளால் ஈர்க்கப்பட்டு, காங்கிரஸ் கட்சியில் உறுப்பினராகச் சேர்ந்த சிவாஜிகணேசன், காமராஜரின் மறைவுக்குப் பின் இந்திராகாந்தியுடன் இணைந்து காங்கிரசில் பணியாற்றினார். இந்திராகாந்தியின் மறைவுக்குப் பின் ராஜிவ்காந்தியுடன் ஏற்பட்ட கருத்து வேற்றுமையால் காங்கிரஸ் கட்சியில் இருந்து வெளியேறினார். தன்னுடன் இருந்த பலருக்காக ஒரு கட்சியைத் துவக்கி அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஜானகி அணியுடன் கூட்டணி வைத்து தேர்தலில் போட்டியிட்டுத் தோல்வியைத் தழுவியதால் அரசியலை விட்டு சிறிது காலம் விலகி இருந்தார். அதன்பின்பு அவருடைய நண்பர் வி.பி.சிங்கின் வற்புறுத்தலினால் தமிழக ஜனதாதளத்தின் தலைவரானார். அதன்பின் அரசியலை விட்டு முழுவதுமாக விலகினார் என்பதை அறிய முடிகிறது. சிவாஜி கணேசனின் அரசியல் நிலைப்பாடு என்பது அரசியலில் எந்தவிதமான ஆதாயமும் எதிர்பார்ப்பும் இன்றி, நன்றி, நட்பு போன்ற பண்புகளின் அடிப்படையிலும் மற்றும் தேசிய உணர்வு என்ற கொள்கையின் அடிப்படையில் மட்டும்தான் என்பது தெரிய வருகிறது.

# இறுதிக்குறிப்புகள்

---

1 Chatterji, ***Political Prospects in India***, CLS, Madras, 1971, p.3.
2 ***பொம்மை*** இதழ் டிசம்பர் 1981,
3 சண்முகம், டி.கே. *எனது நாடக வாழ்க்கை,* பப.107-108
4 நாராயணன், அறந்தை, ***தமிழ் சினிமாவின் கதை***, ப.15
5 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.** பப.41-42
6 நாராயணன், அறந்தை., ***தமிழ் சினிமாவின் கதை***, ப.16
7 **மேலது.**, ப.16
8 Theodore Baskaran, **The Message Bearers: TN Nationalist Politics and the Entertainment Media in South India**, 1880-1945 – Cre A. India, 1981, p.97.
9 ***'குண்டூசி'*** நவ. 1952
10 கோபால், *'போராட்டங்கள்'* ***பொம்மை***, ஏப்ரல் 1975
11 கமலா, ***தலைவர் சத்தியமூர்த்தி***, லலிதாவிலாஸ் பாடகசாலை, மெட்ராஸ் 1967, ப.32
12 ***தினமணி கதிர்***, பிப்ரவரி, 9, 1978
13 ***கமலா***, மு.கூ.நூ. ப.9
14 நாராயணன், அறந்தை, ***தமிழ் சினிமாவின் கதை***, ப.85
15 **மேலது.**, ப.156
16 **மேலது.**, ப.205
17 **மேலது.**, ப.85
18 Mangalamurugesan, **Self Respect Movement in Tamil Nadu, 1920-1940,** Koodal Publishers, Madurai, 1980, p.59
19 Marguerite Rose Bernet, ***The Politics of Cultural Nationalism in South India***, Princeton University, New Jersey, 1976, p.65
20 சண்முகம், டி.கே., மு.கூ.நூ. ப.431
21 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.67
22 ***கல்கி***, டிசம்பர் 7, 1947
23 நாராயணன், அறந்தை., **தமிழ் சினிமாவின் கதை**, ப.316
24 சிவதாணு, ***நாடக உலகில் அண்ணா***, சங்கரதாஸ் சுவாமிகள் நினைவு மன்றம், சென்னை, 1970, ப.137
25 நாராயணன், அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை**, ப.284
26 நாராயணன், அறந்தை, ***ஆரம்பகால தமிழ் சினிமா, 1942-1951***, விஜயா பப்ளிகேஷன்ஸ், 2008, சென்னை, ப.160
27 மறைமலையான், ***பேரறிஞர் அண்ணாவின் பெருவாழ்வு***, வானதி பதிப்பகம், 1980, ப.300
28 நாராயணன் அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை**, ப.505
29 நாராயணன், அறந்தை, ***ஆரம்ப கால தமிழ்சினிமா, 1942-1951***, ப.83
30 நாராயணன், அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை**, பப 347, 348
31 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.52
32 **மேலது.**, ப.65
33 சிவாஜி கணேசன், **மு.கூ.நூ.**, பப.29-30.
34 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.130
35 மு.கருணாநிதியின் பவளவிழாவில் சிவாஜி கணேசன் பேசியது - 27.9.1998.
36 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, பப. 131-133
37 **மேலது.**, ப.132
38 **மேலது.**, ப.134
39 கருணாநிதி,மு., ***நெஞ்சுக்கு நீதி***, பாகம் 2, திருமகள் நிலையம், சென்னை, 1987, ப.96
40 நாராயணன், அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை**, ப.464
41 **மேலது.**, ப.464
42 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.464
43 **மேலது.**, ப.141
44 **மேலது.**, ப.214

45 இனியன் சம்பத், ***ஈ.வெ.கி. சம்பத்தும் திராவிட இயக்கமும்***, சம்பத் பதிப்பகம், சென்னை, 2013, பப.538-568.

46 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.151

47 **மேலது.**, ப.155

48 நேர்காணல், நடிகர் நந்தகுமார், சிவாஜி கணேசனோடு திரையுலகிலும், அரசியலிலும் இருந்தவர், 1.10.2015

49 **மேலது.**,

50 **மேலது.**,

51 By Elections – ***Wikipedia, Elections in Tamilnadu***

52 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.244

53 en.m.wikipedia.org/wiki/Premiership of Morarji Desai

54 en.m.wikipedia.org/wiki/Elections in Tamilnadu – Loksabha Elections

55 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, பப. 247-248

56 கருணாநிதி, மு., **மு.கூ.நூ.**, பப. 368-370

57 நாராயணசாமி மற்றும் மருதுமோகன், (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.244

58 **மேலது.**, ப.145

59 கருணாநிதி, மு., **மு.கூ.நூ.**, ப.523

60 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, பப.

61 **தினத்தந்தி** நவம்பர் 30, 1984

62 நேர்காணல் தளபதி ராம்குமார், சிவாஜி கணேசனின் மூத்த மகன், நாள் 1.10.2015

63 en.m.wikipedia.org/wiki/Elections in Tamilnadu – Assembly Elections 1989

64 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.249

65 Jain Commision Interim Report: Growth of Sri Lankan Tamil Militancy in Tamil Nadu. Chapter I – Phase II (1987-1988).

66 en.m.wikipedia.org/wiki/Elections in Tamilnadu – Assembly Elections 1989

67 நேர்காணல், நடிகர் நந்தகுமார், சிவாஜி கணேசனோடு திரையுலகிலும், அரசியலிலும் இருந்தவர், 1.10.2015

68 **மேலது.**,

69 en.m.wikipedia.org/wiki/Elections in Tamilnadu – Assembly Elections 1989

70 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, பப 251-253)

71 வந்தியதேவன், கா., **மு.கூ.நூ.** ப.60

72 **சினிமா எக்ஸ்பிரஸ்** 15.11.1984

73 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.249

74 சந்திரசேகரன், கே. தொகுப்பு., **(மு.கூ.நூ.**, ப.273).

75 **மேலது.**, ப.253

76 நாராயணன், அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை,** 489

77 **மேலது.**, 490

78 சுப்ரமண்யம், கே. **விருப்பும் வெறுப்பும் அற்ற கலைவாணர்.** நடிகன் குரல், கலைவாணர் மலர், மெட்ராஸ், செப்டம்பர் 29, 1957

79 நாராயணன், அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை,** ப. 491

80 **மேலது.**, ப.492

81 நாராயணன், அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை,** ப.491

82 **மேலது.**, ப.493

83 **மேலது.**,

84 **மேலது.**, ப. 622

85 **மேலது.**, ப.497

86 நாராயணன், அறந்தை, **தமிழ் சினிமாவின் கதை,** ப.497

87 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.255

88 **மேலது.**, ப.244).

# இயல் - ஆறு

## சமூகத்தில் சிவாஜி கணேசன்

### முகவுரை

நடிகர் திலகம் சிவாஜி கணேசன் உலகத்தின் தலைசிறந்த நடிகருள் ஒருவர் என அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டார். அந்த வெற்றிக்கு அடிப்படையாக திகழ்ந்தவர்கள் அவரது மனைவியும், இரு சகோதரர்களும் ஆவர். அவர்களது தன்னலமற்ற பங்களிப்பால் சிவாஜி கணேசன் ஏற்றுக்கொண்ட பாத்திரங்களில் முழுக் கவனம் செலுத்தி வெற்றி பெற முடிந்தது.

சிவாஜி கணேசனின் சிறப்பான நடிப்பாற்றலால் சமூகத்தில் அரசியல் சாராத பெரிய குடும்பங்கள் நட்பு பாராட்டி மகிழ்ந்தனர். திரையுலகிற்கு வந்து சில ஆண்டுகளில் காமராசர் மூலம் பாரதப் பிரதமர் ஜவகர்லால் நேருவிடம் அறிமுகம் ஆனார். பிரதமரிடம் ஏற்பட்ட நட்பால் இந்தியாவிற்கு வருகை தந்த எகிப்து அதிபர் நாசரை தனது விருந்தாளியாக அழைக்கும் செல்வாக்கை பெற்றார்.

1962ல் அமெரிக்க ஐக்கிய நாட்டு அரசின் கலாச்சார தூதுவராக அழைப்பு விடுவிக்கப்பட்டார். மொரீசியஸ் நாட்டு பிரதமர் அந்நாட்டில் நடைபெற்ற இந்தியச் சுதந்திர தின விழாவிற்கு விருந்தினராக கலந்துகொள்ள அழைப்பு விடுத்தார்.

இயற்கையிலேயே வேட்டையாடுதலை விரும்பிய சிவாஜி கணேசனுக்கு அரசர்களும், ஜமீன்தாரர்களும், நிலக்கிழார்களும் நண்பர்கள் ஆனார்கள்.

சிவாஜி கணேசனின் சிறப்பான நடிப்பை விரும்பிய பெரிய தொழில் அதிபர்கள் அவருடைய நட்பை விரும்பி ஏற்றுக் கொண்டனர். தனக்கு நெருக்கமான தொழில் அதிபர்களின் குடும்ப பிரச்சனைகளை தீர்த்து வைக்கும் அளவுக்கு உரிமை பெற்றிருந்தார். தமிழ்நாடு மட்டுமல்லாது வட இந்திய தொழில் அதிபர்களும் சிவாஜிகணேசனுடன் நண்பர்களாக இருந்தனர்.

சமூகத்தில் மிகப்பெரிய மரியாதையுடன் மதிக்கப்பட்டார். தேசியத்தில் பெரும் பற்றுடன் இருந்த காரணத்தால் அவரது இல்லத்திற்கு நம் நாட்டு பிரதமர்கள், ஜனாதிபதிகள், மத்திய அமைச்சர்கள், ஆளுநர்கள் போன்ற மதிக்கத்தக்கவர்கள் வருகை தந்து அவரை கௌரவித்தனர் கட்சி வேறுபாடின்றி அனைத்து தலைவர்களின் தனிப்பட்ட அன்பைப் பெற்றிருந்தார்.

வெளிநாடுகளில் அழைக்கப்பட்டு விருதுகள், பட்டங்கள் அளிக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டார். சமூகத்தில் அவருக்கு இருந்த மதிப்பும் மரியாதையும் ஏற்படக் காரணமாக இருந்தது. அவரது அற்புதமான நடிப்பாற்றல் மற்றும் அவருடைய சிறந்த கூட்டுக் குடும்பம். அந்த மதிப்பை, கௌரவத்தை மற்றும் மரியாதையை அவர் கட்டிக் காத்த விதம் பற்றியதை விளக்குவதாக இவ்வியல் அமைந்துள்ளது.

சிவாஜி கணேசனின் திருமணம்

'பராசக்தி', நடிகை அஞ்சலிதேவி தயாரித்த பூங்கோதை போன்ற படங்களில் நடித்துக் கொண்டிருக்கும்போதே சிவாஜிகணேசனுக்கு திருமணம் செய்து வைக்க முனைந்தார் அவரது தாயார் ராஜாமணி அம்மாள். தன் ஒன்றுவிட்ட சகோதரியின் மகள் வயிற்றுப் பேத்தியும் பாபநாசம் பிச்சையாப் பிள்ளையின் மகளுமான கமலாவை மருமகளாக்க முடிவு செய்தார். சிவாஜிகணேசனின் மூத்த சகோதரர் தங்கவேலுவுக்கு கும்பகோணத்தில் திருமணம் செய்த சமயத்தில் சிவாஜிகணேசனின் தாயார் தனது ஒன்றுவிட்ட சகோதரியிடம் தன் மகன் கணேசனுக்கு கமலாவை பெண் எடுத்துக் கொள்கிறேன் என்று உறுதி கூறினார். அதற்கு கமலாவின் தாயாரும் சம்மதம் தெரிவித்தார். அதன்பின் சில ஆண்டுகள் கழித்து கமலாவை பெண் கேட்டுச் செல்லும்போது கமலாவின் தந்தை இறந்து போனதால் அவரது சிறிய தந்தை, கணேசன் நாடோடிபோல் ஊர் ஊராகச் சென்று நாடகத்தில் நடித்துக் கொண்டிருக்கிறார் அவருக்கென்று ஒரு சொந்த வீடில்லை எனவே பெண் கொடுப்பதற்கில்லை என மறுத்துவிட்டார். ஆனால் கமலாவின் தாயார் நான் ஏற்கனவே சில ஆண்டுகளுக்கு முன் சத்தியம் செய்து இருக்கிறேன். ஆகையால் என் மகள் கமலாவை என் தம்பிக்குத்தான் திருமணம் செய்து கொடுப்பேன் என்று உறுதியாகக் கூறிவிட்டார்.[1]

அதன்படி திருமணம் ஏற்பாடாகி 1952ம் வருடம் மே மாதம் 1ந் தேதி சுவாமிமலையில் சிவாஜி கணேசன், கமலா திருமணம் தமிழ் முறைப்படி நடந்தது. சிவாஜிகணேசன் படித்த திருச்சி பொன்னையாப் பிள்ளை பள்ளியில் ஆசிரியராக இருந்த ரத்தினம் பிள்ளை திருக்குறள் படித்தார். கவிஞர் கண்ணதாசன் மாலை எடுத்துக் கொடுக்க, பின் மணமகளுக்கு மாலை அணிவித்து, தாலி கட்டினார் சிவாஜிகணேசன். திருமணத்திற்கு நடிகர் எம்.ஜி.ஆர்., கலைஞர் கருணாநிதி, அரங்கண்ணல், நடிகர் என்.எஸ்.கிருஷ்ணன், நடிகை டி.ஏ. மதுரம், நடிகர் சகஸ்ரநாமம், 'பராசக்தி' தயாரிப்பாளர் பெருமாள் மற்றும் இயக்குநர்கள் கிருஷ்ணன்-பஞ்சு முதலியவர்கள் வருகை தந்தனர். கல்யாணத்தின் மொத்தச் செலவு ரூ.500/-[2].

**சிவாஜிகணேசனின் இல்லம்**

சென்னை மாநகரத்தில் வரலாற்றுச் சிறப்பு மிக்க வீடுகள் என்ற பட்டியலில் 37, செவாலியே சிவாஜிகணேசன் சாலை, தியாகராய நகர், சென்னை-600 017 என்ற விலாசத்தில் "அன்னை இல்லம்" அமைந்துள்ளது. இது சிவாஜிகணேசன் வசித்த வீடு. அவரது குடும்பத்தினர் இன்றும் வசித்து வரும் வீடு.

ஒன்றரை ஏக்கர் (24 கிரவுண்ட்) பரப்பளவு நிலத்தில் அமைந்திருக்கும் சிவாஜிகணேசன் வீட்டை அவர்க்கு முன் கும்பகோணத்தைச் சேர்ந்த உலகம் மார்க் பட்டணம் பொடி உரிமையாளர் வைத்திருந்தார். அதற்கு முன் அந்த வீட்டின் உரிமையாளராக Sir – Kurma Venkata Reddy Naidu (1875 – 1942) (Member of Ledgislative Council (1920) Acting Governor of Madras Presidency (1936). Prime Minister of Madras Presidency (1937), Vice Chancellor of Annamalai University (1940) என்பவர் இருந்தார். அதற்கு முன்பாக அந்த வீட்டில் Sir. George Townsand Boag, KCI.E. (1884-1969) என்ற ஆங்கிலேயர் குடியிருந்தார். அவர் பெயரில் போக் சாலை என்று அழைக்கப்பட்டு வந்தது.[3]

சிவாஜிகணேசனின் கலை சேவையை அங்கீகரிக்கும் விதத்தில் முதலமைச்சர் செல்வி. ஜெயலலிதா, போக் சாலை என்ற பெயரை செவாலியே சிவாஜி கணேசன் சாலை என்று பெயரிட்டு அழைக்க 1995 ஆம் ஆண்டு ஏப்ரல் 22ம் நாள் உத்தரவிட்டார்.

'பராசக்தி' படப்பிடிப்பு நடைபெற்ற காலத்தில் கோடம்பாக்கத்தில் சிவாஜிகணேசன் வாடகை வீட்டில் குடியிருந்தார் 'பராசக்தி' வெளிவந்து வெற்றி பெற்றபின் இராயப்பேட்டை பெசன்ட் சாலையில் உள்ள வீட்டில் (தற்போது சிவாஜி பிலிம்ஸ் அலுவலகம் உள்ளது) குடியிருந்தார். பின்பு இராயப்பேட்டை சண்முகம் தெருவில் குடியிருந்தார். 1959ல் "அன்னை இல்லம்" வீட்டை ரூ.2 லட்ச ரூபாய்க்கு வாங்கி, இரண்டு ஆண்டுகள் பழுது பார்த்து சில மாற்றங்கள் செய்து அங்கு 1961ல் குடி புகுந்தார்.[4]

சிவாஜிகணேசன் குடும்பம்

சிவாஜி கணேசனின் குடும்பம் மதிக்கத்தக்க பெரிய குடும்பமாக இன்று வரை இருந்து வருகிறது. தனது நடிப்புத் தொழிலில் முழுக் கவனம் செலுத்துவதற்கு அவரது குடும்பச் சூழ்நிலை பெரும் சாதகமாக இருந்தது.

> "சிவாஜிகணேசன் வீட்டில் அவரது பெற்றோர், அவர், மனைவி மற்றும் பிள்ளைகள், தம்பி, மனைவி மற்றும் பிள்ளைகள், அண்ணன், மனைவி மற்றும் பிள்ளைகள், தங்கை அவரது கணவன் மற்றும் பிள்ளைகள் என அனைவரும் ஒன்றாக அன்னை இல்லத்தில் வாழ்ந்தார்கள். அவர்களைத் தவிர திருச்சி சங்கிலியாண்டபுரத்தில் சிவாஜிகணேசன் தாயார் கஷ்டப்படும்போது மூத்த பிள்ளை போல் இருந்து கவனித்த திரு. பெரியண்ணனும் மற்றும் மனைவி பிள்ளைகளோடு அங்கு இருந்தார்கள். மொத்தம் நூறுபேர் இருந்தார்கள். மொத்தமாக நூறுபேர் மூன்று வேளை உணவு அருந்தியதால் ஒரு நாளைக்கு முன்னூறுபேருக்கு அன்னை இல்லத்தில் உணவு பரிமாறப்பட்டது."[5]

சிவாஜிகணேசனின் வருமானத்தில் அந்த வீட்டிலுள்ள அனைவரும் வாழ்ந்து வந்தார்கள். தமிழ்நாட்டில் கூட்டுக் குடும்பத்திற்கு எடுத்துக்காட்டாக அவரது குடும்பம் திகழ்ந்தது. அதுபற்றி அவர் "ஒரு கூட்டுக் குடும்பம் சிறப்பாக நடக்க சில விதிமுறைகள் உண்டு. யார் ஒருவன் அந்தக் குடும்பத்தில் சம்பாதிக்கிறானோ அவன் எவ்வளவுக்கெவ்வளவு விட்டுக் கொடுக்கிறான் என்பதை பொருத்துத்தான் அந்தக் கூட்டுக் குடும்பம் ஒற்றுமையாக இருக்கும்" என்று தனது சுயசரிதையில் பதிவு செய்தார்.[6]

சிவாஜிகணேசனின் குடும்பம் நிர்வாகம் பற்றி அவரது தம்பி சண்முகத்தின் மனைவி திருமதி. சகுந்தலா கூறியதாவது,

> "சிவாஜி கணேசனின் தாயார் ராஜாமணி அம்மாள் ஜனாதிபதி போலவும், கமலா பிரதமர் போலவும் வீட்டிலிருந்த மற்ற பெண்கள் ஒவ்வொரு துறையை கவனிக்கும் அமைச்சர்கள் போலவும் செயல்பட்டதாகக் கூறினார். சிவாஜிகணேசனின் தந்தை, தஞ்சை மாவட்டத்தில் உள்ள சூரக்கோட்டை என்ற ஊரில் இருக்கும் பண்ணையை சிறிது காலம் கவனித்து வந்தார். பின்பு உடல்நலம் குன்றவே ஓய்வெடுத்தார். அவர் ஓய்வாக இருந்த காலத்தில் எந்த விஷயத்திலும் தலையிடாமல் இருந்தார். சென்னையில் படப்பிடிப்புக்காக சிவாஜிகணேசன் சென்றால் எந்த நேரம் வருகிறாரோ அதுவரை விழித்திருந்து அவர் மாடிப்படியில் ஏறுவதை

பார்த்த பின்புதான் தூங்குவதை வழக்கமாக தன் இறுதிக் காலம் வரை வைத்திருந்தார்"

என்றும் கூறினார்.

"சிவாஜிகணேசனின் தாயாரின் ஆலோசனைப்படிதான் தினந்தோறும் உணவு தயாரிக்கப்பட்டது. காலையில் எழுந்ததும் தன் மகன்கள் தங்கவேலு, சிவாஜிகணேசன், சண்முகம் மூவரும் தனது அறைக்கு வந்து சிறிது நேரம் பேசிவிட்டுச் செல்ல வேண்டும் என்று கட்டளையிட்டு இருந்தார். அதுபோல், வெளியிலிருந்து வந்தவுடன் தனது மகன்கள் தன் அறைக்கு வந்து தன்னைப் பார்த்துவிட்டுதான் அவரவர் அறைக்குச் செல்ல வேண்டும் என்பதும் அவரது கட்டளைகளில் ஒன்று. விடுமுறை அல்லது பண்டிகை நாட்களில் அனைவரும் வீட்டின் ஹாலில் தரையில் அமர்ந்து பேசி மகிழ்வதும், மதியம் உணவுக்குப்பின் சிறிது நேரம் அதே ஹாலில் ஓய்வெடுக்கும் பழக்கத்தை வைத்து இருந்தார்கள்.

சிவாஜிகணேசனின் வெற்றிக்குப் பின்னால் பெரும் பங்கு ஆற்றியவர்கள் மூவர். அவர்கள் முறையே கமலா அம்மாள், சண்முகம், தங்கவேலு ஆகும். கமலா அம்மாள் தன் கணவரான சிவாஜிகணேசன் எவ்வளவு சம்பாதிக்கிறார் அது எப்படி செலவாகிறது என்பதில் எல்லாம் கவனம் செலுத்துவது கிடையாது. வீட்டில் ஒரு விசேஷம் அல்லது தீபாவளி, பொங்கல் போன்ற பண்டிகைக் காலங்களில் வீட்டுப் பெண்களுக்கும், ஆண்களுக்கும் ஒரே விலையில் ஒரே மாதிரி நிறத்தில் ஆடைகள் எடுப்பது வழக்கம். அதிலும் குறிப்பாக பெண்களுக்கு நல்லி சில்க்ஸ் மற்றும் ராதா சில்க்ஸ் கடைகளுக்குத் தகவல் தந்து சுமார் 500 பட்டுப் புடவைகளை வரவழைத்து யாருக்கு எவ்வளவு தேவையோ அதை எடுத்துக் கொள்ளச் செய்வது வழக்கம். அதுபோல் காரைக்குடியிலிருந்து கருப்பையா ஆசாரி என்பவரை வரவழைத்து வீட்டில் உள்ள பெண்களுக்கு ஒரே மாதிரியான டிசைனில் ஒரே எடையில் தங்கச் சங்கிலி, தங்க மாலை போன்றவைகளை செய்து வரச் சொல்லி கொடுப்பதும் வழக்கம். தன்னுடைய கணவன் சம்பாதிக்கிறார் என்பதற்காக தனக்குத்தான் முதல் இடம் என்ற எண்ணம் இல்லாமல் அனைவரும் சமம் என்ற வகையில் நிர்வாகத்தை நடத்தினார். இந்தச் செயல்பாடுகளினால் வீட்டில் எந்தப் பிரச்சனையும் எழ வாய்ப்பில்லாமல் செய்தார். கமலா அம்மாளின் அந்த பெருந்தன்மையான நிர்வாகத்தால் அந்தக் குடும்பம் கூட்டுக் குடும்பத்திற்கு பெரிய அடையாளமாக திகழ்ந்தது. அதனால் சிவாஜிகணேசனும் குடும்பத்தை மறந்து தன் தொழிலில் முழுக் கவனம் செலுத்தி நடிக்க முடிந்தது. கமலா அம்மாள் 2.11.2007 அன்று காலமானார்".

சிவாஜிகணேசனின் தம்பி சண்முகம் லண்டனில் படித்துவிட்டு அண்ணனின் நிழல்போல் செயல்பட்டு இருந்தார். சிவாஜிகணேசன் பெரிய நிலைக்கு வந்ததனால் சண்முகத்திற்கு சில அரச குடும்பங்களிலிருந்து பெண் கொடுப்பதற்கு முன் வந்தார்கள். ஆனால் அவர் கமலா அம்மாளின் தங்கையான சகுந்தலாவை மணப்பதனால் குடும்பம் நன்றாக ஒற்றுமையுடன் இருக்க வழி வகுக்கும் என்று முடிவெடுத்து திருமணம் செய்தார். சிவாஜி கணேசனின் கால்ஷீட்டுகள், சம்பளம், சிவாஜி பிலிம்ஸ் அலுவலக நிர்வாகம், வருமான வரி போன்ற விஷயங்களை கவனித்துக் கொண்டார். சிவாஜி கணேசன் தனக்கு புதிதாக வந்துள்ள கார் வேண்டுமென்று கூறினால் ஆகட்டும் பார்க்கிறேன் என்று கூறிவிட்டு பின் அண்ணன் கேட்ட கார் பல வகையிலும் அண்ணனுக்கு ஏற்றது என்றால் மூன்று நாட்களுக்குள் வாங்கி வீட்டில் நிறுத்திவிடுவார். அந்தக் கார் சரியில்லை என்றால் அண்ணனிடம் வேண்டாம் என்பதற்குரிய காரணங்களைக் கூறிவிடுவார். சிவாஜி கணேசனும் தம்பி சொல்வதை மறுத்துப் பேசாமல் சரியென்று கூறிவிடுவார்.

சென்னையில் உள்ள பெரிய மனிதர்கள், செல்வந்தர்கள், தொழில் அதிபர்கள் கூடுமிடமாக அன்று குதிரைப் பந்தயம் கிளப் இருந்தது. படப்பிடிப்பு இல்லாத நாட்களில் சிவாஜிகணேசனுக்கு தினந்தோறும் புதிய ஆடைகள் வேறு வேறு நிறத்தில் தைத்து கையில் நிறையப் பணம் கொடுத்து போய் குதிரைப் பந்தயத்தில் கலந்துகொள்ள அனுப்புவார். எனக்கு சரியாக பணம் கட்டத் தெரியாது என்று சிவாஜிகணேசன் தயங்கினால், நீங்கள் அங்கே சென்று வந்தால் போதும் பல பெரிய மனிதர்கள் உங்களை சந்திக்க என்னிடம் பலமுறை நேரம் ஒதுக்கித்தர கேட்டுள்ளனர். எளிதாக ஒரே இடத்தில் அவர்களை சந்திக்கலாம். அவர்களைத் தேடி தனியாக நீங்கள் சென்று சந்திக்கும் வாய்ப்பு இல்லை அவர்கள் நம் வீட்டிற்கு வருவதோ எளிதில் நடக்காது. எனவேதான் இந்த ஏற்பாடு என்று கூறுவார். சிவாஜிகணேசனுக்கு துணையாக அவருக்குப் பிடித்த நண்பர்களையும் உடன் அனுப்பும் வழக்கமாக வைத்திருந்தார். மேலும் சிவாஜிகணேசனின் குடும்பப் பிள்ளைகளில் ஆண் பிள்ளைகள் எல்லோரையும் பெங்களூர் பிஷப் கார்டன் பள்ளியிலும் பெண் பிள்ளைகளை சென்னையில் சர்ச் பார்க் பள்ளியிலும் படிக்க வைத்தார். சிவாஜி கணேசனுக்கு பாதுகாப்பாக இருந்து, தன்னலம் கருதாமல் இரவு பகல் என்று பாராமல் உழைத்தார். அவரது அந்தப் பணி சிவாஜி கணேசனுக்கு தன் தொழிலில் முழுக் கவனம் செலுத்த பெரிதும் உதவிகரமாக இருந்தது. சண்முகம் 1986 ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 25 ஆம் நாள் இறந்தார்.

சிவாஜி கணேசனின் அண்ணன் தங்கவேலு, தஞ்சை சூரக்கோட்டையில் அவருக்குச் சொந்தமான 48 ஏக்கர் பரப்பளவு உள்ள பண்ணையை அவர் உயிரோடு இருக்கும் வரை கவனித்துக் கொண்டார். அங்கு நெல், வாழை, தென்னை, மாமரங்கள் போன்றவை பயிரிடப்பட்டு பராமரிக்கப்படுகின்றன. தங்கவேலு 1988 ஜனவரி 11 அன்று இறந்தார்.[7]

சிவாஜி கணேசனின் தம்பி சண்முகத்திற்கு மனைவி சகுந்தலா, முரளிதரன் மற்றும் கிரிதரன் என்ற இரு மகன்கள் உள்ளனர். முரளிதரன் அமெரிக்காவில் தனது மனைவி லிண்டா ஒரு மகள் சாந்தி, இரு மகன்கள், கள்ளன் மற்றும் சாண் இவர்களுடன் வசித்து வருகிறார். கிரிதரன் தனது மனைவி அனுராதா மற்றும் இரு மகன்களான, ஸ்ரீமத், சிவ்ஜி இவர்களுடன் அன்னை இல்லத்தில் வசித்து வருகிறார்.

தற்போது சண்முகத்தின் இளையமகன் கிரிதரன் மன்றாயர் தனது தந்தை செய்து வந்த சிவாஜி பிலிம்ஸ் நிர்வாகம், கமலா அம்மாள் செய்து வந்த வீட்டு நிர்வாகம், பெரிய தந்தை செய்து வந்த பண்ணை நிர்வாகம் மூன்றையும் சிறப்பாக கவனித்து வருகிறார். இவர் சென்னையிலும், பின்பு அமெரிக்காவிலும் கல்வி பயின்றார்.

வேணுகோபால்

“நான் ராணுவத்தில் விமானப் படையில் பெங்களூரில் பணிபுரிந்த சமயம் அங்கு நடைபெற்ற திரைப்பட நட்சத்திர கிரிக்கெட் போட்டியில் சிவாஜி கணேசன் கலந்துகொண்டார். அவர் என் உறவினர் என்பது எனக்கு அப்போது தெரியாது. அதன்பின் சிவாஜிகணேசனின் தங்கை பத்மாவதியை எனக்குப் பெண் பார்த்திருக்கிறார்கள் என்று தெரிந்ததும் மகிழ்ச்சி அடைந்தேன். திருமணத்தன்றுதான் என்னை சிவாஜிகணேசன் பார்த்தார். அதுபோல் நானும் சிவாஜியின் தங்கையும் ஒருவரையொருவர் மணவறையில்தான முதல்முறையாக பார்த்துக் கொண்டோம். என் திருமணம் திருச்சி சங்கிலியாண்டபுரத்தில் 1954, அக்டோபர் 9ந் தேதி நடந்தது. என் திருமணத்தில் வரவேற்பாளராக இருந்தவர் நடிகர் எம்.கே. தியாகராஜபாகவதர். 1967இல் இருந்து சாந்தி தியேட்டரின் நிர்வாகியாக இருந்து வருகிறேன். சிவாஜிகணேசனிடம் எனக்குப் பிடித்தது அவரது முகம் எந்த வேடத்திற்கும் ஏற்ற வகையில் அவருக்கு அமைந்திருந்தது. அவருடைய மைத்துனர் என்பதில் பெருமகிழ்வு கொள்கிறேன்.[8]

**தளபதி ராம்குமார் - சிவாஜி கணேசனின் மூத்த மகன்**

“பொதுவாக சிறுவயதில் எல்லாக் குழந்தைகளும் அப்பாவை தழுவிக் கொண்டு கொஞ்சி விளையாடுவார்கள். நான் அப்படி விளையாடியது இல்லை. காரணம் அப்பா தொடர்ந்து படங்களிலும், நாடகங்களிலும் நடித்து வந்தார். நானும் சிறுவயதில் பெங்களூரில் படித்து வந்தேன். பெரியவனாக ஆனதும் அப்பாவைக் கட்டிப்பிடித்து விளையாட முடியவில்லை. அதனால் அவர் இறந்தபின் உடலை ஆசைதீர கட்டிப்பிடித்து அழுதேன்’ என்று உணர்ச்சிமயமாகக் கூறினார். தற்போது ராம்குமார் படத் தயாரிப்பு நிர்வாகியாகவும், அகில இந்திய சிவாஜி இரசிகர் மன்றத்தின் தலைவராகவும் இருந்து வருகிறார். இவருக்கு கண்ணம்மா (சிவாஜி கணேசனின் தங்கை மகள்) என்ற மனைவியும், துஷ்யந்த், தர்ஷன், ரிஷ்யன் என மூன்று மகன்கள் உள்ளனர்.[9]

**நடிகர் பிரபு**

சிவாஜி கணேசனின் மூன்றாவது பிள்ளை. பள்ளிப்படிப்பை பெங்களூரிலும், கல்லூரி படிப்பை சென்னை லயோலா கல்லூரியிலும் முடித்தார். லயோலாவில் படிக்கும் சமயம் ஈட்டி எறிவதில் தமிழ்நாடு மாநிலப் பிரதிநிதியாக கலந்துகொண்டார். தந்தையைப் போல் இளம் வயதிலேயே குதிரையேற்றம், நடனம், குத்துச்சண்டை முதலியவற்றை முறையாகக் கற்றார். வேட்டையாடுவது அவரது பொழுதுபோக்கு. தன் தந்தையுடன் ‘சங்கிலி’ என்ற படத்தில் வில்லனாக அறிமுகம் ஆகி நடித்தார். அதன் பின் ஏறக்குறைய 150 படங்களில் நடித்து விட்டார். பிரபுவுக்கென்று தனி ரசிகர்களும் மன்றங்களும் உண்டு. பிரபு நடித்த படங்களில் ‘என் தங்கச்சி படிச்சவ’, ‘சின்னத்தம்பி’, ‘பசும்பொன்’ போன்றவைகள் குறிப்பிடத் தக்கவையாகும். பிரபு சிவாஜி பிலிம்ஸ் நிறுவனத்தின் திரைப்பட தயாரிப்பாளராகவும் இருக்கிறார். அத்துடன் ‘கல்யாண் ஜுவல்லர்ஸ்’ நிறுவனத்தின் அடையாள தூதுவராக உள்ளார்.

பிரபுவின் ஏற்பாட்டில் இந்தியாவின் சூப்பர் ஸ்டார், அமிதாப்பச்சன், நடிகை ஐஸ்வர்யாராய், தெலுங்கு நடிகர் நாகார்ஜுனா, கன்னட நடிகர் புனித் ராஜ்குமார், நடிகை மஞ்சுவாரியர் போன்ற முக்கிய நடிகர்கள் அந்தந்த மாநிலங்களில் ‘கல்யாண் ஜுவல்லர்ஸ்’ நிறுவனத்தின் தூதுவர்களாக இருக்கிறார்கள். 2015 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் பதினொன்றாம் நாள் அந்த நிறுவனம் சென்னையில் அன்னை இல்லத்தின் அருகே மிகப்பெரிய விற்பனை நிலையத்தை தொடங்கினார்கள். பெரிய விளம்பரங்கள் செய்யப்பட்டன. இந்தியா முழுமைக்கும் பரபரப்பாக பேசப்பட்டது. அதே மாதம் பதினேழாம் நாள் அன்னை இல்லத்தில் நடைபெற்ற விருந்தில் அனைவரும் கலந்துகொண்டு சிறப்பு செய்தனர்.[10]

**சிவாஜி கணேசனின் மகள்கள்**

சிவாஜி கணேசனுக்கு இரண்டு மகள்கள், சாந்தி, தேன்மொழி ஆவர். அவர்கள் பேராசிரியர் நாராயணசாமி அவரது உடன் பிறந்த சகோதரர் மருத்துவர் கோவிந்தராஜன் இருவரையும் முறையே மணம் புரிந்து வாழ்ந்து வருகின்றனர். டாக்டர் நாராயணசாமி, சாந்தி தம்பதியினருக்கு விஜயலட்சுமி, சத்தியலட்சுமி என்ற இரு பெண்கள் உண்டு. டாக்டர் கோவிந்தராஜன், தேன்மொழி தம்பதியினருக்கு பிரியதர்ஷினி என்ற மகளும், குணால் என்ற மகனும் உண்டு. குணால் பிரபுவின் மகளைத் திருமணம் செய்து உள்ளார்.

சிவாஜிகணேசனின் கலை வாரிசுகளாக, ராம்குமார் மகன் நடிகர் துஷ்யந்த் மற்றும் பிரபுவின் மகன் நடிகர் விக்ரம் பிரபு இருந்து வருக்ன்றனர். நடிகர் விக்ரம் பிரபு நடித்த முதல் படம் ‘கும்கி’ 2012 டிசம்பர் 12 ஆம் நாள் வெளிவந்து பெரும் வெற்றியடைந்தது. தற்போது தமிழ்த் திரையுலகில் முன்னணி இளம் கதாநாயகர்களில் ஒருவராக நடித்து வருகிறார். துஷ்யந்த், இரண்டு படங்களில் நடித்துவிட்டு தற்போது திரைப்படத் தயாரிப்பில் ஈடுபட்டு உள்ளார்.[11]

**முரளிதரன் மனைவி லிண்டா கூறியது**

“My recollections of Sivaji are one of a kind, humble and down to earth man. Since I had never known him as an actor, my only impression of him was as a father in law.

My husband, Dharan, had always described him as the man who had raised him and who had instilled in him many values and virtues. Dharan was very respectful of Sivaji, or Appa, as he called him, and he instructed me and our children to show the upmost of respect to Appa as well. It was evident by the way Sivaji treated us, that he had a deep affection for my husband and so by extension for me and our children also.

One of the unique positions that I held in the family, was that of an outsider, since I was American and not part of the Indian culture, Sivaji treated me differently than the other daughter-in-laws. He would ask me to sit and talk with him and he would introduce me to his friends, which often included other actors and dignitaries.

When Sivaji would visit us in the United States, as he often did, usually every other year, he would just want to relax and spend time with our growing family. One of my fondest memories was when he would ask me to let him help with the cooking or even washing of the car and cleaning of the house, since these were tasks that he was

not allowed to do in India. He would ask me questions about America and about my Christian faith. He was very observant and curious and showed a genuine interest in learning new things.

I feel very honored and blessed that I got to know Sivaji on such an personal level. A rare opportunity to be in the presence of a truly remarkable and yet very real man."[12]

**பிரியாணி நாள்**

சிவாஜிகணேசன் வீட்டில் 'பிரியாணி நாள்' (BIRIYANI DAY) என்பது கலை உலகில் மிகவும் பிரபலமானது. சிவாஜி கணேசன் ஞாயிற்றுக் கிழமைகளில் தன் வீட்டு உறுப்பினர்கள் அனைவருடனும் பிரியாணி சாப்பிடுவதை வழக்கமாக்கினார். அன்றைய தினம் தங்கள் குடும்பத்துக்கு வேண்டிய நண்பர்களை அழைத்து தங்களுடன் சேர்ந்து உணவருந்தச் செய்வார். நடிகர் ரஜினிகாந்த், நடிகர் கமல்ஹாசன், மலையாள நடிகர் மோகன்லால் போன்ற பிரபலமான நடிகர்கள் தங்களுக்கு படப்பிடிப்பு இல்லாத சமயங்களில் அன்னை இல்லத்திற்கு பிரியாணி சாப்பிட வருவது வழக்கம்.[13]

**பண்டிகைகள் கொண்டாட்டம்**

அன்னை இல்லத்தில் அனைவரும் மகிழ்ச்சியாக கொண்டாடுவது தீபாவளி மற்றும் பொங்கல் பண்டிகைகள். தீபாவளியை மிகவும் விமரிசையாக கொண்டாடுவதற்கு முக்கிய காரணமாக விளங்குவது சிவாஜி கணேசனின் முதல் படமான 'பராசக்தி' தீபாவளி அன்றுதான் வெளியிடப்பட்டது.[14]

**தீபாவளி**

அன்னை இல்லத்தில் சிவாஜிகணேசன் குடும்பத்தார் தீபாவளியை கொண்டாடுவது பற்றி தளபதி ராம்குமார் கூறியது, "தீபாவளி அன்று மட்டும் நாங்கள் அதிகாலை 4.45 மணிக்கு எழுந்துவிடுவோம். வீட்டில் உள்ள பெரியவர்கள், சிறியவர்கள், வேலைக்காரர்கள் உட்பட அனைவரும் வரிசையில் நின்று எங்கள் பாட்டி (சிவாஜியின் தாயார்) கையால் தலையில் சிறிது எண்ணெய் வைக்கும் சம்பிரதாயம் நடைபெறுவது வழக்கம்.

எண்ணெய் குளியல் முடிந்ததும் மீண்டும் பாட்டி அறையில் வரிசையாக நின்று, புதுத்துணிகளை பெற்றுக் கொள்வோம். பின் எங்கள் தாத்தா (சிவாஜியின் தந்தை)வின் ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு அவர் கொடுக்கும் புத்தம் புதிய ஒரு

ரூபாய் பணத்தை பெற்றுக் கொள்வோம். அதன்பின் தெய்வவழிபாடு நடைபெறும். தெய்வ வழிபாட்டிற்குப் பின் பெண்கள் சமையலறையில் காலை உணவு தயாரிப்பதற்கு உதவுவார்கள். சிறுவர்களாகிய நாங்கள் அனைவரும் பட்டாசு வெடித்து மகிழ்வோம்.

பட்டாசுகள் வெடித்தபின்பு காலை உணவு. தஞ்சாவூர் பாரம்பரிய உணவு வகைகளான மட்டன் குருமா, கீமா, போட்டி, ஆம்லெட்ஸ், தோசையுடன் சேர்த்து பரிமாறப்படும். மேலும், இட்லி, இடியாப்பம், ஆப்பம், சாம்பார் மற்றும் பலவகை சட்டினியோடு கிடைக்கும். இடியாப்பம் தேங்காய் பாலுடன் கிடைக்கும். இலையில் நம் தென்னிந்திய இனிப்பு வகைகளான லட்டு, அதிரசம், தேங்காய் பர்பி, சுழியம் மற்றும பாசிப்பயறு உருண்டைகள் பரிமாறப்படும்.

காலை உணவிற்குப் பின் மீண்டும் பட்டாசுகள் கொளுத்துவோம். அந்த சமயத்தில் திரைப்படத்துறைக் கலைஞர்கள், ஒலி மற்றும் ஒளிப்பதிவு உதவியாளர்கள் வந்து அப்பாவிடம் ஆசீர்வாதம் மற்றும் பண உதவி பெறுவார்கள். நாங்கள் சித்தப்பா மற்றும் பெரியப்பா, அத்தை பிள்ளைகள் மொத்தமாக பதினொருபேரும் பெரியவர்கள் காலில் விழுந்து ஆசீர்வாதமும், பணமும் பெற்றுக்கொள்வோம். ஒவ்வொருவர்க்கும் ரூபாய் நாற்பதிலிருந்து ஐம்பது வரை கிடைக்கும்.

உயர்தரமான மதிய உணவுக்குப் பின் குடும்பத்தினர் அனைவரும் அப்பாவின் புதிய படத்தைப் பார்க்கச் செல்வோம். பெரும்பாலும் அப்பாவின் படம் தீபாவளிக்குத்தான் வெளியிடப்படும். திரையரங்கில் ரசிகர்கள் அப்பாவின் நடிப்பைப் பார்த்துவிட்டு ஆடும் ஆட்டங்களைப் பார்ப்பதற்கு மிகவும் நன்றாக இருக்கும். திரையரங்கை விட்டு வெளியில் வருவது என்பது மிகவும் கடினமாக இருக்கும். என்னையும் என் தம்பியையும் தொட்டுப் பார்க்க ஆசைப்படுவார்கள். அது மிகவும் வித்தியாசமான அனுபவமாக இருக்கும்.

அன்று மாலை அப்பா மற்றும் சித்தப்பாவின் தலைமையில் நாங்கள் இரு பிரிவாக பிரித்துக்கொண்டு ராக்கெட் வெடிகளை வெடித்து யாருடையது அதிகமான உயரத்திற்கு சென்றது என்று போட்டி நடக்கும். பின்வு இரவுச் சாப்பாடு. ஆட்டுக்கறி மற்றும் கோழிக்கறி வகை வகையாக இருக்கும். இரவில், வட இந்திய இனிப்பு வகைகள் பரிமாறப்படும். ஜிலேபி (அப்பாவுக்கு பிடித்த இனிப்பு) ரசகுல்லா, குலோப்ஜாமூன், ரசமலாய், சம்சம், இராஜஸ்தான் பால் அல்வா, வட இந்திய லட்டு, பல வகையான நிறங்களில் அல்வா, சோஹன் அல்வா. இப்படி நினைத்தாலே உமிழ்நீர் சுரக்க வைக்கும் இனிப்பு வகைகள் பரிமாறப்படும். அனைத்தும் முடிந்தபின் “கடவுளே ஏன் இந்த நாளை விரைவாக கடக்க விட்டாய் ?” என்று நினைத்து வருந்துவோம்.[15]

**பொங்கல்**

பொங்கல் பண்டிகையை சிவாஜி கணேசன் குடும்பத்தார் தமிழ் மரபுப்படி கொண்டாடுவது வழக்கம். அதிகாலையில் சூரியன் உதிக்கும் வேளையில் அன்னை இல்லத்தின் பின்புறம் கமலா அம்மாள் தலைமையில் பெண்கள் அனைவரும் ஒன்றுகூடி பொங்கல் செய்து அனைவரும் சாப்பிடுவது வழக்கம். பின்பு சிவாஜி கணேசனும் கமலா அம்மாளும் புதுத் துணி அணிந்து வேலூருக்கு கிளம்பிச் செல்வது வழக்கம். வேலூரில் தன்னை அறிமுகம் செய்த பெருமாள் முதலியார் வீட்டிற்குச் சென்று அனைவருக்கும் பட்டுத் துணிகள் வழங்கி, ஒரு தட்டில் வெள்ளிக் காசுகளைக் கொட்டி பெருமாள் முதலியார் மற்றும் அவரது மனைவியிடம் அளித்து வணங்கிவிட்டு அவர்களுடன் அமர்ந்து பொங்கல் சாப்பிட்டுவிட்டு சென்னை திரும்புவார்கள். பின்பு சென்னையிலிருந்து குடும்பத்தினர் அனைவருடனும் சூரக்கோட்டையில் உள்ள தனது பண்ணைக்குச் சிவாஜி கணேசன் செல்வார். அன்று இரவு பண்ணை வீட்டில் தங்கி மறுநாள் காலையில் மாட்டுப் பொங்கலை பண்ணையில் வேலை செய்யும் வேலையாட்கள் சுமார் 60 பேருக்கு புதுத்துணிமணிகள் வழங்கி அவர்களோடு சேர்ந்து கொண்டாடுவார். மாட்டுப் பொங்கலுக்கு மறுநாள் ஆடு வெட்டி சுமார் 500 பேர்களுக்கு விருந்தளிப்பார். அந்த விருந்துக்கு உறவினர்கள், குடும்ப நண்பர்கள் அனைவரையும் அழைப்பார்.[16]

**சிவாஜி கணேசனின் நட்பு வட்டம்**

சிவாஜிகணேசன் நண்பர்களை பெரிதும் மதித்து பழகும் பழக்கம் உள்ளவர். சாதி, மதம், இனம், நாடு மற்றும் மொழி கடந்து அனைவரிடமும் மிக அன்புடனும் இனிமையுடனும் பழகுவார். அதனால் அவரது நட்பு வட்டம் என்பது அரசியல் தாண்டி இந்தியாவில் பல கட்சித் தலைவர்களுடனும், வெளிநாட்டு பிரதமர்களுடனும், அதிபர்களுடனும் நெருங்கிப் பழகும் வண்ணம் விரிவடைந்திருந்தது.

**நாடகம் மற்றும் திரையுலக நட்பு**

தன்னை வைத்து படங்களைத் தயாரித்த தயாரிப்பாளர்கள், படங்களை இயக்கிய இயக்குநர்கள், தன்னுடன் நடித்த சக நடிகர்கள் மற்றும் நடிகைகள் தொழில்நுட்ப கலைஞர்கள் என்று அனைவரிடமும் நடிக்கத் துவங்கிய காலத்திலிருந்து இறுதிக் காலம் வரை நட்பு பாராட்டி மகிழ்ந்திருந்தார்.

திரைப்படத்திற்கு வருவதற்கு முன் தன்னுடன் நாடகங்களில் நடித்த நடிகர், நடிகைகளுடன் நட்பை பேணிக் காத்து வந்தார். உதாரணமாக ஏழு வயதில் தன்னுடன் நடித்து வந்த கா.கா. ராதாகிருஷ்ணன், கே.வி. சீனிவாசன், வீராச்சாமி போன்றவர்களைக் கூறலாம். திரையுலகில் மிகப் பெரிய நடிகராக புகழ் பெற்றதும், தன்னுடன் நாடகங்களில் நடித்த நடிகர்களை முன்னேற்ற வேண்டும் என்ற எண்ணத்தில் சிவாஜி நாடக மன்றத்தை துவக்கினார். அதில் நடித்தவர்களை திரைப்படங்களிலும் நடிப்பதற்கு ஏற்பாடு செய்து நெருக்கத்துடன் பழகி வந்தார். ஓய்வு பெற்றிருந்த காலத்தில் ஒருநாள் வீட்டில் இருந்த அனைத்து கார்களையும் அனுப்பி நாடக உலகில் தன்னுடன் நடித்தவர்களை வீட்டிற்கு அழைத்து வரச் செய்து காலை, மதியம், உணவு வழங்கி மாலையில் காபி கொடுத்து உபசரித்தார். தன் பழைய நாடக கால விஷயங்களை பேசி மகிழ்ந்து, வறுமையில் வாடும் ஒருசில நடிகர்களுக்கு பணம் கொடுத்து அனுப்புவார்.[17]

**தொழில் அதிபர்களின் நட்பு**

ரிலையன்ஸ் குழுமத்தின் நிறுவனர் திருபாய் அம்பானி சிவாஜிகணேசனின் நெருங்கிய நண்பராக விளங்கினார். அம்பானியின் வேண்டுகோளை ஏற்று டெல்லி சென்றால் அவருடைய விருந்தினர் மாளிகையில் தங்குவதை வழக்கமாக வைத்திருந்தார். அம்பானி சென்னை வந்தால் சிவாஜிகணேசனின் அன்னை இல்லத்திற்கு வந்து விருந்தில் கலந்துகொள்வது வழக்கமாக வைத்திருந்தார். தமிழக மற்றும் வட இந்திய தொழில் அதிபர்களில் டி.வி.எஸ். குடும்பத்தைச் சேர்ந்த ரத்தினம் அய்யங்கார், இந்தியா சிமிண்ட்ஸ் அதிபர் நாராயணசாமி, சக்தி குழுமத்தின் நிறுவனர் பொள்ளாச்சி மகாலிங்கம், வேலூர் விஜயரங்க முதலியார், கோவை லட்சுமி குழுமத்தைச் சேர்ந்த ராமமூர்த்தி, தூத்துக்குடி கே.எஸ்.பி.எஸ். கணபதி நாடார், எம்.ஏ.எம். ராமசாமி, எம்.ஏ. சிதம்பரம், தினத்தந்தி அதிபர் சி.பா. ஆதித்தனார், ஹிந்து பத்திரிக்கை குடும்பத்தைச் சேர்ந்த எஸ். ரங்கராஜன், இந்தியன் எக்ஸ்பிரஸ் அதிபர் பி.டி. கோயங்கா குடும்பம், கோவை ஜி.டி. நாயுடு குடும்பம், Ten Sports புகாதீர் அப்துல் ரகமான் போன்றவர்கள் சிவாஜி கணேசனுக்கு மிகவும் நெருங்கிய நண்பர்களாக விளங்கினார்கள்.[18]

**அமெரிக்க ஐக்கிய நாடுகளில் சிவாஜி கணேசனுக்கு கிடைத்த மரியாதை**

1962ல் சிவாஜி கணேசன் அமெரிக்க இன்டியனா பொலிஸ் நகரக் குழந்தைகளுக்கு 'கலோ' எனும் யானைக் குட்டியை சென்னை அமெரிக்க தூதுவர் தாம்சைமன் மூலம் பரிசாக அனுப்பி வைத்தார். அதை அறிந்த அமெரிக்க ஜனாதிபதி Jhon F. Kennedy சிவாஜிகணேசனை கலாச்சார தூதுவராக அழைக்க உத்தரவிட்டார். அதன்படி 1962 ஆம் ஆண்டு மார்ச் திங்கள் பம்பாயிலிருந்து புறப்பட்டு இங்கிலாந்து, ஜெர்மனி, ரோம், இத்தாலி, பிரான்ஸ் போன்ற நாடுகளின் வழியாக அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு சிவாஜி கணேசன் பயணம் மேற்கொண்டார். பாரீஸ் நகரத்தில் இந்தியன் அசோசியேஷனில் வரவேற்பு அளித்தார்கள்.[19]

1962 ஆம் ஆண்டு மே திங்கள் 18 ஆம் நாள் கலிபோர்னியாவில் உள்ள ஹாலிவுட் சென்றடைந்த சிவாஜிகணேசனுக்கு ஹாலிவுட்டின் 'Actors Guild' நடிகராக அங்கீகாரம் கிடைத்தது. ஹாலிவுட் பிரபலமான நடிகர்களில் ஒருவரும், 'பென்ஹர்' என்ற வரலாற்று திரைப்படத்தின் கதாநாயகனுமான சால்டன் ஹெஸ்டன் (Charlton Heston) தனது வீட்டில் 'டைமன்ட் லஞ்ச்' கொடுத்தார். அந்த விருந்தில் பிரபல ஹாலிவுட் நடிகர்களான ஜேம்ஸ் கார்னர் (James Garner), ஜேக் லெம்மன் (Jack Lemmon), ஜார்ஜ் சேன்ட்லர் (George Chandler), வால்டர் பிட்ஜியன் (Walter Pidgeon) போன்றவர்கள் கலந்து கொண்டு சிவாஜிகணேசனை பெருமைப்படுத்தினார்கள்.[20]

அதன்பின் 'Ugly American' என்ற படப்பிடிப்பில் இருந்த ஹாலிவுட்டின் தலையான நடிகரான மார்லன் பிராண்டோவை அவர் அளித்த விருந்தில் சிவாஜிகணேசன் சந்தித்தார். இருவரும் இந்தியன் சினிமா பற்றி விவாதித்தனர்.[21]

**நயகரா நகரத்தின் ஒருநாள் மேயர்**

சிவாஜிகணேசன் நயகரா நகரத்திற்கு சென்றபோது, அவரை வரவேற்க மிகப்பெரிய ஏற்பாடுகள் செய்யப்பட்டு இருந்தன. அவரை வரவேற்க மூன்று கார்கள் வந்தன. முதல் காரில் சிவாஜிகணேசனுக்கு ஏற்பாடாகி இருந்த செக்ரட்டரியும், இரண்டாவது காரில் அந்த நகரத்தின் மேயரும், மூன்றாவது காரில் நயகரா நகரத்தின் முக்கிய பிரமுகர்களும் வந்து நின்று வரவேற்றனர். சிவாஜிகணேசன் கையில் ஒரு பூச்செண்டு கொடுத்தனர். அதன்பின் நயகராவின் மேயர் ஆறு அடி நீளமுள்ள அந்த நகரத்தின் 'தங்கச் சாவி'யை சிவாஜி

கணேசனிடம் அளித்து, ‘இன்று காலை வரைதான் நான் மேயர், இப்போதிலிருந்து நாளைக் காலைவரை நீங்கள்தான் நயகராவின் ஒருநாள் மேயர் (ONE DAY MAYOR) என்று கூறினார்.

பின்னர் சிவாஜிகணேசனை ஒரு பெரிய வசதியான மாளிகையில் தங்க வைத்தனர். நயகரா நீர் வீழ்ச்சியை சுற்றிக் காண்பித்தனர். சிவாஜிகணேசன் அங்கிருந்து புறப்படும்போது நயகரா நகரத்தின் எல்லைவரை அனைவரும் வந்து மீண்டும் ஒரு பூச்செண்டை கொடுத்து வழியனுப்பி வைத்தனர்.[22]

இந்தியாவிலிருந்து அன்றைய பிரதமர் ஜவகர்லால் நேருவுக்கு அடுத்தபடியாக சிவாஜிகணேசனுக்கு மட்டுமே அந்த கௌரவம் கொடுக்கப்பட்டது.[23]

**சிவாஜி கணேசனுக்கு மொரீசியஸ் நாட்டில் கிடைத்த பெருமை**

மொரீசியஸ் நாட்டில் 1975 ஆம் ஆண்டு இந்திய சுதந்திரதின விழாவிற்கு சிவாஜிகணேசன் விருந்தினராக அழைக்கப்பட்டார். மொரீசியஸ் நாட்டின் முதல் பிரதமர் சர் சிவுசாகூர் ராம்கூலம் (Sir Seewoo Sagur Ramgoolam) சிவாஜிகணேசனை போர்ட் லூயிஸ் விமான நிலையத்தில் வரவேற்று கௌரவித்தார்.[24]

சிங்கப்பூரில் சிவாஜி கணேசனுக்கு விருது

சிங்கப்பூர் ‘Indian Movie News’ என்ற பத்திரிகையின் தலைவர் எஸ்.ஏ. நாதன் தலைமையில், தமிழ் சினிமா கலைஞர்களுக்கு ‘வாழ்நாள் சாதனையாளர் விருது’ வழங்கும் விழா 1990 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் நான்காம் நாள் சிங்கப்பூரில் நடந்தது. அந்த விழாவில் கீழ்க்கண்டவர்களுக்கு விருதுகள் வழங்கப்பட்டன.

| | | |
|---|---|---|
| சிவாஜி கணேசன் | - | வாழ்நாள் சாதனையாளர் விருது |
| கமல்ஹாசன் | - | சிறந்த நடிகர் |
| ராதிகா | - | சிறந்த நடிகை |
| இளையராஜா | - | சிறந்த இசையமைப்பாளர் |
| பிரபு | - | சிறந்த துணை நடிகர் |
| கௌதமி | - | சிறந்த துணை நடிகை |
| கவுண்டமணி, செந்தில் | - | சிறந்த நகைச்சுவை நடிகர்கள் |
| மனோரமா | - | சிறந்த நகைச்சுவை நடிகை |

| | | |
|---|---|---|
| கங்கை அமரன் | - | சிறந்த இயக்குநர் |
| ஜி. வெங்கடேசன் | - | சிறந்த தயாரிப்பாளர் |
| எஸ்.பி. பாலசுப்ரமணியம் | - | சிறந்த பாடகர் |
| சித்ரா | - | சிறந்த பாடகி[25] |

அந்த விழா Singapore Indoor Stadium என்ற (SIS) அரங்கில் நடைபெற்றது. அந்த அரங்கம் 12,000 இருக்கைகள் கொண்டது. சிவாஜிகணேசனுக்கு விருது வழங்கும் விழா என்றதும் டிக்கெட்டுகள் அனைத்தும் சில மணி நேரங்களில் விற்றுவிட்டன. மக்கள் மேலும் டிக்கெட்டுகள் கேட்டு Indian Movie News நிர்வாகிகளை தொந்தரவு செய்ததால், அந்த அரங்கின் பின் பக்கத்தில் உள்ள 3000 இருக்கைகளை உபயோகப்படுத்த அனுமதி பெற்று மேலும் 3000 அனுமதி சீட்டுகள் அச்சடித்து விற்றனர். அதன் பின்னும் மக்கள் அலைமோதினார்கள். விழா பிரம்மாண்டமாக நடைபெற்றது. இந்த விழா பற்றி சிங்கப்பூர் 'The News Paper' 'The biggest Indian Show' என தலைப்புச் செய்தி வெளியிட்டது.[26]

அந்த விழாவில் சிவாஜிகணேசனுக்கு உடல்நலம் பாதிக்கப்பட்டு சிங்கப்பூர் மௌன்ட் எலிசபெத் மருத்துவமனையில் இருந்து பத்து நாட்களுக்கு சிகிச்சை எடுத்துக் கொண்டார். அந்த விழாவில் உடல்நலம் பாதிக்கப்பட்டு விழா சரியாக நடைபெறவில்லை என்பதால் மீண்டும் வருவதாக பத்திரிக்கையாளர்களிடம் பேட்டிக் கொடுத்துவிட்டு இந்தியா திரும்பினார்.[27]

அதன் பின்னர் சில மாதங்கள் மீண்டும் சிங்கப்பூர் சென்று மக்களிடம் சில வருடங்களுக்கு முன் நான் கொடுத்த வாக்கினை காப்பாற்றிவிட்டேன். உங்கள் முன்னால் மீண்டும் வந்துவிட்டேன் என்று கூறினார்.[28]

**இலங்கை ரோட்டரி கிளப்பின் கௌரவ அங்கத்தினர்**

1975 ஆம் ஆண்டு மே திங்கள் 16 ஆம் நாள் Colombo Mid Town Honorary Membership சிவாஜிகணேசனுக்கு வழங்கப்பட்டது. அனைவரும் அவரை வெகுவாய் பாராட்டி கௌரவித்தார்கள்.[29]

**குவைத் நாட்டில் சிவாஜிகணேசன்**

இந்தியக் குடியரசின் 50வது ஆண்டு விழா 1998 ஆம் ஆண்டு ஜனவரி திங்கள் 26 ஆம் நாள் குவைத் நாட்டின் விருந்தினராக சிவாஜி கணேசன் அழைக்கப்பட்டார். அங்கு குவைத் நாட்டு மன்னர் HH 3rd Emir Sheikh JABER ALI – AHMAD AL SABAH 13th ruler மற்றும் அவரது குடும்பத்தினர்கள் சிவாஜி கணேசனை கௌரவித்தார்கள்.[30]

**சிவாஜி கணேசன் கொலம்பஸ் நகரத்தின் கௌரவக் குடிமகன்**

1995 ஆம் ஆண்டு ஜூன் திங்கள் சிவாஜி கணேசன், ஓஹையோ மாநிலம், கொலம்பஸ் நகரத்தின் விருந்தினராக அந்நகரத்தின் மேயர் கிரக் லஸுட்கா (Greg Lashutka) வால் அழைக்கப்பட்டு, கௌரவக் குடிமகன் என்றுஅறிவிக்கப்பட்டார். அதே நிகழ்ச்சியில் மௌன்ட்வெர்னன் (Mount Vernon) நகரத்தின் மேயர் சிவாஜி கணேசனுக்கு வரவேற்பு பத்திரத்தை வாசித்து அளித்தார். குமுதம் பத்திரிக்கையின் நிர்வாகி, டாக்டர் ஜவகர் பழனியப்பன் இந்த நிகழ்ச்சியில் கலந்துக்கொண்டார். கொலம்பஸ் நகரத்தின் தமிழ் சங்கம் அவரை தங்களது சங்கத்தின் கௌரவத் தலைவராக அறிவித்து கௌரவப்படுத்தினார்கள்.[31]

**சிவாஜி கணேசன் டொலேடா நகரத்தின் ஒருநாள் குடிமகன்**

அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஒஹையோ (OHIO) மாநிலத்தில் உள்ள டொலேடோ (Toledo) தமிழ்நாடு பவுண்டேஷன் (யு.எஸ்.ஏ.) நிர்வாகிகள் முதன்மை விருந்தினராக சிவாஜி கணேசனை அழைத்து பாராட்டுவிழா நடத்தி கௌரவப்படுத்தினர். அந்த விழாவுக்கு சிவாஜிகணேசனோடு அவரது மனைவி கமலா, ராம்குமார், இயக்குநர் பாரதிராஜா, கவிஞர் வைரமுத்து மற்றும் அமெரிக்க பிட்ஸ்பர்க் நகரில் வசிக்கும் டாக்டர் வேல் பாரி முதலியோர் சென்றிருந்தனர். டொலேடா நகரத்தின் அரசாங்கம் "ஒருநாள் குடிமகன்" என்ற கௌரவத்தை சிவாஜி கணேசனுக்கு வழங்கி பெருமைப்படுத்தியது.[32]

**இலங்கையில் நடந்த பாராட்டு விழா**

1997 ஆம் ஆண்டு மத்திய அரசால் தாதா சாகேப் பால்கே விருது சிவாஜிகணேசனுக்கு அளிக்கப்பட்டதால் அதைப் பாராட்டி இலங்கையில் ஒரு விழா எடுத்தார்கள். அந்த விழாவில் தமிழ்நாட்டில் இருந்து நடிகர் பிரபு, இயக்குநர் பாரதிராஜா முதலியோர்கள் கலந்து கொண்டார்கள்.[33]

**சிவாஜிகணேசன் செய்த தான தர்ம காரியங்கள்**

"தானமும், தர்மமும், தவமும் தனிமனிதனின் ஆத்ம திருப்திக்காக, உணர்வு பூர்வமான சந்தோஷத்திற்காக. இதில் விளம்பரம் தேவையில்லை" என்று தான தர்ம காரியங்களைப்பற்றிய தனது கருத்தை பதிவு செய்தார். சிவாஜிகணேசன்.[34]

**சமுதாய நலன்**

'பராசக்தி'யில் நடித்துக் கொண்டிருந்த காலத்தில் டென்னிஸ் கிருஷ்ணன் ஜூனியர் விம்பிள்டன் ஆடுவதற்காக வெளிநாடு செல்வதற்கான நிதி திரட்டப்படும்போது, தனது ஒருமாத சம்பளம் ரூ.250/-ஐ முதன் முதலில் அளித்தார். நடிகர் திலகம் சிவாஜிகணேசன் 1950ல் என்னை ஊக்கப்படுத்தும் வகையில் எனக்கு அளித்த நன்கொடையை நான் இன்றளவும் மகிழ்ச்சியாக நினைவு கூர்ந்து வருகிறேன்.[35]

1968 ஆம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற உலக தமிழ் மாநாடு சிறக்க வள்ளுவர் சிலை அமைத்து தந்தார். மேலும் ஐந்து இலட்சம் ரூபாய் நன்கொடையாக அன்றைய முதல்வர் அண்ணாதுரையிடம் அளித்தார்.[36]

1972 ஆம் ஆண்டு காஷ்மீர் மாநில முதலமைச்சர் மீர் காசிமிடம் அம்மாநில தாழ்த்தப்பட்ட மாணவர்கள் கல்வி நிதிக்காக இருபத்தி ஐந்தாயிரம் ரூபாய் அளித்தார்.[37]

1973இல் முன்னாள் அமைச்சர் கக்கனுக்கு 'தங்கப்பதக்கம்' நாடகம் நடத்தி பதினைந்தாயிரம் ரூபாயும், தன் கழுத்தில் கிடந்த 10 பவுன் தங்க சங்கிலியையும் அளித்தார்.[38]

1974இல் 'தங்கப்பதக்கம்' நாடகம் நடத்தி செலவு போக மீதமுள்ள பன்னிரண்டாயிரம் ரூபாயை பசும்பொன் மன்ற வளர்ச்சி நிதிக்காக அளித்தார். 1973 ஆம் ஆண்டில் நட்சத்திரக் கலைவிழாவும் அதில் சாம்ராட் அசோகன் நாடகமும் நடத்தி நான்காயிரம் ரூபாயை பசும்பொன் மன்ற நிதிக்காக அளித்தார்.[39]

1964இல் பம்பாயில் வீர சிவாஜிக்கு சிலை அமைக்க நன்கொடை அளித்தார். கயத்தாரில் வீரபாண்டி கட்டபொம்மனுக்கு மற்றும் முதுகுளத்தூரில் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவருக்கு சிலைகள் அமைத்தார். மதுரை கோரிப்பாளையத்தில் பசும்பொன் தேவருக்கு 1971இல் கோடம்பாக்கம் பவர்ஹவுஸ் சாலையில் அம்பேத்காருக்கு சிலை அமைத்தார். 1967இல் திருச்சியில் ஈ.வெ.இராமசாமி நாயக்கருக்கு சிலை அமைத்தார். சென்னை கடற்கரையில் 1968இல் திருவள்ளுவருக்கு சிலை அமைத்தார். பல இடங்களில் காமராஜருக்கு சிலைகளை அமைத்தார்.[40]

1972 ஆம் ஆண்டில் கோவையில் காவல் துறையினர் நடத்திய துப்பாக்கி சூட்டில் பலியான விவசாயிகள் குடும்பத்திற்கு தலா ஐயாயிரம் ரூபாய் வழங்கினார்.[41]

தேச நல நிதி

1962இல் இந்திய-சீனப் போரின்போது ஜவகர்லால் நேருவிடம் ரூ.40,000 முதல் நபராக அளித்தார்.[42]

1962இல் 'பாசமலர்' படத்தில் இந்திப் பதிப்பான 'ராக்கி' படத்தின் அகில இந்திய ஒருநாள் வசூலை யுத்த நிதியாக அளித்தார்.[43]

1965 ஆம் ஆண்டு இந்திய-பாகிஸ்தான் போர் சமயத்தில் லால்பகதூர் சாஸ்திரியிடம் 100 பவுன் எடையுள்ள தங்கப் பேனாவை சிவாஜிகணேசன் அளித்தார். உடன் வந்த அவரது மனைவி கமலாம்மாள் தன்னுடைய 400 பவுன் எடையுள்ள நகைகளை தானமாக அளித்தார்.[44]

1965 ஆம் ஆண்டு இந்தியா-பாகிஸ்தான் நிதியாக பதினைந்தாயிரம் ரூபாயை துணைக் குடியரசுத் தலைவர் ஜாகீர் உசேனிடம் அளித்தார்.[45]

1965 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17, 18 தேதிகளில் 'நீதியின் நிழல்', 'களம் கண்ட கவிஞன்' முதலிய நாடகங்களை நடத்தி வசூலான ரூ.ஒரு லட்சத்தை யுத்த நிதியாக அன்றைய முதல்வர் பக்தவத்சலத்திடம் அளித்தார்.[46]

1965இல் ஜவகர்லால் நேரு நினைவு நிதிக்காக ஒன்றரை லட்சம் ரூபாய் அளித்தார்.[47]

1971 ஆம் ஆண்டு சிவாஜிகணேசன் தன் மனைவியுடன் இராணுவ முகாமில் ரத்ததானம் செய்து ரசிகர்களிடமிருந்து வசூலான தொகை முழுவதையும் கொடுத்தார்.[48]

1972 ஆம் ஆண்டு 'ராஜா' திரைப்படத்தின் ஒருநாள் வசூலான தொகையை சென்னை விமானப்படையில் உயிர்நீத்த வீரர்களின் குடும்பத்திற்கு அளித்தார்.[49]

1974இல் கடற்படை வீரர்கள் நிதிக்காக அட்மிரல் குல்கர்னியிடம் ஐம்பதினாயிரம் அளித்தார்.[50]

எட்டயபுரத்தில் பாரதிக்கு விழா எடுத்தார். அதற்காக சென்னையிலிருந்து 100 பிளைமவுத் கார்களை அணி வகுத்து செல்ல ஏற்பாடு செய்தார்.[51]

1999 ஆம் ஆண்டு கார்கில் போர் நிதியாக அன்றைய முதல்வர் கருணாநிதியிடம் ஒரு லட்சம் ரூபாய் நன்கொடையாக அளித்தார்.[52]

**கல்வி நிதி**

1958 ஆம் ஆண்டு முதல் 1961 வரை வீரபாண்டிய கட்டபொம்மன் நாடகத்தை 112 முறை நடத்தி அதற்கான செலவுகள் நீங்கலாக ரூ.32 லட்சங்களை பல கல்லூரிகளுக்கும், பள்ளிகளுக்கும் அளித்தார்.[53]

1959ல் மதிய உணவுத் திட்டத்திற்காக ஜவகர்லால் நேருவிடம் ரூ.1 லட்சம் நன்கொடையாக அளித்தார்.[54]

1962இல் மதுரை சரஸ்வதி பள்ளிக் கட்டிடம் இடிந்து பாதிக்கப்பட்ட மாணவர்களுக்கு ரூ.1,00,000/- கொடுத்தார்.[55]

1957 முதல் 1961 வரை பம்பாயில் நாடகங்கள் நடத்தி குழந்தைகளின் கல்வி நிதிக்காக ரூ.5 லட்சம் கொடுத்தார்.[56]

1968 ஆம் ஆண்டு மைலாப்பூர் விவேகானந்தா கல்லூரியின் கட்டிட நிதிக்காக நாற்பதினாயிரம் ரூபாயை நன்கொடையாக அளித்தார்.[57]

1968 ஆம் ஆண்டு 'வியட்நாம்வீடு' நாடகம் நடத்தி திருச்சி ஜமால் முகம்மது கட்டிட நிதிக்காக ஒரு இலட்சத்து முப்பதினாயிரம் ரூபாய் நன்கொடையாக அளித்தார்.[58]

1972ஆம் ஆண்டு காஷ்மீர் மாநில முதலமைச்சர் மீர் காசிமிடம் அம்மாநில தாழ்த்தப்பட்ட மாணவர்கள் கல்வி நிதிக்காக இருபத்து ஐந்தாயிரம் ரூபாய் அளித்தார்.[59]

சென்னை பெசன்ட் நகரிலுள்ள மங்கையர்க்கரசி மகளிர் மன்றக் கட்டிடத்திற்காக 'தங்கப்பதக்கம்' நாடகத்தின் ஒருநாள் வசூலை அளித்தார்.[60]

1982இல் நடிகர் பிரபு அன்றைய தமிழக முதல்வர் எம்.ஜி. இராமச்சந்திரனை சந்தித்து தன் சார்பில் இருபத்து ஐந்தாயிரம் ரூபாயும், சிவாஜிகணேசன் சார்பில் ஒரு இலட்ச ரூபாயும், சத்துணவுத் திட்டத்திற்காக அளித்தார்.[61]

பாண்டிச்சேரி பள்ளிகள் பகலுணவு நிதியாக ஒரு இலட்சம் ரூபாய் அளித்தார்.[62]

**மருத்துவ நிதி**

சென்னையில் மருத்துவர் சீனிவாச சஞ்சீவியால் உருவாக்கப்பட்ட Voluntary Health Services மருத்துவமனைக்கு அடிக்கல் நாட்டுவதற்கு 1961 அக்டோபரில் வருகை தந்த ஜவகர்லால் நேருவிடம் ரூபாய் 25,000/- நன்கொடை அளித்தார்.[63]

1961இல் பாரதப்பிரதமர் நேருவிடம் கிழக்கு தாம்பரத்தில் காசநோய் மருத்துவமனை கட்டிட நிதியாக ரூ.1 லட்சம் அளித்தார்.[64]

1964 ஆம் ஆண்டில் தனது தாயார் ராஜாமணி அம்மாள் பெயரில் விருது நகர் மாவட்டம், மம்சாபுரத்தில் ஒரு கால்நடை மருத்துவமனையை நிறுவினார்.[65]

1974 ஆம் ஆண்டு சிங்கப்பூர் சிறுநீரக மருத்துவமனைக்கு நாற்பத்து ஐந்தாயிரம் ரூபாய் நன்கொடை அளித்தார்.[66]

**இயற்கை அழிவுகளுக்காக நிதி**

1960ல் தமிழகம் பெரும்புயலாலும், வெள்ளத்தாலும் பாதிக்கப்பட்ட-போது, பொதுமக்களுக்கு 1 லட்சம் உணவுப் பொட்டலங்களும் 800 அரிசி மூட்டைகளை காமராஜரிடம் அளித்தார்.[67]

1964இல் மகாராஷ்டிரா கொய்னா அணை உடைந்தபோது ஏற்பட்ட பாதிப்புக்கு ரூ.11 லட்சத்தை அன்றைய மகாராஷ்டிர முதல்வர் ஒய்.பி. சவானிடம் அளித்தார்.[68]

1966 ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் சென்னையில் ஏற்பட்ட தீ விபத்தில் பாதிக்கப்பட்டவர்களுக்கு நிதி உதவியாக பத்தாயிரம் ரூபாய் அளித்தார்.[69]

1975 ஆம் ஆண்டு பீகார் வெள்ள நிவாரண நிதியாக தன் இல்லத்திற்கு வருகை தந்த காமராஜரிடம் ஒரு லட்ச ரூபாய் நன்கொடை அளித்தார்.[70]

1975 ஆம் ஆண்டு இராமநாதபுரம் மாவட்டத்தில் பெரும் வறட்சி ஏற்பட்டபொழுது ஒரு இலட்சம் ரூபாயை அளித்தார்.[71]

1978 ஆம் ஆண்டி புயல் நிவாரண நிதிக்காக இருபதினாயிரம் ரூபாய் அளித்தார்.[72]

தமிழக வெள்ளை நிவாரண நிதியாக முதல்வர் எம்.ஜி.ஆரிடம் நாடக வசூல் மூலம் ஒரு கோடி ரூபாய்க்கு மேல் வழங்கினார்.[73]

1993 ஆம் ஆண்டு மஹாராஷ்டிர மாநிலம் லாட்டூரில் ற்பட்ட பூகம்பத்திற்கு ஒரு இலட்சம் அன்பளிப்பாக அளித்தார்.[74]

**கலையுலகிற்கு நிதி**

பெங்களூரில் நாடக அரங்கம் கட்டுவதற்காக இரண்டு லட்சம் ரூபாய் நன்கொடையாக அளித்தார்.[75]

கோடம்பாக்கத்தில் இருந்த தனக்குச் சொந்தமான நிலத்தை நடிகர், நடிகைகள் வீடு கட்டிக் கொள்ள நடிகர் சங்கத்திற்கு அளித்தார்.[76]

1968 ஆம் ஆண்டு 'வியட்நாம் வீடு' நாடகம் நடத்தி தென்னிந்திய திரைப்பட தொழில்நுட்ப தொழிலாளர் கட்டிட நிதிக்காக முப்பதினாயிரம் ரூபாயும், வேலூர் பென்லண்ட் மருத்துவமனை கட்டிட நிதிக்காக இரண்டு இலட்ச ரூபாயும் நன்கொடையாக அளித்தார்.[77]

கவிஞர் எஸ்.டி. சுந்தரம் தனது வீட்டை ரூ.3000/-க்கு அடமானம் வைத்து திருப்ப இயலாமல் வீடு ஏலத்துக்கு வந்தபோது, அந்தப் பணத்தைக் கொடுத்து மீட்டுக் கொடுத்தார். நடிகர் சந்திரபாபு மற்றும் நடிகர் பாலையா போன்ற பழைய நடிகர்களுக்கு சினிமா வாய்ப்புகள் குறைந்து கஷ்டம் வந்த காலத்தில் தன் அலுவலகத்திலிருந்து மாதம் ஒரு குறிப்பிட்ட தொகையை கொடுத்து உதவினார்.[78]

**ஆன்மீக பணிகளுக்கு**

வல்லக்கோட்டை முருகன் கோயில் திருப்பணிக்காக திருமுருக கிருபானந்தவாரியாரிடம் பத்தாயிரத்து ஒன்று அளித்தார்.[79]

சென்னை கொசப்பேட்டை கந்தசாமி கோவில் தெப்பக்குளத்தில் செய்த திருப்பணிச் செலவு முழுவதையும் ஏற்றார்.[80]

நாகை மாவட்டம் அன்னை வேளாங்கண்ணி ஆலயத்திற்கு கோவில் மணி அமைக்கும் முழுச் செலவையும் ஏற்றார்.[81]

தஞ்சை புன்னை நல்லூர் மாரியம்மன் கோயிலுக்கு 'வெள்ளையம்மாள்' என்ற பெண் யானையையும், திருவாணைக்கால் கோவிலுக்கு கஜேந்திரன் என்ற ஆண் யானையையும் வழங்கினார்.[82]

**சிவாஜி கணேசன் ஒரு வேட்டைக்காரர்**

சிவாஜிகணேசன் தன் தங்கை பத்மாவதி மீது மிகப் பிரியம் வைத்து இருந்தார். பத்மாவதிக்கு இளம் வயதில் கக்குவான் இருமலால் அவதியுற்றார். அதற்கு கருங்குயில் கறி மருந்தாகும் என்று பலர் கூறியதால் முதன்முதலாக கருங்குயில்களை வேட்டையாட ஆரம்பித்தார்.

அப்போது சிவாஜிகணேசனின் நெருங்கிய நண்பர்களில் ஒருவராக விளங்கிய சேலம் ஆர்மரி செல்லமுத்து என்பவர்தான் சிவாஜிக்கு பறவைகளையும், முயல்களையும் வேட்டையாடுவதற்கு துணையாக இருந்தார். செல்லமுத்துவுக்கு ஆர்மரி என்ற பட்டம் அவர் துப்பாக்கிகள் மற்றும் தோட்டாக்கள் வியாபாரம் செய்து வந்ததால் கிடைத்தது.[83]

திருச்சி சங்கிலியாண்டபுரத்தில் தங்கியிருந்து பெரம்பலூர் காடுகளில் சிவாஜிகணேசன் வேட்டையாடும் சமயங்களில் உடன் வரும் பழக்கமுடையவர் அன்றையக் காலகட்டத்தில் புகழ் மிக்க ஒளிப்பதிவுக் கலைஞரான சுப்பாராவ். சுப்பாராவும் ஆர்மரி செல்லமுத்துவும் சேர்ந்து உண்மையான வேட்டை அனுபவம் வேண்டுமென்றால் வேட்டைக்காரன் புதூர் முத்துமாணிக்கம்தான் பொருத்தமானவர் என்று கூறினார்கள். முத்துமாணிக்கம் பாரம்பரியமிக்க குடும்பத்தைச் சேர்ந்தவர். வேட்டைக்காரன் புதூர் என்பது கோவை மாவட்டத்தில் உள்ள பொள்ளாச்சி பக்கத்தில் இருக்கும் வளமையான ஊர்.[84]

முத்துமாணிக்கத்துக்கு வேண்டிய ஒரு காவல் துறை துணை ஆய்வாளரான தட்சிணாமூர்த்தி என்பவர் மூலம் தகவல் தரப்பட்டு சிவாஜிகணேசனும் முத்துமாணிக்கமும் ஒருவருக்கொருவர் அறிமுகம் ஆனார்கள். அதன்பின் சிவாஜிகணேசனுக்கு முத்துமாணிக்கம் காடுகளில் வேட்டையாடும் கலை பற்றியும், துப்பாக்கி வகைகள், தோட்டா வகைகள், யானைகள், புலிகள் மற்றும் பிற மிருகங்களை வேட்டையாடும் முறைபற்றி பயிற்சி கொடுத்தார்.[85]

சட்டவிதிகளின்படி வேட்டையாடுதலை முறையாகக் கற்றுக்கொண்ட சிவாஜிகணேசன் அதன்மேல் மிக விருப்பம் கொண்டு தான் நடிக்கும் திரைப்படங்களின் படப்பிடிப்புகளை இயற்கை எழில் கொஞ்சும் பொள்ளாச்சி அருகே வைத்துக் கொண்டார். படப்பிடிப்பு இல்லாத சமயங்களில் வேட்டையாடி வந்தார். சிவாஜி கணேசனோடு வேட்டைக்கு உடன் சென்றவர்கள் எஸ்.வி. ரங்காராவ், டி.ஆர். ராமச்சந்திரன், எம்.ஆர். சந்தானம், டி.எஸ். துரைராஜ், சந்திரபாபு போன்ற நடிகர்கள் ஆவார்கள்.[86]

மிக விரைவில் வேட்டை நுணுக்கங்களை கற்றுக்கொண்ட சிவாஜிகணேசன் ஒருமுறை ஆந்திராவில் இரண்டு புலிகளை சுட்டு வீழ்த்தினார்.[87] ஒருமுறை நடிகர் எம்.ஆர். சந்தானம் துப்பாக்கியை எடுத்துக் கொடுக்கும் முயற்சியில் ஈடுபட்டபோது அவரது கை துப்பாக்கியின் விசையில் பட்டு வெடித்தது. மயிரிழையில் சிவாஜிகணேசனும், முத்துமாணிக்கமும் உயிர் தப்பினார்கள். இந்தச் சம்பவத்தின் தன்மையை உணர்ந்த சந்தானம் மயங்கி கீழே விழுந்துவிட்டார்.[88]

சிவாஜிகணேசன் வேட்டையாடிய காலத்தில் அரசாங்க விதிகளை கடைபிடித்து வேட்டையாடிக் கொண்டிருந்தார். வேட்டையாடுதல் அரசால் தடை செய்யப்பட்டவுடன் வேட்டை ஆடுவதை நிறுத்திவிட்டார்.

**சிவாஜி கணேசனின் ஆன்மீகத் தொடர்புகள்**

சிவாஜி கணேசன் மிகுந்த தெய்வ பக்தியும் ஆன்மிக சிந்தனைகளும் உடையவர். ஆன்மீக உலகில் பல பெரியவர்களுடன் தொடர்பு வைத்திருந்தார்.

**காஞ்சிப் பரமாச்சாரியார்**

ஒருநாள் காஞ்சிப் பெரியவர் சென்னை மைலாப்பூர் கற்பகாம்பாள் மடத்திலிருந்தபொழுது, சிவாஜி கணேசனிடம் தன்னை வந்து சந்திக்கும்படி செய்தி அனுப்பினார். சிவாஜி கணேசன், தாய், தந்தை மற்றும் மனைவியுடன் சென்றார். அந்த சமயத்தில் மின் தடையால் விளக்குகளெல்லாம் அணைந்த நிலையில், கையில் ஒரு குத்து விளக்குடன் வந்த பரமாச்சாரியார் சிவாஜி கணேசனை உற்றுப் பார்த்துவிட்டு

> “நீதானே சிவாஜி கணேசன் என்றார். ஆம் என்றவுடன் “உன்னைப் பார்த்ததில் மிகவும் சந்தோஷம். திருப்பதி சென்றிருந்தேன். ஒரு யானை எனக்கு மாலை போட்டது. யானை நன்றாக இருக்கிறதே யாருடையது? என்றேன் சிவாஜி கொடுத்தது என்றார்கள். திருச்சி திருவானைக்கா கோயிலுக்குப் போனேன் அங்கும் ஒரு யானை மாலை போட்டது. யானை அழகாக இருக்கிறது யாருடையது என்று கேட்டேன். சிவாஜி கணேசன் கொடுத்தது என்றார்கள். தஞ்சை புன்னை நல்லூர் மாரியம்மன் கோயிலுக்குச் சென்றிருந்தேன் அங்கேயும் ஒரு யானையை விட்டு மாலை போட்டார்கள். இது யாருடையது என்று கேட்டேன், சிவாஜிகணேசன் கொடுத்தது என்றார்கள். நாட்டில் பணக்காரர்கள் பலபேர் இருக்கிறார்கள். அவர்கள் பப்ளிசிட்டிக்காக சில சமயம் கோயில்களுக்குப் பணம்தான் நன்கொடையாகக் கொடுப்பார்கள் ஆனால் யானை கொடுப்பதற்குப் பெரிய மனசு வேண்டும். அது உனக்கு இருக்கிறது. ஆகையால்

உன்னைப் பெற்றவர்கள் பாக்கியசாலிகள். அவர்களுக்காக நான் பகவானைப் பிரார்த்தனை செய்கிறேன்”

என்றார்.[89]

காஞ்சிப் பெரியவர் சிவாஜிகணேசனை அழைத்து பேசியதற்கு ஒரு சுவையான சம்பவம் உண்டு. காஞ்சிப் பெரியவர் எங்கு சென்றாலும் நடந்துதான் செல்வது வழக்கம். அப்படி ஒரு முறை சென்றபோது சிவாஜிகணேசன் நடித்த 'திருவருட்செல்வர்' படத்தில் அப்பராக தோன்றும் படத்தை போட்டு விளம்பரம் செய்து இருந்ததை பார்த்துவிட்டார். உடனே அருகில் இருந்தவர்களை அழைத்து ஏன் இப்படி என் படத்தை போட்டு விளம்பரம் செய்கிறீர்கள் என்று கடிந்து கொண்டாராம். உடன் வந்தவர்கள் தயங்கியபடி சுவாமி அது தாங்கள் இல்லை உங்களைப்போல் வேஷமிட்டு சிவாஜிகணேசன் என்பவர் நடித்த படம்தான் அது என்று கூறவே, பரமாச்சாரியார் அதை மனதில் வைத்து இருந்தார். அத்தோடு சிவாஜி கணேசன் அளித்த யானைகள் நன்கொடை பற்றி அறியவும் உடனே வரச் சொல்லிவிட்டார்.[90]

**புட்டபர்த்தி சாய்பாபா**

புட்டபர்த்தி சத்திய சாய் பாபாவுடன் சிவாஜி கணேசன் மிக நெருக்கமாக இருந்தார். இருவரும் சந்தித்தால் தெலுங்கில்தான் உரையாடல் நடைபெறும். சிவாஜி கணேசன் ஒருமுறை மனதில் சில சங்கடங்களுடன் இருந்த காலத்தில் முன் அறிவிப்பு ஏதுமின்றி புட்டபர்த்தி சென்றார். சிவாஜி கணேசன் வந்திருப்பதையும், பாபாவை பார்க்க விரும்புவதையும் சத்திய சாய்பாபாவிடம் அவரது உதவியாளர் கூறினார். சிறிது யோசனையுடன் சத்திய சாய்பாபா, பொதுமக்களுக்கு தரிசனம் தரும் அரங்கத்திற்கு சிவாஜி கணேசனை அழைத்து வரச் சொன்னார். சிவாஜி கணேசனும் ஒன்றும் பேசாமல் தன் மனைவியுடன் அந்த அரங்கினுள் நுழைந்து தொலைவில் மேடையில் நிற்கும் சாய்பாபாவை நோக்கி நடந்து சென்றார். சிவாஜி கணேசன் நடந்து வருவதைப் பார்த்தபடி நின்ற சத்திய சாய்பாபா சிவாஜி அருகில் வந்ததும், அவரிடம் “கட்டபொம்மு, என்னை தவறாக எண்ண வேண்டாம், நான் திரைப்படங்கள் பார்ப்பது கிடையாது. நீங்கள் நடித்த கட்டபொம்மன் படத்தை பார்த்த பலர் என்னிடம் உங்களின் கம்பீரமான நடையைப் பற்றி என்னிடம் சொன்னார்கள். நானும் அதைப் பார்த்து ரசிக்கத்தான் உங்களை இந்த அரங்கில் வரச் சொன்னேன் என்று கூறினார்.[91]

**சிவாஜி கணேசனும் மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி பங்காரு அடிகளாரும்**

சிவாஜி கணேசனுக்கு மேல்மருவத்தூர் அடிகளாருடன் நெருங்கிய தொடர்பு இருந்தது. அதற்கு பாலமாக இருந்தவர் தொழில் அதிபர் R. ஈசுவரமூர்த்தியாகும். சிவாஜி கணேசனும் அடிகளாரும் முதன் முதலில் சந்தித்தபோது, நீங்கள் ஒரு சித்தர், அதிலும் ஒரு தமிழர் என்பதில் நான் பெருமிதம் கொள்கிறேன் என்றார். அதற்கு அடிகளார் நான் ஆன்மீகத்தில் சித்தர் என்றால் நீங்கள் நடிப்புலகில் சித்தர். நான் உங்களுடைய பரம ரசிகன். ஒருமுறை உங்களின் பிறந்தநாள் விழாவில் கட்டுக்கடங்காத கூட்டத்தில் சுவர் ஏறித் குதித்து வந்து உங்களைப் பார்த்துவிட்டு பின்பு கூட்டத்தோடு கூட்டமாக அமர்ந்து உணவருந்திச் சென்றேன் என்றார். அதற்கு சிவாஜிகணேசன் ஆன்மீகத்தில் இவ்வளவு உயர்ந்த பின்னும் திறந்த மனதுடன் நீங்கள் கூறுகின்ற எளிமைதான் உங்களை உயர்த்தி இருக்கிறது என்று வணங்கினார்.

அதன் பின் அடிகளார் கேட்டுக் கொண்டபடி திருவல்லிக்கேணி தேரடித் தெருவில் 1995ல் நடந்த மேல்மருவத்தூர் ஆன்மீகக் கூட்டத்தில் கலந்துகொண்ட சிவாஜிகணேசன், “தெய்வ வழிபாட்டில் பெண்களுக்கு உண்மையான சமுதாய உரிமைகளைப் பெற்றத் தந்தவர் அடிகளார். அந்த உரிமைகள் இன்று பெண்களுக்கு பெரும் தைரியத்தையும், மன வலிமையையும் பெற்றுத் தந்து இருக்கின்றது என்பது நிதர்சனமான உண்மை என்றார்”.[92]

**சிவாஜி கணேசனும் சிருங்கேரி சுவாமிகளும்**

சிவாஜி கணேசன் சிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீஸ்ரீ அபினவ வித்யா தீர்த்த மஹா சுவாமிகளிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். சமயம் கிடைத்த போதெல்லாம் தன், தாயார், மனைவியோடு சிருங்கேரி மடம் சென்று சுவாமிகளை தரிசித்து வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.[93]

**சிவாஜி கணேசனும் சபரிமலை யாத்திரையும்**

1965இல் துவங்கி சிவாஜிகணேசன் சபரிமலை கோவிலுக்கு நடிகர் எம்.என். நம்பியார் தலைமையில் மாலையணிந்து, விரதமிருந்து சுமார் முப்பது வருடங்களுக்கு மேலாக மலைக்கு சென்று வந்தார்.[94]

**சிவாஜி கணேசனின் நெருங்கிய நண்பர்கள்**

சிவாஜி கணேசனோடு மிகவும் நெருங்கிய நண்பராக 40 ஆண்டுகளுக்கும் மேலாக விளங்கியவர் வேட்டைக்காரன் புதூர் முத்துமாணிக்கம். பின்பு சம்பந்திகளாக ஆனார்கள். மற்றொருவர் உடுமலைப்பேட்டை ராமசாமி என்பவர் ஆகும்.[95]

**சிவாஜி கணேசனும் அரச வம்சத்தினரும்**

His Highness Maharaja Sri Sir Jayachamarajendra Wadiyar Bahadur, Maharaja of Mysore (18 July – 1919 – 23 September 1974). 1940 ஆம் ஆண்டிலிருந்து 1974 ஆம் ஆண்டு வரை மைசூரின் மகாராஜாவாக விளங்கினார். 1960களில் மைசூர் ராஜா சிவாஜி கணேசனை பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டு தகவல் அனுப்பினார். அதன்படி மகாராஜாவை பெங்களூரு அரண்மனையில் சிவாஜி கணேசன் சந்தித்துப் பேசினார். இருவரும் வேட்டையைப்பற்றி பேசினார்கள். பின்பு காட்டு யானைகளை பிடித்து வைத்து நடத்தும் விழாவுக்கு, சிவாஜி கணேசனுக்கு மகாராஜா அழைப்பு விடுத்தார். சிவாஜிகணேசனும் அவரது அழைப்பை ஏற்று சென்று வந்தார்.[96]

1964இல் கர்ணன் படத்தின் படப்பிடிப்பு மைசூர் அரண்மனையில் சில நாட்கள் நடத்தப்பட்டபோது, சிவாஜி கணேசனை தன் குடும்பத்தோடு தேநீர் அருந்த மைசூர் மகாராஜா அழைப்பு விடுத்தார். அந்த விருந்தில் அவரது மகன் ஸ்ரீகண்ட தத்த உடையார் தன் மனைவி ராணி பிரமோத தேவியுடன் கலந்து கொண்டார். அப்போது படப்பிடிப்பு குறிப்பிட்ட நேரம் கடந்து முடிந்ததால் மகாராஜாவிடம் சிவாஜி கணேசன் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். தன் ஒப்பனையைக் கலைத்துவிட்டு வந்துவிடுகிறேன் என்று மகாராஜாவிடம் அனுமதி கேட்டார். மகாராஜா "நாங்கள் கர்ணனோடுதான் தேநீர் அருந்த விரும்புகிறோம். எனவே தாங்கள் ஒப்பனைகளை கலைக்க வேண்டாம் அப்படியே அமருங்கள் என்று கூறினார்.[97]

அதற்கு அடுத்து இராமநாதபுரம் மாவட்டம், சிவகங்கை அரசர் கௌரிவல்லப சண்முக ராஜா (1941-1963). சிவாஜி கணேசனுக்கு நல்ல நண்பராக விளங்கினார். ஆனந்த் திரையரங்கின் உரிமையாளர் உமாபதி, சண்முகராஜா மற்றும் சிவாஜிகணேசன் பங்குதாரர்களாக இருந்து ஆரம்பிக்கப்பட்டதுதான் சென்னை அண்ணா சாலையில் உள்ள சாந்தி திரையரங்கமாகும். சிவகங்கை அரசர் இறந்தபின் அவருடைய பங்குகளையும், உமாபதி விலக சம்மதித்ததால் அவருடைய பங்குகளையும் வாங்கி சிவாஜிகணேசன் சாந்தி திரையரங்கத்தின் முழு உரிமையாளராக ஆனார்.[98]

இராமநாதபுரம் அரசர் சண்முக ராஜேஸ்வர சேதுபதி (1909-1967) சிவாஜிகணேசனுக்கு மிகவும் நெருக்கமான நண்பராக விளங்கினார். திருநெல்வேலி மாவட்டம் எட்டயபுரத்து மன்னர் குடும்பம் சிவாஜிகணேசனுடன் மிக நெருக்கமான நட்பு கொண்டிருந்தது.

புதுக்கோட்டை அரசர் குடும்பம் சிவாஜி கணேசனுக்கு மிக நெருக்கமாக இருந்தது.

திருநெல்வேலி சிங்கம்பட்டி ராஜா தீர்த்தபதி முருகதாஸ் சிவாஜி கணேசனுக்கு நெருங்கிய நண்பராக விளங்கினார். திருநெல்வேலி மாவட்டம், ஊத்துமலை ஜமீன்தார் குடும்பம் சிவாஜி கணேசன் குடும்பத்துடன் நல்ல நட்பு பூண்டிருந்தனர்.

வேட்டைக்காரன் புதூர் முத்துமாணிக்கத்தின் உறவினரான காரணத்தால் ஊத்துக்குளி ஜமீன்தார் அகத்தூர் முத்துராமசாமி காளிங்கராயருடன் சிவாஜி கணேசன் நெருக்கமாக பழகினார்.

கோவை மாவட்டம், அந்தியூர் தாலுக்காவில் உள்ள புரவிபாளையம் ஜமீன்தார் கோபண்ண மன்றாடியாருடன் சிவாஜி கணேசன் நட்புக் கொண்டிருந்தார்.

முத்துமாணிக்கத்துடன் நெருங்கிய நண்பர்களான ஆந்திர மாநில லங்கப்பூர் அரசர்களான கறுசிம்மராஜா, ஜெயசிம்ம ராஜா இருவருமே சிவாஜிகணேசனுக்கு நண்பர்கள் ஆனார்கள்.

முத்துமாணிக்கத்துடன் வேட்டைக்கு சென்று வந்த காலத்தில் சிவாஜிகணேசனுக்கு மொன காலா அரசர் நரேந்திரநாத் ரெட்டி நண்பரானார். இறுதிவரை அவருடன் நட்பை பேணிக்காத்து வந்தார்.

**சிவாஜிகணேசனும் உலகத் தலைவர்களும்**

சிவாஜிகணேசனுக்கு உலகம் முழுவதும் பெரிய மனிதர்களின் அறிமுகம் கிடைத்தது. அதில் தலையானவர்கள் இங்கிலாந்து ராணி எலிசபெத் மற்றும் அவரது கணவர் பிலிப் ஆவார்கள். 1961 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் பத்தொன்பதாம் நாள் இங்கிலாந்து ராணி எலிசபெத் (Queen Elezabeth 11) மற்றும் அவரது கணவர் பிலிப் (Duke of Edinburgh) மதராஸ் வருகை தந்தார்கள். அப்போது அவர்கள் சந்திக்க விரும்பும் முக்கிய நபர்கள் பட்டியலில் சிவாஜி கணேசன் பெயரும் இருந்தது. ராஜாஜி ஹாலில் நடந்த வரவேற்பு நிகழ்ச்சியில் சிவாஜி கணேசன் அவர்களை சந்தித்தார்.[99]

நடிகர் கமல்ஹாசனின் தயாரிப்பான 'மருதநாயகம்' படத் துவக்க விழாவுக்கு 1997 Oct. 16ல் வருகை தந்தபோது ராணி எலிசபெத்தும் அவரது கணவர் எடின்பரோ (Duke of Edinburgh) கோமகனும் சிவாஜி கணேசனை சந்தித்து

உரையாடினர். அப்போது சிவாஜிகணேசன் ராணியிடம், “I started acting at age the age of seven”. Is it? என ராணி கேட்டார்கள். அதற்கு சிவாஜிகணேசன் Yes yes என்று பதிலளித்தார்.[100]

சிவாஜியின் புகழ் நாளும் நாளும் வளரும். காரணம் அவரிடம் அளவற்ற நடிப்புத் திறமைதான். சிவாஜி அவர்கள் உலகிலேயே சிறந்த நடிகர். பண்பாட்டின் பெட்டகம். எகிப்து நாட்டின் விருந்தினராக அவர் வந்திருப்பது, பழைய கலாச்சாரத் தொடர்பை நினைவூட்டுகிறது.[101]

சிவாஜி அவர்களுடன் உரையாடுவதில் ஒரு தனி மகிழ்ச்சி. நிறைய செய்திகளை அவர் தெரிந்து வைத்திருக்கிறார். திபெத்திய மக்களின் சார்பில் அவருக்கு எனது மனமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.[102]

**சிவாஜி கணேசன் பற்றி தேசீயத் தலைவர்கள்**

**ஜவஹர்லால் நேரு**

பாரதத்தின் புகழுக்காகப் பாடுபட்டவர்கள் வரிசையில் சிவாஜி கணேசன் குறிப்பிடத்தக்கவர். தம் நடிப்புத் திறனால் தமிழ் நாட்டில் மட்டுமின்றி பாரதம் முழுவதும் மேன்மை அடைந்திருக்கிறார் சிவாஜி கணேசன்.[103]

**முன்னாள் பிரதமர் இந்திரா காந்தி**

காங்கிரஸ் கட்சிக்காக ஒரு தாயைப்போல நாடெங்கும் சென்று சேவை மனப்பான்மையுடன் தொண்டு புரிந்து வருபவர் நடிகர் திலகம் சிவாஜி கணேசன்.[104]

**மூதறிஞர் இராஜாஜி**

தன்னுடைய கைவிரல் அசைப்பின் மூலமே நம்மையெல்லாம் கவர்ந்துவிட்ட சிவாஜிகணேசன் ஓர் உலகப் பெருநடிகர். முற்றும் சினிமா பார்க்கும் பழக்கம் இல்லாத என் உள்ளத்தையே சினிமா பார்க்கத் தூண்டிவிட்டார்.[105]

**டாக்டர் அப்துல்கலாம்**

நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அவர்கள் தமிழ்த் திரைப்பட உலகில் தனக்கென தனியிடம் பிடித்த ஒப்பற்ற கலைஞர். அவரது இளமைப் பருவம் தொடங்கி, முதல் திரைப்படம் வெளியாகும் வரை மேடை நாடகங்களில்

பலதரப்பட்ட வேடங்களையும் தாங்கி, பல்வேறு இன்னல்களையும் அனுபவித்த பிறகுதான் அவர் உன்னதமான நிலைக்கு உயர்ந்துள்ளார். அரசியலிலும் பல சோதனைகள் கடந்துதான் தனக்கென ஒரு இடத்தை பிடித்துள்ளார்.[106]

**Dr. Shankar Dayal Sharma (Former President of India)**

Sivaji Ganesa is a doyen of Tamil Cinema. He has become a legend in his lifetime. His Odyssey has spanned five decades and almost 300 films.[107]

**பெரியார்**

உலகிலேயே சிறந்த நடிகரான சிவாஜி கணேசன் தமிழ்நாட்டில் இருப்பது நாம் பெற்ற பாக்கியமாகும். மேலும் சிவாஜி கணேசன் அவர்களிடத்தில் எனக்கு மெத்தனம் மதிப்புண்டு. அவர் நடிப்புக் கலையில் தேர்ச்சி பெற்று, நடிகர் திலகமாகி உச்ச வரிசையிலிருப்பவர் மற்றும் அவரொரு தமிழருமாவார்.[108]

**காமராஜர்**

நடிப்புக்கு இலக்கணம் வகுத்தவரே நடிகர் திலகம் சிவாஜி கணேசன்தான். நம் பாரத நாட்டிற்கு, அவர் தம் நடிப்பின் மூலம் மகத்தான பெயரைத் தேடித் தந்திருக்கிறார். அவரைப் பெற்றதால் இந்த நாடே பெருமையடைகிறது. பாரதத்தாய் பூரிப்படைகிறாள்.[109]

**கருணாநிதி**

நடிகர் திலகம் கணேசன், நவரசத் திலகம், கலைக்குயில் கணேசன், பத்மஸ்ரீ கணேசன், சிம்மக்குரலோன் கணேசன், சிவாஜி கணேசன் என்றெல்லாம் அழைப்பதைவிட ‘நண்பர் கணேசன்’ என்று அழைப்பதில்தான் நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். எனது திரைக்கதை உரையாடல்களுக்கு உயிரோட்டம் தந்தவர் சிவாஜி. என்றும் கதாபாத்திரத்திற்கு உயிரூட்டக்கூடிய சிவாஜி. என்றும் தமிழாக, தமிழ் உரைநடையாக வாழக்கூடியவர்.[110]

**பத்திரிக்கையாளர்களின் பார்வையில் சிவாஜிகணேசன்**

என். இராம், ஆசிரியர், இந்து

"சிவாஜி ஒரு Straight Forward Person. அவர் தொழிலில் வெற்றி பெற்றதற்குக் காரணம் அவருடைய Versatality, Variety, Sincerity and Punctuality தான்".[111]

"சிவாஜிகணேசனுக்கு தமிழ்நாட்டின் தலைசிறந்த நடிகருக்கு பாராளுமன்ற உறுப்பினர் பதவி கிடைத்திருக்கிறது. மகிழ்ச்சிக்குரிய செய்தி கலை, கலாச்சாரத் துறையின் பிரதிநிதியாக அவர் மத்திய மேல் சபை உறுப்பினராக நியமிக்கப்பட்டிருப்பதில் வியப்பு ஒன்றுமில்லை. நடிப்புக் கலைக்கு சிவாஜியைக் காட்டிலும் யார் அதிகமாகப் பணியாற்றியிருக்க முடியும்?"[112]

"சிவாஜி கணேசனிடம் உங்க படம்னா சந்தனமர வீரப்பனுக்கு மிகவும் பிடிக்கும் என்று காட்டில் எடுக்கப்பட்ட படங்களை அவரிடம் காட்டினேன். அதை அவர் பார்வையிட்டபோது அதை படம் பிடித்து வீரப்பனிடம் காட்டினேன். வீரப்பனுக்கு சந்தோசம் தாங்கவில்லை... சரணடைவது பற்றிப் பேசிய வீரப்பன், நான் சரணடையும்போது சிவாஜி வருவாருல்ல என்று கேட்டான்.

பின்னர் நடிகர் ராஜ்குமார் கடத்தப்பட்டபோது மீட்பு முயற்சியில் இறங்க நான் முதலில் தயங்கினேன். சிவாஜியிடமிருந்து தொலைபேசி வந்தது. டேய், எங்கடா இருக்கே, ராஜ்குமார் யார் தெரியுமா என் நண்பன். அவன் மனைவி கதறுவதை என்னால் பார்க்க முடியவில்லை. நீ உடனே போய் அழைத்து வந்து என்னிடம் காட்டு என உரிமையாக உத்தரவிட்டார் ராஜ்குமார். மீட்பு முயற்சி வெற்றிகரமாக நிறைவடைந்ததில் சிவாஜியின் பங்கு ஆழ்கடல் போல் அமைதியானது. லட்சக்கணக்கான கர்நாடகத் தமிழர்களின் உயிரும் வாழ்வும் பாதிக்கப்படாதவாறு இருமுறை மேற்கொள்ளப்பட்ட மீட்பு முயற்சிகளிலும் அவரது பங்கு மகத்தானது.[113]

**சிவாஜி கணேசன் பற்றி இலக்கியவாதிகள்**

பேராசிரியர் மு. வரதராசனார், முன்னாள் துணைவேந்தர், மதுரைப் பல்கலைக்கழகம்,

"திரைவானில் தனது ஒப்பற்ற கலைத்திறனால் பிறந்த பொன்னாட்டிற்குப் பெருமை தேடித்தந்தவர். கலையுலகம் அவர்தம் சிறந்த சேவையினையும்

சாதனைகளையும் எதிர்காலத்திலும் பயன்படுத்திக் கொள்வது மிக்க நலம் பயக்கும். சிவாஜிகணேசன் இருபதாம் நூற்றாண்டின் ஈடு இணையற்ற பெருமைக்குரிய கலைப் பொக்கிஷம். அவரை ஈன்ற தமிழகம் வாழ்க ! அவர் தம் கலைத்திறன் வெல்க ! நிலவுக !"[114]

எழுத்தாளர் அகிலன்,

"பிறவிக் கலைத்தன்மை என்பது ஓவியர், நடிகர், எழுத்தாளர் முதலிய பல்வகைக் கலைத்துறையில் உள்ளவர்களுக்கும் பொருந்தும். பல ஆண்டுகளுக்கு முன்பு நாடக மேடைகளிலும், பின்பு திரைகளிலும் தோன்றி தோன்றும் இடங்களிலெல்லாம் உயிர்த் துடிப்பை வெளிப்படுத்துபவர் திரு. சிவாஜிகணேசன் நடிப்புக் கலைத்துறையில் பல்வேறு பாத்திரங்களாக மாறி, பல்வேறு உணர்ச்சிகளை, பல்வேறு முறைகளாலும் வெளிப்படுத்தும் சிவாஜி அவர்கள் நடிக்கவே பிறந்தவர் என்பது என் எண்ணம்."[115]

ஔவை நடராசன்,

"செவாலியே விருது பெற்ற நடிப்பின் இமயம் நமது சிவாஜி கணேசன், உலகியற் கண்ணோடும், உணர்வோடும், ஒருவர் மற்றொருவராக மாறிக் காட்டும் நடிப்புத்திறன் எளிதானதன்று. பிறந்த நாள் தொட்டே பெருந்திறமை பூண்டவராக மிளிர்ந்த நடிகர் திலகம் அவர்கள் நூற்றுக்கும் மேற்பட்ட தோற்றங்களில் தோன்றி நம்மை மகிழ்வித்ததை நன்றியோடு போற்றுகின்றோம். நடிப்புப் பல்கலைக்கழக வேந்தராகவும், ஒரு மாமணியாய் உலகிற்தோன்றிய திருமணியாய்த் திகழும் சிவாஜி அவர்களின் நடிப்புத்திறனை வியந்த நண்பர் ஒருவர்

ஊன் நடிக்கும்,
உயிர் நடிக்கும்
உயிர்க்குயிரும் தான் நடிக்கும்
தனிப்பேராற்றல்

என்று புகழ்ந்ததை இன்றும் நினைவு கூர்கின்றேன். எவரும் எட்டாத இமயமாக விளங்கும் நடிப்பிமயம் சிவாஜி கணேசனின் புகழ் என்றென்றும் வாழ்க!"[116]

**கவிஞர்களின் கண்ணோட்டத்தில் சிவாஜிகணேசன்**

கவி யோகி சுத்தானந்த பாரதியார்

.....எந்த வேடம் போட்டும்
இயற்கை வழி காட்டி
எந்தம் நடிக வேளர்
இன்பக் கலையீவார்
காதலையும் சுரப்பார்
ஸஸ்பணமும் சுரப்பார்
ஈதலுக்கு மன்னன்
இன்னிய கணேசன்
நாடகக் கலையின்
நவரச வடிவம்
ஆடலரங்கின் ஆசன்
அசுரமென வாழ்க![117]

**புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்**

சிவாஜி கணேசன் வாழ்க
அலரி நறுமுல்லை ஆம்பல்
குருக்கத்தி அல்லி எனும்
மலரி லுயர்ந்த மலர்தா
மரை எனல் போலுலகில்
சிலரி லொருவர் சிறந்த
நடிகர் சிவாஜி எனப்
பலரிலொருவன் பகர்ந்தேன்
தமிழ்த்தாய் மகிழ்ந்தனளே
எகுபதியர்க்கு விருந்தாய்
நடிப்பின் இலக்கணத்தை
மிகுபதியாரும் வியக்க
வியக்க விளக்கியவர்
தகுபதியான சிவாசி
கணேசர்! தமிழகத்திற்
பகுபதினாயிரம் ஆண்டுக்
கொருத்தர் பகர்ந்திடிலே
படிப்பென்று சென்றால் இலக்கம்
பத்தாயிரம் பார்த்தளிப்பார்

துடிப்பென்று சென்றால் தாய்பசி
நீக்கி உவப்புறுவார்
நடிப்பென்று சென்றால் அதற்குமே
நற்புகழ்நம்ம தென்பார்
மடிப் பொன்றிலாது சிவாசி
கணேசனார் வாழியவே![118]

கவியரசு கண்ணதாசன்

"சிவாஜியைப் பற்றி
சிலவரிகள்..
எதை எழுதுவது
எதை விடுவது ?
இமயமலையின் எந்த
மூலையைப் புகழ்ந்தால்
நியாயமாக இருக்கும் ?
கடலிலே எந்தப்பகுதி
அழகான பகுதி ?
சிவாஜி ஒரு இமயமலை....[119]

கவிஞர் வாலி

...கட்டபொம்மனை
கப்பலோட்டிய தமிழனை
கர்ணனை : முண்டாசுக்
கவிஞனை :
சோழனை :
சேக்கிழாரை
பரதனைப்
பொற்கைப் பாண்டியனை :
என
எத்துணையோ பேர்களை :
உயிர் கொடுத்து
உலவச் செய்தவன் :
கல்லறையிலிருந்து - எழுப்பிக்
காட்டிய பெருமகன் :
எவராலும்

எழுப்ப முடியாதபடி
உறங்கிப் போனதால்
உலகு அழுதது : தன்னை
ஒழுங்காய் உச்சரிக்க
ஒருவரும் இல்லையே என -
ஒண்டமிழ் அழுத்து !
ஆயினும்
அவன்
நாமும்
நாடும்
அழுவதற்காகப் பிறந்தவனல்ல
தொழுவதற்காகப் பிறந்தவன் ![120]

கவிப்பேரரசு வைரமுத்து,

ஆயிரம் பிறைகள் கண்ட
அரும்கலைத் திலகம் வாழ்க !
ஜெகத்தையே வியக்க வைக்கும்
சிவாஜியே வாழ்க ! வாழ்க !
அறுபது ஆண்டு தமிழர் நெஞ்சை
ஆள்பவன் வாழ்க ! வாழ்க !
தரணிவாழ் தமிழர்க்கெல்லாம்
தன்னையே தந்தாய் வாழ்க !
செந்தமிழ் தழைக்க வந்த
செவாலியே தழைக்க வந்த
செவாலியே வாழ்க ! வாழ்க !
பராசக்தி வடிவில் வந்த
பசும்பொன்னே வாழ்க ! வாழ்க !
கலைமகள் மகனாய் உன்னை ஈன்றுதந்த
தாயவள் வாழ்க ! வாழ்க !
சிங்கப்பூர் நாடு வந்த
சிங்கமே வாழ்க வாழ்க ![121]

- கவிப்பேரரசு வைரமுத்து 1998ல் சிங்கப்பூர் வருகை தந்த சிவாஜிகணேசனை வாழ்த்தி எழுதியகவிதை

சிவாஜி கணேசனின் இறுதிக்காலம்

1990இல் சிங்கப்பூர் நிகழ்ச்சியில் கலந்து கொண்ட சிவாஜி கணேசனின் உடல்நிலை மிகவும் பாதிப்புக்கு ஆளானது. சிங்கப்பூர் Mount Elizabath மருத்துவமனையில் சேர்க்கப்பட்டு சிகிச்சைகளை மேற்கொண்டார். 1994இல் சென்னையில் அவருக்கு இருதய அறுவை சிகிச்சை செய்யப்பட்டு பேஸ் மேக்கர் (Pace Maker) கருவி பொருத்தப்பட்டது. 1995இல் அமெரிக்கா நாட்டிற்கு உடல் பரிசோதனைக்குச் சென்றார்.

1999இல் "பூப்பறிக்க வருகிறோம்" என்ற படத்தில் நடித்த சிவாஜி கணேசன் அதன்பின் பரிபூரணமாக ஓய்வெடுக்க ஆரம்பித்தார். இடையிடையே மருத்துவ பரிசோதனை செய்து கொண்டார்.

நாளடைவில் அவரது உடல் மிகவும் நலிவுற்று 2001 ஜுலைத் திங்கள் 14 ஆம் நாள் அன்று அப்போலோ மருத்துவமனை தீவிரக் கண்காணிப்பு பிரிவில் சேர்க்கப்பட்டு சிகிச்சை அளிக்கப்பட்டார். ஒரு வாரம் தீவிர சிகிச்சைக்குப் பின் 21 ஆம் தேதி சனிக்கிழமை இரவு 8.10 மணி அளவில் அவரது உயிர் பிரிந்ததாக அதிகாரப் பூர்வமாக அறிவிக்கப்பட்டது. அப்போது அவருக்கு வயது 73.[122]

அதிகாலை 3.30 மணிக்கு சிவாஜிகணேசனின் உடல் அன்னை இல்லத்துக்கு கொண்டு வரப்பட்டது. திராவிட முன்னேற்றக் கழகத் தலைவரும் அவரது நெருங்கிய நண்பருமான கலைஞர் மு. கருணாநிதி, அன்றைய தமிழக முதல்வர் ஜெயலலிதா, ஜி.கே. மூப்பனார் ஆகியோர் சிவாஜிகணேசன் உடலுக்கு மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினார்கள்.

அன்றைய பிரதமர் வாஜ்பாய், காங்கிரஸ் தலைவர் சோனியா, இலங்கை அதிபர் சந்திரிகா உள்ளிட்ட தலைவர்கள் அஞ்சலி செய்தி அனுப்பியிருந்தார்கள். கன்னட நடிகர் ராஜ்குமார், தெலுங்கு நடிகர் ஏ. நாகேஸ்வரராவ் ஆகியோர் நேரில் வந்து அஞ்சலி செலுத்தினர். தமிழ்த் திரையுலக பிரமுகர்களும், சிவாஜி ரசிகர்களும் பெருந்திரளாக அன்னை இல்லம் நோக்கி வந்து சேர்ந்தனர். படப்பிடிப்புகள் ரத்து செய்யப்பட்டன.[123]

'சன்' தொலைக்காட்சி நிறுவனம் சிவாஜி கணேசனின் இறுதி அஞ்சலி காட்சிகளை நேரடியாக இரண்டு நாட்கள் தொடர்ந்து ஒலிபரப்பு செய்தனர். உலகமெங்கும் சிவாஜி ரசிகர்கள் கண்ணீர் அஞ்சலி செலுத்தினர். சிவாஜிகணேசனின் உடல் ஏற்றிய வண்டியில், நடிகர் ரஜினிகாந்த், நடிகர் கமல்ஹாசன், இளையராஜா போன்ற திரையுலகப் பிரபலங்கள் ஏறிக்

கொண்டனர். பெரும் ஜன சமுத்திரத்தில் கப்பல் போல் அந்த வண்டி ஊர்ந்து சென்றது. பெசன்ட் நகர் மின் மயானத்தில் அரசாங்க மரியாதையுடன் எரியூட்டப்பட்டது.[124]

சிவாஜி கணேசனின் மறைவு பற்றி பத்திரிக்கைச் செய்திகள் சில

**Los Angeles Times,** July 23, 2001

"Sivaji Ganesan, 73 an intense actor considered the Marlon Brando of South Indian Film Industry died Saturday in the Southern Indian City of Madras.'[125]

**The Times of India,** July 24. 2001

Sivaji – The curtain drops. I saw on TV. Sivaji's fans expressing their sorrow in the melodramatic Fashion peculiar to Tamil Nadu. I am saddened by the realisation that Sivaji will no more act in films, but the wealth of work he has left behind, I know, will lift that sadness. – Priyabala.[126]

**The Hindu**

'Sivaji' Ganesan Dead

One of Tamil Cinema's legendary actors, Mr. Sivaji Ganesan, died in Chennai on Saturday.[127]

**Trinity Mirror**

Sivaji Ganesan passes away.

The pays tearfull farewell to Sivaji Ganesan[128]

**City Express**

City wakes up to life sans Sivaji.
Death be not proud Sivaji Will live.[129]

**The New Sunday Express**

Nadigar Thilagam is dead.
Sivaji, the legend incomparable.[130]

**தினமணி**

நடிப்புச் சுடர் அணைந்தது. இமயம் சரிந்தது.[131]

**தினகரன்**

சிவாஜி காலமானார்.[132]

**தினத்தந்தி**

நடிப்பு உலகின் இமயம் மறைந்தது. சிவாஜி கணேசன் மரணம்.[133]

**ஆனந்த விகடன் தலையங்கம்**

தவப்புதல்வனை இழந்துவிட்ட துயரத்தில் கதறிக் கொண்டிருக்கிறாள் கலைத்தாய். நடிப்புக்கு இலக்கணம் வகுத்துத் தந்த மாமேதையை மரணம் தழுவிக்கொண்டுவிட்டது. பராசக்தியில் பதிந்த அவரது பாதம், நடிப்புத்துறையின் அத்தனை பரிமாணங்களிலும் வியாபித்து, எல்லைகளையும், மொழிகளையும் கடந்து சோபித்து, விஸ்வரூபம் எடுத்தபோது, கலைத்தாயின் மார்பில் தவழும் மணியாரம், பூரிப்பில் விம்மியது. கட்டபொம்மனோ, கப்பலோட்டிய தமிழனோ... அந்த வீரத்தையும், தியாகத்தையும் பாமரத் தமிழன் மனதிலும் பதிய வைத்தது இந்தப் பல்கலைக்கழகம்தான். செல்லுலாயிடை ஊடுருவி, வெள்ளித் திரையில் விழுந்த வெளிச்சத்துக்கு புதிய அர்த்தம் கிடைத்தது. இவரால்தான் சமகால சரித்திரமாக விளங்கிய இந்தக் கலை இமயத்துக்கு, கோடிக்கணக்கான இதயங்களுடன் சேர்ந்து விகடன் கண்ணீர் அஞ்சலி செலுத்துகிறான்.[134]

**சிவாஜி கணேசன் மறைவு குறித்து இரங்கல் செய்திகள் சில :**

**சோனியாகாந்தி**

காங்கிரஸ் கட்சியின் தலைவர் சோனியா காந்தி சிவாஜிகணேசன் மகன் ராம்குமாரிடம் தொலைபேசியில் தனது ஆழ்ந்த அனுதாபங்களை தெரிவித்தார். ஆகஸ்ட் மாதம் 31 ஆம் தேதி சிவாஜி கணேசனுடைய அன்னை இல்லத்திற்கு வந்து அவரது மனைவி கமலாம்மாள் மற்றும் நடிகர் பிரபுவிடம் தனது அனுதாபங்களைத் தெரிவித்தார்.[135]

**அடல் பிஹாரி வாஜ்பாய்**

The Prime Minister has condoled the death Mr. Sivaji Ganesan. Mr. Vajpayes said the septuagenarian doyen of Tamil films was an actor par excellence. His emotive appeal and expressive visage transcended the barriers of language.[136]

**முதல் அமைச்சர் ஜெயலலிதா**

திரையுலகில் உலகப் புகழுக்கு உரியவராகத் திகழ்ந்த நடிகர் திலகம் செவாலியே சிவாஜி கணேசன் மறைந்தார் என்ற துயரச் செய்தி கேட்டு மிகுந்த வருத்தம் அடைந்தேன். சிவாஜி கணேசன் மறைவு கலையுலகுக்கு குறிப்பாக, தமிழ்த் திரையுலகுக்கு ஈடு செய்ய முடியாத இழப்பாகும். சிவாஜி கணேசனை இழந்து வாடும் அவரது குடும்பத்தினருக்கு என் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.[137]

**மு. கருணாநிதி**

எனது ஆருயிர் நண்பர், அருமைச் சகோதரர், நடிகர் திலகம் மறைவு என்னை தாங்கொணாத வேதனையிலே தள்ளி இருக்கிறது. தமிழ்க் கலையுலகில் புரட்சி அத்தியாயத்தை உருவாக்கியவர். கலையுலகில் தென்றலாய், புயலாய் நடை போட்டவர். அகில உலக நடிகர்களுடைய நன்மதிப்பைப் பெற்றவர் ; பாராட்டுதலுக்குரியவர் ; இளமைக் காலம் முதல் நானும் அவரும் கொண்டிருந்த நட்பு சாதாரணமானதல்ல. அத்தகைய நட்புக்கு உரியவரை என்னுடைய இதயத்தில் என்றென்றும் நிலைத்து நிறைந்திருப்பவரை இழந்துவிட்டேன் இன்று.[138]

**ஆந்திர முதல்வர் சந்திரபாபு நாயுடு**

சிவாஜி கணேசன் மிகச் சிறந்த, பிரபலமான நடிகர். இந்தியா முழுவதும் அவர் பிரசித்தி பெற்றவர். அவர் பிரபல நடிகர் மட்டுமல்ல, சிறந்த தலைவரும் ஆவார்.[139]

**டத்தோ எஸ். சாமிவேலு - மலேசியா பொதுப்பணித்துறை அமைச்சர்**

சிவாஜி தமிழ் சினிமாவின் பட்டத்து இளவரசர். அவர் தன் வாழ்நாளில் ஒரு சகாப்தமாக விளங்கியவர்.[140]

**இலங்கை அதிபர் சந்திரிகா குமாரதுங்கா**

“நாம் வாழும் காலத்தில் இந்தியாவின் மிக உன்னதமான நிலையை அடைந்த சினிமா நடிகரான உங்கள் கணவர் மறைந்த செய்தி கேட்டு நான் அதிர்ச்சியும், ஆற்றொணாராத் துயரமும் அடைந்தேன். அவரை இழந்து வாடும் உங்களுக்கும் உங்கள் குடும்பத்தாருக்கும் எனது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். இலங்கையில் உங்கள் கணவருக்கு மதம், இனத்தைக் கடந்து ஏராளமான ரசிகர்கள் உள்ளனர். அவர் நடித்து வெளிவந்த வீரபாண்டிய கட்டபொம்மன் திரைப்படம் எகிப்து நாட்டின் தலைநகர் கெய்ரோவில் நடந்த திரைப்பட விாவில் அவருக்கு சிறந்த நடிகருக்கான விருதைப் பெற்றுத் தந்தது. இலங்கை, கொழும்புவில் உள்ள ஒரு திரை அரங்கில், வீரபாண்டிய கட்டபொம்மன் திரைப்படம் ஒரு ஆண்டுக்கு மேல் ஓடி சாதனை படைத்தது. இலங்கை சினிமாத்துறையினருடன் தங்கள் கணவருக்கு நெருக்கமான உறவு இருந்தது. ஆகவே அவர் அடிக்கடி இலங்கைக்கு வந்து சென்றுள்ளார். அதனால், அவர் இலங்கை வரும் சமயங்களில் அவரை நான் பார்த்துள்ளேன். இந்தியா-இலங்கை கூட்டுத் தயாரிப்பு திரைப்படத்தில் சிவாஜிகணேசன் நடித்தார். அந்த படம் சிங்கள மொழியில் மொழிபெயர்க்கப்பட்டது. அதைப் பார்த்தன் மூலம் சிங்கள ரசிகர்களுக்கும் அவர் நன்றாக அறிமுகமாகியிருந்தார்.

சினிமாவில் பல்வேறு வேடங்களை ஏற்று நடித்து, அதன் மூலம் ரசிகர்களின் நெஞ்சில் நீங்கா இடம் பெற்றுவிட்டார். மக்கள் உள்ளங்களில் நிறைந்த தங்கள் கணவர், சினிமா என்ற சக்தியின் அடையாளமாக விளங்குகிறார். அவரது இழப்பை, குறிப்பாக இலங்கை ரசிகர்களால் மறக்க முடியாது. அந்த அளவுக்கு சிங்கள ரசிகர்கள் அவர் மீது அன்பு செலுத்துகிறார்கள்.[141]

**நடிகர் அமிதாப்பச்சன்**

2015 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 17 ஆம் நாள் சிவாஜி கணேசன் இல்லத்தில் நடைபெற்ற விருந்தில் நடிகர் அமிதாப்பச்சன் கலந்து கொண்டார். அப்போது தமிழில் சிவாஜி கணேசன் நடித்த “கை கொடுத்த தெய்வம்” இந்தியில் எடுக்கப்பட்டபோது தான் நடித்ததை நினைவு கூர்ந்தார். தான் சிவாஜி கணேசனை மிகவும் மதிப்பவன் என்றும், அவரது இல்லத்திற்கு வருகை தந்தது புனித யாத்திரை போன்றது என்றும் கூறினார்.[142]

இசைஞானி இளையராஜா

நடிப்புக்கு சிம்மாசனம் அமைத்துத் தந்தவர் சிவாஜிகணேசன். அந்தத் தமிழரால் தமிழகத்துக்குப் பெருமை. அவர் இந்த நாட்டின் சொத்து, பொக்கிஷம் என்று அவரைப்பற்றி கர்வமாக நாம் கூறிக்கொள்ளலாம். அவரது நடிப்பைப் பார்த்து கிண்டல் கேலி செய்தவர்களும் உண்டு. அவரின் பெருமையை, அவர் இறந்தபோதுதான் அவர்கள் அறிந்தார்கள். அவர்கள் ஒட்டுமொத்தமாக அழுது பாப விமோசனம் பெற்றனர். அப்போதுதான் அவர்களுக்கு தெரிந்தது, இவர்களுக்குள்ளும் சிவாஜி அற்புத நடிப்பால் வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்று.[143]

நடிகர் நாகேஷ்

“பொதுவாக படத்தில் தனக்குக் கீழ் நடிக்கும் நடிகர்கள் தன்னைவிடச் சிறப்பாக நடித்திருந்தால் கதாநாயகர்களால் அதை ஏற்றுக் கொள்ள முடியாது. திருவிளையாடல் படத்தில் நான் தருமியாக நடித்த காட்சியில் சிவாஜியைவிட நான் சிறப்பாக நடித்திருப்பதாக அவரிடம் சொல்லப்பட்டது. அக்காட்சிகளை பார்த்துவிட்டு சிவாஜிகணேசன் என்னைப் பாராட்டினார். படத்தில் அக்காட்சி இடம் பெற சிவாஜி அனுமதி வழங்கியிருக்காவிட்டால் பட்டி தொட்டிகளில் எல்லாம் இந்த நாகேஷ் தெரிந்திருக்கமாட்டான்.[144]

நடிகர் கமல்ஹாசன்

நடிகர் திலகம் சிவாஜிகணேசனை எப்போது இருந்து தெரியும் என்று கேட்டால், சூரியனை எந்த வயதிலிருந்து தெரியுமோ அந்த வயதிலிருந்து தெரியும் என்பேன். சினிமாவைப் பொருத்தவரை அவர் ஒரு துரோணாச்சாரியார். எனக்கு அவர்தான் முதல்வர். என் மானசீக குருவும் அவரே. நடிப்பில் வாரி வழங்கும் வள்ளல். ஒரு படத்தில் நான் ஒட்டுதாடி ஒட்டி வைத்து நடித்து இருந்தேன். படத்தை பார்த்தவர், நடித்தால் மட்டும் போதாது. மேக்கப்பிலும் கவனம் செலுத்தணும் அவன்தான் நடிகன் என்று கூறினார். சிவாஜியை இழந்து திரையுலகம் இன்று வெற்றிடமாக இருக்கிறது. அது அப்படியேதான் இருக்கும். யாராலும் நிரப்ப முடியாது. நடிகர் திலகம் ஒரு சரித்திரம். அந்த சரித்திரம் மீண்டும் திரும்பாது. கவிதைக்கு ஒரு பாரதி என்றால் கலைக்கு ஒரு சிவாஜி. முதல் கலைஞனும் அவர்தான் கலை முதல்வரும் அவர்தான்.[145]

**கன்னட நடிகர் ராஜ்குமார்**

எந்தச் சூழ்நிலையில் யார் சிவாஜி கணேசனுக்கு நடிகர் திலகம் என்று பட்டம் சூட்டினார்களோ தெரியாது. அதற்கு அவர் முற்றிலும் பொருத்தமானவர். சிவாஜி முதன் முதலாக நடித்த பராசக்தி படத்தைப் பார்த்த பிறகு அவரைப் பார்க்க அவர் நடிக்கும் ஸ்டுடியோவுக்குச் சென்றேன். ஆனால் அவரைப் பார்க்க பயமாக இருந்தது. பின்னர் அவருடன் பழகிய பிறகுதான் அவரது பழகும் எளிமைத் தன்மை எனக்குப் புரிந்தது. அதன் பிறகு தான் எனக்கும் நடிக்க ஆசை ஏற்பட்டது. அவரைப் பார்த்தாலே யாருக்கும் நடிப்பு வந்துவிடும். நான் கன்னடத்தில் நடித்த சங்கர்குரு படம் தமிழில் திரிசூலம் என்று தயாரிக்கப்பட்டது. அந்தப் படத்தில் சிவாஜி நடித்தார் என்பது எனக்கு மகிழ்ச்சியாகவும், பெருமையாகவும் இருந்தது. நான் வீரப்பன் பிடியில் இருந்து காட்டை விட்டு வெளியே வந்த பிறகு சென்னைக்கு வந்து நடிகர் திலகத்தை அவரது வீட்டில் சந்தித்தேன். அப்போது அவர் இரண்டு நிமிடங்களுக்கு மேலாக எனது கன்னங்களை அவரது கைகளினால் பிடித்துக்கொண்டு பிறகு என்னைக் கட்டியணைத்து கண்ணீர் விட்டு அழுதார். அப்படிப்பட்ட மிகச் சிறந்த நண்பர் அவர்.[146]

**மலையாள நடிகர் மம்முட்டி**

சிவாஜிசார் புதிய பாணியை உருவாக்கி, அவருக்கென்று தனி வழியில் நடித்தார். தான் நடித்த ஒவ்வொரு படத்திலும் அந்தந்த பாத்திரங்களாகவே வாழ்ந்தார். அந்த நடிப்புக்கு ஈடாக யாரும் நடிக்க இயலாது. அவர் ஒரு நடிப்புப் பல்கலைக்கழகம். அவர் முகத்தைப் பார்த்தாலே நடிப்பு வந்துவிடும்.[147]

**மலையாள நடிகர் மோகன்லால்**

இமயத்திற்கு இந்திய அஞ்சலி ! நடிப்புலகின் மாமேதை அமரர் நடிகர் திலகம்அவர்களுக்கு இந்நிகழ்ச்சி ஒரு சிறந்த அஞ்சலி ! இத்தருணத்தில் எனது உணர்வுகளை வெளிப்படுத்த வார்த்தைகள் கிடைக்காது வியந்து நிற்கிறேன். நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அவர்கள் மிகுந்த அனுபவம் வாய்ந்த நடிகர். அவர் யாரோடும் ஒப்பிட முடியாத, ஈடு இணையற்ற, முழுமையான நடிகர். அவர் புரிந்த சாதனைகளை எவராலும் எட்டிப்பிடிக்க முடியாது. உலக அதிசயங்கள் ஏழு என்று வரலாறு கூறுகிறது. நாம் அதனை எட்டு என்று திருத்திக் கூறுவோம். ஏனென்றால் திரு. சிவாஜி கணேசன் ஒரு 'செல்லுலாய்ட் அதிசயம்'. அவர் என்றும் ஒரு சகாப்தமாகவும், இந்திய திரைப்படத்துறையினருக்கு ஒரு வழி காட்டும் நட்சத்திரமாகவும் வாழ்ந்து கொண்டேயிருப்பார். சிவாஜி கணேசன்

அவர்கள் வாழ்ந்த காலத்திலே நாமும் வாழ்ந்தோம் என்கின்ற மிகப்பெரிய பெருமையை இத்தருணத்தில் நாம் அனைவரும் பகிர்ந்துகொள்ளக் கடமைப்பட்டுள்ளோம்.[148]

**நடிகை பண்டரிபாய்**

நான் சிவாஜி கணேசனின் முதல் கதாநாயகி. சிவாஜியை எஸ்.வி. சகஸ்ரநாமத்தோடு சேவா ஸ்டேஜில் நாடக நடிகரா இருக்கிறப்பவே எனக்குத் தெரியும். அப்பவே அவர் ரொம்ப சின்சியர். ராத்திரி நாடகத்திற்கு மத்தியானத்தில் இருந்தே நாடகத்தின் கதாபாத்திரமாகிவிடுவார். பராசக்தி படம் எடுக்கும் காலத்தில் பிரபல கதாநாயகர்கள் எல்லோரும் நீண்ட தலைமுடி வைத்து நடிப்பாங்க. அவர் கிராப் வெட்டியிருந்தார். இவ்வளவு பெரிய நடிகர்களுக்கு மத்தியில் எப்படி தாக்குப் பிடிக்கப் போகிறார் என்று நினைத்தேன். முதல் நாள் காட்சி எடுத்தாங்க, நடிச்சார். முதல் டேக்கிலேயே காட்சி ஓ.கே. ஆயிடுச்சு. அப்பவே எனக்கு அவர் பெரிய அளவில் வருவார்னு நம்பிக்கை வந்துடுச்சு. ஒரு கதாநாயகனுக்கு ஜோடியா நடிச்சு, பின்னர் அவருக்கு அண்ணியா, அக்காவா, அம்மாவா நடிச்சது தமிழ் சினிமாவில் நான் மட்டும்தான். அவர்கிட்ட உள்ள சிறப்புக்குணமே, ஒரு காட்சியில் தான் மட்டும் நல்லா நடிச்சா போதும்னு நினைக்காததுதான். கூட நடிக்கிறவங்க நல்லா பண்ணினாதான் அந்தக்காட்சி உயிரோட்டமா இருக்கும்னு நினைப்பார்.[149]

**நடிகர் அஜீத்**

நடிகர் திலகம் வார்த்தைகளால் வருணிக்க முடியாத ஒரு மாமேதை. அவரைப்பற்றிப் பேச எனக்கு வயசு பத்தாது. அவர் சாதனையின் சகாப்தம். அவர் அந்த நிலையை மிகவும் கஷ்டப்பட்டுப் பிடித்திருக்கிறார் என்று படித்து இருக்கிறேன். முதல் படமான பராசக்தியில்கூட பாதியில் அவரை நீக்க இருந்த அந்த சோதனைக்குப் பிறகே சாதனை படைத்திருக்கிறார் என்றும் அறிந்தேன். கஷ்டப்பட்டு உழைப்பவர்கள் சாதனை புரியலாம் என்பதற்கு அவர் ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. என மனைவி ஷாலினியும் குழந்தை நட்சத்திரமாக அவருடன் நடித்து இருக்கிறார் என்பதும் குறிப்பிடத்தக்கது.[150]

**சிவாஜிகணேசனுக்கு நினைவுச் சின்னங்கள்**

1995ல் சிவாஜிகணேசன் பெயரில் அவரது அன்னை இல்லம் இருக்கும் சாலைக்கு செவாலியே சிவாஜி கணேசன் சாலை என்று பெயரிடப்பட்டது. அதற்கான உத்தரவினை பிறப்பித்தவர் அன்றைய முதல்வர் ஜெயலலிதா.

2001 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் ஒன்றாம் நாள், சிவாஜி கணேசனின் பிறந்த நாள் அன்று அவரின் நினைவாக அன்றைய மத்திய தகவல், தொழில் நுட்பத்துறை அமைச்சர் பிரமோத் மஹாஜன் அவர்களால் அஞ்சல் தலை வெளியிடப்பட்டது.[151]

2002 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 17 ஆம் நாள் 'பராசக்தி' படத்தின் 50வது ஆண்டு விழாவை முன்னிட்டு ஏ.வி.எம். வளாகத்தில் சிவாஜி கணேசன் 'பராசக்தி'யில் 'சக்சஸ் சக்சஸ்' என்று வசனம் பேசி நடித்த முதல் காட்சி எடுக்கப்பட்ட இடத்தில் ஒரு நினைவுச் சின்னம் அமைக்கப்பட்டது. அந்தச் சின்னத்தை நடிகர் கமல்ஹாசன் திறந்து வைத்தார். சிவாஜிகணேசனின் மகன்களான ராம்குமாரும், நடிகர் பிரபுவும் கலந்துகொண்டனர்.[152]

2003இல் மதுரையிலிருந்து இராமேஸ்வரம் செல்லும் நெடுஞ்சாலையில் உள்ள வேலம்மாள் பொறியியல் கல்லூரி மற்றும் பள்ளி வளாகத்தில் ஒரு கட்டிடத்திற்கு நடிகர் திலகம் சிவாஜி கணேசன் பெயர் சூட்டப்பட்டது. அதை நிறுவியவர் வேலம்மாள் கல்வி நிறுவனங்களின் தலைவர் எம்.வி. முத்துராமலிங்கம். அந்தக் கட்டிடத்தின் மதிப்பு ரூ.2.5 கோடி.[153]

சிவாஜிகணேசனுக்கு முதன் முதலாக சிலை வைத்தவர் புதுச்சேரி முதல்வர் என். ரங்கசாமியாகும். 2006இல் பிப்ரவரித் திங்கள் 11 ஆம் நாள் புதுச்சேரி கருவைக் குப்பத்தில் சிலை நிறுவப்பட்டது.

2006 ஆம் ஆண்டு ஜுலை மாதம் இருபத்து ஒன்றாம் நாளில் சென்னை கடற்கரையில் அன்றைய முதல்வர் மு. கருணாநிதியால் சிவாஜி கணேசனுக்கு சிலை நிறுவப்பட்டது.[154]

கலைஞரின் கவிதை,

சிங்கத் தமிழனடா சிவாஜி கணேசனடா
எங்கும் புகழ் மணக்கும் எங்கள் தங்கமடா
வங்கக் கடலோரம் சிலையாக வந்தாரடா ;
வாழும் நாளெல்லாம் கலையாக வாழ்ந்தாரடா !
பொங்கு தமிழர் கண்டெடுத்த புதையலடா
புத்தர் வழி வந்த காந்தி மகான் பக்தரடா
பெருந்தலைவர் காமராசர்
விரும்பி நின்ற வீரமிகுத் தளபதியடா !
பெரியாக்குப் பிரியமுள்ள பேரனடா

வறியோர்க்கு வாரி இறைத்த வள்ளலடா !
பேரறிஞர் அண்ணாவின் தம்பியடா
பெருங்குடும்பம் கலைக்குடும்ப
அருங்கலைஞர் ஆருயிர் நண்பனடா ;
அவர் உயிருக்கும் மேலான தோழனடா !
அலைகடல் பெருகி எதிர்த்த போதும்
மலை பல உருண்டு தடுத்த போதும்
கலையுலக வேந்தனுக்குக் கட்டாயம்
சிலை வைத்தே தீருமோ மென்ற
நிலை குலையா நெஞ்சத்தைப் பெற்றோமடா
தலை வணங்காத் தமிழனுக்கு
தமிழ்க் குலம் போற்றுகின்ற
தன்மானக் கடமைதனைச் செய்தோமடா !
சிங்கத் தமிழனடா ; சிவாஜி கணேசனடா
எங்கும் புகழ் மணக்கும் எங்கள் தங்கமடா ![155]

**மதுரையில் சிவாஜி கணேசனுக்கு சிலை**

செந்தமிழுக்குச் சங்கம் கண்டது மதுரை அன்று
சிங்கத்தமிழன் சிவாஜிக்குச் சிலை கண்டது மதுரை இன்று
திருவிளையாடல் நடத்தியதால் சிவபெருமானுக்கோர்
திருக்கோயில்தனை அமைத்தனர் மதுரையில் அன்று !
திருவிளையாடலில் நடித்ததினால் சிவாஜி கணேசனுக்கோர்
திருவுருவச் சிலைதனை அமைத்தனர் மதுரையில் இன்று
நான்மாடக்கூடல் மாநகரில் கூடிடுவோம் !
நடிப்புக்கடல் சிவாஜியின் புகழ் பாடிடுவோம் !

- மருதுமோகன் ஆய்வாளர்

2009 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் நான்காம் நாள் மதுரையில் வாஜி கணேசனுக்கு நீதிமன்றம் அருகில் வி.என். சிதம்பரம், சென்னை கமலா யேட்டர் அதிபர் அவர்களின் முயற்சியால் நிறுவப்பட்டது.[156]

2009இல் SRM Sivaji Film Institute சென்னை, வடபழனியில் எஸ்.ஆர்.எம். கல்வி நிறுவனங்களின் குழுமத்தால் துவக்கப்பட்டது.[157]

2015ல் ஆகஸ்ட் திங்கள் 26 ஆம் நாள் இன்றைய முதல்வர் ஜெயலலிதா அரசு விதிகள் 110இன்படி சிவாஜி கணேசனுக்கு மணிமண்டபம் தமிழக அரசு அமைக்கும் என்ற அறிவிப்பை சட்டசபையில் அறிவித்தார்கள்.

அதற்கு 02.09.15 அன்று முதல்வரை நேரில் சந்தித்து தங்களின் நன்றியை சிவாஜிகணேசன் குடும்பத்தார் தெரிவித்தார்கள்.

நிறைவுரை

"நான் ஒரு நடிகனாக வேண்டும்" என்று ஆசைப்பட்டேன். ஆண்டவன் அருளால் "நடிகனாக ஆனேன், நடிகனாகவே வாழ்கிறேன்" என்று தன் வாழ்க்கையின் இறுதி காலத்தில் பதிவு செய்தார் சிவாஜி கணேசன்.

"நடிப்பு என் மூச்சு, நடிப்பு என் உயிர், நடிப்பு ஒன்றுதான் எனக்கு தெரிந்த தொழில்"என்று கூறிய சிவாஜிகணேசன் அதன்படியே வாழ்ந்து காட்டினார். அந்த வாழ்வு சமூகத்தில் அவருக்கு மிக உயர்ந்த இடத்தை அளித்தது.

1952ல் கதாநாயகனாக அறிமுகமான சிவாஜிகணேசன் மிகக் குறுகிய காலத்தில் அபரிதமான தன் திறமையினால் தமிழ் திரையில் மிக உயர்ந்த இடத்தை அடைந்தார். அந்த வளர்ச்சி மிகக் குறுகிய காலத்தில் அவருக்கு பெரும் செல்வத்தை வாரி வழங்கியது. சென்னை மாநகரத்தில் மிகச்சிறந்த இல்லத்தில் தன் வாழ்க்கையை நடத்தினார். தாய், தந்தை, தன் குடும்பம், உடன் பிறந்தவர்களின் குடும்பம், உற்ற நண்பர்களின் குடும்பம் என 100 பேர் அடங்கிய மிகப் பெரிய குடும்பமாக அவரது குடும்பம் விளங்கியது. கூட்டுக்குடும்பம், ஒரு நடிகரின் குடும்பம் இப்படித்தான் இருக்க வேண்டும் என்ற சிறப்பான எடுத்துக்காட்டாக தன் வாழ்வை நடத்தினார். தானமும் தர்மமும் தவமும் தனிமனிதனின் ஆத்ம திருப்திக்காக, உணர்வுப்பூர்வமான சந்தோஷத்திற்காக இதில் விளம்பரம் தேவையில்லை என்று நற்பண்புடைய சிவாஜிகணேசன் நற்காரியங்களுக்காக வாரி வழங்கத் தொடங்கினார்.

'பராசக்தி' யில் நடிக்கும்போது மாதம் ரூ.250/- வாங்கிய சிவாஜிகணேசன் தன் ஒரு மாத சம்பளத்தை டென்னிஸ் வீரர் ராமநாதன் கிருஷ்ணனுக்கு சன்மானமாக அளித்தார். அதன்பின் அவர் கோடிக்கணக்கான ரூபாய்களை தேச நலனுக்காகவும் தேச பாதுகாப்பிற்கும் அளித்தார். கல்வி நிறுவனங்களுக்கு

கணக்கில்லாமல் கொடுத்தார். மதிய உணவுத் திட்டம், மருத்துவ வசதிகள், இராணுவ வீரர்களுக்கு வேண்டிய நிதி உதவிகள் செய்தார். இயற்கை சீற்றங்களால் மக்கள் பாதிக்கப்பட்டபோது உடனடியாக உணவு மற்றும் நிதிகளை அளித்தார். நம் மாநிலம் தாண்டி பிற மாநிலங்களிலும் அவரது தான தர்மக்கரங்கள் நீண்டன.

ஆன்மீகத்தில் ஆழமான நம்பிக்கை கொண்ட சிவாஜிகணேசன் கோயில்களுக்கு யானைகளை தானமாக அளித்தார். முக்கியமான மடத்தலைவர்களிடம் நெருங்கிய தொடர்புடன் இருந்தார்.

1959ல் பாரதப் பிரதமர் ஜவஹர்லால் நேருவிடம் அறிமுகமான சிவாஜிகணேசன் 1962இல் அமெரிக்க அரசாங்கத்தின் கலாச்சார தூதுவராக அழைக்கப்பட்டார். நயகரா நகரின் ஒருநாள் மேயராக நியமிக்கப்பட்டார்.

1975இல் மொரிசீயஸ் நாடு கொண்டாடிய இந்திய சுதந்திர தின விழாவில் விருந்தினராக அழைக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டார். பல வெளிநாட்டு அதிபர்கள், பிரதமர்கள், மன்னர்கள் சிவாஜிகணேசனின் நண்பர்கள் ஆனார்கள். இந்தியாவிலுள்ள பல அரசர்கள், மன்னர்கள், அவர்தம் குடும்பத்தினர் சிவாஜிகணேசன் மீது மதிப்பும் மரியாதையும் வைத்திருந்தார்கள்.

அரசியலில் இறங்கிய சிவாஜி கணேசன் தன் சொந்தப் பணத்திலேயே அரசியல் வாழ்க்கையை நடத்தினார். வாழ்க்கையில் சொன்ன சொல் தவறாமை, நேர்மை, வாய்மை இவற்றைக் கடைப்பிடித்தார். தன்மானத்தை உயிராகக் கருதி வாழ்ந்தார்.

இந்தியாவிலுள்ள அனைத்துக் கட்சி தலைவர்களையும் நண்பர்களாக பெற்றிருந்த சிவாஜிகணேசன் எவரிடத்திலும் தனது சொந்த நலனிற்காக எந்தவிதமான உதரவியையும், சலுகைகளையும் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அவரது மரணம் சமூகத்தில் பல தரப்பட்ட மனித உள்ளங்களை பாதித்தது. சாதி, மதம், இனம், நாடு கடந்து அவரை இழந்து மனித வர்க்கம் மீளாத் துயரில் ஆழ்ந்தது. சர்வ கட்சித் தலைவர்களும் சிவாஜி கணேசனின் மரணத்திற்கு அனுதாபம் தெரிவித்தனர். அரசு மரியாதையுடன் அவரின் உடல் தகனம் செய்யப்பட்டது. இவ்வாறு தன் சிறந்த நடிப்பாற்றலால் சமூகத்தில் மிக உயர்ந்த இடத்தை அடைந்தார் என்பதை அறிய முடிகிறது.

## இறுதிக்குறிப்புகள்

1 நேர்காணல் சகுந்தலா சண்முகம் - சிவாஜிகணேசனின் தம்பி மனைவி, 09.08.2015
2 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, பப.93-95
3 MADRAS MUSINGS, (Archive) Vol. XVIII No.11, Sep. 16-30, 2008
4 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.96
5 நேர்காணல் சகுந்தலா சண்முகம் - சிவாஜிகணேசனின் தம்பி மனைவி, 09.08.2015
6 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.102
7 நேர்காணல் சகுந்தலா சண்முகம் - சிவாஜிகணேசனின் தம்பி மனைவி, 09.08.2015
8 நேர்காணல் வேணுகோபால், சிவாஜி கணேசனின் தங்கையின் கணவர், 30.07.2015
9 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2014.
10 நேர்காணல், நடிகர் பிரபு, சிவாஜி கணேசனின் மகன், 1.10.2015
11 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2014.
12 Personal Interview, Linda, wife of Muralidharan – San Diego California State, U.S.A., 29.09.15
13 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2015.
14 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2015.
15 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2015.
16 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2015.
17 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2014.
18 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2014.
19 Narayanasamy – Compiled, **Sivaji Ganesan's Autobiography of an actor**, Sivaji-Prabhu Charities Trust, Chennai, 2007, p.131.
20 **ibid.**, p.133
21 **ibid.**, pp.133-134
22 **ibid.**, p.139
23 Personal Interview, Administrative Officer, Mayor's Office, Nayagara, U.S., 18.10.2015.
24 நேர்காணல் வேணுகோபால், சிவாஜி கணேசனின் தங்கையின் கணவர், 30.07.2015
25 S.A. Nathanji, S.A., **My Unbelievable Journey with Indian Cinema,** S.A. Nathanji International Pte. Ltd. Singapore, 2014, pp.170-171.
26 **Ibid.,** pp.172-173
27 **Ibid.,** p.178
28 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.286
29 **மேலது.**, ப.179
30 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2014
31 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2014
32 Personal Interview, Sethuraman, Toledo, Ohio, U.S.A., 17.09.2015
33 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.299
34 **மேலது.**, ப.235
35 Interview, Ramanathan Krishnan, Tennis Player, Sports Star, 28.01.2006
36 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2014
37 வந்தியத்தேவன், கா., **மு.கூ.நூ.**, ப.87.
38 **மேலது.**
39 முத்துச்சாமி, மு., **மு.கூ.நூ.**, பப.38-42
40 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.**, பப.293
41 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2014
42 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.**, பப.290
43 **மேலது.**
44 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.233
45 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.**, ப.290

46 **மேலது.**

47 வந்தியத்தேவன், கா., **மு.கூ.நூ.**, ப.87.

48 **மேலது.**

49 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2014

50 வந்தியத்தேவன், கா., **மு.கூ.நூ.**, ப.85.

51 முத்தையா, மு., **வேட்டைக்கு வந்த சிங்கம்**, விஜயா பதிப்பகம், கோயம்பத்தூர், 2009, ப.75

52 வந்தியத்தேவன், கா., **மு.கூ.நூ.**, ப.87.

53 **மேலது.**

54 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.234

55 வந்தியத்தேவன், கா., **மு.கூ.நூ.**, ப.87.

56 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2013.

57 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2014

58 **மேலது.**

59 வந்தியத்தேவன், கா., **மு.கூ.நூ.**, ப.89.

60 **மேலது.**

61 வந்தியத்தேவன், கா., **மு.கூ.நூ.**, ப.88.

62 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2014

63 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.245

64 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.**, ப.293

65 **மேலது.**, ப.295

66 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2013.

67 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.**, ப.292

68 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.231

69 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2014

70 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2014

71 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2014

72 வந்தியத்தேவன், கா., **மு.கூ.நூ.**, ப.87.

73 **மேலது.**, ப.85

74 **மேலது.**, ப.89

75 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2014

76 நேர்காணல், கிரி சண்முகம், சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.2014

77 முத்துச்சாமி, மு., **மு.கூ.நூ.**, ப.238

78 நேர்காணல், நடிகர் கே.வி. சீனிவாசன், சிவாஜி கணேசனுடன் நாடகம் மற்றும் சினிமாக்களில்நடித்தவர், 21.02.12

79 வந்தியத்தேவன், கா., **மு.கூ.நூ.**, ப.89.

80 **மேலது.**

81 **மேலது.**

82 முத்துச்சாமி, மு., **மு.கூ.நூ.**, ப.200

83 முத்தையா, மு., **மு.கூ.நூ.**, ப.9.

84 **மேலது.**, ப.7

85 **மேலது.**, பப.16-17

86 **மேலது.**, ப.53

87 **மேலது.**, ப.47

88 **மேலது.**, ப.56

89 நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **மு.கூ.நூ.**, ப.190

90 சிதம்பரம் செட்டியார், V.N., கர்ணன் டிரெய்லர் வெளியீட்டு விழாவில் பேசியது, 20.02.2012

91 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2015.

92 நேர்காணல் - ஈசுவரமூர்த்தி. ஆர், சிவாஜி கணேசனின் குடும்ப நண்பர் 06.11.2015

93 நேர்காணல் - ஈசுவரமூர்த்தி. ஆர், சிவாஜி கணேசனின் குடும்ப நண்பர் 06.11.2015
94 நேர்காணல் - ஈசுவரமூர்த்தி. ஆர், சிவாஜி கணேசனின் குடும்ப நண்பர் 06.11.2015
95 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2015.
96 நேர்காணல் வேணுகோபால், சிவாஜி கணேசனின் தங்கையின் கணவர், 30.07.2015
97 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2013.
98 நேர்காணல் வேணுகோபால், சிவாஜி கணேசனின் தங்கையின் கணவர், 30.07.2015
99 முத்துச்சாமி, மு., **மு.கூ.நூ.**, ப.233
100 ஆய்வாளர் விழாவில் நேரில் கலந்துகொண்டு பார்த்தது
101 **எகிப்து அதிபர் நாசர், நடிகர் திலகம் டாக்டர் சிவாஜி கணேசன் பவளவிழா சிறப்பு மலர், பெங்களூர்,** 2003.
102 **திபேத்திய தலைவர் தலாய்லாமா நடிகர் திலகம் டாக்டர் சிவாஜி கணேசன் பவள விழா சிறப்பு மலர், பெங்களூர்,** 2003.
103 **பொம்மை,** அக்டோபர், 1984.
104 **சண்டே,** 1982
105 **பொம்மை,** அக்டோபர், 1984.
106 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.**, ப.337
107 **The Hindu**, 16.07.1997.
108 **பொம்மை,** அக்டோபர், 1984
109 **பொம்மை,** அக்டோபர் 1984
110 **முரசொலி,** 22.07.2006
111 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.**, ப.34
112 அண்ணாமலை, எஸ்.ஏ.பி. குமுதம் தலையங்கம், 4.3.1982.
113 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.**, ப.45
114 **பத்மஸ்ரீ சிவாஜிகணேசன் சாதனைகள்,** 1952-1967, **சினிமா ஸ்டார் சிறப்பு மலர்**
115 **நடிகன் குரல், நடிகர் திலகம் சிவாஜி கணேசன் உலக வெற்றி உலா மலர்** - 1962
116 மகாதேவன், இரா., **உலகின் ஈடில்லா நடிகர் சிவாஜி கணேசன்,** மணிமேலைப் பிரசுரம், சென்னை, 2002, ப.24
117 **பத்மஸ்ரீ சிவாஜிகணேசன் சாதனைகள்,** 1952-1967, **சினிமா ஸ்டார் சிறப்பு மலர்**
118 பாரதிதாசன், **பாரதிதாசன் கவிதைகள்,** அருள்சுடர் பதிப்பகம், சென்னை, 1993, ப.1923
119 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.**, ப.15
120 கவிஞர் வாலி, **குமுதம் ஜங்ஷன்** 27.05.2003
121 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.**, ப.15
122 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2015
123 தீனதயாளன், பா., **சிவாஜி** கிழக்கு, சென்னை, 2006, ப.151
124 ஆய்வாளர் நேரில் கலந்துகொண்டது
125 **Los Angeles Times**, July 23, 2001
126 **The Times of India**, July 24, 2001
127 **The Hindu**, July 22, 2001
128 **Trinity Mirror**, 22.07.2001
129 **City Express** 23.07.2001
130 **The New Sunday Express**, 22.07.2001
131 **தினமணி,** 22.07.2001
132 **தினகரன்,** 22.07.2001
133 **தினத்தந்தி,** 22.07.2001
134 பாலசுப்பிரமணியன், S., **ஆனந்தவிகடன்,** தலையங்கம், 29.07.2001.
135 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2015
136 **The Hindu**, 22.07.2001
137 **தினத்தந்தி** - 22.07.2001
138 **தினத்தந்தி,** 22.07.2001
139 **கதிரவன்,** 22.07.2001

140 **கதிரவன்,** 24.07.2001

141 இலங்கை அதிபர் சந்திரிகா குமாரதுங்கா கமலா அம்மாவுக்கு எழுதிய இரங்கல் கடிதம், **தினத்தந்தி,** 25.07.2001.

142 **The Times of India**, 21.04.2015

143 **தினத்தந்தி** 30.7.2001

144 **வானவில் பண்பாட்டு மையர் சார்பில் நடந்த அஞ்சலி கூட்டத்தில் நடிகர் நாகேஷ் பேசியது சென்னை, ஆகஸ்ட் 2, 2001**

145 சுதந்திர தின மலர், **தினத்தந்தி,** 15.08.2001

146 **தினத்தந்தி** 23.7.2001

147 **தினத்தந்தி** 27.07.2001

148 ராஜ் டிவி நடத்திய 'இமயத்திற்கு இந்திய அஞ்சலி' நிகழ்ச்சியில் பேசியது, 28.09.2001

149 **தினத்தந்தி,** 2.09.2001

150 **தினத்தந்தி,** 23.07.2001

151 ஆய்வாளர் நேரில் கலந்துகொண்ட விழா

152 **The Hindu**, October 1, 2013

153 ஆய்வாளர் மற்றும் சிவாஜிகணேசனின் மகன்கள் திரு.ராம்குமார், பிரபு மூவரும் கலந்து கொண்ட விழா

154 சந்திரசேகரன், கே., **மு.கூ.நூ.,** ப.329

155 கலைஞர் மு. கருணாநிதி எழுதி சிலை திறப்பு விழாவில் சீர்காழி சிதம்பரம் பாடிய பாடல், 21.07.2006, **அழைப்பிதழ் இணைப்பு**

156 மதுரையில் சிலை திறப்பு விழா, 4.10.2009, **அழைப்பிதழ் இணைப்பு**

157 நேர்காணல், ராம்குமார், சிவாஜி கணேசனின் மகன், 1.10.2015

## நிறைவுரை

1928 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் முதல் நாளில் பிறந்து 2001 ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் இருபத்தியோராம் நாள் மறைந்தவரும், உலகின் மிகச்சிறந்த நடிகர்களில் ஒருவருமான நடிகர் திலகம் சிவாஜி கணேசனின் வாழ்க்கை வரலாற்றையும், கலைப்பணிகளையும் காணுதல் என்ற நிலையில் மேற்கொள்ளப்பட்ட 'நடிகர் திலகம் சிவாஜி கணேசன் வாழ்க்கை வரலாறும் கலைப்பணிகளும் - ஓர் ஆய்வு' எனும் தலைப்பிலான இவ்வாய்வில் கண்ட உண்மைகளைக் கீழ்வருமாறு தொகுத்துக் கூறலாம்.

விழுப்புரத்தில் வாழ்ந்து வந்த சின்னையா மன்றாயரின் வழித்தோன்றல்களில் ஒருவராக நடிகர் திலகம் சிவாஜி கணேசனைக் குறிப்பிடலாம்.

சிவாஜி கணேசனின் பூர்வீகம் என்பது தஞ்சாவூர் மாவட்டத்தில், மன்னார்குடி அருகில் உள்ள வேட்டைத்திடல் கிராமமாகும். அக்காலத்தில் இக்கிராமத்தில்தான் வேட்டையாடுவதற்கு மன்னர்கள் வருவது வழக்கம். இங்கு 'மன்றாயர்' எனும் பட்டத்திற்குரிய கள்ளர் இனத்தவர்கள் வாழ்ந்து வரும் கிராமம் என்பது அறிதற்குரியதாகும்.

இரயில்வேப் பணியின் காரணமாக விழுப்புரத்தில் குடியேறிய வேட்டைத்திடல் சின்னையா மன்றாயர் - ராஜாமணியம்மாள் ஆகியோரின் நான்காவது மகனாகப் பிறந்தார் சிவாஜி கணேசன்.

சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டு தந்தை சிறை சென்றதால் தாயாருடன் திருச்சி சங்கிலியாண்டபுரத்தில் குடியேறினார்.

சங்கிலியாண்டபுரத்தில் ஆரம்பக் கல்வியை பயின்று வந்தார். இயற்கையிலேயே நல்ல குரல் வளமும், சங்கீத ஞானமும் பெற்றிருந்தார். இளம் வயதில் மிகுந்த சுறுசுறுப்புடனும், துடிப்புடனும், யாருக்கும் அடங்காத குணத்துடனும் விளங்கினார்.

சங்கிலியாண்டபுரத்தில் நடந்த கம்பளத்தார் கூத்தில் மனதை பறிகொடுத்த சிவாஜி கணேசன், தானும் நடிகனாக அதிலும் கட்டபொம்மனாக வேண்டும் என்ற உறுதி கொண்டார்.

திருச்சியில் முகாமிட்டு இருந்த மதுரை ஸ்ரீ பாலகான சபா எனும் நாடகக் குழுவினரிடம் தன் சங்கீத ஞானத்தையும், பாடும் திறமையையும் காட்டி நடிகராகச் சேர்ந்தார். தான் ஒரு அநாதை என்றுக் கூறி நடிகராகச் சேர்ந்த காரணத்தால் பெற்றோர்கள் அறியாமல் நாடகக் குழுவினரோடு திண்டுக்கல் நோக்கி தன் கலைப் பயணத்தைத் துவக்கினார்.

தான் கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்ற உறுதியுடன் இருந்த சிவாஜி கணேசன், மிகுந்த கட்டுப்பாடும், விதிகளும் நிலவிய சூழ்நிலையில், வாய்ப்பாட்டு, நடனம், பாடங்களை மனனம் செய்யும் பயிற்சி, வசனம் பேசும் ஆற்றல் மற்றும் தமிழ் உச்சரிப்பு இவற்றை மிகக் குறுகிய காலத்தில் கற்றுத் தேர்ந்தார்.

சிவாஜி கணேசனின் திறமையைக் கவனித்து வந்த அவரது குரு மிக விரைவில் மேடையில் நடிக்கச் சந்தர்ப்பம் அளித்தார். முதலில் கிடைத்த பெண் வேடத்தை மிக அற்புதமாக நடித்து குருவின் பாராட்டுதலைப் பெற்றார். ஒரே நாடகத்தில் பல வேடங்களை போட்டு நடிக்கக்கூடிய ஆற்றல் கைவரப் பெற்றார். மேலும், நாடகக் குழுவினர் தங்கள் முகாம்களை பல ஊர்களுக்கு மாற்றிப் பயணித்ததால் உலக அனுபவங்களையும், பல மொழிகளையும் கற்றுக்கொள்ள வாய்ப்பினைப் பெற்றார்.

'டம்பாச்சாரி' எனும் நாடகத்தில் சாமண்ணா என்ற நடிகர் ஏற்று நடித்த பதினொரு வேடங்களையும் எதிர்காலத்தில் தானும் நடிக்க வேண்டும் என உறுதி பூண்டார்.

நாடக உலகில் பசி, பட்டினி எனும் துன்பங்களையும், வீட்டில் நடந்த துயரச் சம்பவங்களில் கலந்துகொள்ள முடியாத நிலையினையும் தாங்கிக் கொண்டு தன் நடிப்பில் கவனம் செலுத்தி வந்தார்.

ஏழு ஆண்டுகளுக்குப் பின் வீட்டிற்குத் திரும்பி தன் குடும்பத்தாருடன் தீபாவளி கொண்டாடி மகிழ்ந்தார்.

நாடக உலகில் நடிகர் எம்.ஆர். ராதாவின் நட்பால் திராவிட இயக்கத் தலைவர்களான ஈ.வெ. ராமசாமி, அண்ணாத்துரை, கருணாநிதி மற்றும் பிற தலைவர்களின் அறிமுகம் கிடைத்தது. திராவிட இயக்க நடிகர்களான என்.எஸ்.கிருஷ்ணன், கே.ஆர். இராமசாமி முதலானவர்களுடன் பழகும் வாய்ப்பு பெற்றார்.

திராவிடத் தலைவர்களுடன் பழகிய காரணத்தால் அண்ணாத்துரை எழுதிய 'சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்' என்ற நாடகத்தில் சிறப்பாக நடித்து ஈ.வெ.ராமசாமியால் 'சிவாஜி' என்ற பட்டம் சூட்டப் பெற்றார்.

தமிழ்த் திரையுலகின் திராவிட இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் ஆதிக்கம் மிகுந்திருந்த காலத்தில் ஏ.வி.எம். நிறுவனமும், வேலூர் நேஷனல் தியேட்டர் உரிமையாளர் பெருமாள் முதலியாரும் இணைந்து தயாரித்த 'பராசக்தி' படத்தில் கதாநாயகனாக நடிக்கும் வாய்ப்புப் பெற்றார்.

'பராசக்தி' படம் வெளியாகும் வரை பல தடங்கல்கள், பல தடைகளைச் சந்தித்தார். 1950இல் துவங்கிய படப்பிடிப்பு 1952இல் முடிவடைந்து 1952 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் பதினேழாம் நாள் வெளிவந்தது.

'பராசக்தி' படத்துடன் அந்த ஆண்டில் மொத்தம் 30 படங்கள் வெளி வந்தன. அதில் எம்.கே. தியாகராஜ பாகவதர், கே.ஆர். இராமசாமி, டி.ஆர்.மகாலிங்கம், எம்.ஜி. இராமச்சந்திரன், என்.டி. ராமராவ், பிரேம் நசீர், நாகேஸ்வரராவ் போன்ற பல முன்னணிக் கதாநாயகர்கள் நடித்திருந்தனர். ஆனால் 'பராசக்தி' படம் மட்டும் பெரும் வெற்றி அடைந்தது.

'பராசக்தி' யைத் தொடர்ந்து 1954இல் 'மனோகரா' படம் பெரும் வெற்றியடைந்து, அப்படத்தின் வெற்றி சிவாஜி கணேசனின் வளமான திரையுலக எதிர்கால வாழ்வை உறுதி செய்தது. அத்துடன் கருணாநிதியின் வசனங்களை சிவாஜி கணேசன் பேசிய விதமும், தமிழ் உச்சரிப்பும், திராவிட இயக்க கொள்கைகளுக்கு பெரும் வரவேற்பை பெற்றுத் தந்தது. அதன் மூலம் தமிழக அரசியலில் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு நிலையான இடம் கிடைத்தது எனலாம்.

சிவாஜி கணேசனுக்கு முன் அண்ணாத்துரை மற்றும் கருணாநிதி போன்ற திராவிட இயக்கத்தலைவர்களின் வசனங்களை திரையில் பல நடிகர்கள் பேசி நடித்தாலும், இந்த இரு படங்களின் வெற்றிதான் பெரும் வெற்றியாக திரையுலகில் கருதப்பட்டன. அதன் மூலம் பராசக்தி மற்றும் மனோகரா படங்களின் வெற்றி சிவாஜி கணேசனால்தான் ஏற்பட்டது என்பது உறுதியானது.

திரையுலகில் அறிமுகமான சில வருடங்களுக்குள்ளாகவே கதாநாயகன் என்ற தகுதியைப் பற்றிக் கவலை கொள்ளாமல் சிவாஜி கணேசன் வில்லன் வேடங்களை ஏற்றுத் தன் நடிப்புத் திறமைகளை வெளிக் கொணர்ந்தார்.

ஓரங்க நாடகங்களில் ஆங்கில நாடகாசிரியரான ஷேக்ஸ்பியரின் சாக்ரடீஸ், ஒத்தெல்லோ, ஹேம்லட், ஜூலியஸ் சீசர் போன்ற கதாபாத்திரங்களை ஹாலிவுட் நடிகர்களின் பாணியில் சிறப்புடன் நடித்து வெற்றி பெற்றார். மேலும் ஓரங்க நாடகங்களில் சேரன் செங்குட்டுவன், பொற்கைப் பாண்டியன் போன்ற சங்க கால மன்னர்களின் பாத்திரங்களையும், வட இந்திய அரசர் சாம்ராட் அசோகன் போன்ற பாத்திரத்தையும் ஏற்று கம்பீரமான நடிப்பை வெளிப்படுத்தினார்.

இளம் வயதில் கண்ட கனவினை அதன் தொடர்பாக கொண்ட குறிக்கோளையும் நிறைவேற்றும் வண்ணம், கம்பளத்தார் கூத்தின் தலைவனான வீரபாண்டியக் கட்டபொம்மன் கதாபாத்திரத்தை நாடகமாக்கி சிறப்புடன் நடித்தார். அந்த நாடகம் திரைப்படமாக உருவானபோது வீரபாண்டியக் கட்டபொம்மன் பாத்திரத்தை ஏற்று மிகச் சிறப்பான நடிப்பாற்றலை வெளிப்படுத்தினார். அந்த நடிப்புக்கு ஆப்பிரிக்க-ஆசிய நாட்டின் மிகச் சிறந்த நடிகருக்கான விருதினைப் பெற்றார்.

ஒரு தேசீயவாதியின் மகனாகப் பிறந்த சிவாஜி கணேசன் தேசத்திற்காகப் போராடிய வீரர்களின் வேடங்களை ஏற்று நடித்து அவர்களுக்கு பெருமையைத் தேடித் தந்தார். கப்பலோட்டிய தமிழன், வ.உ.சி., பாரதியார், கொடிகாத்த குமரன், பகத்சிங் போன்ற பாத்திரங்களைக் குறிப்பிடலாம்.

ஒரே படத்தில் இரண்டு, மூன்று என உச்சமாக ஒன்பது வேடங்களில் வேறு வேறு விதமான உடல் மொழிகளை வெளிப்படுத்தி குரலில், நடையில் வேறுபாடுகளைக் காட்டி நடித்தார்.

இயக்குநர் பீம்சிங்கோடு இணைந்து குடும்ப உறவுகளுக்குள் இருக்கும் பாசத்தை, பந்தத்தை, கோபதாபங்களையெல்லாம் காட்டி நடித்தார். மனித உறவுகளில் இருக்கும் உணர்வுகளைத் திறமையான தன் நடிப்பில் கொண்டு வந்தார்.

இயக்குநர் ஏ.பி. நாகராஜனுடன் சேர்ந்து புராண, இதிகாச பாத்திரங்களில் நடித்தார். கடவுள்கள், கடவுளின் அவதாரங்கள், ஆழ்வார்கள் மற்றும் நாயன்மார் எனப் பல்வேறு பாத்திரங்களில் நடித்தார். வட்டார மொழிகள் பேசியும், பிராமணப் பேச்சுக்களைப் பேசியும் தன் வசனங்கள் பேசும் ஆற்றலை வெளிப்படுத்தினார்.

தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ள மெய்ப்பாட்டியலின் சுவைகளையும் அவற்றின் நிலைக்களன் சுவைகளையும், தொல்காப்பியம் பற்றி அறியாத சிவாஜி கணேசன் தன் நடிப்பாற்றலால் வெளிப்படுத்தி நடித்தார். அதுபோல் நடிப்புக்கென ருஷ்ய நாட்டு இயக்குநரும், நடிகருமான ஸ்தானிஸ்லாவ்ஸ்கி உருவாக்கிய நடிப்புக் கோட்பாடுகளை தன் நடிப்பில் இயல்பாகக் கொண்டு வந்தார்.

நடிப்பில் ஒப்பற்ற திறமைகளை வெளிப்படுத்திய சிவாஜி கணேசனுக்கு பிரெஞ்சு அரசாங்கம் செவாலியே விருது வழங்கி கௌரவித்தது. இந்திய அரசாங்கம் மிக உயர்ந்த விருதான தாதா சாகேப் பால்கே விருது அளித்து பெருமைப்படுத்தியது. 'நடிகர் திலகம்' என்ற விருதினை 'பேசும் படம்' எனும் கலையுலகப் பத்திரிக்கை கொடுத்தது. பத்மஸ்ரீ, பத்மபூஷன், கலைமாமணி, கலைக் குரிசில், டாக்டர் போன்ற பட்டங்கள் அவரைத் தேடி வந்தன.

அரசியலில் சிவாஜி கணேசனின் நிலைப்பாடு என்பது, நன்றியுணர்ச்சி, நட்புணர்வு மற்றும் அவரது தேசீயக் கொள்கைகள் அடித்தளமாகக் கொண்டிருந்தன. அண்ணாத்துரை எழுதிய 'சிவாஜி கண்ட இந்து ராஜ்யம்' நாடகத்தில் நடித்து அதன் மூலம் 'சிவாஜி' எனும் சிறப்புப் பட்டத்தை ஈ.வெ. இராமசாமி மூலம் பெற்றதால் அவர் திராவிட இயக்கத்தின் கருத்துக்களை நன்றியறிதல் அடிப்படையில் ஏற்றிருந்தார். 'பராசக்தி', 'மனோகரா' போன்ற படங்களில் கருணாநிதி எழுதியதால்தான் தன்னுடைய திரையுலக வாழ்க்கை நல்லவிதமாக அமைந்தது என்ற எண்ணத்தால் நன்றியுனும், கருணாநிதியிடத்தில் நட்புடனும் இறுதிவரை இருந்தார். ஆனால் காங்கிரஸ் கட்சியிலும், காமராஜரைத் தலைவராக ஏற்றுக்கொண்ட செயலும், தனது கொள்கையின் அடிப்படையில்தான் என்று பதிவு செய்தார். ஆதலால் திராவிட கழகத்திலோ அல்லது திராவிட

முன்னேற்றக் கழகத்திலோ உறுப்பினராகாத சிவாஜி கணேசன் காங்கிரசில் மட்டும் உறுப்பினரானார்.

சிவாஜி கணேசனின் சகோதரர்களும், மனைவியும் குடும்பத்தை சிறப்பாக கவனித்துக்கொண்ட காரணத்தால் அவரால் நடிப்பில் தனது முழு கவனத்தையும் செலுத்தி நடிக்க முடிந்தது. அதனால் அவரது சிறப்பான நடிப்பாற்றல் வெளிப்பட்டது. சிவாஜி கணேசனின் அற்புதமான நடிப்பாற்றல் அவருக்கு சமுதாயத்தில் ஒரு உயர்ந்த மதிப்புமிக்க இடத்தை அளித்தது. ஜவகர்லால் நேரு, இந்திரா காந்தி, ராஜிவ்காந்தி, வி.பி.சிங், சோனியாகாந்தி போன்ற அகில இந்தியத் தலைவர்கள் அவர் மீது பெரிய மரியாதை வைத்தார்கள். தமிழ்நாட்டில் அண்ணாத்துரை, கருணாநிதி, எம்.ஜி. இராமச்சந்திரன், ஜெயலலிதா போன்ற முதல்வர்கள் அவருக்கு மரியாதை செலுத்திப் பழகினார்கள்.

அமெரிக்க ஐக்கிய நாட்டின் கலாச்சார தூதுவராக அழைக்கப்பட்டு, நயகரா நகரத்தின் ஒருநாள் மேயராக கௌரவிக்கப்பட்டார். கொலம்பஸ் நகரம் மற்றும் டெலோடா நகரங்களில் ஒருநாள் கௌரவக் குடிமகனாக்கி பெருமைப்படுத்தினார்கள். மொரீசியஸ், குவைத், சிங்கப்பூர் மற்றும் இலங்கை போன்ற நாடுகளில் அழைக்கப்பட்டு மரியாதை செலுத்தப்பட்டார்.

சிவாஜி கணேசன் வேட்டையாடுதலை விரும்பிப் பழகிக் கொண்டார். அதன் மூலம் பல பெரிய நிலக்கிழார்களும், ஜமீன்தாரர்களும் அவருக்கு நண்பர்களானார்கள். மைசூர் மகாராஜா, புதுக்கோட்டை தொண்டைமான், இராமநாதபுரம் மற்றும் சிவகங்கை மன்னர்கள் சிவாஜிகணேசனின் நட்பைப் பெரிதும் விரும்பி ஏற்றுக் கொண்டார்கள்.

சிவாஜி கணேசனோடு காஞ்சிப் பெரியவர், மேல்மருவத்தூர் சிருங்கேரி மடத்தலைவர், புட்டபர்த்தி சாய்பாபா போன்ற சிறந்த ஆன்மீகப் பெரியவர்கள் தொடர்பு கொண்டிருந்தனர். சிவாஜி கணேசனோடு இந்திய மற்றும் வெளிநாட்டு தொழில் அதிபர்கள் நட்போடு இருந்தனர்.

நடிகனாக அதிலும் கட்டபொம்மனாக நடிக்க வேண்டும் என்ற ஒரே குறிக்கோளுடன் தன் கலைப்பயணத்தை மேற்கொண்ட சிவாஜி கணேசனின் தளராத முயற்சியும், உழைப்பும் அவருக்கு பெரிய

வெற்றிகளையும், பெருஞ்செல்வத்தையும், சமுதாயத்தில் உயர்ந்த இடத்தையும் பெற்றுத் தந்தன.

தானமும், தர்மமும் தனி மனிதனுக்குள் இருக்க வேண்டியது. அதற்கு விளம்பரம் தேடக்கூடாது என்ற கொள்கையில் வாழ்ந்தார் சிவாஜி கணேசன். தேச நலனுக்காகவும், கல்விப் பணிக்காகவும், இயற்கைச் சீற்றத்தினால் ஏற்பட்ட இடர்களுக்காகவும், மருத்துவமனைகளுக்காகவும் பல கோடிக்கணக்கான ரூபாய்களை வாரி வழங்கினார்

நடிகர் திலகம் சிவாஜி கணேசன் வாழ்க்கை வரலாறும், கலைப் பணிகளும் - ஓர் ஆய்வு என்னும் இவ்வாய்வு எதிர்காலத்தில் பல்வேறு ஆய்வுகளை மேற்கொள்வதற்கான களங்களைக் கொண்டுள்ளது.

சிவாஜி கணேசனின் நடிப்புத்திறன் - ஓர் ஆய்வு

சிவாஜி கணேசனின் சரித்திர மற்றும் இதிகாச கதாபாத்திரங்கள்- ஓர் ஆய்வு.

சிவாஜிகணேசன் நடித்து இயக்குநர் பீம்சிங் இயக்கிய படங்கள் - ஓர் ஆய்வு.

சிவாஜி கணேசன் நடித்து இயக்குநர் ஏ.பி. நாகராஜன் இயக்கிய படங்கள் - ஓர் ஆய்வு.

சிவாஜி கணேசன் - மார்லன் பிராண்டோ - ஓர் ஒப்பீடு

'பராசக்தி' - மனோகரா - தமிழ்த் திரையுலகில் திருப்புமுனை ஏற்படுத்திய திரைப்படங்கள்.

என்னும் தலைப்புகளில் மேலும் ஆய்வுகள் மேற்கொள்ள வாய்ப்புண்டு

2001 ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 21 ஆம் நாள் சிவாஜி கணேசன் மறைந்தார். அவர் வாழ்ந்த இல்லத்தில் மக்கள் வெள்ளம் கூடியது. உலகெங்கும் அவரது மரணம் தமிழ் நெஞ்சங்களைப் பாதித்தது. அரசு மரியாதையுடன் அவரின் இறுதிச் சடங்கு நிறைவுற்றது.

# நூற்பட்டியல்

## சான்றுகள்

### முதன்மைச் சான்றுகள்

**சிவாஜி கணேசனின் நூல்கள்**

நாராயணசாமி மற்றும் மருதுமோகன் (தொகுப்பு) **சிவாஜி கணேசனின் சுயசரிதை**, சிவாஜி-பிரபு சாரிட்டீஸ் டிரஸ்ட், சென்னை, 2002.

சிவாஜி கணேசன், **கதாநாயகனின் கதை**, விஜயா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2009

Narayanaswamy, (Compiled) **Sivaji Ganesan's Autobiography of an actor,** Sivaji-Prabhu Charities Trust, Chennai, 2007.

**உரைநூல்கள்**

பரிமேலழகர் உரை, **திருக்குறள்**, பூம்புகார் பதிப்பகம், சென்னை, 1991

**அகராதி, கலைக்களஞ்சியம்**

ஆறுமுக நாவலர், **சூடமணி நிகண்டு**, கோல்டன் ஸ்டீம் பிரஸ், மதராஸ், 1917.

ஷாஜகான் கனி, வெ.மு., **தமிழ் நாடகக் (குறுங்) கலைக் களஞ்சியம்**, ஓவியம் பதிப்பகம், மதுரை, 2010.

சண்முகம், வி.சி., (நாட்குறிப்பேடு), சிவாஜி கணேசனின் தம்பி, 1969

சுந்தரம், வீ.பா.க., **தமிழிசை கலைக்களஞ்சியம்**, தொகுதி 2, பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி, 1994.

**தமிழ் மற்றும் ஆங்கில இதழ்கள் மற்றும் பத்திரிகைகள்**

**இதழ்கள்**

ஆனந்த விகடன், 24.5.1959
ஆனந்த விகடன், 22.11.1964
ஆனந்த விகடன், 21.9.1969
ஆனந்த விகடன், 29.7.2001
ஆனந்த விகடன், 10.07.2005
கதிரவன், 22.07.2001
கதிரவன், 24.07.2001
கல்கி, டிசம்பர், 1947
கலைத்தோட்டம், 15.6.1959
குமுதம், 20.3.2011
குமுதம், 31.10.2007
குமுதம், 28.07.2003
குமுதம் ஜங்ஷன், 27.05.2003
குண்டூசி, நவம்பர் 1952

சினிமா எக்ஸ்பிரஸ், 15.10.1984
சினிமா எக்ஸ்பிரஸ், 15.11.1984
சினிமா எக்ஸ்பிரஸ், 1988
சினிமா எக்ஸ்பிரஸ், 1-15, நவம்பர் 1997
தினமணி, 14.12.2014
தினமணி, 04.06.1961
தினமணி கதிர், பிப்ரவரி 9, 1978
தினமணி, 22.07.2001
தினமலர், 23.02.2014
தினகரன், 5.7.1997
தினத்தந்தி, 23.04.1995
தினத்தந்தி, 30.09.2001
தினத்தந்தி, 22.07.2001
தினத்தந்தி, 23.07.2001
தினத்தந்தி, 25.07.2001
தினத்தந்தி, 27.07.2001
தினத்தந்தி, 20.09.2001
தினத்தந்தி, 30.07.2001
தினத்தந்தி, 22.03.2014
தினத்தந்தி, 10.05.2014
தேவி, 07.10.1987
பேசும்படம், நவம்பர் 1952
பேசும்படம், ஜனவரி1962
பேசும்படம், மார்ச் 1966
பேசும்படம், 1968
பேசும்படம், 1975
பொம்மை, ஏப்ரல் 1975
பொம்மை, ஜனவரி 1979
பொம்மை, டிசம்பர் 1981
பொம்மை, அக்டோபர் 1984
முரசொலி, 22.07.2006
வாசுகி, 16-30, ஏப்ரல் 1995
ராணி, 20.5.2007

City Express, 23.07.2001
Los Angels Times, July 23, 2001
The Cinema, April 2003
The Hindu, 16.07.1997
The Hindu, July 22, 2001
Trinity Mirror, 22.07.2001
The New Sunday Express, 22.07.2001
The Times of India, July 24, 2001
The New Indian Express, 21.02.2005
The Hindu. 15.01.2007
The Hindu, 17.03.2010
The Hindu, October 1, 2013
The Times of India, 21.04.2015

**நேர்காணல்கள்**

| | | |
|---|---|---|
| அஞ்சலிதேவி (நடிகை) | : | 9.10.2012 |
| இராதாகிருஷ்ணன், கா.கா., (நடிகர்) | : | சிவாஜி கணேசனோடு நாடகம் மற்றும் சினிமாவில் நடித்தவர், 08.02.2011 |
| ஈசுவரமூர்த்தி | : | சிவாஜி கணேசனின் குடும்ப நண்பர், 06.11.2015 |
| காந்தி, ந., | : | சிவாஜி கணேசனின் சிறிய தந்தை மகன், 01.10.2012 |
| கிரி சண்முகம் | : | சிவாஜி கணேசனின் தம்பி மகன், 1.10.11, 1.10.2012, 1.10.2013, 1.10.2014, 1.10.2015 |
| குமார், வி.ஆர். | : | சிவாஜி கணேசனின் மனைவி கமலாவின் தங்கை மகன், 1.10.2015 |
| திருமதி. சகுந்தலா சண்முகம் | : | சிவாஜி கணேசனின் தம்பி மனைவி 9.8.2015 |
| சிவக்குமார் (நடிகர்) | : | 27.11.2015 |
| சீனிவாசன், கே.வி. (நடிகர்) | : | 27.01.2013 |
| சீனிவாசன், பி., | : | சிவாஜி கணேசனின் குடும்ப நண்பர் 02.07.14 |
| வியட்நாம் வீடு சுந்தரம் (இயக்குநர்) | : | 9.7.2014 |
| செல்வரங்க நாயக்கர் | : | சிவாஜி கணேசனின் பள்ளித்தோழர் - 09.07.14 |
| பாரதிராஜா (இயக்குநர்) | : | 05.09.2015 |
| பிரபு (நடிகர்) | : | சிவாஜி கணேசனின் மகன் 1.10.2015 |
| புனிதா பிரபு | : | சிவாஜி கணேசன் மருமகள்,1.10.2012 |
| நந்தகுமார் (நடிகர்) | : | சிவாஜி கணேசனோடு திரையிலும் அரசியலிலும் இருந்தவர் 1.10.2015 |
| மனோரமா (நடிகை) | : | 1.10.2013 |
| லெனின் | | படத்தொகுப்பாளர் |
| ராம்குமார் | : | சிவாஜி கணேசனின் மூத்த மகன் 1.10.2012, 1.10.13, 1.10.14, 1.10.15 |
| வேணுகோபால் | : | சிவாஜி கணேசனின் தங்கையின் கணவர் 30.07.2015 |
| லெனின் (எடிட்டர்) | : | தொலைபேசி பேட்டி, 12.10.2015 |

Administrative Officer, Mayor's Office, Nayagara, U.S., 18.10.2015.

Mrs. Linda – Wife of Muralidharan, San Diego California State, U.S.A., 29.09.2015.

Sethuraman, Toledo, Ohio, U.S.A., 17.09.2015.

**மேடை பேச்சுக்கள்**

**ஆய்வாளர், கர்ணன் 150வது நாள் வெற்றிவிழா, 4.8.2012**

**சிதம்பரம் செட்டியார், கர்ணன் டிரெய்லர் வெளியீட்டு விழா, 20.02.2012**

**Report**

Jain Commission Interim Report: Growth of Sri Lankan Tamil Militancy in Tamilnadu, Chapter I, Phase II (1982-1988).

## துணைமைச் சான்றுகள்

தமிழ் நூல்கள்

அரங்கசாமி, பழனி., தமிழ் நாடகம், தோற்றமும் வளர்ச்சியும், தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர், 1989

ஆரூர்தாஸ், சிவாஜி வென்ற சினிமா ராஜ்ஜியம், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 2012.

இராஜபூஷணம் மன்னையார், அ., கள்ளர்குல வரலாறு, குருவருள் பதிப்பகம், சென்னை, 2009.

இராமசாமி, அ., இந்திய விவரச்சுவடி, தமிழ்நாடு இராமநாதபுரம் மாவட்டம், தமிழ்நாடு அரசு, 1990.

இராமச்சந்திரன், எம்.ஜி., நான் ஏன் பிறந்தேன், ராஜராஜன் பதிப்பகம், சென்னை, 2003.

இராஜேந்திரன், எஸ்.எஸ்., நான் வந்த பாதை, அகநி வெளியீடு, வந்தவாசி, 2015.

இன்பா, மு.ஞா.செ., சாவித்திரி, தோழமை வெளியீடு, சென்னை, 2015.

இனியன் சம்பத், ஈ.வெ.கி. சம்பத்தும் திராவிட இயக்கமும், சம்பத் பதிப்பகம், சென்னை, 2013

கருணாநிதி, மு., நெஞ்சுக்கு நீதி, திருமகள் நிலையம், சென்னை, 1975.

கமலா, தலைவர் சத்தியமூர்த்தி, லலிதாவிலாஸ் பாடகசாலை, மெட்ராஸ், 1967.

சக்தி பெருமாள், **தமிழ் நாடக வரலாறு**, வஞ்சிக்கோ பதிப்பகம், மதுரை, 1979

சம்பந்த முதலியார், பம்மல்., **நாடகமேடை நினைவுகள்**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1998

சண்முகம், டி.கே., **எனது நாடக வாழ்க்கை**, வானதிபதிப்பகம், சென்னை, 1972.

சண்முகம், டி.கே., **நாடகக்கலை**, சங்கரதாஸ் சுவாமிகள் நினைவு மன்றம், சென்னை, 1967.

சந்திரசேகரன், கே., **சிவாஜி ஒரு வரலாற்றின் வரலாறு**, தென்திசை பதிப்பகம், சென்னை, 2008

ஷாஜகான் கனி, வெ.மு., **தமிழ் நாடக வகையும் வரலாறும்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2010.

சாத்தனார், **சுவைநூல்**, தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம், 1968

சாண்டில்யன், **சினிமா வளர்ந்த கதை**, விஜயா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2008

சிவகுமார், **இது ராஜபாட்டை அல்ல,** அல்லயன்ஸ், சென்னை, 2004.

சிவகுமார், **தமிழ் சினிமாவில் தமிழ்**, அல்லயன்ஸ், சென்னை, 2011

சிவதாணு, **நாடக உலகில் அண்ணா**, சங்கரதாஸ் சுவாமிகள் நினைவு மன்றம், சென்னை, 1970

ஸ்ரீ சந்திரன், **சிலப்பதிகாரம்**, மதுரைக்காண்டம், காடுகளின் கதை (வரிகள் 83-85), வர்த்தமான் பதிப்பகம், சென்னை, 1988

ஜீவன், **சிவாஜியின் நடிப்பிலக்கணம்,** மணிமேகலைப் பிரசுரம், சென்னை, 1997

ஜெயவீரபாண்டியன், **பாஞ்சாலங்குறிச்சி வீரசரித்திரம்,** திருவள்ளுவர் நிலையம், மதுரை, 1950

தீனதயாளன், பா., **சிவாஜி**, கிழக்கு, சென்னை, 2006.

பத்மநாபன், சு., **சங்கரதாஸ் சுவாமிகள்,** காவ்யா பதிப்பகம், சென்னை, 2008

பரிதிமாற் கலைஞர், **நாடகவியல்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004.

பாரதிதாசன், **பாரதிதாசன் கவிதைகள்**, அருள்சுடர் பதிப்பகம், சென்னை, 1953.

பொன்னையா, நா., **தொல்காப்பியம்,** பொருளதிகாரம், திருமகள் அழுத்தகம், ஈழம், 1943.

நாராயணன், அறந்தை., **தமிழ் சினிமாவின் கதை**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 1981.

நாராயணன் அறந்தை, **ஆரம்பகால தமிழ் சினிமா**, விஜயா பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2008.

மகாதேவன், இரா., **உலகின் ஈடில்லா நடிகர் சிவாஜி கணேசன்**, மணிமேகலைப் பிரசுரம், சென்னை, 1999.

மறைமலையான், **பேரறிஞர் அண்ணாவின் பெருவாழ்வு**, வானதி பதிப்பகம், சென்னை, 1980.

மாணிக்கனார், அ., **புறநானூறு**, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 1999.

முத்துச்சாமி, மு., **சிவாஜி தரிசனம்**, முருகாலயம், சென்னை, 2005

முத்தையா, மு., **வேட்டைக்கு வந்த சிங்கம்,** விஜயா பதிப்பகம், கோயம்புத்தூர், 2009.

வரதராசன், மு., **தமிழ் இலக்கிய வரலாறு**, சாகித்திய அகாதெமி வெளியீடு, டெல்லி, 1972.

வந்தியதேவன், கா., **வரலாற்றுச் சுவடுகள்**, இதயவேந்தன் வாசகர் வட்டம், சென்னை, 2011.

வேங்கடசாமி, ரா., **ஆரம்பகால சினிமா**, பாகம் 3, விஜயா பப்ளிகேஷன்ஸ்,
வேங்கடசாமி, ந.மு., கள்ளர் சரித்திரம், நூற்றாண்டு விழா வெளியீடு, தஞ்சாவூர்.

விக்டர், ம.சோ., **தொல்காப்பியச் சிந்தனைகள்**, நல்லேர் பதிப்பகம், மைலாப்பூர், சென்னை

**English Books**

Bishop Caldwel, **A History of Tinnelvely**, Asian Education Services, New Delhi, 1982.

Bordwel David and Thompson Krishtan, **Film History An Introduction**
Mc Graw Hill Company, Inc., New York, 2003,

Chatterji, **Political Prospects in India**, CLS, Madras, 1971.

Constantin Stanislavsky, **An Actor Prepares**, Theatre Arts Books, New York, 1936.

Constantin Stanislavsky, **Building A Character**, Routledge, New York, 1936.

Constantin Stanislavsky, **Creating A Role**, Routledge, New York, 1961.

Constantin Stanislavsky, **My Life in Art**, Theatre Arts Books, New York, 1948.

Dhananjayan, G., **The Best of Tamil Cinema 1931-2010,** Vol.1, Galata Media Private Ltd., Chennai, 2011.

Francis. W., **Madurai Gazetter**, Government Press, Madras, 1906

Haris Marvin, **The Rise of Antropological Theory, A History of Theories of Culture**, Thomas Y Crowell Company, New York, 1968.

Karthigesa Sivathambi, **Drama in Ancient Tamil Society**, New Century Book-House Pvt. Ltd., Madras, 1981.

Lorains, Hull, S., **Strasberg's Method**, Bow Publishing Inc., Connecticut, 1985.

Mangalammurugesan, **Self Respect Movement in Tamilnadu, 1920-1940**, Koodal Publishers, Madurai, 1980.

Marguerite Rose Bernet, **The Politics of Cultural Nationalism in South India,** Princeton University, New Jersey, 1976

